# திருமுருகாற்றுப்படை உரை



(மங்கையர் கணவ!)

சாமி. சிவஞானம் எம்.ஏ.

சரசுவதி மகால் வெளியீட்டு எண்:455

# திருமுருகாற்றுப்படை உரை

பதிப்பாசிரியர்

**சாமி. சிவஞானம், எம்.ஏ.,**
நிருவாக அலுவலர்,
சரசுவதி மகால் நூலகம்,
தஞ்சாவூர் - 613 009.




தஞ்சாவூர் மகாராஜா சரபோஜியின்

சரசுவதி மகால் நூலகம்

தஞ்சாவூர் - 613 009.

2003 கி.பி. விலை : ரு. 350 - 00

## BIBLIOGRAPHICAL DATA


| | | |
|---|---|---|
| Title of the Book | : | Tirumurukar-rup-padai Urai |
| Editor | : | Samy. Sivagnanam, M.A., |
| Publisher | : | Director,<br>Sarasvati Mahal Library,<br>Thanjavur - 613 009 |
| Publication No. | : | 455 |
| Language | : | Tamil |
| Edition | : | First Edition |
| Year | : | 2003 A.D. |
| Paper used | : | 11.6 Kg. T.N.P.L |
| Size of the Book | : | 25 x 19 cm |
| Printing Type used | : | 12 point |
| Number of pages | : | xlviii + 70 + 444 with 14 illustrations |
| No. of Copies | : | 500 |
| Printer | : | DTP, Sarasvati Mahal Library, Thanjavur. |
| Binding | : | Half Calico |
| Subject | : | Sangam Literature |
| Classification | : | O31,1B911:g |
| Price | : | Rs.350/- |

# வெளியீட்டாளர் முகவுரை

**பே**ராசிரியர் **சுந்தரம் பிள்ளை** அவர்கள்,

*'பத்துப்பாட் டாதி மனம் பற்றினார் பற்றுவரோ*
*எத்துணையும் பொருட்கிசையும் இலக்கணமில் கற்பனையே'*

என்றார்.

சங்ககாலத் தொகை நூல்களுள் முதன்மையாக வைத்துப் போற்றப் படுவது 'பத்துப்பாட்டு' ஆகும். இப் பத்துப்பாட்டில் முத்துப்பாட்டாய் முதலில் வைத்துச் சிறப்பிக்கப்படுவதும், தனித்துவமும் கவித்துவமும் கொண்டதும் திருமுருகாற்றுப்படையாகும். முருகனைப் பற்றிய செய்திகள் கூறும் முழுநூல். இதன் உயர்வு கருதி 11ஆம் திருமுறையிலும் வைத்துச் சிறப்பிக்கப்பட்டு வணங்கப்படுவது இந்நூல். நக்கீரர் யாத்த நூல்களில் செம்மை இலக்கியப் பெரும்படைப்பாய் இன்றுவரை நிலைத்துநிற்கும் விழுப்பொருள் கொண்டு விளங்கும் மங்கல நூல். 317 அடிகள் கொண்ட இந்நூலின் தொடக்கமே **'உலகம்'** என்ற மங்கலச் சொல்லாட்சியோடு மாண்புற புனையப்பட்டுள்ளது.

இத்திருமுருகாற்றுப்படை ஆற்றுப்படை வரிசையில் அமைந்தாலும் மற்ற ஆற்றுப்படைக்கும் இதற்கும் பல வேறுபாடுகளுண்டு. பொதுவாக, ஆற்றுப்படையில் ஒருவனை வழிபடுத்துபவன், வழிபடுத்தப்படும் அந்த இரவலன், அவ்விரவலனுக்குப் பொருள்தரும் தலைவன் என மூவரது நிலை பேசப்படும். ஆனால் இம்முருகாற்றில் தலைவனின் தகைமை சாற்றப் படுகிறது. நிலைத்த விழுப்பொருள் கூறுவது. பொருள் இன்பம் போற்றும் பிற ஆற்றுப்படைகள் போல் அன்றி அருளின்பம் போற்றும் அரும்பெறல் நூல். இயற்கையோடு இயைந்த இறைமை போற்றும் நூல். கவிஞர் கதே **'ஆண்டவன் அணியும் அழகு உடை இயற்கை'** (Nature is the visible garment of God - Goethe)என்பார். இந்த நெறி இந்நூல் முழுதும் விரவியும், பரவியும் வருவதை உணரலாம். இத்துணைப் பெருமைக்கும் சிறப்பிற்கும் உரிய இந்நூலை அரிதின் முயன்று பதிப்பித்துள்ளார், இந்நூலக நிருவாக அலுவலர் அவர்கள். 37 சுவடிகளை ஒப்பிட்டு பாடபேதங்களை அப்படியே பட்டியலிட்டுள்ளார். இது

எதிர்கால ஆய்வாளர்களுக்குப் பெரிதும் பயன்படும். பல நூல்களினின்றும் மேற்கோள்களையும் எடுத்தாண்டு உரைக்கு உயர்வு கூட்டியுள்ளார்.

மேலும் இந்நூலாசிரியர், இந்நூலில் நக்கீரர் பற்றிய ஆய்வும், நச்சினார்க்கினியர் உரைச் சிறப்புப் பற்றிய ஆய்வும் செய்து பொருண்மைச் சிறப்புகளை எடுத்துக் காட்டியுள்ளார். இவ்வுரை இந்நூலாசிரியரால் தூத்துக்குடி வானொலி நிலையம் **'திரைகடலாடிவரும் தமிழ் நாதத்தில்'** வெளிநாட்டு அன்பர்களுக்காக 5.7.2002 முதல் பல திங்கள் தொடர்ந்து நிகழ்த்தப்பெற்ற வானொலி உரையாகும். அவ்வுரையை அத்துறை அனுமதியோடு தற்போது நூலாகக் கொண்டுவந்துள்ளார் இதன் ஆசிரியர். நூலென்ற அமைப்பில் அண்மைக்காலப் பதிப்பு நெறியில் ஆய்வுக் கட்டுரைகள், அருஞ்சொல் பதவுரை, சொல்லடைவு, பழந்தமிழ்ச் சொல்லடைவு, குறிப்பிடத்தகு முற்பதிப்புகள் போன்ற பல சிறப்புகளை இந்நூலில் சேர்த்துள்ளார்.

இந்நூல் சைவப் பேருலகில் பெரிதும் வரவேற்பைப் பெறும் என நம்புகிறேன். இந்நூலக நிருவாக அலுவலரான இந்நூலாசிரியருக்கு எனது பாராட்டுக்கள்.

இந்நூல் வெளிவர நிதியுதவி நல்கிய நடுவண் அரசிற்கு என் நன்றியை உரித்தாக்குகிறேன்.

இந்நூல் சிறப்பாக வெளிவரத் துணை நின்ற இந்நூலக வெளியீட்டு மேலாளர், அறிஞர் பெருமக்கள், ஒளிஅச்சுப் பிரிவுப் பணியாளர்கள், நூற்கட்டுப் பிரிவுப் பணியாளர்கள் மற்றும் பிற பணியாளர்கள் ஆகிய அனைவருக்கும் எனது இனிய பாராட்டுக்கள்.

**சி. கோசலராமன், இ.ஆ.ப.**
மாவட்ட ஆட்சித்தலைவர்
மற்றும்
இயக்குநர்,
சரசுவதி மகால் நூலகம்.

தஞ்சாவூர்,
11.2.2003.

# உள்ளுறை

பக்க எண்



**முதல் பகுதி**



**இரண்டாம் பகுதி**

**படங்கள் :** **பக்கம்**



......

தொலைபேசி : 807995
கயிலைமாமுனிவர் வித்துவான்
**சாந்தலிங்க இராமசாமியடிகள்**
பேரூராதீனம், பேரூர் [அஞ்சல்]
கோயமுத்தூர் - 641 010
தமிழ்நாடு.
மின் அஞ்சல்: peruradigal@yahoo.com


சாந்தலிங்கா தாள மலர் வாழ்க

Telephone : 807995
Kailai - Ma - Munivar - Vidwan
**Santhalinga Ramasamy Adigal**
Peruratheenam, Perur (P.O.)
Coimbatore - 641 010
Tamilnadu
E-Mail : peruradigal@yahoo.com

**தலைவர் (President)**

தவத்திரு சாந்தலிங்க அடிகளார் திருமடம்
(Thavathiru Santhalinga Adigalar Mutt)

உலக சைவப் பேரவை
(World Saiva Council)

தமிழகத் துறவியர் பேரவை
(Tamil Nadu Saints Forum)

சத்வித்யா சன்மார்க்க சங்கம்
(Sathvidhya Sanmarga Sangam)

தவத்திரு சாந்தலிங்க அடிகளார் கலை,
அறிவியல், தமிழ்க்கல்லூரிக் கழகம்
(Thavathiru Santhalinga Adigalar Arts,
Science & Tamil College Khazhakam)

தவத்திரு சாந்தலிங்க அடிகளார் மேல்நிலைப்பள்ளி
(Thavathiru Santhalinga Adigalar
Higher Secondary School)

தவத்திரு சாந்தலிங்க அடிகளார் கல்விக்குழு
(Thavathiru Santhalinga Adigalar KalviKuzhu)

ஞானாம்பிகை நுழைவுரிமைப் பள்ளி
(Gnanambikai Matriculation School)

தவத்திரு ஆறுமுக அடிகள் தாய்த்தமிழ்ப் பள்ளி
(Thavathiru Aarumuga Adigalar Tamil School)

தவத்திரு சாந்தலிங்க அடிகளார் நினைவு அறக்கட்டளை
(Thavathiru Santhalinga Adigalar
Memorial Trust)

**உறுப்பினர் (Member)**

பாரதத் துறவியர் பேரவை
(Bharat Saints Forum)

தமிழ்நாடு இந்து சமய அறநிலையத்துறை
ஆலோசனைக்குழு
(Tamil Nadu Temple Advisory Commitee)

தமிழகப் புலவர் குழு
(Thamizhaga Pulavar Kuzhu)

**நாள் : 28.8.2002**

**அருள்மிகு சாந்தலிங்கப் பெருமான் இன்னருள் பெருகுக.**

## வாழ்த்துப்பா

உலகம் உவப்ப எனத்தொடங்கும் உண்மைப் பாடல் தமிழ்மொழியில்
துலங்கும் முதற்பாட் டருள்பண்பைத் தூய வாழ்வை வளர்ப்பதற்கு
இலங்கும் முருகன் ஆற்றுப்படை இனிது விளங்கத் தமிழ்நூல்கள்
பலகற் றுணர்ந்த சிவஞானம் பகரும் உரைநூல் பரவிடுக.

செம்மை நலஞ்சேர் முருகனருள் சேரும் பதிகள் பலமக்கள்
தம்மை அன்பு நெறியாலும் தளர்வில் பக்தி யுணர்வாலும்
இம்மை மறுமை நலம்பெறவே இனிதாய்ப் பகர்ந்த செம்மையுரை
அம்மை யப்பன் திருவருளால் அன்பர்க் கினிதாம் பணிவாழி.

கற்றல் கேட்டல் சிந்தித்தல் கருத லாதி குணம்நிறைந்து
உற்ற உணர்வால் திருமுருக ஆற்றுப் படைக்கு உரைவிரித்தார்
நற்பண் புடைய சிவஞானம் ஞாலத் துயர்செந் தமிழ்நெறியைப்
பற்றும் அன்பர் முருகனருள் பதிந்து வாழ வாழ்த்துகின்றோம்.

அன்புள்ள,

[signature]

(தவத்திரு. சாந்தலிங்க இராமசாமியடிகளார்)
பேரூராதீனம்.

# அணிந்துரை

'திருமுருகாற்றுப்படை உரை' என்னும் பெயரிய இந்நூலினை வரைந்த பெருமகனார் தாம் ஆங்கிலத்தில் முதுகலைப்பட்டம் பெற்றவர் ஆயினும், தம் தாய்மொழியாகிய தமிழினிடம் பெரும் பற்றுக்கொண்டு சங்க இலக்கியம், பக்தி இலக்கியம், பிற்கால இலக்கியம் என்ற முத்திற இலக்கியங்களையும் சுவைத்துப் போற்றும் இயல்பினர். சங்ககால நூல்களாகிய பொருநர் ஆற்றுப்படை முதலியன நமக்கு எடுத்து ஓதும் மனிதநேயம் கண்டு மனம் உருகுபவர். பொருட் செல்வத்தினும் விஞ்சிய சிறப்புடைய அருட்செல்வத்தை வழங்கும் நேயத்தைப் பெரிதும் கொண்ட திருமுருகாற்றுப்படையில் பெரிதும் ஈடுபாடுகொண்டவர். திருமுருகாற்றுப்படை மூலபாடத்தை ஏனைய சான்றோர் பலரைப் போல நினைவில்கொண்டுள்ள இவர், அப்பாடல் பொருள் முழுதையும் நச்சினார்க்கினியர் முதலிய சான்றோர் உரைகொண்டு துருவி ஆய்ந்து தம்மனத்தில் இருத்தி உள்ளவர். இவர் திருமுருகாற்றுப்படையின் பேரழகு முழுவதையும் தாம் சுவைத்தவாறே தமிழ்பயின்ற மக்கள் அனைவரும் சுவைக்குமாறு அதன் பலவகைச் சிறப்புக்களையும் எளிய தமிழில் விரித்துரைத்து மக்களை அந்நூலில் முழுமையாக ஈடுபடச் செய்யவேண்டும் என்று கொண்ட வேணவாவே இந்நூலாக வடிவுபெற்றுள்ளது.

இந்நூல் எழுதுவதற்கு முன்னோடியாக இவர் நக்கீரரைப் பற்றி அமரர். ந.மு.வே. நாட்டார் அவர்கள் எழுதியுள்ள நூற்செய்திகளையும், நக்கீரர் பற்றிப் பழைய திருவிளையாடல், பரஞ்சோதியார் திருவிளையாடல், திருப்பரங்குன்றப்புராணம், சீகாளத்திப்புராணம் ஆகிய புராணங்கள் கூறும் வரலாற்றையும், மனத்திடத்தில் தேக்கி வைத்துக்கொண்டுள்ளார். தேவாரத்திருமுறைகளில் முருகனைப் பற்றி நாற்பத்தைந்து இடங்கள் காணப்படினும் அவையாவும் சிவபெருமான் முருகப்பெருமானுக்குத் தந்தையார் என்று குறிப்பிடும்

இடங்களாகவே உள்ளன. நாலாயிரதிவ்வியப் பிரபந்தத்தில் முருகப்பெருமான் பெருமையைச் சுட்டும் சில அடிகள் வந்துள்ளன. ஒன்பதாம் திருமுறையில் திருவிடைக்கழிப் பதிகம் முருகன் பெருமைகளைச் சுட்டுவதாகவே அமைந்துள்ளது. திருமுறைகளில் முருகனைப் பற்றி வந்துள்ள செய்திகளையும் சங்க இலக்கியத்தில் முருகன் தொடர்பாக வந்துள்ள அடிகளையும் தொகுத்து வைத்துக்கொண்டார். பதினைந்தாம் நூற்றாண்டில் அவதரித்து முருகனே முழு முதற்கடவுள் என்பதனை உட்கொண்டு அருணகிரியார் அருளிய திருப்புகழ், கந்தர் அநுபூதி, கந்தர் அலங்காரம் முதலியவற்றில் திருமுருகாற்றுப்படைச் செய்திகளாக வந்துள்ளவற்றை எஞ்சாது திரட்டிவைத்துக்கொண்டார். அருணகிரியாருக்கும் பிற்பட்டவராக அவதரித்த குமரகுருதாசசுவாமிகள் ஆதியோர் திருமுருகாற்றுப்படை தொடர்பாகக் குறிப்பிட்டவற்றையும் சேகரித்தார். திருமுருகாற்றுப்படைக்கு நச்சினார்க்கினியரே அன்றிப் பெயர்தெரியாத உரையாசிரியர் ஒருவர், பரிமேலழகர், கவிப்பெருமாள், பரிதியார் என்ற பெயருடையார் வரைந்த உரைகளையும் உற்றுநோக்கி அவற்றுள் சிறப்பான செய்திகளைத் தொகுத்துக்கொண்டார். திருமுருகாற்றுப்படைக்கு இன்றைநாள்வரை சான்றோர் பலரால் வரையப்பட்ட நூற்செய்திகளையும் தொகுத்துவைத்துக்கொண்டு அவற்றை நிரல்பட அமைத்துத் திருமுருகாற்றுப்படைக்கு விளக்கமான உரைஒன்றினைச் சிறிது தமிழ் கற்றவரும் சுவைக்கும் வண்ணம் எளிய நடையில் விரித்துரைக்கத் திட்டமிட்டு இந்நூலை வரைந்துள்ளார்.

இந்நூல் அழகில் ஈடுபட்ட ஒவ்வொரு கோட்பாட்டினரும் தாம்தாம் கருதியவற்றை இந்நூலில் காண்பதாகக் குறிப்பிடுதல் இயற்கையே. திருமுருகாற்றுப்படையில் அமைந்திருக்கும் ஆறு உள்தலைப்புக்களிலும் திருப்பரங்குன்றம், திருச்சீர்அலைவாய், திருஆவினன்குடி, திருஏரகம், குன்றுகள், பழமுதிர்சோலைமலை என்பன குறிப்பிடப்பட்டுள்ளனவாகப் பொதுவாக நோக்குபவர்கள் கருதுகிறார்கள். எனினும் ஒருசார் நன்மக்கள் முதல் உள்தலைப்பில் சாங்கியயோகமும், இரண்டாவதன்கண் யோகமார்க்கமும், மூன்றாவதன்கண் ஞானமார்க்கமும், நான்காவதன்கண் உபாசனாமார்க்கமும், ஐந்தாவதன்கண் சரியாமார்க்கமும் ஆறாவதன்கண் கிரியாமார்க்கமும் காட்டப்பட்டுள்ளனவாகப் பிற்கால நூல்களை அடியொற்றிக் கூறுவன, இத்தெய்விகப் பனுவலைப்பாடிய

நக்கீரனாருக்கு உடன்பாடாகும் என்று கொள்ள இயலாதாயினும், அவற்றையும் இந்நூலாசிரியர் குறிப்பிட்டுள்ளார். திருப்பரங்குன்றம் முதலிய ஆறும் நம்உடம்பிலே அமைந்துள்ள மூலாதாரம், சுவாதிட்டானம், மணிபூரகம், அநாகதம், விசுத்தி, ஆக்ஞை என்ற ஆதாரத்தானங்களாகும். குண்டலினி என்னும் சக்தி இவ் வாறு ஆதாரங்களைப் பேதித்துக்கொண்டு சுஷும்ணா நாடிவழியாகச் செல்லுங்கால், ஒவ்வோர் ஆதாரத்திலும் ஏற்படும் அனுபவங்களே ஆங்காங்கு முருகனாகக் கூறப்படுகின்றன என்ற கருத்தைக் குறிப்பிட்டு அங்ஙனம் கருதுதல் அருணகிரியாருக்கும் உடன்பாடு என்பதை அவர் தாம் அருளிய பழமுதிர்சோலைத் திருப்புகழில் 'ஆசை நாலு சதுரக்கமலம்' என்ற பாடலில் இச்சிவயோகக் கருத்தினைத் தெளிவாகத் தெரிவிக்கின்றார் என்றும் குறிப்பிட்டுள்ளார்.

திருமுருகாற்றுப்படை சங்ககாலத்தில் எழுந்ததே என்பது இவ்வாசிரியரின் உறுதியான எண்ணமாகும். பதினொன்றாம் திருமுறையில் நக்கீர தேவநாயனார் என்ற பெயரால் பல பிரபந்தங்களை அருளியுள்ள அச்சான்றவர் அருளிய பலநூல்களுள்ளும் திருஈங்கோய் எழுபது, கயிலைபாதி காளத்திபாதி அந்தாதி என்ற இருநூல்களை மாத்திரம் பெயர் ஒற்றுமை கொண்டு திருமுருகாற்றுப்படை விளக்கத்துக்கு மேற்கோளாகக் காட்டியுள்ளார். முருகப்பெருமான் திருவவதாரம் தொடர்பாக இராமாயணம், பாரதம், பரிபாடல், கந்தபுராணம் குறிப்பிடும் செய்திகளுள் சிலசில வேறுபாடுகள் இருப்பினும், அவற்றையும் எஞ்சாது குறிப்பிட்டுள்ளார். இறையனார் அகப்பொருளுக்கு 'மெய்யுரை இது' என்று சுட்டிய உருத்திரசன்மன் முருகனுடைய அவதாரமே என்ற செய்தியையும் தெரிவித்துள்ளார்.

நக்கீரர் தொடர்பாக நம்பிதிருவிளையாடல், பரஞ்சோதிதிருவிளையாடல், திருப்பரங்கிரிபுராணம், சீகாளத்திப் புராணம் என்ற நான்கு புராணங்கள் குறிப்பிடும் செய்திகளையும் நிரல்படச் சுட்டியுள்ளார். புராணங்களில் முழுமையாக நம்பிக்கை உடைய சான்றோருக்கு அச்செய்திகள் அகமகிழ்வு தருவன என்ற கருத்தில் அப்புராணச் செய்திகளுள் ஒன்றும் நெகிழ்க்கப்படவில்லை. தெய்வ நம்பிக்கையினின்றும் மாறுபட்ட கொள்கை உடைய சான்றோரும், நக்கீரர் பெருமையைப் பேசும்போது 'நெற்றிக்கண் காட்டினும் குற்றம் குற்றமே' என்று நக்கீரர் கூறியதாகக்கூறி, அவர் யாரிடமும் நடுவுநிலை தவறாது வாதாடும் இயல்பினர் என்று அவரைப்புகழ்ந்து கூறும் கூற்றினைச் செவிமடுக்கிறோம்.

நக்கீரர் பற்றிய கதைகள் இந்நாட்டில் வேரூன்றிவிட்டன. ஆராய்ச்சியாளர்கள் தவிர ஏனையோர் அக்கதைகளைக் கூறுவதிலும் செவிமடுப்பதிலும் ஆர்வம் காட்டி வருதல் கண்கூடு. இதனை உளத்தில் கொண்டே இந்நூலாசிரியர் புராணவரலாறுகளைக் குறைவறக் கூறியுள்ளார்.

உறுநர்த் தாங்கிய மதன்உடை நோன்தாள்
செறுநர்த் தேய்த்த செல்உறழ் தடக்கை.

முருகப்பெருமானுடைய திருவடிகள் தம்மைச் சரணடைந்த அன்பர்களின் தீவினையைப் போக்கி அவர்தம் அறியாமையை நீக்கி அவரைத் தாங்கும் தன்மைகொண்டவை என்று விளக்கம் கூறும் இவ்வாசிரியர், அத்திருவடிகளின் பெருமையைக் குறிப்பிடத் திருமந்திரம், திருக்குறள், பரிபாடல், ஈங்கோய் எழுபது, சிவஞானசித்தியார், திருவருட்பயன், ஸ்ரீ கீதை, அப்பர் தேவாரம், சுந்தரர் தேவாரம், திருவாசகம், திருத்தொண்டர்புராணம், திருப்புகழ், பிருகதாரண்யக உபநிடதம், கந்தர் அலங்காரம், கந்தர் அநுபூதி என்ற பல தெய்விகப் பனுவல்களை மேற்கோளாகச் சுட்டி விளக்கும் திறன் அப்பலநூல்களிலும் தோய்ந்த இறையடியார்களுக்குப் பெருவிருந்தாக அமையும் என நினைக்கிறேன். தடக்கைகள் செறுநரைத்தேய்க்கும் திறமும் முருகப்பெருமானுடைய அருட்செயலே என்பது நன்கு விளக்கப்பட்டுள்ளது. இங்ஙனமே பற்பல அடிகளுக்கு விளக்கம் வரையும்போது பிற்காலத்துத் தெய்விகப் பாடல்களை இவ்வாசிரியர் பலவாறாக மேற்கோள் காட்டும் செய்தி அப்பிற்கால அருளாளர்களும் திருமுருகாற்றுப்படையை மனப்பாடமாகத் தம் இதயத்து இருத்தித் தாம் அருளிய பாடல்களில் அதன் சாற்றைப் பிழிந்து அவற்றைச் சமைத்துள்ளார்கள் என்பதனை வலியுறுத்தவேயாம். இங்ஙனமே முருகப்பெருமானை இரவலன் விளிக்கவேண்டுவனவாக அமைந்த சொற்றொடர்களின் பொருளை விளக்குமிடத்தும் புராணச் செய்திகளும் சான்றோர் மேற்கோள் பாடல்களும் பெரிதும் கொள்ளப்பட்டுள்ளன.

திருஏரகம் மலைநாட்டகத்து ஓர் ஊர் என நச்சினார்க்கினியர் குறிப்பிடுகிறார். அது நாகர்கோவிலிலிருந்து திருவனந்தபுரம் செல்லும் பேருந்துத் தடத்தில் தக்கலை என்ற ஊருக்கு அருகில் உள்ள ‘கந்தன்குடி’ என்ற குன்றமை கோயிலாகும். ஆயினும் அருணகிரியார் சுவாமிமலையையே திருஏரகம் என்று

குறிப்பிட்டுப் பாடுதலின் சுவாமிமலையை ஏரகமாகக் கொண்டுள்ளார். பழமுதிர்சோலைமலை கிழவோனே என்ற அடிக்கு நச்சினார்க்கினியர் ‘பழம்முற்றிய சோலைகளை உடைய மலைக்கு உரிமை உடையோனே’ - என்று உரைவரைவதால், அவருக்கு மலை என்பது பொதுப் பெயரே என்பதும், அத்தொடர் ‘சோலைமலை’ என்ற மலையின் பெயரன்று என்பதும் பெறப்படும். மதுரைக்காஞ்சியில் ‘சீர்சான்ற உயர் நெல்லின் ஊர்’ என்ற தொடருக்குத் ‘தலைமையமைந்த உயர்ந்த நெல்லின் பெயரைப் பெற்ற சாலியூர்’ என்று விளக்கம் தந்த நச்சினார்க்கினியருக்குச் ‘சோலைமலை’என்பது ஒருமலையின் பெயர் என்ற கருத்து இருப்பின் ‘சோலைமலை’ என்னும் மலைக்குத் தலைவன் எனத் தெளிவாகக் கூறியிருப்பார். சங்ககாலத்தில் திருப்பரங்குன்றம் முருகனுக்குச்சிறந்த கோயிலாகத் திகழ்ந்தமை போலவே ‘சோலைமலை’ திருமாலுக்கு உகந்த கோயிலாகத் திகழ்ந்தமை 15 ஆம் பரிபாடலால் வெளிப்படை. எனவே, நச்சினார்க்கினியர் குன்று போல மலையையும் முருகனுக்கும் பொதுவான இடமாகக் கூறினார். அருணகிரியார்சோலைமலைத் திருப்புகழ்கள்பாடி உள்ளமையால் அழகர் மலையாகிய சோலைமலையையும் இவ்வாசிரியர் முருகனுக்கு உரிய இடமாகக் கூறி, ஆசிரியருடைய உணர்வு ‘இம்மலை திருமாலின் குன்றம்’ என்றே குறிப்பிடுவதனால், முடிவுரைக்கண் ‘சிவபெருமானுக்கு உரிய திருப்பரங்குன்றத்தில் தொடங்கித் திருமாலுக்கு உரிய சோலைமலையில் நக்கீரர் திருமுருகாற்றுப்படையை நிறைவு செய்கிறார்’ என்று குறிப்பிட்டுள்ளார்.

பாடலின் 317 அடிகளையும் விளக்கிக் கூறிய பின்னர், பரங்குன்று முதலிய ஒவ்வொரு தலைப்பிலும் முருகனைப் பற்றி அறியப்பட்ட செய்திகளை நான்கு பக்கங்களில் சுருக்கிக் கூறி சமஷ்டியில் தொடங்கி வியஷ்டியில் முடித்தார் என்று குறிப்பிடுகிறார். அறிஞர் சிலர் தத்துவார்த்தமாகக் கூறும் செய்திகள் அடுத்து வரிசைப் படுத்திக் கூறப்பட்டுள்ளன. திருமுருகாற்றுப்படையில் தமிழில் தெய்விகம் திளைக்கும் நிலை அடுத்துச் சுட்டப்படுகிறது. அடுத்துத் திருமுருகாற்றுப்படை இளமை, கடவுள் தன்மை இவற்றைச் சுமந்து வந்து பொழியும் அருவி என்பது பலதிறங்களில் விரித்து உரைக்கப்படுகிறது. முருகப்பெருமான் உகந்த பூக்கள், படைக்கலன்கள், வேழம் என்பன சுட்டப்படுகின்றன. வெறியாடும் வேலனுடைய தோற்றம் குறிப்பிடப்படுகிறது. முருகனின் அருள்பெற விழையும் பல திறத்தினரும் அடுத்துக்

குறிப்பிடப்பட்டுள்ளனர். தேவமகளிர், பேய்மகளிர், முனிவர், கந்தருவர் வருணனைகள் காட்டப்படுகின்றன. நெறியில் நின்ற அந்தணர் குறிப்பிடப்படுகின்றனர். முருகாற்றுப்படையில் காணப்படும் மலர்கள், தளிர்கள், கொடிகள், மரங்கள், பறவைகள், விலங்குகள், இசைக்கருவிகள் என்பன தொகுத்துக் கூறப்பட்டுள்ளன. முருகாற்றுப்படையில் வழங்கும் சிறந்த சொல்லாட்சிகள், அவற்றுள் கணக்கியலாக் காட்டும் சொல்லாட்சிகள், புராணவரலாறுகள், மதுரைமாநகர வருணனை, அழகுக் காட்சிகளின் அணிவகுப்பான சொல்லமைப்புக் கொண்ட அடைமொழிகள், உலகியல் ஆற்றுப்படை ஆன்மீக ஆற்றுப்படையாக மாற்றப்பட்டுள்ள புதுமை, எல்லிசு என்ற ஆங்கிலேயர் திருவாவினன்குடி முனிவர்கள் வருணனையைக் குறிப்பிட்டு வழங்கிய ஆங்கில ஆக்கம், மற்கடநியாயம் மார்ச்சால நியாயம் என்ற இவற்றில் முருகாற்றுப்படை வலியுறுத்தும் மார்ச்சால நியாயம், முருகாற்றுப்படையின் இறுதியில் அமைந்த வெண்பாக்கள் கூறும் செய்தி, அருஞ்சொற்பொருள், அருஞ்சொற்றொடர்சில பல நூல்களிலும் பயிலும் இடங்கள் ஆகியவை இந்நூல் இறுதியில் இடம்பெறுகின்றன. இந்நூலைச் செவ்விய முறையில் ஒளிஅச்சுக் கோப்பில் அமைத்துத் திறம்பட வெளிக்கொணரும் திரு. க. பத்மநாபன் நம்பாராட்டிற்கு உரியவர்.

1926 இல் அநந்தராமய்யர் வெளியிட்ட கலித்தொகைப் பதிப்பில் ஒப்புமைப் பகுதிகள் பலவாகக் காணப்படுதல் போல, இத்திருமுருகாற்றுப்படை விளக்கத்திலும் ஒப்புமைப்பகுதிகள் பலவாக இடம்பெறுகின்றன. இவ்வொப்புமைப் பகுதிகளைத் தொகுத்தெடுத்து நிரல்பட அமைத்த இந்நூலாசிரியரின் முயற்சி பாராட்டத் தக்கது. இதனை அறிஞர்உலகம் உற்சாகத்துடன் வரவேற்கும் என்னும் கருத்தினேன்.

அன்பன்,

**தி.வே. கோபாலையன்.**

8.7.2002

32, வைசியர் தெரு,
புதுச்சேரி - 605 001.

# முன்னுரை

''ஓங்கல் இடைவந்து உயர்ந்தோர் தொழவிளங்கி
ஏங்கொலிநீர் ஞாலத்து இருள்கடியும் - ஆங்கவற்றுள்
மின்னேர் தனிஆழி வெங்கதிர்ஒன்று ஏனையது
தன்னேர் இலாத தமிழ்.''

(தண்டியலங்காரமேற்கோட் பாடல்)

இத்திருமுருகாற்றுப்படை பத்துப்பாட்டில் முத்துப் பாட்டாய் முதலில் வைத்து வணங்கப்படுகிறது. முழுதும் அழகிய குமரன் பற்றிய முழுநூல் என்பதாலும், தெய்வப் புலமையும் தீந்தமிழ் உணர்வும் ஓங்கிய பக்திச்சுவை நனி சொட்ட நக்கீரர் யாத்த பனுவல் என்பதாலும், இது சைவத் திருமுறைக்கண் பதினோராம் திருமுறையில் இடம்பெற்றுள்ளது. இப்பாடலில் கூறுமாப்போல், புறவிருள் போக்கும் கதிரவன் வரவோடு திருமுருகாற்றுப்படை தொடங்குகிறது. தன்னேர் இலாத் தமிழ்மொழியால் மண்ணோருக்கும் விண்ணோருக்கும் பெறலரும் பரிசில் நல்கும் பெருஞ்சைவ நூல் இது.

நமது சரசுவதி மகால் நூலகத்தில் 3869 தமிழ்ச் சுவடிகள் உள்ளன :-

| | | |
|---|---|---|
| அ. இலக்கிய இலக்கணச் சுவடிகள் | ... | 2124 |
| ஆ. மருத்துவச் சுவடிகள் | ... | 1745 |
| | | ......... |
| | | 3869 |
| | | ......... |

அவற்றுள் சங்ககால இலக்கியங்களில் கீழ்க்கண்ட எட்டு இலக்கியச் சுவடிகள் மட்டுமே உள்ளன.

*அவை அனைத்தும் திருமுருகாற்றுப்படைச் சுவடிகள் ஆகும்.*
*சுவடிகளின் எண்கள் : 227, 689(இ), 803(சி), 823(பி), 973, 1282(பி), 1587(பி), 1607 (சி)*

தமிழ்த்தாத்தா டாக்டர் உ.வே.சா. அவர்களின் தமிழ்ப்பணி தமிழ் கூறும் நல்லுலகு உள்ளவரை மறக்கவோ, மறைக்கவோ இயலாதது. அப்பெருமகனார்

1889 இல் அரிதின் முயன்று **'பத்துப்பாட்டு மூலமும் நச்சினார்க்கினியர் உரையும்'** என முதல் பதிப்பை வெளியிட்டார். அதில் திருமுருகாற்றுப்படைக்குச் சிறந்த விளக்கத்தைத் தந்துள்ளார்; நச்சினார்க்கினியர் உரைக்கு அடிக்குறிப்பாகப் பல இலக்கிய ஒப்பீடுகளைத் தந்துள்ளார். இவ்வறிஞர்பெருமான் ஒவ்வொரு சொல்லையும் ஆய்ந்து, ஒப்புநோக்கிப் பொருள் தரும் இயல்பினர். இரஸ்கின் கூறுவது போன்று சொற்களில் **'ஓங்கு நிலைக்குடி உயர்தனிச் செஞ்சொற்கள்'** (Peerage of words) உள்ளன. பசப்புமொழி கூறும் பச்சோந்தியனைய சொற்களும் (Chameleon cloak words)உள்ளன. அவற்றிற்கு ஆழ்ந்து பொருள் கண்டாலன்றிப் பொருள் விளங்காமை ஒருபுறமிருக்க, பல துன்பங்களையும் கூட்டுவிக்கும் கொடுமையும் அவை நிகழ்த்துவன. இவற்றை அணுகி ஆய்ந்து சொற்களை அடையாளம் கண்டு சிறந்த பொருள் கூட்டித் தமது 60 ஆண்டுகள் பதிப்புப் பணியில் 74 நூல்களை **உ.வே.சா.** வெளியிட்டுள்ளார். இந்நூலுக்கு

| | |
|---|---|
| *1853*இல் | திரு. ஆறுமுகநாவலர் முதற்பதிப்பு மற்றும் பல மறுபதிப்புகள் |
| *1902* இல் | திரு. சரவணப்பெருமாளையர் பதிப்பு |
| *1924* இல் | திரு. மகாதேவ செட்டியார் **'திருமுருகாற்றுப்படை மூலமும் பரிமேலழகர் உரையும்'** என்ற தலைப்பில் வெளியிட்ட பதிப்பு |
| *1927* இல் | திரு. எம். ஆறுமுகம்பிள்ளை **'திருமுருகாற்றுப்படை சிற்றாராய்ச்சி'** எனும் பதிப்பு |
| *1937* இல் | பண்டிதர் சு. அருளம்பலம் **'திருமுருகாற்றுப்படை ஆராய்ச்சி உரை'** எனும் பதிப்பு |
| *1937* இல் | திரு. தை. ஆ. கனகசபாபதி முதலியார் **'திருமுருகாற்றுப்படை மூலமும் பொருட் சுருக்கமும் பதவுரையும் குறிப்பும்'** என்ற பதிப்பு |

*1945* இல் திரு. வை.மு.கோ. பதிப்பு ஆகியவற்றை முந்தைய பதிப்புகளாகக் குறிப்பிடலாம்.

டாக்டர் உ.வே. சா. **'என் சரித்திரம்'** என்ற நூலில் பக்கம் 389 இல் பதிப்புப் பணி பற்றிக் குறிப்பிடுங்காலை,

> **'ஏட்டுச் சுவடிகளிற் கண்ட பாடங்களின் வேறுபாட்டைக் கண்டு கண்டு என்மனம் புண்ணாகி இருக்கிறது. இன்னபடி இருந்தால் பொருள் சிறக்குமென்று எனக்குத் தோன்றின இடங்களிலும் பிரதியில் உள்ளதையே பதிப்பித்தேன். என்னுடைய கருத்தையோ, திருத்தத்தையோ சிந்தாமணியில் ஏற்றாமல் மிகவும் ஜாக்கிரதையாகக் கவனித்துப்**

பதிப்பித்தேன். பதிப்பிக்கத் தொடங்கிய நூல் எனக்கு ஒரு தெய்வ விக்கிரகம் போல் இருந்தது. அதன் அழுக்கைத் துலக்கிக் கவசமிட்டுத் தரிசிக்க வேண்டுமென்பதே என் ஆசை. 'கைகோணி யிருக்கிறது,வேறுவிதமாக அமைக்கலாம்; நகத்தை மாத்திரம் சிறிது திருத்தலாம்' என்ற எண்ணம் எனக்கு உண்டாகவில்லை. அதன் ஒவ்வோரணுவிலும் தெய்விக அம்சம் இருக்கிறதென்றே நம்பினேன். அழுக்கை நீக்கி விளக்குவதற்கும் அங்கத்தையே வேறுபடுத்துவதற்கும் உள்ள வித்தியாசத்தை நன்றாக அறிந்திருந்தேன்.'

என்று குறிப்பிடுகிறார்கள். இதேபோன்று தமிழ்ப் பதிப்பியலில் முத்திரை பதித்த முன்னோடி எனப் போற்றப்படும் **சி.வை. தாமோதரம் பிள்ளை** அவர்கள்

''அடியோடு அழிந்துபோகும் பழைய நூல்களை நிலைநிறுத்துவான் புகுந்தேனாதலின் நூலைத் திருத்துவதும் பொருள் இசையச் செய்வதும் என் கடமையல்ல. இயன்ற அளவும் பூர்வரூபம் பெறச் செய்வதும் இயலாதவிடத்து இருந்தபடி உலகிற்கொப்பிப்பதுமே யான் தலையிட்ட தொழில்.''

என்று கூறுகிறார். அடுத்து, பேராசிரியர் வையாபுரிப்பிள்ளையவர்கள் தமது பதிப்பில்

''ஆராய்ச்சிக்கு முடிவில்லை. முயற்சி மிகுந்தோறும் பிரதிகளின் உதவி பல்குந்தோறும் திருத்தங்கள் ஏற்பட்டுக்கொண்டிருத்தல் இயல்புதான். தமிழ்க்கல்வி மேன்மேலும் பரவ வேண்டுமாயின் பிழைகளைப் பிழை என உணர்தல்வேண்டும். அவற்றைப் பொதிந்து வைத்தலைக் காட்டிலும் தமிழன்னைக்குச் செய்யும் பெருந்தீங்கு ஒன்றும் இல்லை'' என்று கூறியுள்ளார்.

இவையாவும் பதிப்பாசிரியர்கள் செல்ல வேண்டிய தடத்தையும் எதிர்கொள்ளக் கூடிய இடர்ப்பாடுகளையும் எடுத்துக் காட்டுவன.

இந்நூலக நிருவாகியான எனக்கு என் உள்ளத்தில் ஓர் எண்ணம் இடம்பெற்று, ஏற்றம் பெற்றது. மேலே கூறப்பட்டுள்ள அறிஞர்களினும் மேம்பட்ட பொருள் இந்நூலுக்கு என்னால் உரைக்க இயலாவிடினும், இன்றைய பதிப்புநெறி வளர்ச்சி அடிப்படையில் சொல்லடைவு, பழந்தமிழ்ச் சொல்லடைவு, ஒப்பாய்வு, அரும்பதவுரை என மேலும் சில முன்னேற்றத்தைக் கொண்டுவரலாம் என எண்ணினேன்.

இம்முயற்சியில் **'அனைத்துலகத் தமிழ் ஓலைச்சுவடிகள் அட்டவணை'** யின் வாயிலாக உலகளாவிய நிலையில் இந்நூலுக்கு 51 சுவடிப்பிரதிகள் உள்ளன எனும் பதிவைக் கவனத்தில் கொண்டேன். இந்த 51 சுவடிகளையும் ஒப்பிட்டுப் பார்த்தால் சிறக்குமென எண்ணினேன். இந்நூலை யானே பதிப்பிக்க இந்நூலக இயக்குநரிடம் அனுமதியும் பெற்றேன். முதற்கட்டமாக, பிரான்ஸ் நாட்டில் (Bibliothe Que Nationale De France) பாரிசில் உள்ள நூலகத்தில் இரு சுவடிகள் (இந்தியச் சுவடிகள் எண் 66 மற்றும் 67) கேட்டுக் கடிதம் எழுதினேன். கடிதம் கிடைத்த ஒரு வாரத்திலேயே பிரான்சு நாணய மதிப்பில் ஈரோ 36/72 அனுப்புமாறு அந்நூலகத்தினின்றும் கடிதம் கிடைத்தது. உரிய தொகையைச் செலுத்தியபின் அந்நூலகம் தாமதம் ஏதுமின்றி நுண்படங்கள் அனுப்பியது. இதற்கு இடையில் கொல்கத்தா, திருவனந்தபுரம் போன்ற நூலகங்களுக்கு நுண்பட நகல் கேட்டுக் கடிதங்கள் எழுதப்பட்டன. இதே போன்று தமிழகத்தில் உள்ள நூலகங்கள் பலவற்றிற்கும் இச்சுவடிகளின் நகல் கேட்டுக் கடிதங்கள் எழுதப்பட்டன. எமது நூலகத்தில் மேலே கூறப்பட்ட 51 சுவடிகளில் இடம் பெறாத மேலும் ஐந்து சுவடிகள் உள்ளன. ஆக, கூடுதல் 56 சுவடிகள் உள்ளன. எமது நூலகச் சுவடிகளில் இரண்டு சிதிலமடைந்து கையாள இயலாமல் உள்ளதால் ஆறு மட்டும் ஒப்பிட்ட சுவடிப்பட்டியலில் காட்டப்பட்டுள்ளன. பின் எமது நூலகத்தில் அப்போது தமிழ்த்துறையில் பண்டிதராகப் பணியாற்றிய முனைவர் ய.மணிகண்டன் அவர்கள் எனக்கு ஒத்துழைப்பு நல்கும் வகையில் பன்முறை சென்னைக்குச்சென்று குறிப்பிட்ட நூலகங்களில் உள்ளசுவடிகளை ஆய்ந்து ஒப்பீடு செய்து தந்தார். இந்நூலகத்தின் ஓய்வு பெற்ற தமிழ்த்துறைத்தலைவர் புலவர் திரு.வீ.சொக்கலிங்கம் அவர்களின் துணையோடு 37 சுவடிகளில் ஒப்பாய்வு செய்து கண்ட பாடபேதங்களின் பட்டியல் தனியே இந்நூலில் இடம்பெற்றுள்ளது.

சில சுவடிகள் முயன்றும் பெறமுடியாமல் அல்லது கையாள இயலா நிலையில் உள்ளதால் அவை ஒப்பிடவியலாமல் விடுபட்டுள்ளன. பாடபேதங்களைப் பொருத்தவரை காலந்தோறும் அறிஞர்கள் கூறிவருவது, எடுத்தெழுதுவோர் கவனக்குறைவால் எழுத்துகள் பிறழ்ந்து பாடபேதங்கள் போல் காணப்படுகின்றன என்ற கருத்தாகும். **"மில்டனின் வாழ்க்கை"** (Life of Milton) நூலில் அதன் ஆசிரியர் டாக்டர் ஜான்சன் ஒரு குறிப்புரையைக் கூறுகிறார். அதாவது மில்டன் "துறக்க நீக்கம்" (Paradise Lost) எழுதும்போது இயற்கை அவனது கண்பார்வையைப் பறித்தது. அதிர்ஷ்ட தேவதை அவனைத் தாழ்வுநிலைக்குத் தள்ளிவிட்டாள். அக் காலகட்டத்தில் அம் மாக்கவிஞன் தனது மாபெருங் காப்பியமான 'துறக்க நீக்கத்தில்' எடுத்தாளப்படும் இலத்தின் இலக்கியக் கருத்துகள் தன் பெண்களும் உறவினர் பிலிப்ஸ் என்பவரும்

படிக்கக்கேட்டு எடுத்தாளப்பட்டனவாகவும், பின் அவை கவிதை வடிவில் எழுதப்பட்டபோது சில பிழைகள் இருப்பனவாக ஒரு கருத்து நிலவியதாகவும் கூறுகிறார். எனவே, எடுத்தெழுதுவோர் கவனக்குறைவால் சில பிழைகள் நேர்வனவாகவே கருதவேண்டியுளது. இவற்றில்கூட, சில பாட பேதங்கள் இத்திருமுருகாற்றுப்படையில் இதுவரை அறிஞர்களால் ஏற்றுக் கொள்ளப்பட்டு, கையாளப்பட்டு வரும் சொற்களோடு, சிறக்கும் சொற்களும் கொண்டு விளங்குகின்றன.

அவற்றில் சில:- (அடியெண், சீரெண்)

1. பணைத்தோள் -பணைத்தொடி
(14: 4)

2. எஞ்சிய -மிஞ்சிய
(97:1)

3. அசைதல் -இசைதல்
(176:3)

4. விழவினும் -விழாவினும்
(220:4)

5. மாண்டலை -ஆண்டலை
(227:1)

6. துணையுற -துணையற
(237:1)

7. முருகாற்றுப் படுத்த -முருகாற்றுப் படுத்து
(244:1,2)

8. சொன்மலை -சொன்மாலை
(263: 4)

9. பொலம்பூட் சேஎய் -புலம்பூட் சேஎய்
(271:3,4)

10. பரிசிலர்த் தாங்கும் -பரிசிலர்க் காக்கும்
(273: 1,2)

11. பெரும் பெயர் -பெரும்பெரும் பெயர்
(274: 3)

12. பெரும்பெய ரியவுள் -பெறும்பே ரியவுள்
(274:3,4)

13. சூர்மருங் கறுத்த -சூரங்க மறுத்த
(275: 1,2)

14. ஓம்புமதி -ஓங்குமதி
(291:2)

15. அலங்குசினை -இலங்குசினை
(298:2)

16. அலர் இறால் - மலரிநால்
(300:2)

17. ஆசினி -வாசனை
(301:1)

18. கலாவ -கலவ
(301: 3)

19. உதிர -அதிர
(308: 3)

20. இழிதரும் -விழுதரும்
(316:2)

21. மலைகிழ வோனே -மலைமகிழ் வோனே
(317:3,4)

இங்கு, 'பழமுதிர்சோலை மலைகிழவோனே' என்பதில் 'மலைகிழவோன்' 'உடம்பொடு புணர்த்தல்' விதியின்கீழ் அமையும் திரிபாக 'மலைக்கு உரியவன்' என்று பொருள்படும்.

'செல்லான் கிழவன் இருப்பின் நிலம்புலந்
தில்லாளின் ஊடி விடும்'

என்ற குறளில் 'கிழவன்', 'உரியவன்' எனும் பொருளில் வருவது போன்றதிது. ஓரிரு சுவடிகளில் 'மலைமகிழ்வோனே' எனப் பாடபேதம் வருகிறது. இதுவும் ஒரு சிறந்த பொருளைத் தருவதாகவே கொள்ள வேண்டும்.

குன்றுதொறாடல் பகுதியின் இறுதியில்,

'மென்றோள் பல்பிணை தழீஇத் தலைத்தந்து
குன்றுதொ றாடலும் நின்றதன் பண்பே; அதாஅன்று'

என்ற அடிகளில் மெச்சும் புலமை நச்சினார்க்கினியர், தலைத்தந்து என்பதற்கு 'முதற்கை கொடுத்து' என்று பொருள் காண்கிறார். தலைத்தந்து என்பதற்கு ஆடுதலில் தலைப்பட்டு என்று கருத்துக் கொள்ளவேண்டும். வேண்மகன் ஆடல் முருகப்பெருமான் ஆண்டு நின்றதனால் ஏற்பட்ட பண்பு. இங்கு, குன்றுகள்தோறும் குமரன் ஆடிப்பாடி மகிழ்வான் என்றும் பொருள் கூறலாம்.

அதனால் 'மலை மகிழ்வோன்' என்ற பொருளும் கூறலாம். இருப்பினும் தொல்காப்பியர் 'சேயோன் மேய மைவரை உலகம்' என்பதால் 'உரியவன்' என்ற பொருளே சிறக்கும். மேலும் இச்சொற்களை எதுகை நயம் கொண்டு நோக்கும்போது இதுவரை இந்நூலில் வழங்கிவரும் தொடர்களே சிறக்கும். இங்கு ஒப்பாய்வு செய்த 37 சுவடிகளில் கண்ட எழுத்துப் பிழைகள், பாடபேதங்கள் அப்படியே கொடுக்கப்பட்டுள்ளன. எதிர்கால ஆய்வாளர்களுக்கு இச்சுவடிகள் கிட்டாமல்கூடப் போகலாம். அப்போது, காலங்கருதி இதையே பயன்படுத்திக் கொள்ளலாம் என்ற வேணவாவில் விளைந்தது இம்முயற்சி.

இத்திருமுருகாற்றுப்படை 317 அடிகளாலும், மறைகளின் முடிவால் வாக்கால் மனத்தினால் அளக்கவொண்ணா முருகன் பெருமையை முற்றும் கூறுகிறார், நற்றமிழ்ப் புலமை நக்கீரர். வடமொழியில், ஸ்காந்தமகாபுராணம், குமார தந்திரம், காளிதாசனின் குமார சம்பவம் ஆகியவை முருகனின் அவதாரம், அழகு, ஆற்றல், அடியவரைத் தாங்கும் மாண்பு, அருள், வீரம் போன்ற குணநலன்களையும்

பண்பு உயர்வுகளையும் எடுத்து இயம்பியுள்ளன. தமிழில், சங்ககால நூல்களாகிய கலித்தொகை பரிபாடல் ஆகியவற்றில் முருகன் பற்றிய வரலாறுகள் கூறப்பட்டாலும், திருமுருகாற்றுப்படையே முருகனின் பெருமைகளை முழுதும் எடுத்துரைக்கும் முதல்நூல், முழுநூல்ஆகும்; பத்துப்பாட்டில் முருகியல்கூறும் முதல் பாட்டாய் முருகனின் தெய்வத்திளநலங்காட்டித் திகழ்வதால், தன் பெருமை கருதி 11ஆம் திருமுறையிலும் சேர்க்கப்பட்டுள்ளது. இவ்வாறு சங்ககாலப் பாடல் ஒன்று பின்னர் வரும் தொகுப்பிலும் இடம்பெறுவது இதுவே முதல் என்றும் கூறலாம்.

இந்நூலை யாத்த நக்கீரர் பற்றிய செய்திகள், மற்றும் இந்நூலால் நக்கீரர் சைவ உலகிலேயே பெற்ற பெரும்பெயர் போன்ற குறிப்புகள் 'நக்கீரரும் திருமுருகாற்றுப்படையும்' என்ற தலைப்பில் விரிவாகக் கொடுக்கப்பட்டுள்ளன. அத்தலைப்பின்கீழ் நக்கீரரின் பெயர்க்காரணம், குலம், சமயம், பெருமை, காலம், திருமுருகாற்றுப்படையைப் பற்றிப் பேசும் புராணங்கள், கூறப்படும் புராண வரலாறுகள், நக்கீரர் எழுதிய நூல்கள் ஆகியவை குறித்து ஆய்வு செய்யப்பட்டுள்ளன. திருமுருகாற்றுப்படையில் வரும் பொருள்கள், பெறீஇயர், நல்குமதி முதலான சொல்லாட்சிகளைக் கொண்டு, இவரது காலம் கி.பி.ஐந்தாம் நூற்றாண்டளவினதாதல் வேண்டும் என அறிஞர் வையாபுரிப்பிள்ளைபோன்றோர் கருதினர். இக்கருத்தோடு உடன்பாடு எய்தாது, நக்கீரர்காலம் கடைச்சங்க கால இறுதிப் பகுதியாதல் தகும் எனக் கூறப்பட்டுள்ளது. இதற்கு ஆதாரமாக அறிஞர் ந.மு.வே. அவர்கள் இயற்றிய 'நக்கீரர்' என்ற நூலில் கூறப்படும் கருத்துகள் எடுத்துக்காட்டப்பட்டுள்ளன. இதேபோல் திருமுருகாற்றுப்படை தவிர்த்த மற்ற நூல்கள் சங்ககால நக்கீரரால் இயற்றப்பட்டவை அல்ல என்று கூறும் கருத்தும் ஏற்கப்படாமை காணலாம். இங்கு ஒரு கருத்து ஆழ்ந்த சிந்தனைக்குரியது. ஒரு கவிஞனின் சொல்லாட்சி கொண்டு அவனது காலத்தையோ அவனுடைய படைப்புகள் பற்றியோ வரையறுத்தல் ஏற்றதன்று. சான்றாக ஷேக்ஸ்பியர் 'ஹேம்லெட்' நாடகத்தின் சொல்லாட்சி Sonnet இலிருந்து மாறுபட்டது. **மில்டன்** என்ற ஆங்கிலக் காப்பியவாணன் 'Lycidas' எனும் கவிதையில் கையாளும் சொற்கள், நடை, பாவினம், ஓசை மற்றும் பொருண்மைச்சிறப்பு அவ்னது 'துறக்க நீக்கத்'தினின்றும் மாறுபட்டவை. இன்னும் கூறப்போனால் டாக்டர் ஜான்சன் மில்டனின் **லிசிடாஸ்** பாவினத்தைத் "துறக்க நீக்கம் எழுதிய மில்டனா இதை யாத்தார்?"எனக் குறை கூறுகிறார். "அரிமா நிகர் அம் மாக்கவிஞனுக்கு ஆட்டுக்குட்டி போன்ற இக்கவிதை யாக்கும் கலை தெரியவில்லைபோலும்! " என்பார் டாக்டர் ஜான்சன். ஆனால் இரண்டு பாடல்களும் இயற்றிய காலம், இடம், சூழல் கருதின், கவிஞன், தான் எடுத்துக்கொண்ட பொருண்மையில் தன்னை

இழந்த நலம்தன்னில் இருந்து பாடியிருக்கிறான். 'லிசிடாஸ்' கவிதை மில்டனின் இளமைக்காலப் படைப்பு. 'துறக்க நீக்கம்' அம்மாக்கவிஞனின் முதுமையின் யாப்பு. டாக்டர் ஜான்சன் 'துறக்க நீக்கக்' காப்பிய உச்சத்தின் முன் மற்ற கவிதைகள் மங்கிவிடுகின்றன என்று மதிப்பீட்டைத் தருகிறார்: 'Before the greatness displayed in Milton epic, all other greatness shrinks away' ( Life of Milton-Dr. Johnson)

இதேபோன்று, திருமுருகாற்றுப்படையும் நக்கீரர் இயற்றிய ஏனைய பாடல்களினும் கவித்துவ உயர்வாலும் பொருண்மைச் சிறப்பாலும் வேறுபட்டு, இன்றுவரை மறைவின்றி மங்கலின்றிச் செம்மை இலக்கியப் பெரும்படைப்பாய் **(Magnum opus)** ஒளிவீசித் திகழ்கிறது எனலாம். இப்பகுதியில் அமரர் ந.மு.வே.வின் 'நக்கீரர்' ஆய்வின் ஏற்புடைய முடிவாகக் கீழ்க்கண்ட பகுதியைக் குறிப்பிடல் சிறக்கும்:-

"ஆயிரத்தெண்ணூறு ஆண்டுகள் முன்னர் மதுரையம் பதியிற் சிறந்த ஆசிரியராய் விளங்கிய தத்தனார் என்பவர்க்குப் புத்திரராய்த் தோன்றிய நக்கீரனார், தமிழெனுமளப்பருந்தீம்பாற்கடலையுண்டு, ஞானவொழுக்கங்களான் மேம்பட்டுச் சங்கப்புலவருட்டலைவராய்த் திகழ்ந்தனரென்பதும், திருமுருகாற்றுப்படையும், நெடுநல்வாடையும், நற்றிணை முதலிய தொகைகளிற் பல பாட்டுக்களும் இவர் பாடியன வென்பதும், அப்பாட்டுக்களின் சிறப்புக்கள் இன்ன வென்பதும், இறையனாரகப்பொருளுக்கு மெய்யுரை கண்டவர் இவரே யென்பதும், அவ்வுரையின் சிறப்புக்களிவையென்பதும், இவர் சிவபிரானொடும் வாதுபுரிந்து தாம் கொண்ட கொள்கையே மெய்யெனச் சாதித்தனரென்பதும், கயிலைபாதி காளத்திபாதித் திருவந்தாதி முதலியன இவர் பாடிய அல்லவெனச் சிலர் கூறுதற்குக் காரணமில்லையென்பதும், அவை இவர் பாடியவாகவே யாம் கொள்ள வேண்டுமென்பதும், இவருடைய குணமும் பெருமையும் இத்தகையவென்பதும் பிறவுமாம்."

"தெய்வீக அகத்தூண்டுதல் பொதுவாகக் கலைப்படைப்புகளுக்கும் சிறப்பாக இலக்கியப் படைப்பிற்கும் உந்துதல்சக்தியாக அமைகிறது" என்பது அறிஞர் பிளாட்டோவின் கருத்து. (The Great Dialogues of Plato) இது ஒரு வகையில் இத்திருமுருகாற்றுப்படைக்குப் பொருந்துமெனக் கருதலாம். திருப்பரங்கிரிப் புராணம், முருகப்பெருமான் நக்கீரரைப் பாடுவிக்கத் திருவுள்ளம் கொள்ளவே, இப்பாடல் அவரால் பாடப்பட்டதாகக் கூறுகிறது. பின்னரே எழுதிக் சேர்க்கப்பட்டனவாகக் கூறப்படும் திருமுருகாற்றுப்படை வெண்பாக் கருத்துக்களும் இக்கருத்திற்கு உரமூட்டுகின்றன.

திருமுருகாற்றுப்படைக்கு இதுவரை அறுபதிற்கும் மேற்பட்ட பலவகை உரைகள் வந்துள்ளன. இடைக்காலத்தில் எழுந்த ஐவர் உரைகள் குறிப்பிடத்தக்கன. அவை (அ) நச்சினார்க்கினியர், (ஆ) உரையாசிரியர், (இ) பரிமேலழகர், (ஈ) கவிப்பெருமாள், (உ) பரிதியார் ஆகியோர் கண்ட உரைகளாம். இவற்றில் 'நச்சினார்க்கினியர் உரைச் சிறப்புப்' பகுதியில் நச்சினார்க்கினியர் அரிதின் முயன்று இத்திருமுருகாற்றுப்படையை மற்ற ஆற்றுப்படைகளினின்றும் வேறுபடுத்தியும் புலவராற்றுப்படை என்பதை மறுத்தும் கூறியிருப்பது எடுத்துக்காட்டப்பட்டுள்ளது. நூலின்கண் வரும் 'முதுவாயிரவலன்' தொடரைச் சுட்டிக்காட்டி, இது புலவராற்றுப்படை எனச் சில அறிஞர்கள் பொருள் காணுகின்றனர். மேலும், தொல்காப்பியர் புறத்திணையியலில் பாடாண் திணையாகக் கூறும் 'அமரர்கண் முடியும் அறுவகை யானும்' என்ற பகுதியை புறப்பொருள் வெண்பாமாலைத் தொடராகிய 'அமரர்கண் முடியும்' என்ற பகுதியோடு இணைத்துக் கூறி அமரர்கண் முடியும் அறுவகையில் ஒன்றாகத் தொல்காப்பியராலும் இளம்பூரணராலும் கருதப்பட்ட புலவராற்றுப்படையைச் சார்ந்தது இத்திருமுருகாற்றுப்படை என்றும், நச்சினார்க்கினியர் கொண்ட பொருந்தா வுரையால், அமரர்கண் முடியும் அறுவகையுள் ஒன்றாக வைத்துப் போற்றக்கூடிய தெய்வ இலக்கியமாம் இத் திருமுருகாற்றுப்படை மக்கட்பகுதியில் இடம்பெற்று மக்கட்கண் முடியும் இலக்கியமாயிற்று என்றும், அதனால் மதிப்பிழந்தது என்றும் கருதுகின்றனர். தொல்காப்பியனாரின் 'இழைத்த இலக்கணம் பிழைத்தன போல வருவஉள வெனினும்' எனக்கூறிய புறனடையினை அறியாதவரல்லர், ஆசிரியர் நச்சினார்க்கினியர். இருப்பினும் இத்திருமுருகாற்றுப்படையின் உயர்வு கருதி,

> **'இதனைப் புலவராற்றுப்படை என்று உய்த்துணராது**
> **பெயர் கூறுவார்க்கு, முருகாற்றுப்படை யென்னும்**
> **பெயரன்றி அப்பெயர் வழங்காமையான் மறுக்க'**

என்று கூறுகிறார். மேலும் நச்சினார்க்கினியர் "தொல்காப்பியத்தில் 'எல்லாப் பொருளும் இதன்பால் உள, இதன்பால் இல்லாத எப்பொருளும் இல்லையால்' என்ற கொள்கையும் உடையவர். மக்கட்கண் முடியும் இலக்கியம் என்று கொள்வதால் மாசு படாது. சேவடி படரும் செம்மல் உள்ளம் கொண்டு சிறக்கும் முதுவாயிரவலன், அழகன் முருகனை ஏத்தும் ஆர்வலர், மந்திர விதி போற்றும் அந்தணர், வேலன், கொடுந்தொழில் வல்வில் கானவர், சுற்றம், குறமகள் என மக்களால் போற்றித் துதிக்கப்படுகிறான் மயில்மேல் அமர் முருகன். இறைவன் தொண்டரில் அடக்கம் என்பதும் கருத்தில் கொள்ளல் வேண்டும். எது எப்படி

இருப்பினும் ஒரு கருத்தை மட்டும் நாம் ஓர்ந்துணர்தல் வேண்டும். மற்ற ஆற்றுப்படைகள் சாற்றும் பொருள் எத்துணை உயர்வானதானாலும் அவை வாழ்வியல் (லௌகிக) நோக்கம் பற்றியவை. இரத்தல் இழிவானது என்பதில் ஐயமில்லை. பயன்கருதித் தம் பண்பையும் உட்படத் தாழ்த்திக் கூறினர் என்றே கூறவேண்டும்.

வள்ளுவப் பேராசான்,

ஆவிற்கு நீரென் றிரப்பினும் நாவிற்கு
இரவின் இளிவந்த தில் (குறள் 1066)

என்று விதிப்பது நோக்கற்பாலது. நக்கீரர் இந்நிலை யுணர்ந்து ஆற்றுப்படை மரபைப் புதுமையாக்கி, பொருண்மைகூட்டி, ஆற்றுப்படை நோக்கத்தையே வேறுவகைப்படுத்தி, ஆற்றுப்படை நூல்களுக்குப் புதியதொரு கௌரவத்தையும் உயர்வையும் தந்துள்ளார் என்றால், அது மிகையன்று.

முருகாற்றுப்படை என்பதற்கு முருகனிடத்து ஆற்றுப்படுத்துவது எனப் பொருள் கூறல் சிறக்கும். முனைவர் துரையரங்கசாமி இத்திருமுருகாற்றுப்படை 'ஆற்றுப்படை இலக்கணத்திற்கு மாறானது' என்பதால், 'அன்பர்களிடம் அன்பைப் பெற முருகனை ஆற்றுப்படுத்துதல் என்பதே பொருத்தமானது' என்று பொருள் காண்கிறார். ஆனால் இத்திருமுருகாற்றுப்படையில் வரும் கீழ்க்காணும் அடிகள் இவரது இக்கருத்தை ஆதரிக்கவில்லை:-

அ) 'சேவடி படருஞ் செம்மல் உள்ளமொடு
நலம்புரி கொள்கைப் புலம்பிரிந் துறையும்
செலவுநீ நயந்தனை'

ஆ) 'இன்னே பெறுதிநீ முன்னிய வினையே'

இ) 'அளியன் தானே முதுவாய் இரவலன்
வந்தோன் பெருமநின் வண்புகழ் நயந்தென'

ஈ) 'மணங்கமழ் தெய்வத் திளநலங்காட்டி
அஞ்சல் ஓம்புமதி அறிவல்நின் வரவென'

உ) 'பெறலரும் பரிசில் நல்குமதி'

எனது உரையில் நச்சினார்க்கினியர் உரையை மிகுதியும், மற்ற உரைகளில் சில வேறுபட்ட கருத்தாகக் கூறப்படுவதைச் சிற்சில இடங்களிலும் எடுத்துக்காட்டியுள்ளேன்.சான்றாக, திருவாவினன்குடிப் பகுதியில் வரும் 'முரண்மிகு செல்வன்' என்பதற்கு மற்ற நான்கு உரையாசிரியர்களும் 'உருத்திரன்' எனப்பொருள் காண, கவிப்பெருமாள் மட்டும் 'வலிமை மிக்க செல்வனாகிய மகாதேவனும்' என்று பொருள் கூறுகிறார்.

அறிஞர் அ.ச.ஞானசம்பந்தம் தமது 'இலக்கியக்கலை' எனும் நூலில் இத்திருமுருகாற்றுப்படைக்குச் சொற்பொருளியல் விளக்கமாக ஒரு கருத்தைக் கூறுகிறார். 'புலவரை முருகனிடம் ஆற்றுப்படுத்துவது' என்ற பொருளினின்றும் மாற்றுக்கருத்தாக, ''நயங்களைத் தரக்கூடியதாக அமையும் படைப்பு இலக்கியம் என்று இந்நூல் கூறப்படும்'' என்கிறார். (பக்.17-18)

பின்னர் எழுந்த தண்டியின் காவியாதர்சத்தில் ஒரு நூல் தொடங்குமுன்,

அ) ஆசீர்வதித்தல் ஆ) வணக்கம் செலுத்துதல் இ) நேரிடையாகப் பொருண்மைக்குச் செல்லல் என்ற மரபு சாற்றப்படுகிறது. நேரிடையாகப் பொருண்மையுடன் ஆரம்பிப்பதற்குச் சான்றாகக் காளிதாசனின் குமார சம்பவத்தைக் குறிப்பிடலாம். இங்கு நக்கீரர் நேரிடையாகவே பொருண்மைக்குச் சென்றுவிடுகிறார். ''உலகம் உவப்ப வலன்ஏர்பு திரிதரு பலர் புகழ் ஞாயிறு கடற் கண்டாஅங்கு'' என்று காலைக்கதிரவன் நீலக்கடலில் தோன்றும் காட்சியோடு ஒக்கும் முருகப்பெருமானின் மயில்மேல் அமர் எழிலார் தோற்றமுடன் பாடலைத் தொடங்குகிறார் நக்கீரர். உலகம் என்பது ஓர் உயர்ந்த மங்கலச் சொல்லாட்சி. இஃதேபோன்று வடநூல் வல்லான் மம்மடன் காவியப் பிரகாசத்தில்,

**அ) வேதம் விளம்பும் செய்திகள்**
**ஆணையிடுவன போன்றவை (ப்ரபு ஸம்மிதை )**

**ஆ) புராணங்கள் போற்றிக் கூறுவது**
**நண்பனின் இனிய கூற்று ஒத்தது ( ஸுஹ்ருத் ஸம்மிதை)**

**இ) காவியங்கள் எடுத்தியம்பும் கருத்துகள் காதலி கூறுவது**
**போன்ற மென்மை கொண்டவை (காந்தா ஸம்மிதை)**

என நூல்னைப் பிரித்துப் பேசுகின்றான். இந்த நெறியில் இத்திருமுருகாற்றுப்படை,

"தான் இறைவனிடத்துப் பெற்ற கந்தழியாகிய செல்வத்தை யாண்டும் திரிந்து பெறாதார்க்கு இன்னவிடத்தே சென்றாற் பெறலாமென்று அறிவுறுத்தி, அவரும் ஆண்டுச் சென்று அக்கந்தழியினைப் பெறும்படி சொன்ன கூறுபாடும்'' கொண்டதால், மேலே கூறப்படும் காவியப் பிரகாசத்தின் இரண்டாம் நெறி இதற்கும் பொருந்துவதாகக் கொள்ளலாம். ஓர் அன்பன் மற்றோர் அன்பனை முருகன்பால் ஆற்றுப்படுத்துகிறான் என்று கொண்டாலும் அல்லது நூலாசிரியரே பின்நின்று அன்பர்களை முருகன்பால் ஆற்றுப்படுத்துகிறார் என்று கொண்டாலும் சமநிலை உடைய ஒருவன் மற்றொருவனை ஆற்றுப்படுத்துவதாகக் கொள்ளலாம். அதாவது ஒரு நண்பன் மற்றொரு நண்பனிடம் இன்மொழி பேசி ஏற்ற கருத்துகள் கூறி ஆற்றுப்படுத்துகிறான். இதற்கான சொற்றொடர்கள் நூலில் முன்பே கூறியவாறு பல இடங்களில் பரவி வருகின்றன. மேலேகூறியவற்றால், திருமுருகாற்றுப்படையில் காப்பியமரபு பொருண்மைக் கூறுகள் மிளிர்வதைக் காணலாம்.

உபநிடதங்கள் விளக்கும் கருத்துகளோடு ஒன்றும் பல கருத்துகள் இந்நூலில் இடம்பெற்றுள்ளன:-

| *உபநிடதப் பெயர்* | *கருத்து* | *திருமுருகாற்றுப்படையில் ஒன்றும் கருத்து* |
|---|---|---|
| **அ. முண்டகோபநிடதம் (3-7)** | **பரமன் மனத்துக்கு எட்டாத் தூரத்தில் ஒளிர்பவன்.** | **'ஓவற இமைக்குஞ் சேண் விளங் கவிரொளி' (அடி எண் 3)** |
| **ஆ. கைவல்யோபநிடதம் (7)** | **அஞ்ஞான இருளுக்கு அப்பால் இருப்பவன் இறைவன்.** | ,, |
| **இ. கடோபநிடதம் (2-1)** | **நலனை நாடுபவன் சான்றோனாக உயர்கிறான்.** | **'நலம்புரி கொள்கைப் புலம்பிரிந்து உறையும்' (அடி, 63)** |
| **ஈ. கடோபநிடதம் (2-24)** | **ஆத்மனை அடையும் பேறு தீய ஒழுக்கடையவர்க்கு இல்லை.** | ,, |

| | | |
|---|---|---|
| உ) மைத்ரேயி உபநிடதம் | தூயமனம், தூயபுத்தி<br>இவற்றிற்குக் கடவுள்<br>புலப்படுகிறான். | ” |
| ஊ. பகவத்கீதோபநிடதம்<br>(2 - 70) | ஆசைகளனைத்தையும்<br>அடக்கும் முனிவன்<br>சாந்தி பெறுகிறான். | '....மாசுஅற ...<br>...துனியில் காட்சி<br>முனிவர் முற்புக'<br><br>(137) |
| எ. பகவத்கீதோபநிடதம்<br>(7-17) | இடையறா யோகம்<br>பூண்டு பக்தி செலுத்தும்<br>ஞானிக்கு நான்<br>ப்ரியமானவன். | ” |
| ஏ. பகவத்கீதோபநிடதம்<br>(13) | பிரம்மம் உலகனைத்தையும்<br>வியாபித்துள்ளது. | 'ஊரூர் கொண்ட......<br>வைப்பும்' (220-226) |
| ஐ. பகவத்கீதோபநிடதம்<br>(9-26) | எனக்கு அவன்<br>பிரியமானவன். யார்<br>எனக்கு இலை, மலர்,<br>பக்தியோடு<br>படைக்கிறானோ<br>அத்தூய மனத்தினது<br>அன்பை நான் இன்புடன்<br>ஏற்று அருந்துகிறேன். | திருவாவினன்குடியில்<br>கந்தருவரும் அவர்தம்<br>மகளிரும்,<br>குன்று<br>தோறாடலில் வேலனும்<br>அவன் சுற்றமும்<br>காட்டப்படுகின்றனர்.<br>பழமுதிர்சோலையில்<br>குறமகள் படைக்கும்<br>எளிய பூசையை ஏற்று<br>உவந்து முருகன்<br>ஆவேசிக்கிறான்;<br>அருளுகிறான்;<br>சௌலப்பியனாகக்<br>காட்சி தருகிறான். |

இதேபோன்று உரையில் பொருத்தமான சில பகுதிகளில், ப்ருகதாரண்யக

உபநிடதம், ஈசாவாஸ்ய உபநிடதம் போன்ற உபநிடதக்கருத்துகள் எடுத்தாளப்பட்டுள்ளன.

இத்திருமுருகாற்றுப்படையில் சைவாகமங்கள் ஓதும் ஏற்றமிகு இனிய செறிந்த கருத்துகள் நிறைந்து உள்ளன என்பதையும் உணரலாம். இறைவன் தற்பிரகாசமாகவும் பரப்பிரகாசமாகவும் நிற்கும் அளவில் சோதியன்; எல்லாவற்றிற்கும் மேலாக நிற்கும் பரஞ்சோதியானவன்; பேரொளிகொண்டு தானே விளங்குதலால் சுயஞ்சோதியுமானவன். இத் தத்துவ அடிப்படையில் நக்கீரர் திருப்பரங்குன்றப் பகுதியில், முருகப்பெருமான் காலைக்கதிரவன் புறவிருள் போக்குவது போன்று அடியவர் மனஇருள்போக்கும் மாண்பைக் கூறியபின், தூரத்துச்சோதியாய் நிற்றலை 'ஓவற இமைக்குஞ் சேண்விளங் கவிரொளி' என்கிறார். 'சோதியாய் நிறைந்தான் சுடர்ச் சோதியுள் சோதியான்' என்பது திருஞான சம்பந்தரின் வேதப்பிரமாணமாகும். மணிவாசகப் பெருமான் இறைவனை 'தோற்றச் சுடர்ஒளிஆய்ச் சொல்லாத நுண்உணர்வு ஆய்' என்றும் 'மேவி அன்று அண்டம் கடந்து விரிசுடர் நின்ற மெய்யன்' என்றும் பாடுகிறார். பேரூர்ப்புராணம் பள்ளுப்படலத்தில் 'வெயில் வெங்கதிர்கோடிப் பேரொளி' என்று பாடுகிறது. சேக்கிழார்பெருமான் 'அலகில் சோதியன்' என்றும் 'சோதியாய் எழும் சோதி' என்றும் போற்றுகிறார். அடுத்து, அடியவர்களுடைய தம் குவிந்த உள்ளக்கமலங்களை மலர்த்தி அவர்கள் தீவினையைப் போக்கி அறியாமையை அகற்றி இன்பளிப்பது ஈசனின் இணைத்திருவடிகள். இறைவனின் இக்கருணையை, 'உறுநர்த் தாங்கிய மதனுடை நோன்தாள்' என்ற அடியில் உரைக்கிறார் நக்கீரர். திருவள்ளுவர் இறைவனின் 'நற்றாளை'த்தொழ வேண்டுகிறார். 'மெய்யே உன் பொன் அடிகள் கண்டு இன்று வீடு உற்றேன்' என்பது மணிவாசகர் திருவாக்கு. தேவர்களும் அறியாச் செம்மலர்ப் பாதங்கள் காட்டும் செல்வன் திருமுருகன். அவன் திருவடிகள் அடியவர் மாசுபோக்கி வீட்டின்பமளிக்கும் வண்மைத் திருவடிகள். அவை அன்பர்களை ஆனந்த வெள்ளத்தில் ஆழ்விக்கும் திருவடிகள்.

சேக்கிழார்பெருமான், இறைவனுடைய 'மலர் சிலம்படி'யை வாழ்த்துகிறார். அடுத்து, இறைவனின் அற, மறக்கருணைத்திறனைச் 'செறுநர்த் தேய்த்த செல்லுறழ் தடக்கை' என்ற அடியில் போற்றுகிறார் நக்கீரர். மணிவாசகப்பெருமான் இறைவன் தம்மை 'அடித்து அடித்து அக்காரமும் தீற்றிய அற்புதம்' வியந்து பாடுகிறார்.

இராமலிங்க சுவாமிகள் இறைவனை

**'மறக்கருணையும் தனி அறக்கருணையும் தந்து**
**வாழ்விக்கும் ஒண்மைப் பதம்'**

என்று போற்றுவதில், இறைவனின் அற, மறக்கருணை கூறப்படுகின்றன.

மரமும் வயிரமும் போல் இறைவனும் இறைவியும் இணைந்து நின்று செயற்படுவதால், "மறுவில் கற்பின் வாணுதல் கணவன்" என்று கூறப்படுகிறது.

சிவஞானசித்தியார் (பக்.239) "அருளது சக்தியாகும் அரன்தனக்கு அருளையின்றித் தெருள் சிவமில்லை, அந்தச் சிவமின்றிச் சத்தியில்லை" என்பது நோக்கற்பாலது. அடுத்து, மாமறையும் அறியா 'இறை திருவடியே வீடாயிருக்கும்' என்பதால், அத்திருவடி பற்றச் 'சேவடி படரும் செம்மல் உள்ளம்' கொண்டு 'நலம் புரி கொள்கை' விளங்கவரும் அடியவர்தம் அழுக்கு அடையா நெஞ்சமாண்பு பேசப்படுகிறது. பற்பல பிறப்புகளிலும் தொடர்ந்து முதிர்ந்த வேணவாவில் விளைந்தது இக்கொள்கை.

திருச்சீரலைவாய்ப் பகுதியில்,

**'மாயிரு ஞாலம் மறுவின்றி விளங்கப்**
**பல்கதிர் விரிந்தன்று ஒருமுகம்'**

என்று புற இருள் போக்கி உயிர்களின் ஆணவ மலம் அகற்றும் இறையது கருணையியல்பு எடுத்து இயம்பப்படுகிறது.

'இருள் கடிந்தருளிய இன்ப ஊர்தி' என்கிறது திருவாசகம். அடிமை நெறி, மகனெறி, தோழமை நெறி, அறிவு நெறி என நான்கு நெறி நின்று, மிகு காதல் அன்பால் ஏத்தும் ஆர்வலர்க்கு அருளும் திறம் 'ஒரு முகம் ஆர்வலர் ஏத்த அமர்ந்து இனிது ஒழுகி' என்ற அடியில் கூறப்படுகிறது. மணிவாசகர்,

'பன்னிப் பணிந்திறைஞ்சப் பாவங்கள்
பற்றறுப்பான் இறைவன்' என்கிறார்.

அடுத்து, இருமைக்கும் இன்பம் பயக்கும் வேள்விகாக்கும் முகத்தின் இயல்பும், ஈண்டு வழங்காத வேதங்களிலும் நூல்களிலுமுள்ள பொருள்களை ஆய்ந்து இருடிகளை இன்புறுத்தும் திங்கள் போன்ற திசை விளக்கும் திருமுகமும், அழிக்கத் தக்கவரை அழிக்கும் வெகுளிகொண்டு மறக்கள வேள்வியை வேட்கும் திருமுகமும், குறமகள் வள்ளியொடு மகிழ்ந்திருக்கும் மலர் முகமும் கூறப்படுகின்றன. இவை யாவும் இறைமைப்பண்புகளாம். அடுத்து, முருகப் பெருமானின் திருக்கரங்களின் செயல்பாடுகளில், கதிரவனின் கதிர்களது வெம்மைதாங்கி உலகஉயிர் காக்கும் அவிர்சடை முனிவரைக் காத்தருளும் திருக்கரமும், மோனமுத்திரை காட்டி ஆனந்தமயமான ஒளி மாணாக்கர்க்கு நிறைவிக்கும் கரத்தின் செயல்பாடும், மழைவளம் வழாது பெய்விக்கும் திருக்கரமாண்பும் குறிப்பிடத்தக்கன. திருவாவினன்குடியில் கூறப்படும் முனிவர்கள் செற்றம் நீக்கிய செம்மையானவர்கள். இவர்கள் காமம், வெகுளி, மயக்கம் எனும் முக்குற்றங்கள் நீங்கிய முனிவர்கள்; ஐந்து மாறடக்கிய சிந்தையர். பதிஞானம், பசுஞானம், பாசஞானம் கைவரப்பெற்றதால் 'கற்றோர் யாவதும் அறியா அறிவினர்' என இன்னோர் போற்றப்படுகிறார்கள். இறைத்திருவருளே இறைவி என்பதால் 'உமையமர்ந்து விளங்கும்' நிலை கூறப்படுகிறது. அயன், திருமால், உருத்திரன், இந்திரன் எனும் நாற்பெருந்தெய்வங்கள் முறையே படைத்தல், காத்தல், அழித்தல், துறக்க நாட்டைக் காத்தல் எனும் தொழில்தலைமையர். தொழில் வேறுபடினும் இத் தேவர்கள் 'உலகம் காக்கும் ஒன்று புரி கொள்கை' உடையவர். நச்சினார்க்கினியர் இவ்வடியினைத் திருமாலுக்கு உடையவர். இத்தெய்வங்களுக்கு முன் செல்பவர்கள் முனிவர்களும் பண் அமை யாழ் கூட்டும் கந்தருவரும் அவர்தம் மகளிரும்.

**'பண்சுமந்த பாடல் பரிசு படைத்தருளும்**

**பெண்சுமந்த பாகத்தன் பெம்மான்'**

என்பது திருவாசகம். திருவேரகப் பகுதியில் அந்தணர்களின் அறுவகைத் தொழில்களின் ஓங்கிய சிறப்பும், மரபிரண்டும் செம்மைநெறி வழிவந்த நற்குடிப் பிறப்பும், பிரமசரியங் காத்த பேராண்மையும், பிற இயல்பும் கூறப்படுகின்றன. இறைவனை 'உச்சிக் கூப்பி' வணங்கும் முறை கூறப்படுகிறது.

**'சிரம் குவிவார் ஓங்குவிக்கும்**

**சீரோன் கழல் வெல்க'**

என்பது திருவாசகம். குன்றுதோறாடலில் வெறியாட்டயரும் வேண்மகளியல்பும், பழமுதிர்சோலைப் பகுதியில் மலைநிலமகளிர்தம் பூசையும் கூறப்பட்டுள்ளன. அவர்களுக்கு முன்வந்து அருளும் எளியவனானவன்(சௌலப்பியன்) இறைவன். பரமன் பக்திவலையில் படுகிறவன். பாம்பனடிகள் "எளியவ, என் இறைவ, குகா" எனப் போற்றுகிறார். நிறைவாகப் **பழமுதிர்சோலைப்** பகுதியில் எங்கும் நிறைந்து நிற்கும் இறையாற்றல் கூறப்படுகிறது. 'ஊர் ஊர் கொண்ட சீர்கெழு விழவினும்' எனத் தொடங்கும் அடிகளாலும் பின்வரும் அடிகள் சிலவற்றாலும் இறைவன் பூசை செய் இடங்களில்லாம் வெளிப்பட்டு அருளும் தன்மை உணர்த்தப்படுகிறது. சேக்கிழார் 'பூசனைக்குப் பொருந்தும் இடம்பல' என்கிறார். குறைவேண்டினோர் வேண்டியாங்கு எய்தும் அருட்சிறப்பும் கூறப்படுகிறது.

**'வேண்டத் தக்கது அறிவோய் நீ**

**வேண்ட முழுதும் தருவோய் நீ'**

என்கிறது திருவாசகம். இராமலிங்க அடிகளார்

**'வேண்டினும் வேண்டாவிடினும் அளிக்கும்**

**விமலன்'** நிலையினை வியப்பார்.

இப்பகுதியில், முருகனைக் கண்டவிடத்து முகத்தான் விரும்பி நோக்கி, வாயாலே வாழ்த்தி, கையைத் தலைக்கு மேலே குவித்து, சிரம் அவன் திருவடிகளில் பொருந்த வீழ்ந்து வணங்கிப் போற்றித் துதிக்குமாறு அறிவுறுத்துகிறார் நக்கீரர். இறைவனை நறுமலர் தூவியும், நா மணக்கும் சொன்மலர்களால் பரவியும் துதித்தல் வேண்டும். இங்கு இருபத்தாறு விளித்தொடர்களால் நிறைதமிழ்ச் சொன்மாலை புனைந்து முருகனுக்குச் சூட்டி மகிழ்கிறார் நக்கீரர். பரிபாடல் 3 ஆவது பாடலில்

**' தீயினுள் தெறல் நீ ! பூவினுள் நாற்றம் நீ !'**

எனத் தொடங்கும் தெய்வம் போற்றும் பகுதி நினைவு கூரத்தக்கது. 'வாழ்த்த வாயும் நினைக்க மடநெஞ்சும், தாழ்த்த சென்னியும் தந்த தலைவன்' என்பது அப்பர் திருவாக்கு. 'புகழ்மின், தொழுமின், பூப்புனைமின்' என்கிறது திருவாசகம். இறைவன் சேய மாமலர்ச் சேவடிக்கண் நம் சென்னி மன்னித் திகழத் தொழவேண்டும். இங்கு முருகனைத் துதித்துப் போற்றும் புகழ்மொழிகளில் 'பெரும் பெயர் முருக' என்பது குறிப்பிடத்தகு சொல்லாட்சி; இறைபோற்றும்

மகாவாக்கியம். சிவஞானபோதச் சிறப்புப் பாயிரத்தில் **'பெரும்பெயர்க் கடவுள்'** என்று இறைவன் போற்றப்படுகிறான்.

நக்கீரர் 'மணங்கமழ் தெய்வத்து இளநலங் காட்டி' என்ற அடியால் முருகனின் மூவா இளநலம், அழியா இயல்பு, மாசின்மை, பேராற்றல் ஆகியவற்றைக் காட்டுகின்றார். தன் அடியவர்க்கு அவன் அருள்சுரந்தும் பகையழித்தும் நிற்கும் நிலையிது. முருகன் அருள் பெற விழையும் உயிரைத் தூண்டும் வகையில் 'இன்னே பெறுதி நீ முன்னிய வினையே' என்ற அடியில் கூறிய பின் "அஞ்சல் ஓம்புமதி அறிவல் நின் வரவு" என முருகன் உயிர்கட்கு அருளும் பெற்றியை எடுத்துரைக்கிறார் நக்கீரர். இங்கு முருகனது முற்றறிவுடைமை உணர்த்தப்படுகிறது. 'உலகத்து, ஒரு நீயாகித் தோன்ற' என்ற அடியில் முருகன் அருளால் உயிர்கள் பெறும் நல்வாழ்வு கூறப்படுகிறது.

இத்திருமுருகாற்றுப்படையில் கூறப்படும் சில விழுமிய நெறிகளும் கொள்கைகளும், எல்லா நாட்டவரும் எல்லாச் சமயத்தினரும் ஏற்கும் நிரந்தர விழுப்பொருளும் சிறப்புமுடையன. சான்றாக,

'பலர் புகழ் ஞாயிறு' என்ற தொடர்க்கு 'எல்லாச் சமயத்தாரும் புகழும் ஞாயிறு' என உரை காண்கிறார், நச்சினார்க்கினியர். இக்கருத்தை ஒட்டியே பரிமேழலகரும், பரிதியாரும் பொருள்காண்பர்.

எல்லாச் சமயத்தினரும் இறையை 'ஒளியுருவாக' க் கண்டு போற்றித் துதிக்கின்றனர். சான்றாக, கிருத்துவ சமய விவிலிய நூலில்,

பரிசுத்த வேதாகமம் - பழைய ஏற்பாடு - சங்கீதம் அதிகாரம் 104 - 2இல் **'வெளிச்சத்தை வஸ்திரம் போலுடுத்தி வானங்களைத் திரையைப் போல விரித்திருக்கிறார்'** என வருகிறது.

திருவிவிலியம் - புதிய ஏற்பாடு - யோவான் -

8 :12 **"உலகின் ஒளி நானே;** என்னைப் பின் தொடர்பவர் இருளில் நடக்கமாட்டார்; வாழ்வுக்கு வழிகாட்டும் ஒளியைக் கொண்டிருப்பார்."

> **'அல்லாஹ் வானங்கள், பூமி ஆகியவற்றின்**
> **ஒளியாக இருக்கிறான்' ....**

*(குர்ஆன் தர்ஜமா - பாகம் - 18, அத்தியாயம்:24, ருகூஉ5 பக்கம் 355, ஸீரத்துன் நூர் - 35)*

முகம்மதிய ஞானியாகிய மஸ்தான் சாகேப்

"ஆனந்த ஒளிகண்டு நான் வந்த வெளிசென்று
அடைந்திடற் கருள் புரியவும்" என்று (6-தொகை நிலை)

வேண்டுகிறார்.

எல்லாச் சமயத்தினரும் இறைவனின் நோன்தாளைப் பரவுகின்றனர்; ஆற்றல்மிக்க அவன் கரங்களைப் போற்றுகின்றனர்; இறைவியின் மறுவில் கற்பு மாண்பைப் போற்றி வணங்குகின்றனர். இவ்வுலகு 'மாயிருள் ஞாலம்' என்பதால், இறையருளால் ஒளிவீசி நன்கு காக்கப்படுகிறது. இறையருளால் உலகம் உயிர்கள் மகிழ மழைவளம் கூட்டுவிக்கப்படுகிறது. அடியவர்கள் 'செம்மல் உள்ளமும் நலம்புரி கொள்கையும்' கொண்டு விளங்கவேண்டும். திருமுருகாற்றுப்படையில் கூறப்படும் முனிவர்களின் துறத்தல் அறங்கள் எல்லாச் சமயத்தாருக்கும் பொதுவானவை. இத்தகைய ஆர்வலர்க்கு இறைவன் அருளுகிறான். ஆங்கிலக்கவிஞன் மில்டன் Comus என்ற காப்பியத்தில் அறவழி நிற்போரின் அல்லல் தீர்க்க இறைவன் துறக்கநாட்டைத் துறந்து இந்த மண் வந்து உதவி அருளுகிறான் என்ற ஓர் ஏற்றமிகு கருத்தைத் தெரிவிக்கிறான்.

அஃதாவது,

"சீலமிகு மாந்தர் சிறு துன்புற்றாலும்-வான்
உலகு இழிந்திரங்கி வந்தவரைக் காக்கும்"

"If virtue feeble were
Heaven itself would stoop to her" Comus -Milton

இத்திருமுருகாற்றுப்படையில் தண்டியாசிரியரது காவ்யாதர்சத்தில் 'பெருமைமிகு தலைவன் செயல்பாடுகளை எடுத்தியம்பும் பண்பும், உறுதிப்பொருள் நன்குணர்த்தும் வகையும்' என்று கூறப்படும் கூறுகள் மிளிர்வதைக் காணலாம். காவிய அமைப்பாகக் கொள்ளாவிட்டாலும் திருமுருகாற்றுப்படைத் தலைவனான பெரும்பெயர் முருகனின் அரும்பெறல் பண்புகள் பலவும் போற்றப்பட்டுள்ளன.

இத்திருமுருகாற்றுப்படை இலக்கிய இன்பமும் கவித்துவ உயர்வும் கொண்டது. சிறந்த செஞ்சொற் செறிவும் பொருட்சிறப்பும் கொண்ட சீரிய நூல். பவணந்தியார் நன்னூலில் (10) 'அறம்பொருள் இன்பம் வீடடைதல் நூற்பயனே'

எனக் கூறுகிறார். திருமுருகாற்றுப்படையில் பவணந்தியாரின் இக்குறிக்கோள் முழுதும் நிறைவிக்கப்படுவதாகக் கொள்ளலாம். திருக்குறளுக்கான பரிமேலழகருரையில் "அறமாவது மனு முதலிய நூல்களில் விதித்தன செய்தலும் விலக்கியன ஒழித்தலுமாம் "என்று கூறப்பட்டுள்ளது. ''பொருள் என்பது அரசனீதி கூறவே யடங்கும்'' என்றார். "இம்மையொன்றும் பயப்பது இன்பம். இப்பொருள் விரவும் கீழ்க்காணும் அடிகள் நோக்கத்தக்கன:-

**அறம்:-**

- **அ)** **'மறுவில் கற்பு'**
- **ஆ)** **'சேவடி படருஞ் செம்மல் உள்ளம்'**
- **இ)** **'நலம்புரி கொள்கைப் புலம்பிரிந் துறையும்''**
- **ஈ)** **'நன்னர் நெஞ்சம்'**
- **உ)** **'செற்றம் நீக்கிய மனத்தினர், யாவதும் கற்றோர் அறியா அறிவினர், கற்றோர்க்குத் தாம்வரம்பாகிய தலைமையர், காமமொடு கடுஞ்சினங் கடிந்த காட்சியர்'**
- **ஊ)** **'இருவர்ச் சுட்டிய பல்வேறு தொல்கொடி'**
- **எ)** **'வண் புகழ்'** முதலியன

**பொருள்:-**

- **அ)** **'செருப்புகன்று எடுத்த சேணுயர் நெடுங்கொடி, வரிப்புனை பந்தொடு பாவை தூங்கப், பொருநர்த் தேய்த்த போரறு வாயில்'**
- **ஆ)** **'திருவீற்றிருந்த தீதுதீர் நியமம்'**

**இன்பம்:-**

- **அ)** **'மடவரல் வள்ளியொடு நகையமர்ந் தன்றே'.**

இதற்கு நச்சினார்க்கினியர் மிகச் சிறந்த உரை வகுத்துள்ளார். இது நச்சினார்க்கினியர் உரைச் சிறப்பில் கூறப்பட்டுள்ளது.

**வீடு:-**

**முருகாற்றுப்படை என்பது வீடு பெறுவதற்குப் பக்குவமுடைய ஒருவனை வீடுபெற்றான் ஒருவன் முருகனிடத்தே ஆற்றுப்படுத்துவது என்ற பொருளில் வருகிறது. இங்கு ஜீவன் முத்திநிலை பேசப்படுகிறது.**

மகாகவி காளிதாசன் தனது இரகுவமிச காவியத்தைத் தொடங்குமுன் சொல்லும் பொருளும் போல் இணைந்திருக்கும் சிவனும் உமையும் சொற்பொருளைத் தரும் அறிவைத் தனக்குத் தந்தருளிட வேண்டுகிறான். இதிலிருந்து பெறப்படுவது யாதோவெனின், ஒரு சிறந்த இலக்கியத்திற்கும் கவிதைக்கும் உயர்ந்தனவும் சிறந்தனவுமான சொற்பொருள் எடுத்துக் கையாளப்பட்டு ஏற்றம் கொடுக்கப்படவேண்டும் என்பதாகும். திருமுருகாற்றுப்படையின் தொடக்கத்தே,

> **'உலகம் உவப்ப வலனேர்பு திரிதரு**
> **பலர்புகழ் ஞாயிறு கடற்கண் டாஅங்கு'**

என்ற நாற்சீர் அடிகளில் சிறு சொல்லமைப்பால் மிகச் சிறந்த உவமையோடு முருகனின் தோற்றத்தைக் கூறுகிறார் நக்கீரர். அவர் கையாளும் சிறந்த சொல்லாட்சிகள் எனது உரையின் பிற்பகுதியில் கூறப்பட்டுள்ளன. இப்பாடலில் இயல்பான வழக்குச் சொற்களையும் உயர் தனிச் செஞ்சொற்களையும் எடுத்தாண்டிருக்கிறார் நக்கீரர். குன்றுதொறாடல் பகுதியில் வரும் "கச்சினன்" முதலிய சொற்றொடரிலும், பின் பழமுதிர்சோலைப் பகுதியில் முருகனைப் புகழ்ந்து போற்றும் "அறுவர் பயந்த" எனத் தொடங்கும் புகழ் மொழிகளிலும், மிக எளிய சொல்லாட்சிகள் பயின்றுள்ளமை குறிப்பிடத்தக்கது. பொருட்சிறப்பாலும் சிறந்தவை அச்சொற்கள்.

நக்கீரர், கவிதையின் கவின்மிகு யுக்தியாக, இயற்கை எழிற்கோலத்தை எடுத்துரைக்கும்போது, இயற்சீர் அடிகளில் செறிந்த நடையாலே புனைந்து காட்டுகிறார். மேலே கூறப்படும் **'உலகம் உவப்ப'** என்ற தொடக்கமே மனத்திலே கற்பனையை எழுப்பிக் கடலிடத்தே தோன்றும் காலைக்கதிரவன் அன்ன முருகன் தோற்றத்தைக் காட்டி, முறையே புறவிருள் அகவிருள் போக்கும் தன்மையைப் புலப்படுத்துகிறது. இது தொழில்உவமமும் வண்ண உவமமும் பற்றி வந்ததென மெச்சுவார், உச்சிமேல் புலவர்கொள் நச்சினார்க்கினியர். கவிதையின்பம் பயப்பதற்கான குறைந்த சீர்கள் கொண்டு அடிகளை வகுத்திருப்பது எண்ணத் தக்கது. ஆங்கிலக் கவிஞன் வோர்ட்ஸ்வர்த் கூறும் ஆக்கக் கற்பனை (Constructive Imagination) என இதனைக் கொள்ளலாம். அதே

வேளையில் இன்றியமையாமை எனக் கருதும் இடத்தில், ஆசிரிய அடிக்கண் ஐந்து சீர்களையும் பயன்படுத்துகிறார் புலவர். சான்றாக,

**'நலம்பெறு கலிங்கத்துக் குறங்கின்மிசை அசைஇயது ஒருகை'**

போன்ற அடிகளில் ஐந்து சீர்களைப் பயன்படுத்திப் பொருண்மைக்கு சிறப்புக் கூட்டியுள்ளார். இஃதேபோன்று, கவிதைக்கு இன்றியமையாப் பண்புகளில் ஒன்றான உவமைஅணி நூல்முழுதும் விரவிப் பல்வகைக் கோலம் பாங்குறக் காட்டிக் கற்போர்உள்ளம் களிப்புறச் செய்கிறது. தொல்காப்பிய மரபியலில் 'உயர்ந்ததன் மேற்றே உள்ளுங் காலை' என்ற நோக்கில் மிகச் சிறந்த உவமைகளைக் கையாண்டிருக்கிறார் புலவர்பெருமான். எனது உரையின் இறுதிப் பகுதியில் இவற்றைப் பட்டியலிட்டுத் தந்துள்ளேன்.

இயல்புநவிற்சியாகிய தன்மையணி பகுதிதோறும் அழகுசெய்தல் காணலாம். ' அஞ்சிறை வண்டின் அரிக்கணம்' , 'கடுந்திறல் பாம்பு' முதலாக வருவன காண்க. பொருளை உவமமாக்கிக் கூறும் விபரீதஉவமை 'கண்போல் மலர்ந்த காமர் சுனைமலர்' என்னும் அடியில் தோன்றுகிறது.

வேலன்,

'தொண்டகச் சிறுபறைக் குரவை' அயரும் ஆட்டம் கூறப்படுகிறது. குறமகள் ஆடுகளமும் கூறப்படுகிறது. இந்நிகழ்வுகள் அன்றைய சமுதாயப் பண்பாட்டின் அங்கமாகவே கொள்ளப்படல் வேண்டும்.

இயற்கையைப் பாடிப் பரவி இன்புறாத கவிஞர்களே இல்லை எனலாம். நம்முடைய சங்ககாலப் புலவர்கள் இயற்கையின் மடியிலே தவழ்ந்து, தம் பாடல்களில், அதன் ஒவ்வோர் அசைவையும், அழகையும் படம்பிடித்துக் காட்டி மகிழ்பவர்கள். குறிப்பாக, அகப்பொருள் இலக்கியங்களில் உள்ளுறை உவமைகளைப் பயன்படுத்தியும், பொருட்புறத்ததாக அரிய பொருள் உணர்த்தும் 'இறைச்சி'ப் (த்வனி என வடநூலார் கூறுவர்) பொருளை உணர்த்தியும் கவிதைக்கு ஏற்றம் தருவர். ஐங்குறுநூற்றில் தலைவி தன் தலைவன் நாட்டில் கிடைக்கும் விலங்குகள் குடித்துக் கலங்கிய நீர்கூடத் தனக்குத் தேனுடன் கலந்த தீம்பாலாய் இனிப்பதாகக் கூறித் தலைவன்பால் தான் கொண்ட அன்பின் ஆழத்தைப் புலப்படுத்துகிறாள்.

'அன்னாய் ! வாழி' எனத் தொடங்கும் பாடல் அது. (ஐங்.203).

கவிச்சக்கரவர்த்தி கம்பனின் புகழ்பெற்ற பாட்டடியான

**'கவியெனக் கிடந்த**
**கோதா வரியினை வீரர் கண்டார்'**

என்ற தொடரில், மெய்ப்புலவர்களின் பாட்டுப்பணி போற்றும் உயர்வு நோக்கலாம். காளிதாசன் போன்ற வடநூல் கவிஞர்களும் இயற்கை வருணனையில் ஏற்றம் கொண்டவர்கள். மகாகவி **காளிதாசன் குமார சம்பவத்தைத்** தொடங்கும்போது **'இமயமலை இப்பாரத பூமியின் அகலத்தை அளக்கும் அளவுகோல்'** என உவமிக்கிறான். ஆங்கிலக் கவிவாணர்களும் தம்முடைய காப்பியங்களில் இயற்கையை வருணித்துப் போற்றுபவர்கள்.

கார்லைல், "இயற்கையின் எழிலை எடுத்துக் காட்டுவது இலக்கியம்" என்பார். (Literature is an apocalypse of Nature), இயற்கையைப் போற்றும் வோர்ட்ஸ்வர்த் (Wordsworth)கவிஞன் இயற்கை மனிதனுக்கு நீதிபுகட்டும் நிலை கூறுகிறான்:-

"மனிதனின் தீமை நன்மைச் செறிதல் நெறிகளை
முனிவரினும் முற்றக் கூறும் முருகியல் இயற்கை"

**" One impulse from a Vernal woad**
**May teach you more of man**
**Of Moral evil and of good**
**Than all the sages can"**
( Tables Turned-Wordsworth)

இவ்வாறே **கீட்ஸ்** (Keats) எனும் கவிஞன்

**'A thing of beauty is a joy for ever'**

(Endymion, Preface)

எனவும்,

**'Beauty is Truth, Truth Beauty'**

(Ode on a Grecian Urn - Keats)

எனவும் அழகு தரும் ஆனந்தத்தையும், உண்மை உயர்வையும் காட்டி உள்ளம் நெகிழ்வான். இத்திருமுருகாற்றுப்படையில் நக்கீரர் இறைமை,

இயற்கை, மனிதன் என மூன்று நிலைப் பண்புகளையும் எடுத்துக் கூறியுள்ளார்.தமிழ்த் தென்றல் திரு.வி.க. 'முருகன் அல்லது அழகு' என்ற தமது நூலில்,

'உலகம் உவப்ப' என்ற அடிக்கு அறிவியல் கருத்தாக "இளஞாயிறு திரட்டி வரும் உயிர்ப்புக்கு (Ozone)ஓர் அளவில்லை' என்றும், பின் ''எம்பெருமான் முருகனோ குணங்குறி யில்லாதவன். அவன் செஞ்ஞாயிற்றின் வாயிலாக உலகிற்கு அருள் சுரக்கிறான்'' என்றும் போற்றுகிறார். (பக்.65.66)

மேலும் திருமுருகாற்றுப்படையில் வரும் "கைபுனைந் தியற்றாக் கவின் பெறு வனப்பு"என்ற தொடரை அவர் மிகவும் போற்றி மகிழ்வார்.(பக்.14) நக்கீரரின் இந்த இனிய சொல்லாட்சி சூரரமகளிரின் எழிலை எடுத்துக் கூறினாலும், இத்தொடரை மலை, ஆறு,காடு, கடல், ஞாயிறு, திங்கள், விண்மீன்கள் எனக் கையால் புனையப்படாத அனைத்திற்கும் பொருத்திக் கூறுகிறார் திரு.வி.க:-

**"எப்பொழுதும் முருகன் இயற்கை வாயிலாக**
**உயிர்கட்குத் துணை புரிந்து வருகிறான்.**
**ஞாயிறு, காற்று, கனல் முதலிய இயற்கைப்**
**பொருள்களின் வாயிலாக முருகன் உயிர்களை**
**ஓம்பா தொழிவனேல் உலகமேது?உயிரேது ?**
**வாழ்வேது ?"** என்று போற்றுகிறார் ( பக்.36)

இவ்வாறே, இசையே பொருளை உணர்த்தும் முறை, கவிஞர்களால் காலந்தோறும் கையாளப்பட்டு வரும் ஒரு கவிதைச் சிறப்பாகும். அருணகிரிநாதரின் திருப்புகழ் தேனாய் இனிப்பதற்கு இதுவும் ஒரு சிறந்த காரணமாகும். ஆங்கிலக் கவிஞர்கள் இதனை **'ஓசை இசைவு அணி'** (Onoamatopoeia)என்றுரைப்பர். இத்தகைய சந்த இன்பச்சாரலைத் திருமுருகாற்றுப்படை முடிவில், பலதுகில் கொடிகள் போல் அருவி அசைந்து, அகில் மரங்களைச் சுமந்தும், சந்தன மரத்தைச் சாய்த்தும், சிறு மூங்கிலின் வேரைப் பிளந்தும், மலையிடத்தே உள்ள மணக்கும் தேன்கூடு கெடவும், ஆசினிப்பலா தன்னிடத்தே கலக்கவும், விலங்குகள் ஓடவும், பறவைகள் அஞ்சவும் , குதித்து விரைந்து வரும் ஆற்றலில் உணரலாம். அவ்வோசை 'இழும்'எனும் ஒலியாக இரைந்து வருவதாக வருணித்து மகிழ்கிறார் நல்லிசைப் புலமை நக்கீரனார்.

நக்கீரர், காலைக் கதிரவனின் கவின்மிகு காட்சி முதலாத் தொடங்கி மலையினின்றும் இழிதரும் அருவியில் முடிக்கிறார். இடையில் 'மந்தியும் அறியா

மரன்பயில் அடுக்கம்' போன்ற ஏற்றமிகு வருணனைகளைத் தந்துள்ளார். வோர்ட்ஸ்வர்த், கீட்ஸ், ஷெல்லி போன்ற கவிஞர்கள் போற்றும் முருகியல் உணர்வு திருமுருகாற்றுப்படை முழுதும் விரவியும் பரவியும் காணப்படுகிறது. இயற்கையோடு இணைந்த முருகனின் அழகையும் ஆற்றலையும் அருள் சிறப்பையும் ஆசிரியர் பாடுகிறார். ஆனால் நக்கீரர் ஆங்கிலக் கவிஞர்கள் கூறுமாப் போல் இயற்கை, நீதி புகட்டுவதாகக் கூறவில்லை. இதற்குக் காரணமாக, இறையே இயற்கையைப் படைத்தவன் என்பதால் இறைவன்இயல்பு கூறும் இப்பாடலில் இத்திறன் தவிர்க்கப்பட்டிருப்பதாகக் கொள்ளலாம்.

இங்கு மேலும் ஒரு பொருள் ஆய்விற்குரியது. ஆங்கில இலக்கிய மரபில், ''ஒரு கவிஞன் அல்லது காப்பியமியற்றுபவன், தன்னைப் பற்றியும், தான் சார்ந்த சமுதாய உயர்வுகள், தாழ்வுகள், அமைப்புகள், அவலங்கள் முதலிய சூழ்நிலை பற்றியும், தனது படைப்பில் நேரிடையாகவோ மறைமுகமாகவோ கூறலாமா?'' என்பது பல ஆங்கில அறிஞர்களாலும் விவாதிக்கப்பட்டு வருகிறது. ஆங்கிலக் கவிஞர் டி.எஸ். எலியட் நுண்மாண் நுழைபுலம் கொண்ட பன்மொழியுணர்ந்த கவிஞர். அவர் கருத்துப்படி, ஒரு கவிஞன் தன் படைப்பில் தன்னைப் பிரதிபலிப்பது ஏற்றதன்று. மாறாக, அவன் ஒரு மனிதன், கவிஞன் என்ற இருவேறு நிலையினன். அனுபவம், கலை என்பன வெவ்வேறு நிலை கொண்டவை. அவர் கூற்றுப்படி, ஒரு கவிஞன் தான் எடுத்துக்கொண்ட பொருண்மையைக் கவிதையாகவோ காப்பியமாகவோ வடிக்கும்போது, ஒரு கிரியாஊக்கியாகவே (Catalyst) இருக்கவேண்டும்; தன் நிலையை (Personal aspect) அதில் பிரதிபலிக்கக் கூடாது. அவர் கூற்று :-

> "The works of literature are not the expression of personality
> but an escape from personality"
>
> (Traditional and Individual Talent - T.S. Eliot)

டால்ஸ்டாய் கூறுகிறார்: "Truth is the hero in any art." இவற்றிலிருந்து பெறப்படுவது யாதோவெனின், கவிஞர்களும் காப்பியவாணர்களும் தம் படைப்புகளில் தம்மைக் காட்டிக்கொள்ளாதவர்களாகவே (Impersonal) இருக்கவேண்டும். ஆனால் மேத்யூ ஆர்னால்டு (Matthew Arnold) போன்ற கவிஞர்கள், தாம் வாழ்ந்த 19 ஆம் நூற்றாண்டின் அவலத்தை,

> ''இரண்டு உலகிடை நான் ஏங்கி அலைகிறேன்.
> ஒன்று மறைந்தது, மற்றொன்று பிறக்குமாற்றலற்றுப் பின் தங்கியது.''

**"Wandering between two worlds, one dead,**
**The other powerless to be born"**

(Stanzas from the Grande Chartreuse - Matthew Arnold)

என்ற வரிகளில் எடுத்துரைக்கிறார்.

**மில்டன்** என்ற ஆங்கிலக் காப்பியவாணர் தம் படைப்புகளில் தம்மைச் சற்று அதிகமாகவே பிரதிபலிக்கிறார் என்பது அவருடைய ஆய்வாளர்களில் சிலரது கருத்து. சான்றாக, **துறக்க நீக்கத்தில்** (Paradise Lost) வரும் சாத்தான், சாம்சன் ஆக்னிடிசில் (Samson Agonistes) வரும் சாம்சன் ஆகியோர் படைப்பு, அம் மாக்கவிஞன் சொந்த வாழ்வில் பட்ட அவலங்களையும் தான் கண் இழந்து தவிப்பதையும் ஏற்றியுரைத்துள்ளதாகவே அமைகிறது என்று குறைகூறுவர். துறக்க நீக்கத்தை யாத்தபோது அக்கவிஞன் வறுமையாலும் கண்ணொளி இழப்பினாலும் அரசு மாற்றத்தால் ஏற்பட்ட துன்பத்தாலும் தளர்ந்துள்ளனன்; அத்துயர்களைத் தாங்கும் உரம் தனக்கு வேண்டும் என்பதை அவன் சாத்தான் வாயிலாகத் தன்நிலை கூறுவது போலத் தோன்றுகிறது.

**"..........what though the field be lost**
**All is not lost the unconquerable will"**

(Paradise Lost Book.1)

('மனத்தில் திண்மையிருக்கும் வரை நாம் எதையும் இழப்பதில்லை' என்பது இதன் பொருள்) என்று புலப்படுத்துகிறான்.

இந்த அடிப்படையில் இத்திருமுருகாற்றுப்படையை ஆய்ந்தால் ஒரு கருத்துப் புலனாகிறது. நக்கீரர் திருமுருகாற்றுப்படையைப் பாடியபோது குகையில் அடைபட்டுத் துயருற்றதாகப் புராண வரலாறு கூறுகிறது. ஆனால் திருமுருகாற்றுப்படையின் 317 அடிகளிலும் எந்த இடத்திலும் தமது துன்பம் பிரதிபலிக்குமாறு நக்கீரர் பாடவில்லை. குறிப்பால் தம்மைப் புலப்படுத்தாத் தன்மையை (De-personalisation) அவரது பாடலில் காண்கிறோம்.

திருமுருகாற்றுப்படையின் ஈற்றில் அமைந்த வெண்பாக்களில்,

**'குன்றம் எறிந்ததுவும் குன்றப்போர் செய்ததுவும்**
**அன்றங் கமரரிடர் தீர்த்ததுவும் - இன்றென்னைக்**
**கைவிடா நின்றதுவும் கற்பொதும்பிற் காத்ததுவும்**
**மெய்விடா வீரன்கை வேல்.'**

என்ற வெண்பாவில், 'கற்குகையில் தம்மைக் காத்தது முருகன் கைவேல்' எனக் கூறியிருக்கிறார். அறிஞர்கள் இந்த வெண்பாக்களின் நடை, சொற்கள், பொருண்மை பற்றி இவை நக்கீரரால் இயற்றப்பட்டன அல்ல என்றும், பின்னர் வந்த கவிஞர் ஒருவரால் எழுதி இணைக்கப்பட்டவை என்றும் கூறுவதால், முன்கூறிய தம்மைப் புலப்படுத்தாத் தன்மைக் கருத்து (De-personalisation) வலிமை பெறுகிறது.

மற்றொரு கருத்தும் ஆய்விற்குரியது. திருப்பரங்குன்றப் பகுதியில் அவர் தாம் வாழ்ந்த மதுரையின் உயர்வையும், பகைவரின்மையையும், செல்வச் சிறப்பையும் கூறுகிறார். அதனால் **மேத்யூ ஆர்னால்டு** போன்ற கவிஞர் கூறும், 'தான் சார்ந்த சமூகப் பிரதிபலிப்பைக்' கூறுவதாகக் கொள்ளலாம். ஆங்கிலக் கவிஞன் **மேத்யூ ஆர்னால்டு**, கவிதை பற்றிக் கூறும்போது, அது வாழ்வின் குறைநிறை நாடும் ஆய்வியல் கூறாக அமையவேண்டும் எனவும் (a criticism of life) 'வாழ்வியலுக்குக் கருத்துக்களை ஊட்டும் வகையில் அமையவேண்டும்' எனவும் கூறுகிறான். நக்கீரர் திருவாவினன்குடி, திருஏரகம் பகுதிகளில் முறையே முனிவர்கள், அந்தணர்கள் கொள்ளவேண்டிய அறவொழுக்கங்களை எடுத்துக் கூறுகிறார்.

மேலும் **மில்டனைப்** பற்றி **டாக்டர் ஜான்சன்** ஒரு குறை கூறுகிறார். **லிசிடாஸ்** (Lycidas) கவிதையில் தான் எடுத்துக்கொண்ட பொருண்மையை விட்டுவிட்டு விலகி மற்றொன்று கூறல் (Digression) என்ற தவற்றைச் செய்வதாகச் சுட்டுகிறார்; முக்கிய ஆற்றொழுக்கினை விட்டுவிட்டு வாய்க்கால் வழிச் செல்லும் கருத்து மிகுவதாகக் கூறுகிறார். நக்கீரர், எடுத்துக்கொண்ட பொருண்மைச் சுவட்டினின்றும் சிறிதும் விலகாமல், திருமுருகாற்றுப்படையைப் பாடியுள்ளார். சூரரமகளிரும், முனிவரும், கந்தருவரும், இழுமென இழிதரும் அருவியும் பல அடைமொழிகளோடு ஓவியமாக்கப்பட்டுள்ளமை மனங்கொள்ளத்தக்கது.

நக்கீரர் இக்கவிஞர்களுக்குச் சற்றேறக் குறைய 2000 ஆண்டுகளுக்கு முன்பு வாழ்ந்தவர். இவர்கள் கூறும் கவிதை நெறிகள் பலவும் அவர் பாடிய திருமுருகாற்றுப்படையில் இயல்பாகவே அமைந்திருப்பது எண்ணி மகிழக்கூடியது. தமிழ்ப் பெருமக்களின் அழகியல் உணர்வு, இயற்கையோடு இணைந்த வாழ்வுமுறை, தெய்வம்போற்றல் முதலியவை ஆங்காங்கே இடம்பெற்றுள்ளன. மகாகவி காளிதாசன் குமாரசம்பவத்தில் **'ஜோதிர்லதை'** எனும் கொடியைக் குறிப்பிடுகிறான். அது இரவில் ஒளி உமிழ்ந்து தன்னைக் காட்டிச் சார்ந்திருக்கும் பிற பொருளையும் காட்டும் தன்மை உடையது என்றும்

கூறுகிறான். இந்த விளக்கம் நக்கீரரின் திருமுருகாற்றுப்படைக்கும் பொருந்தும். சங்க காலத்தில் தமிழர்கள் கொண்ட முருகவழிபாட்டின் மாண்பை, உயர்வை அளக்கும் அளவுகோல் இத் திருமுருகாற்றுப்படையாகும். இதே போன்று, முருகனைப் பற்றிய புராண வரலாறு, சூரர மகளிர் , பேய் மகள், முனிவர்கள், அந்தணர்கள், தேவர், மூவர், வேலன், குறமகள் ஆகியோர் முருகனிடம் இரந்தும் இறைஞ்சியும் குறைதீர்த்துக் கொள்ளும் மாண்பும் கூறப்படுகின்றன. மதுரைநகரது மாண்பு பேசப்படுகிறது. அதனால் இத்திருமுருகாற்றுப்படை முருகவழிபாட்டை விளக்குவதோடு, அதற்கு ஏற்புடையவாக அமையும் பிற செய்திகளையும் புலப்படுத்துகிறது என்றால் அது மிகையன்று. நக்கீரர், **'யான் பெற்ற இன்பம் பெறுக இவ்வையகம்'** என்ற பரந்த விரிந்த நோக்கம் கொண்டவர். திருப்பரங்கிரிப் புராணம் கூறும் வரலாற்றின்படி, குமரன் அருளால் குகையினின்றும் விடுபட்ட நக்கீரர் வெளிவந்து அறுமுகப் பெருமானை மயில்மேல் கண்டு அவனைப் பலவாறு போற்றிசைத்து இத் திருமுருகாற்றுப்படையினை மெய்யன்புடன் ஓதுவார் வேண்டும் வரங்களனைத்தும் தந்தருள வேண்டும் என்று முருகனிடம் வேண்டியதாகக் கூறப்படுகிறது. நக்கீரரின் உலகஉயிர்கள் அனைத்தும் இறையருள் பெற்று மகிழவேண்டும் என்ற உயர்சிந்தனை யிது. இப்பொதுமைநோக்கு, **'பலர்புகழ் ஞாயிறு'** என்பதிலிருந்தே தொடங்குகிறது. அறிஞர் **எமர்ஸன்** 'இலக்கியம் சிறந்த கருத்துகளைக் கொண்டது' (Literature is a record of best thoughts)என்று கூறுவர். இத்திருமுருகாற்றுப்படை இந்த இலக்கிய அளவுகோலைத் தாண்டியே உயர்ந்து நிற்கிறது. அதனால் அறிஞர் **இரஸ்கின்** கூறும் 'என்றும் நிலைத்து நிற்கும் (Book for ever) விழுப்பொருள்' சிறப்புடையது இந்நூல்.

இவை நிற்க. 31.5.2000 அன்று இந்நூலகத்தில் நிகழ்ந்த ஒரு நிகழ்ச்சியைப் பதிவுசெய்ய வந்த தூத்துக்குடி வானொலி நிலைய இயக்குநரும் தஞ்சாவூரைச் சார்ந்தவரும், தஞ்சைக் கலைநலனை உலகெங்கும் பரப்ப வேண்டுமெனும் வேணவாக் கொண்டவருமான திரு. **சி. முருகானந்தம்** அவர்கள் எனது திருமுருகாற்றுப்படை ஆய்வைப் பற்றிக் கேள்வியுற்று அதை வெளிநாட்டில் வாழும் தமிழர்களுக்குப் பயனுறும் வகையில், அந்நிலைய **'திரைகடலாடிவரும் தமிழ்நாதம்'** பகுதிக்கு வானொலியில் உரை நிகழ்த்துமாறு கேட்டுக்கொண்டார்கள். முதலில் அக்கருத்திற்கு எனக்கு உடன்பாடில்லை. பின் அவர் தொடர்ந்து வற்புறுத்தவே, என்னுள் ஓர் எண்ணம் தோன்றியது. இதுவரை இத்தெய்வப்பனுவலுக்கு அறிஞர்கள் பலரும் தாம் உணர்ந்த பொருளைத் தந்துவிட்டனர். என்னால் அப்பெருமக்களினும் சிறந்த பொருளை -புதுப் பொருளை-த் தந்துவிட முடியாது. அயல்நாட்டில் வாழும் நம் தமிழ்மக்கள் குறிப்பாக இலங்கை, சிங்கப்பூர், மலேசியாவில் இருக்கும் முருகபக்தர்கள் கற்றலினும் கேட்பதை விரும்பக் கூடும் என்பதால், இயக்குநரின் கருத்தை ஏற்று எனது உரையை வானொலியில் நிகழ்த்தும் உரையாக மாற்றி வகுத்துக் கொண்டேன்.

ஆகவே நான் முன்பு கொண்டிருந்த கருத்தை மாற்றிக்கொண்டேன். சொற்கள் எளிமைப்படுத்தப்பட்டு, எதுகை மோனை கூட்டப்பட்டன. சிறுசிறு தொடர்களாக வகுத்துக்கொண்டு வழங்க வேண்டிய கட்டாயம் எனக்கு ஏற்பட்டது. அறிஞர்கள் உ.வே.சா., எஸ். வையாபுரிப்பிள்ளை, சோமசுந்தரனார், தண்டபாணிதேசிகர், கி.வா.ஜ. போன்றோர் இத் திருமுருகாற்றுப்படைக்குக் கொண்டிருக்கும் பொருளைச் சில பகுதிகளில் அப்படியே எடுத்து இயம்பியிருக்கிறேன். சில சொல்லாட்சிகளையும் அவ்வாறே எடுத்தோதியிருக்கிறேன். மேலும், **திருமுருக கிருபானந்தவாரியார்** சுவாமிகள் திருப்புகழ் விரிவுரையில் கூறும் கருத்துகளையும் பல இடங்களில் பயன்படுத்தியிருக்கிறேன். இதனால் எனக்குத் தாழ்வில்லை; உயர்வு கிட்டும். குறையில்லை; நிறைகூடும்.

பவணந்திமுனிவரின் நன்னூல் சூத்திரம்,

**'முன்னோர் மொழிபொருளே யன்றி யவர்மொழியும்**
**பொன்னேபோல் போற்றுவ மென்பதற்கும் - முன்னோரின்**
**வேறுநூல் செய்துமெனு மேற்கோளில் என்பதற்கும்**
**கூறுபழஞ் சூத்திரத்தின் கோள்'**

எனச் சுட்டி இதை அனுமதிக்கிறது.

அடுத்து,

வானொலியில் வாரந்தோறும் வெள்ளியன்று ஒலிபரப்பப்படுவதால், புதிதாக ஒரு நேயர் கேட்டாலும் சில செய்திகள் அவருக்குக் கிட்டவேண்டும் எனும் வேணவாவில், 'மிகைபடக் கூறல்', 'கூறியது கூறல்', 'மற்றொன்று விரித்தல்' போன்ற குற்றங்கள் நிகழ்ந்துள்ளன. பவணந்தி முனிவரால்

**'குன்றக் கூறல் மிகைபடக் கூறல்**
**கூறியது கூறல் மாறுகொளக் கூறல்**
**வழூஉச்சொற் புணர்த்தல் மயங்க வைத்தல்**
**வெற்றெனத் தொடுத்தல் மற்றொன்று விரித்தல்**
**சென்றுதேய்ந் திறுதல் நின்றுபய னின்மை**
**என்றிவை யீரைங் குற்றம் நூற்கே'**

(சூத்திரம் கஉ)

என்று கூறப்படும் குற்றங்களில் சில அறிந்தே இடம்பெற்றுள்ளன. சில பகுதிகளில், சான்றாக, குன்றுதோறாடல் பகுதியில், திருப்புகழில் வரும் 34 குன்றுகள் குறிப்பிடப்படுவனவாகக் கூறியிருக்கிறேன். விராலிமலைத் திருப்புகழில் வரும்,

**'வெந்த நீறணி வேணி யிருடிகள்'**

பாடல் அதன் சுவை கருதிச் சேர்க்கப்பட்டுள்ளது. இத்தகைய மற்றொன்று விரித்தலும் மிகைப்படக் கூறலும் மேலும் பல பகுதியிலும் இடம் பெற்றுள்ளன. இதே போன்று, முருகன் அன்பர்களின் இதயக் கமலத்தில் வீற்றிருப்பவன் என்பதுபோன்ற எடுத்துக்காட்டுகள் நூலில் சில இடங்களில் 'கூறியது கூறல்' ஆக வந்துள்ளன. வானொலியில் வரும் உரை என்பதால் சுவை கருதிச் சேர்க்கப்பட்டவை. இதை அறிஞர் உலகம் பொறுத்தருள வேண்டும். நக்கீரர் முருகப்பெருமானின் அழகு, அருள்திறன், திருத்தோள்களின் வலிவு, திருமுகங்களின் பொலிவு, அவற்றின் செயல்பாடு, புலமை, வீரம், மற்றும் தெய்வயானை அம்மையாரின் கற்புடைமை, மங்கையர் கணவன் எனும் மாண்பு போன்ற குணநலன்களைப் பன்முறை எடுத்து இயம்பியிருப்பது அக்குணங்களை வலியுறுத்தவே என்பது இங்கு ஓர்ந்து உணரத்தக்கது. மேலும் திருமுறைகள் மற்றும் திருப்புகழிலிருந்து திருமுருகாற்றுப்படையோடு ஒன்றும் பகுதிகளைச் சற்று அதிகமாகவே பயன்படுத்தியிருக்கிறேன். ஆனால் அவை தெவிட்டுவனவல்ல; மேலும் தேன்சுவையைக் கூட்டுவன. மற்றும், திருமுறைப் பாடலைச் சுட்டும்போது பாடலின் முதல் அடியே போதுமானது எனக் கருதும் இடங்களில்கூட முழுப்பாசுரத்தையும் தந்திருக்கிறேன். இப்பகுதியைப் படிக்கும் அல்லது கேட்கும் அன்பர் முழுப்பாடல் காண மூலநூலுக்குச் செல்வதைத் தவிர்க்கும் எண்ணத்தால் விளைந்தது இது. சான்றாகத் திருநாவுக்கரசு சுவாமிகள் புராணத்தில் வரும்

**'கையுந் தலைமிசை புனை அஞ்சலியன'**

என்ற திருப்பாடல் முழுதும் தரப்பட்டுள்ளமையை நோக்கலாம். இதே போன்று மகாகவி காளிதாசனின் இரகுவம்சம் போன்ற சமஸ்கிருத இலக்கியங்களினின்றும் சில இடங்கள், உவமைகள் மேற்கோளாகக் காட்டப்பட்டுள்ளன. அறிஞர் எல்லிசு பெருமகனார் திருவாவினன்குடிப் பகுதிக்குக் கண்டிருக்கும் ஆங்கில மொழிபெயர்ப்பு அப்பகுதியில் இடம்பெற்றுள்ளது. திருமந்திரத்திற்கான பாடல்எண் திருநெல்வேலி தென்னிந்திய சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகத்தின் வெளியீட்டில் கொடுக்கப்பட்டுள்ள தொடர்எண்ணாகத் தரப்பட்டுள்ளன. திருப்புகழுக்கு இயன்றவரை பாடலின் தொடக்கஅடிகள் கூறப்பட்டுள்ளன. இதற்கான பட்டியலும் இணைக்கப்பட்டுள்ளது. கந்தபுராணத்திற்குப் படலக் குறிப்புத் தரப்பட்டுள்ளது. சிவஞானசித்தியார் பாடல்களுக்குச் சுபக்க எண்கள் குறிக்கப்பட்டுள்ளன.

இந்நூலை நுண்ஆய்வு செய்தும், அணிந்துரை வழங்கியும் எனக்கு உயர்வைத் தந்திருக்கிறார்கள் பாண்டிச்சேரி திருவாளர்கள் **தி.வே. கோபாலய்யர்** மற்றும் அவருடைய இளைய சகோதரர் **கங்காதரன்** ஆகிய அறிஞர் பெருமக்கள். திரு. கோபாலய்யர் எமது நூலகத்தின் முதுபெரும் பதிப்பாசிரியர். இதுவரை 11 இலக்கண, இலக்கியச் சுவடிகளைப் பதிப்பித்துள்ளார்கள். இப்பெருமகனாரின் நுண்மாண் நுழைபுலம், தமிழ்த் தொண்டு ஆகியவற்றை நினைவுகூராவிட்டால் நாம் கடமையில் இருந்து வழுவியவர்கள் ஆவோம். திரு. கோபாலய்யர் தொல்காப்பியத்திற்குக் கண்டிருக்கும் உரைத்திறன் அவரது ஆழ்ந்த புலமைக்கு ஒரு சான்று. **தாக்கரே** (Thackeray)என்ற ஆங்கில அறிஞர் **மெக்காலே** (Lord Macaulay)என்ற அறிஞரைப் பற்றிக் குறிப்பிடும்போது,

> **'ஒரு சொல்லாட்சியைப் படைக்க இருபது நூல்களைப் புரட்டுவார்;**
> **ஓர் அடியின் விளக்க உயர்வைத் தர இலக்கியத் தடத்தில் நூறுகல் பயணிப்பார்.'**

> **He reads twenty books to write a sentence;**
> **He travels a hundred miles to make a line of description.**
> (Thackeray on Lord Macaulay - Life and letters of Macaulay by G.M. Trevelyan)

என்று கூறுகிறார்.

இப்பெருமகனாருக்கும் இந்த அரிய தொடரைத்தான் நாம் சூட்டி மகிழ வேண்டும். இன்னும் அவர்களிடமிருந்து நாம் பெறவேண்டிய இலக்கிய வளம், பயன் ஏராளம். சாசர் (Chaucer) என்ற ஆங்கிலக் கவிஞனின் பாத்திரப்படைப்புத் திறனைக் குறிப்பிடும் டிரைடன் (Dryden) என்ற மற்றொரு கவிஞன் 'Here is God's plenty'என்பான். திரு. அய்யர் அவர்களிடம் ஆண்டவன் படைத்த அறிவுத்திறன் அதிகமாகவே உள்ளது. அவர்கள் தமிழமுதை மேலும் அடையாளம் காட்டவேண்டும். பொற்றுகளை, கடல்முத்தை, தமிழ் மணிக்குலத்தை நமக்குத் தரவேண்டும். தமிழ் அன்னையின் மேகலையாம் தொல்காப்பியத்தின் பொருள்நயத்தை மேலும் துலக்க வேண்டும். அவ்வறிஞர் பெருமகனாருக்கு இறைவன் நீண்ட ஆயுளும் உடல் நலமும் ஈந்து காக்க அவன்தாள் வழுத்துகிறேன். இதே போன்று அவருடைய இளவல் திரு. கங்காதரன் அவர்கள் அண்ணனுக்குச் சற்றும் குறைவிலா அறிவாற்றல் மிக்கவர். **காளிதாசன்** தனது **இரகுவம்சத்தில்** இந்த உலகில் இராமனும் இலக்குவனும் மதியும் கடலுமென ஒத்த கருத்துடையவர்களாக

இருந்தமையைக் கூறுகிறான் (சர்க்கம் : 10) ஒத்த உருவமும் உள்ளமும் உற்ற அறிவும் கொண்டவர்கள் இவ்வுடன்பிறந்தோர். திரு. **கங்காதரன்** அவர்கள் மிகமுயன்று நூலைச் செம்மைப்படுத்தித் தந்தார்கள். இந்த இருவர் பெருந்தகையறிஞர் பெருமக்களுக்கும் எனது நன்றி.

அடுத்து, கோபாலய்யர் போன்று வாழும் அறிஞர்கள் வரிசையில் வைத்துப் போற்றப்படக்கூடிய, கரந்தைத் தமிழ்ச் சங்கத்தின் முன்னாள் துணை முதல்வரும், தமிழ்த் தொல்இலக்கியங்களிலும் தொல்காப்பியத்திலும் தோய்ந்த புலமையரும் ஆகிய *பாவலரேறு* **திரு. ச. பாலசுந்தரனாரைக்** குறிப்பிடல் வேண்டும். அன்னாரின் அருந்தமிழ்க் காதல், நூற்பதிப்பு, கருத்துரிமை தமிழறிஞர்களின் போற்றலுக்கும் வணக்கத்திற்கும் உரியவை. இப்பெருமகனார் எமது நூலகத்தில் 5 சுவடிகளைப் பதிப்பித்துள்ளார். அவரிடமும் நூல் பற்றிய சில ஐயங்களைக் கேட்டுத் தெளிவு பெற்றேன். முதுமை, உடல் நலக்குறைவு ஆகியவை அவர்களது இலக்கியப் பாதையில் சற்றே தடையை ஏற்படுத்தினாலும், இன்றளவும் அறிஞர்கள் தொல்காப்பியத்தில் தொடுக்கும் ஐயங்களைத் தீர்த்துதவும் திருத்தொண்டில் அவர் வாழ்ந்து வருபவர். அவரது அளப்பரிய பணிக்கு என் இனிய வணக்கங்கள். அவர் நீடு வாழ இறையை வணங்கி அவருக்கும் எனது நன்றியை உரித்தாக்குகிறேன். திரு. அய்யர் அவர்கள் அடிக்கடி திரு. பாலசுந்தரனாரைக் குறிப்பிட்டுத் தன்னிலும் அறிவாற்றலில், தொல்காப்பியக்கடலில் மூழ்கிக் கருத்துமுத்துக்களைக் காட்டும் முயல்வில், முதுமையும் பெருமையும் உடையவர் அவர் என்று கூறுவார். ஓர் அறிஞர் மற்றோர் அறிஞரை மதித்துப் போற்றும் மாண்பும் உயர்வும் இவை. ஆங்கிலக் கவிஞன் **மில்டன்** ஒரு நல்ல நூலைக் குறிப்பிடும்போது கூறுகிறான்:

> **'நல்லதோர் நூல் என்று நாம் கருதுவது -**
> **நற்கருணை யாசிரியன் ஆன்மாவில் எழுந்தது ; அவன்**
> **வசந்தகால வாழ்வின் விழுமிய படைப்பது;**
> **தீர்க்க தரிசனத் திறனுடையது; ஊழிதோறும் நின்று உதவுவது-'**
>
> 'A good book is precious lifeblood of a master spirit
> embalmed and treasured upon purpose to a life beyond life'
>
> (Areopagitica - Milton)

மில்டனின் இந்த மதிப்பீட்டைத் தாண்டி ஒல்காப் புகழ் பெற்று விளங்குவது நம் தொல்காப்பியம்; தொட்டனைத்தூறும் மணற்கேணியாய், புதுப்பொருள், புதுச்சுவை தந்துகொண்டேயிருப்பது. **எமர்ஸனின்**(Emerson)'The American Scholar' கட்டுரையைப் பாராட்டும் **ஹோம்ஸ்** (Holmes) என்ற ஆய்வாளர் அது நமது அறிவுச் சுதந்திரப் பிரகடனத்தை அறிவிப்பது என்று போற்றுவார். ('Our Intellectual Declaration of Independence')இந்தத் தொடர் நம் தொல்காப்பியத்திற்கு மிகப் பொருந்தும். இன்றைய நமது இலக்கிய இலக்கணப் பாதை தடம் மாறிச் சென்றுகொண்டிருக்கிறது. மாணவர் சமுதாயம் தேர்விற்காக மட்டுமே இவற்றைப் புரட்டும் அவசரத்திலும் அமைதியின்மையிலும் உள்ளது. இந்நிலையில் தமிழ்மக்களுக்குத் தமிழ்

இலக்கியவளம் இலக்கணச்செறிவை தொடர்ந்து விரும்பி நினைவூட்டி வரும் சிலரில், இப்பெருமகனார் இருவரும் அடங்குவர். இவர்களின் தமிழ்த்தொண்டை நினைக்கும்போது நாம் மணிவாசகப்பெருமானின் மாணிக்கச் சொல்லாட்சியால் போற்றிமகிழலாம். 'உள்ளந் தாள்நின்று உச்சிஅளவும் நெஞ்சாய்'த் துதித்து உருகவேண்டும்.

இந்நூலை யான் பதிப்பிக்க அப்போதைய மாவட்ட ஆட்சியரும் இந்நூலக இயக்குநருமான *முனைவர்* **மூ. இராசாராம், இ.ஆ.ப.** அவர்கள் எனக்கு அனுமதி வழங்கினார்கள். படைப்பாளியான அவர் பழகுதற்கு இனியவர்; சிறந்த பண்பாளர். அவருக்கு எனது நன்றியை உரித்தாக்கிக் கொள்கிறேன். இதுபோது இந்நூல் நன்முறையில் வெளிவர, எமது நூலகத்தின் இயக்குநரும் மாவட்ட ஆட்சித்தலைவருமான திரு. ***சி.* கோசலராமன், இ.ஆ.ப.** அவர்கள் இந்நூலை எமது நூலகப் பதிப்பாக வெளியிட அனுமதியளித்தார்கள். இப்பெருமகனார் தன்னடக்கமே மானுடம் பூண்டதென்னும் இயல்பினர்; இன்சொல்லினர்; இனியவற்றை நினைவாலும் செயலாலும் கடைப்பிடிப்பவர். இப்பெருந்தகைக்கு என் நன்றியறிதலை உரித்தாக்கிக்கொள்கிறேன்.

நான், தூத்துக்குடி வானொலி நிலையத்தில் எனது திருமுருகாற்றுப்படை விளக்க உரையினை நிகழ்த்து முன், 9.12.2001 அன்று, பழநி அருள்மிகு தண்டாயுதபாணி திருக்கோயிலில், கோவை மாவட்டம், சிரவணபுரம், கௌமாரமடாலய ஆதீனகர்த்தர் தவத்திரு **குமரகுருபர சுவாமிகள்** அவர்களின் அருளாட்சி முடிசூட்டுவிழாவிற்குச் சென்றிருந்தேன். அதுபோது, கோவை மாவட்டம் பேரூராதீனம் சீர்வளர்சீர் குருமகாசந்நிதானம், **சாந்தலிங்க இராமசாமி அடிகளார்** அவர்கள் தலைமைதாங்கி முடிசூட்டு விழாவை நடத்தி மகிழ்ந்தார்கள்.

அந்த இனிய நேரத்தில் எனது புண்ணிய வசத்தினால் குருமகா சந்நிதானம் அவர்களின் பொன்னார் திருவடிகள்மீது என் சென்னி சார்த்தி வணங்கி, அடியேனது இந்நூல் உரைவிளக்க முயற்சியினை, ஒரு கைப்பிரதியின் மூலம் அவர்கட்கு விண்ணப்பித்து, ஆசியுரை அருளக் கேட்டுக்கொண்டேன். மிகப் பெரிதும் மகிழ்ந்த அடிகளார் என்னைப் பெரிதும் கௌரவித்து ஆசி அருளினார்கள்.

பேரூர் சென்ற அடிகளார் எனது உரை முழுதும் திருக்கண் சாத்தி மகிழ்ந்து, அங்கிருந்து 'அருளாசியுரை' அனுப்பிவைத்தார்கள். இன்றைய சைவ உலகில் சைவ சித்தாந்தச் சான்றோராகவும், இலக்கிய இலக்கணங்களை முற்றும் கற்றுணர்ந்த தமிழ்க் கடலாகவும், மக்கள் எல்லோரும் கல்வியறிவு பெற்று மனித நேயத்துடன் ஒற்றுமையோடு வாழவேண்டுமென்ற உயர்நோக்குடையராகவும், சைவத்திற்கும் தமிழுக்கும் சற்றே குறைவு நேரும் எனக் கருதுமிடத்து அஞ்சா நெஞ்சத்துடன் எதிர்க்கும் மனப்பக்குவமும் கொண்டவராகவும் விளங்கும் அவர்கள்

நம்மிடம் வாழ்ந்துவரும் சைவக் கடல்; இன்றைய திருத்தொண்டு நெறிநிற்கும் திருநாவுக்கரசு சுவாமிகள் ஆவார். எனது இப் புல்லறிவுச் சிற்றுரைக்கும் அருளாசி வழங்கிச் சிறியேனைப் பெருமைப்படுத்தியதற்கு, அவர்தம் பொன்னார் திருவடிகளைப் பெரிதும் போற்றி, வணங்கி நன்றிகூறி மகிழ்கின்றேன்.

இந்நூலகத்தில் தமிழ்த்துறையில் பண்டிதராகப் பணியாற்றி ஓய்வுபெற்ற வித்துவான் திரு. **வீ. சொக்கலிங்கம்** அவர்கள் சுவடிகளை ஒப்பாய்வு செய்து பாடபேதங்கள் கண்டுபிடித்துப் பட்டியலிடும் என் பணிக்கு உறுதுணையாய் நின்று உதவினார்கள். இப்பெருமகனார் இதுவரை எமது நூலகத்தில் 40 சுவடிகளைப் பதிப்பித்துள்ளார்கள்; இன்று வரை பதிப்பித்தும், பதிப்பிப்போருக்கு உறுதுணையாய் நின்றும் உதவிவருகிறார்கள். முதுமை இவரை முடங்கச் செய்யவில்லை. எடுத்தப் பணியை முடிப்பதில் இவர் அயர்விலர்; துஞ்சலுமிலர். அன்னாருக்கு எனது நன்றி உரித்தாகுக. அடுத்து, தமிழகத்தில் உள்ள பல நூலகங்களுக்குச் சென்று சுவடிகளை ஆய்ந்து நகலெடுத்து உதவிய இந்நூலக முன்னாள் தமிழ்ப்பண்டிதர் **முனைவர் ய. மணிகண்டன்** அவர்கள் தற்பொழுது சென்னைப் பல்கலைக்கழகத்தில் தமிழ்த்துறை விரிவுரையாளராகப் பணியாற்றிவருகிறார்; இன்றைய இளைய தலைமுறைத் தமிழ்அறிஞர்கள் வரிசையில் குறிப்பிடத்தக்கவர்; யாப்பிலக்கணக் காதலர். இவரை எதிர்காலத் தமிழ் இலக்கியஉலகு உரிய உயரிய இடத்தில் வைத்துப் போற்றும் என்பதில் எனக்கு ஐயமில்லை. அன்னார்க்கு எனது நன்றி. நெஞ்சையள்ளும் சிலப்பதிகார மணிஆரத்தைத் தம் சிந்தையில் தினமும் எண்ணித் திளைத்து மகிழ்பவரும், சிறந்த தமிழறிஞரும், அகநானூறு நற்றிணை ஆகிய சங்க இலக்கியங்களை ஆங்கிலத்தில் செம்மையாக மொழிபெயர்த்தவரும் ஆவார், மதுரைச் செந்தமிழ்க்கல்லூரி முன்னாள் முதல்வர் முனைவர் **அ. தட்சிணாமூர்த்தி** அவர்கள். சிலம்பில் எழும் ஐயங்களைத் தீர்த்துதவிய அன்னாருக்கு எனது இனிய நன்றி நவிலத் தகுவது.

முன்பே சுட்டியவாறு தூத்துக்குடி வானொலி நிலைய இயக்குநர் திரு. **சி. முருகானந்தம்** அவர்கள், 'திரைகடலாடி வரும் தமிழ்நாதம்' சிறக்கப் பாடுபடுபவர்; சிறந்த பண்பாளர்; அருந்தமிழ்க் காதலர். அவர்களுக்கும், அவரைச் சார்ந்த தொழில் நுட்பக்கலைஞர்களுக்கும் மற்றும் பிரஸார் பாரதி அகில இந்திய வானொலி நிறுவனத்திற்கும், மற்றவர்கட்கும், எனது நன்றியை உரித்தாக்குகிறேன். வானொலி உரையைப் புத்தக வடிவில் கொணரத் தூத்துக்குடி வானொலி நிலைய இயக்குநரின் கடித எண்.டி.டி. எண்.டி(4)/பிஏ/ 2002 நாள் 7.10.2002 மூலம் அனுமதி வழங்கப்பட்டிருப்பதற்கும் எனது நன்றியினைத் தெரிவித்துக்கொள்கிறேன்.

திருமுருகாற்றுப்படை அடிகளுக்கு கவின்மிகு கலை நயத்துடன் ஓவியம் தீட்டித் தந்துதவிய மாமல்லபுரம் ஓவியர் கலைச்செம்மல் திரு. **கோ. திருஞானம்** அவர்களுக்கு என் நன்றி உரித்தாகும்.

இந்நூலில் இடம்பெற்றுள்ள அறுபடை வீடுகளுக்கான படங்களைத் தந்துதவிய அவ்வத் திருக்கோயில் நிருவாகத்தினர்க்கு எனது நன்றியை உரித்தாக்குகிறேன். காரானேஷன் அச்சகம், சிவகாசி நிறுவனத்திற்கு எனது நன்றி.

இந்நூலைச் செம்மையாக வெளியிட நிதி நல்கிய மத்திய அரசுக்கு எனது நன்றி. அடுத்து எமது நூலக ஒளிஅச்சுத்துறையில் பணியாற்றிவரும் அறிவாற்றலும் அயர்வின்மையும் அணிகலன்களாகக் கொண்ட திரு. க. பத்மநாபன் அவர்கள் மிகச் சிறப்பாக இந்நூலை ஒளியச்சு மற்றும் ஒளியச்சுக் கோப்புச் செய்து உதவியதற்கும் எனது நன்றிக்கடன் பெரிதும் நவிலத்தகும்.

இந்நூலக அறிஞர் பெருமக்களுக்கும், வெளியீட்டு மேலாளருக்கும், நூல்கட்டும் பிரிவுப் பணியாளர்கள் மற்றும் ஏனைய துறைசார்ந்தப் பணியாளர்களுக்கும் எமது நெஞ்சார்ந்த நன்றியறிதலை உரித்தாக்கிக் கொள்கிறேன்.

பொதுவாகத் தமிழுலகும், சிறப்பாகச் சைவஅன்பருலகும் இந்நூலின் பாங்கறிந்து சுவைத்துப் பயன்கொள்ளும் எனப் பெரிதும் நம்புகின்றேன்.

*முருகா! உன்னிடம்,*

**''யாம் இரப்பவை பொருளும் பொன்னும் போகமுமல்ல; நின்பால்**
**அருளும் அன்பும் அறனும் மூன்றும்''**

கடுவன் இளவெயினனார் - பரிபாடல்.

தஞ்சாவூர்,
07.02.2003.

**சாமி. சிவஞானம்,**
நிருவாக அலுவலர்.



# நக்கீரரும் திருமுருகாற்றுப்படையும்

மதுரைக் கணக்காயனார் மகனார் நக்கீரனார் என்று பெயர் சுட்டப்பெறும் சங்க காலப் புலவர் பெருமான் நற்றிணையில் 7 பாடல்கட்கும், குறுந்தொகையில் 8 பாடல்கட்கும், அகநானூற்றில் 17 பாடல்கட்கும், புறநானூற்றில் 3 பாடல்கட்கும், ஆசிரியராக அறிகிறோம். இவை எட்டுத் தொகை பற்றிய இவர்தம் பாடல் எண்ணிக்கை. இனி, பத்துப்பாட்டுள் முதலாவதாக எண்ணப்படும் தெய்விகப் பாடலாம் திருமுருகாற்றுப்படை என்னும் 317 அடிகளையுடைய நெடிய பாடல் இவரால் இயற்றப்பட்டதே; 188 அடிகளையுடைய ஏழாம் பாட்டும் இப்புலவர் பெருமான் யாத்த கூதிர்ப் பாசறையாம் புறப்பொருள் பற்றிய செறிவான பாடல். அப்பாடல் நெடுநல்வாடை எனப் பெயர் பெற்றது.

இப்புலவர்பெருமானது இயற்பெயர் கீரன் என்பது. பாலப்பன் என்பது இவரது பிள்ளைத்திருநாமம் என்பர். அப்பெயரையொட்டியே கீரன் எனும் பெயர் வழங்கியதாகத் தோன்றுகிறது. வடமொழியில் க்ஷீரம் என்னும் சொல் பால் என்னும் பொருட்டு. இன்சொல்லுக்குப் பாலை உவமை கூறுவர். பால் போலும் இன்சொற்களால் கவிபுனைதல் வல்ல இவர்க்கு க்ஷீரன் - கீரன் - எனப் பெயர் வழங்கலாயிற்று. குழந்தைப் பருவத்தில் பால்போலும் இன்சொல் மழலை மிழற்றிய பாலப்பன் கவிபாடுதலின் கீரன் ஆயினான். 'ந' சிறப்புப் பொருளை உணர்த்த வரும் இடைச்சொல் ஆதலின் நக்கீரன் எனப் பெயர் அமைந்தது. நல்+ கீரன் 'நக்கீரன்' என மருவிற்று என்பதும் ஒன்று. ''ஆர்''பெருமையைக் குறிக்கவரும் விகுதியாகப் பெயர் இறுதியில் சேர்ந்தது. புலவர் 'நக்கீரனார்' என அழைக்கப்பட்டார். இவர் தந்தையார் நல்லாசிரியப் பணிபூண்டு கணக்காயராய்ப் புகழ் பெற்று வாழ்ந்தமையால் தந்தையார் பெயரோடு இணை மகனார் பெயரும் இனைந்து வழங்கலாயிற்று. மதுரையாம் ஊர்ப்பெயரும் முதற்கண் அடைமொழியாய் அடுத்தது. இவர் தந்தையார் பெயர் தத்தனார் என்றும், இவர் மகனாரது பெயர் கீரங்கொற்றனார் என்றும் அறியப்படுகின்றன. தந்தைபெயரை அடுத்து மகன் பெயர் வழங்குதல் தொல்காப்பியச் சூத்திர நெறியால் உணரப்படும். கீரன்+கொற்றன் = கீரங்கொற்றன் என முடியும். சென்ற நூற்றாண்டு இயற்றமிழ்ப் பெரும்புலவர் அரசஞ்சண்முகனாரது பெயரில் இவ்வமைதியை நோக்கலாம்.

மதுரைக் கணக்காயனார் மகனார் நக்கீரனாரது பெயர்க்காரணம் பற்றிக் கண்டோம். இவரது குலம் பற்றிச் சில கூறத்தகும். 'கொங்குதேர் வாழ்க்கை' என்னும் பாடல்பற்றிச் சொக்கநாதப் பெருமானுக்கும் நக்கீரர்க்கும் இடைநிகழ்ந்தவாதுப்போர் பற்றி வரலாற்றில் காணப்படும் பாடல்சில ஈண்டுக் காணலாம்.

**'அங்கம் குலுங்க அரிவாளில் நெய்தடவிப்**
**பங்கம் படஇரண்டு கால்பரப்பிச் - சங்கதனைக்**
**'கீர்கீர்' எனஅறுக்கும் கீரனோ என்கவியை**
**ஆராயும் உள்ளத் தவன்?'**

சொக்கப்பெருமானது இப்பழிப்புரைக்கு நக்கீரரது எதிர்விடை :

**'சங்குஅறுப்பது எங்கள் குலம்' தம்பிராற்கு ஏதுகுலம்?**
**பங்கம்அறச் சொன்னால் பழுதாமே? - சங்கை**
**அரிந்துண்டு வாழ்தும், அரனாரைப் போல**
**இரந்துண்டு வாழ்வது இலை!**

இவ்வாறு போர்க்கண் இருவரும் உறழ்ந்து பாடிய இக்கவிகளால் நக்கீரர் சங்கு அறுத்து வளைபுனையும் ('அணிவளை போழுநர்' சிலப். 5:) குலத்தினர் என்பது உணரப்படும். 'வேளாப் பார்ப்பான் வாள்அரம் துமித்த, வளை' என்னும் அகநானூற்றுப்பாடல் அடி, சங்கறுக்கும் தொழில்புரிவோர் 'வேளாப் பார்ப்பார்' குலத்தினர் என்பதனைச் சுட்டும். வேள்வி செய்யாத பார்பார் என்ற அத்தொடர், அந்தணர்க்குரிய வேட்டல் முதலிய தொழில்களைச் செய்யாத, இக்காலம் 'கம்மாளர்' என்று வழங்கும் விசுவகர்மச் சாதியாரைக் குறிக்கும் என்பர் நாவல பண்டிதர் ந.மு.வே. நாட்டார் அவர்கள். இச்சாதியார் பார்ப்பார்க்குரிய முந்நூலை அணிந்து கொண்டிருக்கும் மரபினராதலை இன்றும் காண்கிறோம். வாதுப்போர்க்கண் நிகழ்ந்த உறழ்கவிகளைக் கொண்டு நோக்குமிடத்து, நக்கீரரை இக்குலத்தினராகக்கொள்ளுதல் பொருந்தும். பெரும்புலமைத்திரு எக்குலத்தார்க்கும் உரியதாக இருத்தல் அன்று மாத்திரம் அன்று, இன்றும் கண்கூடு. 'வேள்வி செய்தல் ஒன்றும் ஒழிந்த பார்ப்பான்' என்று பொருள் கொள்ளாமல், 'வேள்வி செய்தல்' பார்ப்பாருடைய ஏனை வேட்பித்தல் ஓதுதல் ஓதுவித்தல் ஈதல் ஏற்றல் ஆகிய தொழில்களையும் உபலட்சணமாகச் சுட்டியது என்று கொள்ளவேண்டும். வேள்வி செய்தல் ஒன்றும் நீங்கிய பார்ப்பனர் என்று பொருள்கொள்வாரும் உளர். யாகம் பண்ணாத ஊர்ப்பார்ப்பனர்க்குச் சங்கு அறுத்தலும் தொழில் என்பது அவ்வகநானூற்றுப் பாடலடிக்குப் பண்டைய குறிப்புரை. நக்கீரர் பெருமானது குலத்தை வரைந்து குறிப்பிடத்தக்க சான்று இன்றுவரை நமக்குக் கிடைத்திலது என்று எழுதுகிறார் அமரர் ந.மு.வே.

கீரர்பெருமான் இன்ன சமயத்தைச் சார்ந்தவர் என்று துணிந்து கூறச் சான்றுகள் உள. இவர் சிவவழிபாட்டினைக் குறிக்கொண்ட சைவசமயத்தினராகக் காண்கிறோம். சங்க காலத்தில் கடவுட்கொள்கை **'எம்மதமும் சம்மதம்'** என்றஅளவாகவே இருந்தமை வெளிப்படை. சைவம் வைணவம் முதலான மதப்பரிணாமங்கள் சங்க காலத்திற்குப் பிற்பட்ட ஆறாம் நூற்றாண்டளவில் தோன்றினவே. சமணமும் பௌத்தமும் வேதவழிபாடுடைய வைதிகமும் இவ்வகச் சமயங்கட்கு மிகவும் முற்பட்டவை. சங்கப்புலவர் சிலரைச் சைவர் என்று குறிப்பிடும் செய்தியைச் சுந்தரர் அருளிய திருத்தொண்டத் தொகையிலும், நம்பியாண்டார் நம்பிகள் அருளிய திருத்தொண்டர் திருவந்தாதியிலும் காண்கிறோம். இவை சைவசமய நூல்கள். சிவனடியார்களைச் சுந்தரர் 'பொய்யடிமை இல்லாத புலவர்க்கும் அடியேன்' என்னும் அடிக்கண் குறிப்பிடுகிறார். நம்பியாண்டார் நம்பிகள் இவ்வடிக்கு விரித்துப் பொருள் கூறுமிடத்து,

> **'தரணியில் பொய்ம்மை இலாத்தமிழ்ச் சங்கம் அதில் கபிலர்**
> **பரணர் நக்கீரர் முதல் நாற்பத்தொன்பது பல்புலவோர்'**

எனப் பாடினார். சுந்தரர் எட்டாம் நூற்றாண்டினர். நம்பியாண்டார் நம்பிகள் காலம் முதலாம் இராசராசன் காலமாகிய பத்தாம் நூற்றாண்டின் இறுதிப் பகுதி. ஆயின் நக்கீரர் இயற்றிய தொகைநூற்பாடல்களில் அவர் சைவசமயத்தினர் எனத் துணிதல் இயலாது. எல்லாக் கடவுளரும் அவரது வாக்கில் உரிய முறையில் போற்றப்படுகின்றனர். திருமுருகாற்றுப்படையில் முருகப்பெருமான் சிறப்பாகப் புனையப்பட்டுள்ளான். அப்பெருமானிடம் கந்தழியாகிய வீடுபேற்றுச் செல்வத்தைப் பெற்றுய்யுமாறு செந்நெறிச் செல்வனாகிய தக்க இரவலன் ஒருவனை அவன்பால் கந்தழி பெற்றுயர்ந்த ஞானி ஆற்றுப்படுத்துகிறான். அவன் கூற்றாக நக்கீரர் இந்நூலை அருளினார். தாமும் அச்செல்வத்தை அப்பெருமானிடம் பெற்றுச் சீவன்முத்தராக வாழ்ந்தவர் நக்கீரர் எனக் கருதுகிறோம். இந்நூலால் மாத்திரம் நம்புலவரைச் சைவநெறி பிடித்தொழுகும் செவ்வேள்பத்தராகத் துணியலாம். 'கௌமாரம்' என்னும் அகச்சமயம் பின்னாளில் கிளைத்தெழுமாறு இவ்வழிபாடு அடிகோலிற்று எனவும் தோன்றுகிறது.

இனி, நம்புலவர் பெருமானுடைய பெருமைத்திறம் சில காணலாம். இவர்தம் பாடல்களால் அவை புலப்படுதல் கண்கூடு. அகப்பொருள் புறப்பொருள்களில் பலதுறைகளிலும் நுழைந்துபாடும் இவரது நுண்மாண்நுழைபுலம் வியத்தக்கது. தாம் வாய்மையாக் கண்டவொன்றைக் கலங்காது மொழியும் கடைப்பிடி இவர்பாலது என்பது 'கொங்குதேர் வாழ்க்கை' என்ற கவியின் தோற்றம் பற்றிய புராண வரலாற்றால் உணரலாம். இறையனாரால் அருளப்பட்ட 'களவியல்' என்னும் நூற்கு உரை இவர் கண்டதே என்னும் கூற்றை நாம் இசைந்தேபோத உரிய காரணங்கள் உண்மையால், விளக்கவுரை காணும்

திறனும் இலக்கணக்குறிப்புகள் இசைக்கும் நுண்ணறிவும் படைத்த இவரை உரையாசிரியருள் முதல்வராக் கொள்ள இடனுண்டு. அருளிக் கூறினும் வெகுண்டு கூறினும் அவ்வப்பயன்களாகிய வரத்தினையும் சாபத்தினையும் விளைக்கவல்ல நிறைமொழி மாந்தர் வரிசையுள் இவரைக் காட்டவல்ல செய்தி ஒன்று, தொல்காப்பியத்துள் 'மந்திரம்' பற்றிய சூத்திரத்திற்குப் பேராசிரியரும் நச்சினார்க்கினியரும் வரைந்த உரைப்பகுதியுள் காணப்படுகிறது. முருகன்பால் கந்தழிச் செல்வம் பெற்ற நக்கீரனார்க்கு இந்நிறைமொழிப்பேறு அவனருளால் வாய்த்தது எனக் கொள்ளல் தகும். கருணையுள்ளம் படைத்த நம்புலவர்பெருமான் தம்மால் சாகுமாறு சபிக்கப்பட்டவனை மீண்டும் எழச்செய்து வாழ்வித்தார் எனவும் அவ்வரலாறு இசைக்கிறது.

கடைச் சங்கப்புலவருள் தலைமையேற்று வைகிய நம் கீரர்பெருமான் நிலவிய காலத்து, 'கொண்டான்' என்னும் பெயர் கொண்ட வேட்கோவன் (குயவன்) ஆரியமொழியிற் பெரும்புலமைகொண்டு வாழ்ந்தான் என்றும், அச்செருக்கினால் தமிழ்மொழியை இழிவாகக் கருதி அவன் ஒருமுறை மதுரையில் பட்டிமண்டபம் ஏறித் தமிழைப் பழித்துப் பேசினான் என்றும், அது கண்ட நம்புலவர் பெருமான், குணமென்னும் குன்றேறி நின்றவராயினும், துடுமெனவெகுண்டு 'சாக' எனச் சபித்தார் என்றும், சிலகணமே நின்ற அவ்வெகுளி மெய்யுணர்வு தோன்ற உடனே நீங்கிவிட, பலரது வேண்டுகோளும் உடன் நிகழ, அவனைச் செந்தமிழை முன்னிறுத்தி அகத்தியனார் ஆணையால் மீண்டும் உயிர்பெற்றெழ அருளினார் என்றும், வரலாறு கேட்கிறோம். அழியவும் வாழவும் பாடிய அப்பாடல்கள் மந்திரமாய்ப் போந்த அங்கதச் செய்யுளாம். பேராசிரியர் உரையிற்கண்ட பாடலில் நேர்ந்த பிழையை நச்சினார்க்கினியர் உரையிற் கண்டவாறு திருத்திக்கூறவேண்டும்.

**'முரணில் பொதியில் முதல்புத்தேள் வாழி !**
**பரண கபிலரும் வாழி ! - அரணிய**
**ஆனந்த வேட்கையான் வேட்கோக் குயக்கோடன்**
**தான்அந்தம் சேர்கசுவா கா.**

இது வசை அங்கதம்,

**ஆரியம் நன்று, தமிழ்தீது எனஉரைத்த**
**காரியத்தால் காலக்கோள் பட்டானைச் - சீரிய**
**அந்தன் பொதியில் அகத்தியனார் ஆணையால்**
**செந்தமிழே தீர்க்கசுவா கா'**

இது வாழ்த்து. இவை நிறைமொழி மாந்தர் ஆணையிற் கிளந்த மறைமொழியாம் மந்திரத்தால் நிகழ்ந்த அங்கதப்பாடல்கள். நம்புலவர் பெருமான், தாம் இயற்றிய

புறநானூற்றுப்பாடல்களைக் கொண்டு நோக்கின், பரிசில் பெறும் நோக்கின்றி, அறிவுரை கூறி மன்பதையை வாழ்விக்கும் கருத்தினையே யுடையராதலைக் காண்கின்றோம். முருகன்பால் அருட்செல்வம் நாடிய வித்தகனார்க்கு எவ்வாறு பொருட்செல்வம் நாடும் நாட்டம் தோன்றும் ?

ஆலத்தூர்கிழார் - ஆவூர் மூலங்கிழார் - இடைக்காடனார் - கூடலூர்கிழார் - முதலிய புலவர்களும்,தலையாலங்கானத்துச் செருவென்ற நெடுஞ்செழியன் - உக்கிரப்பெருவழுதி - இராசசூயம்வேட்ட பெருநற்கிள்ளி - சேரமான் மாரிவேண்கோ - முதலான மன்னர்களும் இவர் காலத்தினராக நாம் அறிதலின், இவரது காலம் கி.பி. இரண்டாம் நூற்றாண்டின் இடைப்பகுதியாதல் கூடும் எனத் துணிகிறார் பேரறிஞர் ந.மு.வே. கரிகாலனும் இமயவரம்பன் நெடுஞ்சேரலாதனும் நம்புலவர்பெருமான் காலத்திற்கு முற்பட்டவர்கள். இன்னும் நுட்பமாகக் காலவரையறை செய்யச் சான்றுகள் கிடைத்தில. திருமுருகாற்றுப்படையிற் காணப்படும் சில சொல்லாட்சிகளைக் கொண்டு, இவரது காலம் கி.பி. ஐந்தாம் நூற்றாண்டளவினதாக இருத்தல் வேண்டும் என்பார் ஆராய்ச்சியாளர் அமரர் வையாபுரிப்பிள்ளை அவர்கள். பொருள்கள் - பெறீஇயர் - நல்குமதி -முதலாயின அச்சொல்லாட்சிகள். இக் கால ஆராய்ச்சியில் நாம் புகுதல் வேண்டா. 'செய்யாத' என்னும் வாய்பாட்டுப் பெயரெச்சங்கள் பலவும், மற்றையவர்கள் - பூரியர்கள் - எனக் கள்விகுதியடுத்த பலர்பாற்பெயர்களும் பயின்றுள்ள திருக்குறளினும் திருமுருகாற்றுப்படை காலத்தால் முற்பட்டதாதல் திண்ணம். அம்முற்பட்ட காலம் கடைச்சங்க கால இறுதிப் பகுதி எனலாம். வழுவமைதியாக நக்கீரர் சொல்லாட்சிகளைக் கொண்டால், முருகாற்றுப்படையை முற்பட்ட சங்க காலத்ததாகக் கோடலும் பொருந்தும்.

நம்புலவர்பெருமானைப் பற்றிய புராணக்கதை நம்பிக்கையுலகத்திற்கே உரியது. நாமும் அவ்வுலகத்தைச் சார்ந்தோமாயினோம். பரஞ்சோதிமுனிவர் அருளிய திருவிளையாடற் புராணம், அதற்கு முற்படத் தோன்றிய நம்பி திருவிளையாடற்புராணம், கல்லாடம் என்னும் நூல்களில் இக்கதை சிற்சில வேறுபாட்டோடு காணப்படுகின்றது. திருப்பரங்கிரிப்புராணமும் நக்கீரச் சருக்கத்தில் இக்கதையைக் குறிப்பிட்டு நக்கீரர் திருமுருகாற்றுப்படையை அருளிய வரலாற்றைச் சற்றே விரித்துப் பேசுகிறது. எல்லாப் புராணச் செய்திகளும் வரலாற்றுண்மை அல்ல. வரலாற்றில் வரும் கதைப் பகுதிகளும் பொய் என்று விலக்கத்தக்கனவும் அல்ல. மெய்ப்பொருள் காண்பதே அறிவு.

**'நன்பாட்டுப் புலவனாய்ச் சங்கம் ஏறி**
**நற்கனகக் கிழிதருமிக்கு அருளி னோன்காண்'**

என்று, தருமி பொற்கிழி பெற்ற வரலாறு அப்பரடிகளது தேவாரத்தில் சுட்டப்பெற்றுள்ளது. இத்தாண்டக அடியினை விளக்கி,

**'பொதியப் பொருப்பன் மதியக் கருத்தினைக்**
**கொங்குதேர் வாழ்க்கைச் செந்தமிழ் கூறிப்**
**பொற்குவை தருமிக்கு அற்புடன் உதவி**
**என்னுளம் குடிகொண்டு இரும்பயன் அளிக்கும்**
**கள் அவிழ் குழல்சேர் கருணையம் பெருமான்**

என்று கல்லாடம் இசைக்கிறது.

இனி, இறையனார் (சிவபெருமான்), பொருளதிகாரம் வழக்கற்றுப் போயின காலத்தே சங்கப்புலவர்களும் அவர்களைப் புரந்துவந்த பாண்டியனும் என்றின்னோரது குறை நீங்க அகப்பொருளாகிய களவியல் என்ற நூலை அருளினார் என்பது இறையனார் களவியல் உரையிற் காணும் வரலாறு. இதனைக் கல்லாடம் பின்வருமாறு பேசுகிறது:-

**'உலகியல் நிறுத்தும் பொருள்மரபு ஒடுங்க**
**மாறனும் புலவரும் மயங்குறு காலை**
**முந்துறும் பொருள்மறை முளைத்தருள் வாக்கால்**
**'அன்பின் ஐந்திணை' என்று அறுபது சூத்திரம்**
**கடலமுது எடுத்துக் கரையில்வைத் ததுபோல்**
**பரப்பின் தமிழ்ச்சுவை திரட்டிமற் றவர்க்குத்**
**தெளிதரக் கொடுத்த தென்தமிழக் கடவுள்'**

இறையனார் என்னும் பெயர் தலைச்சங்கத்தில் வீற்றிருந்த சிவபெருமானையே குறிப்பது என்பர் சிலப்பதிகார உரையாசிரியராம் அடியார்க்குநல்லார். குறுந்தொகையில் இரண்டாவது பாடலாக எண்ணப்பட்ட 'கொங்குதேர் வாழ்க்கை' என்ற பாட்டும் 'என்றும் புலராது' எனத் தொடங்கும் திருவள்ளுவமாலைப் பாட்டும் இறையனாரால் இயற்றப்பட்டனவாகக் காணப்படுகின்றன. பேராலவாயார் என்னும் பெயரிய புலவர், நற்றிணை அகநானூறு புறநானூறு என்னும் தொகைநூல்களில் சில பாடல்களின் ஆசிரியராகக் குறிக்கப்பட்டுள்ளார். புராணக்கதை நிகழ்ச்சியில் உடன்பாடில்லாத ஆய்வாளர் இறையனாரைப் பேராலவாயார் போன்ற சங்ககாலப்புலவருள் ஒருவரே என்ப.

இனி, நக்கீரரால் அருளப்பட்டனவாகப் பதினோராம் திருமுறையில் கோக்கப்பட்ட பனுவல்கள் கயிலைபாதி காளத்திபாதி அந்தாதி, திருஈங்கோய்மலை எழுபது, திருவலஞ்சுழி மும்மணிக்கோவை, திருவெழுகூற்றிருக்கை, பெருந்தேவபாணி, கோபப்பிரசாதம், காரெட்டு, போற்றித் திருக்கலிவெண்பா, கண்ணப்பதேவர் திருமறம் எனபன. நக்கீரர் நாலடிநாற்பதும், இறையனார் களவியலுரையும் இவர் இயற்றியனவே. அந்தாதி அமைப்பு சங்ககாலத்தில் அந்தாதியாகப் பாடும் சொல்தொடர்நிலைச் செய்யுள் அமைப்பு சங்ககாலத்துப் பெரும்பாலும் இல்லை என்பதும், பாவினம் எனத் தழுவப்பட்ட தாழிசை துறை - விருத்தம் - என்பன சங்க இலக்கியத்துள் இடம் பெற்றில என்பதும், மேற்குறித்த அந்தாதி முதலிய பனுவல்கள் சங்க இலக்கியநடை பயின்றில என்பதும், சங்க இலக்கியம் போல இப்பிரபந்தங்கள் பிற சமயங்களைத் தூற்றாமல் இல என்பதும், பண்டையுரையாசிரியர்களால் இவை மேற்கோளாக எடுத்துக் காட்டப்பட்டில என்பதும், இவை நக்கீரரால் புனையப்பட்டில என்பதற்குச் சான்றாம் எனக் கூறுவர். இம்மறுப்பு ஒருபுடை ஏற்கத்தக்கதேயெனினும் முற்றும் அன்று.

அந்தாதி அமைப்பு ஐங்குறுநூற்றில் நெய்தல் எட்டாம் பத்துப்பாடல் முழுதும் காணப்படும். பதிற்றுப்பத்துள், காப்பியாற்றுக் காப்பியனார் களங்காய்க் கண்ணி நார்முடிச்சேரலைப் பாடிய பத்துப் பாடலும் அந்தாதித் தொடையாக அமைவன. மும்மணிக்கோவையில் கட்டளைக்கலித்துறைப் பாடல் பத்து நிகழ்வன. பாவினமாகிய இவ்யாப்புத் தொல்காப்பியத்தில் பெயர் சுட்டப்பெறாவிடினும், பாவினங்கள் கொச்சகத்துள் அடங்கும் என்பர் உரைகாரர். சீவகச்சிந்தாமணிப் பாடல்கள் கொச்சகமே என்பது ஆசிரியர் நச்சினார்க்கினியர் கருத்து. சங்கவிலக்கியத்துள் பயிலும் வடசொற்கள் மிகக் குறைந்த அளவினவே. சமயக்கொள்கைகளை விரித்துரைக்கும் பனுவல்களில் வடசொற்கள் சற்றே மிகுதியாகப் பயிலுதலைக் காண்கிறோம். திருமாலது பரத்துவநிலை பற்றிக் கூறும் பரிபாடலில், பிற சங்க இலக்கியத்தினும்மிகுதியாக வடசொல் பயில்கிறது. மதக்கொள்கையை அளவைகளால் புலப்படுத்துமிடத்தும், வாதப் பிரதிவாதங்களால் நிலைநிறுத்துமிடத்தும், மணிமேகலையில் வடசொற்கள் பலவாகப் பயில்கின்றன. ஆதலின் சைவத்தைப் போற்றியுரைக்கும் இப்பிரபந்தங்களில் சங்கத்தமிழ்நடை அவ்வளவு தவழ்தல் காண இயலாது. பண்டையுரையாசிரியராம் இளம்பூரண அடிகளது உரையில், பதினோராம் திருமுறையில் கோக்கப்பட்டுள்ள மூத்தநாயனார் திருஇரட்டை மணிமாலையினின்று இரண்டு பாடல்கள் மேற்கோளாகக் காட்டப்பட்டுள. சிந்தாமணிப் பாடலை மேற்கோள் காட்டாத உரைகாரரே இல்லை எனலாம். ஆகவே உரையாசியரின்மார் சங்கப்பாடலையே மேற்கோள் காட்டுவர் என்னும் கூற்றுப் புரைபடும். பதினோராம் திருமுறையில் தொகுக்கப்பட்ட பிரபந்தங்கள், நம்பியாண்டார் நம்பிகள் காலத்திற்கு மிக முற்பட்டவையும் சமகாலத்தவையும் சற்றே பிற்பட்ட காலத்தவையும் ஆம் என்பது அறிஞர் முடிவு. நக்கீரர் அருளிய பனுவல்களில், காலத்தால் மிக முற்பட்டவராகிய கண்ணப்பர்,

சண்டேசர், மார்க்கண்டர், உபமன்னிய முனிவர், அருச்சுனன், இராவணன், சலந்தரன், சாக்கியநாயனார், கோச்செங்கணான் போன்றவரே இடம்பெற்றுள்ளமையும் இவற்றின் தொன்மைக்குச் சான்று பகர்வது. இன்னோரன்ன அமைதிகளால், நக்கீரர் இப்பிரபந்தங்களை அருளியுள்ளாராதல் பொருந்தாது என்னும் கூற்றுஒருவாறு மறுக்கப்படும். கட்டளைக் கலித்துறையாப்புப் பயிலும் மும்மணிக்கோவைப் பகுதியொன்றும் நீங்கலாகப் பிற பனுவல்கள் வெண்பா அகவல் கலிவெண்பா என்பவற்றால் நாற்சீரடி நடை பயிலுதல் காணப்படுதலின், அவை பாட்டு எனப்படும் இலக்கணத்தின் பிறழ்ந்தில எனலாம். அந்தாதி அமைப்புடைய பனுவற்கு முன்னரே அமைதி கூறியமை காண்க. திருஎழுகூற்றிருக்கை குறளடியும் சிந்தடியும் நெடிலடியும் இடையிடையே பயின்றுவரும் இணைக்குறள் ஆசிரியப்பாவாம். இத்திருமுறையில் பிறர் பாடிய பிரபந்தங்களினும் நக்கீரர் அருளிய இப்பிரபந்தங்களிற் பயிலும் வடசொற்கள் குறைவே எனத் துணியலாம்.

இனி, இறையனார் களவியலுரை நக்கீரர் கண்டது என்பதற்கு மறுப்புப் பல காரணங்கள் சுட்டி எழுகிறது. (தஞ்சை சீநிவாசப்பிள்ளை அவர்களது தமிழ்வரலாறு என்ற கால ஆராய்ச்சி நூல் காண்க.) அம்மறுப்புரைகளை ஆழ்ந்து நோக்கிக் கூறுமிடத்துப் பின்வருமாறு துணிதலே ஏற்புடைத்து.

'களவியற்கு உரைகண்டவர் மதுரைக் கணக்காயனார் மகனார் நக்கீரரே என்பதில் எட்டுணையும் ஐயமில்லை. அவ்வுரை பலராலும் முறையே கேட்கப்பட்டு வந்தது. இறுதியில் ஒருவரால் வரிவடிவில் எழுதப்பட்டது. எழுதியவராம் புலவர் தாம் முறையே கேட்ட அவ்வுரையோடு மேற்கோளையும் (பிற்காலத்துக் கோவைப்பாடல்) இணைத்து எழுதினார். அவ்வாறு எழுதிய அறிஞர் தம்மை அந்த உரைகண்டவராக ஒருகாலும் கருதிற்றிலர். இவ்வாறு களவியலுரையைப் பிற்காலத்து வரிவடிவில் எழுதியவராவார் முசிறியாசிரியர் நீலகண்டனார் என்றும் இளம்பூரண அடிகளார் என்றும் ஒரு சாரார் கூறுவர்.' இவ்வாறு தெளிவுறுத்திக் கூறுகிறார் அமரர் ந.மு.வே. அவர்கள்.

இதுகாறும் நக்கீரர்தம் பெயர்க் காரணமும் அவர் குலமும் சமயமும் பெருமையும் காலமும் புராணக்கதையும் பற்றிக் கண்டோம். பதினோராம் திருமுறையிற் கோக்கப்பட்டுள்ள முருகாற்றுப்படை நீங்கலாக நக்கீரர் இயற்றியவாகக் கூறப்படும் பனுவல்கள் அவர் இயற்றியன அல்ல என்று முற்றும் மறுக்கப்படலாகாமையும் கண்டோம். இறையனார் களவியலுரை நக்கீரர் உரைத்ததனைப் பிற்காலத்துப் பேரறிஞர் ஒருவர் தம்காலத்து வழங்கிய கோவை மேற்கோளோடு பிரித்தறிய மாட்டாத பிணைப்போடு வரிவடிவில் எழுதிப் போந்தமையும் குறித்தோம். இனி, திருமுருகாற்றுப்படை பற்றிய துறை விளக்கம் ஒன்றும் சுட்டி இக்கட்டுரையை நிறைவு செய்வோம்.

தொல்காப்பியப் புறத்திணையியல் இறுதிச் சூத்திரத்தே சில புறத்துறைகள் கூறப்படுகின்றன. அவை தனிநிலைச் செய்யுளாக, சிறுபான்மை தொடர்நிலையாகவும்) அமையும் தன்மையன. துயிலெடைநிலை, ஆற்றுப்படை, பெருமங்கலம், மண்ணுமங்கலம், வாள்மங்கலம், (எயில் அழித்த)மண்ணுமங்கலம், குடைநிழல் மரபு. பரிசில்விடை, இருவகைவிடை, ஓம்படை என்னும் பத்துத்துறைபட நிகழும் செய்திகள் புறப்பொருள் அமையப் பாடும் தனிநிலைச் செய்யுட்குப் பொருள் ஆவன. இவற்றுள் ஆற்றுப்படை குறித்த சூத்திர அடிகள் வருமாறு.

**'கூத்தரும் பாணரும் பொருநரும் விறலியும்**
**ஆற்றிடைக் காட்சி உறழத் தோன்றிப்**
**பெற்ற பெருவளம் பெறாஅர்க்கு அறிவுறீஇச்**
**சென்றுபயன் எதிரச் சொன்ன பக்கமும்'** என்பன.

வள்ளலாம் செல்வரையும் மன்னரையும் பாடித் தம் வறுமை நீங்கப்பெற்றுச் செல்வப் பொலிவுடன் தம்மூர்க்கு மீடலுறும் கூத்தர் பாணர் பொருநர் விறலியர் என்றின்னோர், வழிக்கண் தம்மினத்தாராகிய கூத்தர் முதலியோரைக் காண்கின்றனர். அவர்கள்தம் தோற்றம் தம்பொலிவிற்கு மாறுபடத்தோன்றுகிறது. தோன்றவே, அவர்கள்பால் அன்புள்ளம் கொண்டு, தம்பண்டை வறிய நிலையையும் அப்போதைய செல்வநிலையையும் அவர்கட்குக் கூறி, தாம் பெற்றது போன்ற பெருவளங்களைத் தம்மை உபசரித்த அவ்வள்ளலர்பாற் சென்று பெற்று வறுமைதீர்ந்து வாழலாம் பயன்பாட்டினை அவர்களும் எய்தி மகிழலாம்படிக்கு அறிவுறுத்தி அச்செல்வர்பால் செல்லுமாறு அவர்களை ஆற்றுப்படுத்துகின்றனர். கூத்தர் தம்மினத்தவராகிய கூத்தரையே ஆற்றுப்படுத்துவர். பாணர் பாணரையும், பொருநர் பொருநரையும், விறலியர் விறலியரையும் ஆற்றுப்படுத்துதல் மரபு, தம்மரபோடியையக் கேட்பவர் மனங்கொளச் செய்திகளைச் சொல்லுதல் அவ்வவர்க்கே கைவந்த கலையாதலின் என்க. இவ்வகையால் பத்துப்பாட்டுள் அமைந்தவை பொருநராற்றுப்படை, சிறுபாணாற்றுப்படை, பெரும்பாணாற்றுப்படை, கூத்தராற்றுப்படையாகிய மலைபடுகடாம் என்னும் நான்கும் ஆம். விறலியாற்றுப்படை புறநானூற்றில் காணப்படுகிறது. இவ்வாற்றுப்படைகளினின்று திருமுருகாற்றுப்படை வேறுபடுகிறது. இச்சூத்திர அடிகளுக்கு முருகாற்றுப்படையையும் அமைத்துக்கொள்ளுமாறு, இலக்கியம் கண்டு இலக்கணம் அமையுமாறு நச்சினார்க்கினியர் உரை காண்கிறார்.

தாம் உலகியலில் கண்ட காட்சி தீது எனவும், ஆன்றோர் நூல்நெறியால் விதித்த காட்சி நன்று எனவும், சான்றோர் மனத்துள் தோன்றுகின்றன. தோன்றவே, தாம் இறைவனை வழிபட்டுப் பெற்ற அருட்செல்வத்தை அது பெறாத ஏனைய உலகியல் மாந்தர்க்கு அறிவுறுத்து, அன்னோரும் அவ்வருள் நலம்

அவ்விறைவனை வழிபட்டுப் பெற்றுப் பிறவிப்பயன் எய்துமாறு ஆற்றுப்படுத்துவது இம்முருகாற்றுப்படை. ஆற்றுப்படையாவது தாம் சென்ற வழிக்கண் (சென்று பயனடையுமாறு) பிறரைச் செலுத்துதல்.

முருகனை வழிபட்டு அவன்பால் கந்தழியாகிய செல்வத்தைப் பெற்றானொருவன், வீடுபெறப் பக்குவமுடையானாகிய ஓர் இரவலனை, தான் பெற்ற கந்தழிச் செல்வத்தை அவன்பால் பெற்றுப் பிறவாப் பெருநிலை பெற்று உய்யுமாறு, அப்பெருமான் உறையும் இடம்தோறும் சென்று வழிபடுமாறு அவனைச் செலுத்துவது முருகாற்றுப்படையாம் என்றுரைக்கிறார் ஆசிரியர் நச்சினார்க்கினியர் (கந்தழி பிரம்மானுபவம்) பிற ஆற்றுப்படைக்குப் பொருள் கூறுமாறு இவ்வாற்றுப்படைக்குப் பொருள் கூறலாகாமை உணரப்படும். முருகனிடத்தில் ஆற்றுப்படுத்துதல் என ஏழாம் வேற்றுமை விரித்துப் பொருள் கூறுக. இந்நூல் திருமுருகாற்றுப்படை எனவே வழங்கிவருதலால் 'புலவராற்றுப்படை' என இதனைக் கூறலாகாது என்பது நச்சினார்க்கினியர் கருத்து. 'இருங்கண்வானத்து இமையோருழைப், பெரும்புலவனை ஆற்றுப்படுத்தன்று' என்பது புறப்பொருள் வெண்பாமாலை கூறும் புலவராற்றுப்படை இலக்கணம். புலவர் எனும் சொல் (சீவன் முத்தராகிய) ஞானிகளைக் குறிக்கும். அவர்களை ஆற்றுப்படுத்துவது என்று புலவராற்றுப்படைக்குப் பொருள் கூறினும், நக்கீரர் அருளிய பனுவல் முருகாற்றுப்படை என்றே இரவலன் ஆற்றுப்படுக்கப்படும் தெய்வத்தின் பெயர் கூட்டியே நிலவுதலின், புலவராற்றுப்படை என்ற பெயர் பொருந்தாது என்பதே நச்சினார்க்கினியர் திருவுள்ளமாம்.

இம் முருகாற்றுப்படையை அடியொற்றி, கல்விபயில ஏக்கறும் தம் நெஞ்சினைக் கலைநலம் நிரம்பிப் பயனுறுமாறு நல்லாசான் ஒருவன்பால் ஆற்றுப்படுத்துவதாகக் கரந்தைக் கவியரசு அமரர் வேங்கடாசலம்பிள்ளை யாத்த 'ஆசானாற்றுப்படை' 108 அடிகளையுடைய அரியதொரு பனுவல். விரிவஞ்சி, அதனை ஈண்டு விளக்குதற்கு இல்லை.

.....





திருமுருகாற்றுப்படை மூலம்

**திருப்பரங்குன்றம்**

உலகம் உவப்ப வலனேர்பு திரிதரு
பலர்புகழ் ஞாயிறு கடற்கண் டாஅங்
கோவற விமைக்குஞ் சேண்விளங் கவிரொளி
யுறுநர்த் தாங்கிய மதனுடை நோன்றாட்
செறுநர்த் தேய்த்த செல்லுறழ் தடக்கை
மறுவில் கற்பின் வாணுதல் கணவன்
கார்கோண் முகந்த கமஞ்சூல் மாமழை
வாள்போழ் விசும்பில் வள்ளுறை சிதறித்
தலைப்பெய றலைஇய தண்ணறுங் கானத்
திருள்படப் பொதுளிய பராரை மராஅத்
துருள்பூந் தண்டார் புரளு மார்பினன்
மால்வரை நிவந்த சேணுயர் வெற்பிற்
கிண்கிணி கவைஇய வொண்செஞ் சீறடிக்
கணைக்கால் வாங்கிய நுசுப்பிற் பணைத்தோட்
கோபத் தன்ன தோயாப் பூந்துகிற்
பல்காசு நிரைத்த சில்கா ழல்குற்
கைபுனைந் தியற்றாக் கவின்பெறு வனப்பின்
னாவலொடு பெயரிய பொலம்புனை யவிரிழைச்
சேணிகந்து விளங்குஞ் செயிர்தீர் மேனித்
துணையோர் ராய்ந்த விணையீ ரோதிச்
செங்கால் வெட்சிச் சீறித ழிடையிடுபு
பைந்தாட் குவளைத் தூவிதழ் கிள்ளித்
தெய்வ வுத்தியொடு வலம்புரி வயின்வைத்துத்
திலகந் தைஇய தேங்கமழ் திருநுதன்

*193. நறு சாந்து அணிந்த கேழ் கிளர் மார்பின் . நறிய சந்தனத்தைப் பூசிய நிறம் விளங்கும் மார்பினையுடைய வேலன் (190),*

வேலன் பைங்கொடியாலே *(190)* புட்டில்விரைஇ *(191)* நறைக்காய் இடையிடுபு *(190)* குளவியொடு *(191)* கூதாளத்தையுங் கட்டிய கண்ணியனாய் *(192)*,

கண்ணியன் : வினையெச்சம் வினைக் குறிப்புமுற்று.

*194.* கொடு தொழில் வல் வில் கொலைஇய கானவர் - கொடிய தொழிலையுடைய வலியவில்லாற் கொல்லுதலைச் செய்த குறவர்,

'குலைஇய' என்ற பாடத்திற்கு வில்லைவளைத்த கானவரென்க ; எனவே கோறல் பெற்றாம்.

*195. நீடு அமை விளைந்த தேன் கள் தேறல் - நெடுகின மூங்கிலிலே யிருந்து முற்றின தேனாற்செய்த கட்டெளிவை,*

*196. குன்றகம் சிறுகுடி கிளையுடன் மகிழ்ந்து - மலையிடத்துச் சிறிது ஊரிலே இருக்கின்ற சுற்றத்தோடே உண்டு மகிழ்ந்து,*

*197. தொண்டகம் சிறு பறை குரவை அயர - அந்நிலத்துக்குரிய தொண்டகமாகிய சிறுபறையினது தாளத்திற்குக் குரவையாட,*

*கானவர் தேறலை மகிழ்ந்து குரவையாடவென்க.*

*198 - 9.* [விரலுளர்ப் பவிழ்ந்த வேறுபடு நறுங்காற், குண்டுசுனை பூத்த வண்டுபடு கண்ணி:]

*விரல் உளர்ப்பு அவிழ்ந்த வேறுபடு நறு கான் கண்ணி - விரலது அலைப்பாலே வலிய அலர்த்த அலர்ந்த பூவாகலின் வேறுபடுகின்ற நறிய மணத்தினையுடை தலையிற்சூடும் மாலையினையும், குண்டு சுனை பூத்த வண்டு படு கண்ணி - அதுதான் ஆழ்ந்த சுனையிற்பூத்த பூவாற்செய்த வண்டு வீழ்கின்ற கண்ணி,*

*இஃது ஒற்றுமை நயம்பற்றிச் செயப்படு பொருண்மேல் நின்றது.*

*'கார்க் குண்டுசுனை' என்று பாடமாயின், கரிய ஆழ்ந்த சுனையென்க.*

*200. இணைத்த கோதை - இதழ் பறித்துக் கட்டின மாலையினையும், அணைத்த கூந்தல் - சேர்த்தின கூந்தலினையும்,*

*201. முடித்த குல்லை - இலையைத் தலையிலே யணிந்த கஞ்சங் குல்லையினையும்,*

*இலை உடை நறு பூ - இலையையுடைய நறிய பூங்கொத்துக்களையும்,*

*202 - 3.* செ கால் மராஅத்த வால் இணர் இடை இடுபு சுரும்பு உண தொடுத்த பெரு தண் மா தழை - செவ்விய காலினையுடைய மராத்திடத்தனவாகிய வெள்ளிய கொத்துக்களை நடுவே வைத்துச் சுரும்பு தேனை யுண்ணும்படி தொடுத்த பெரிய குளிர்ந்த அழகினையுடைய தழையை,

குல்லையையும் பூவையும் வாலிணர் இடையிட்டுத் தொடுத்த தழை யென்க.

*204.* (திருந்துகா மூல்கு றிளைப்ப வுடீஇ:) காழ் திருந்து அல்குல் திளைப்ப உடீஇ - வடங்கள் திருந்தும் அல்குலிடத்தே அசையும்படி உடுத்து,

அல்குற்றிளைப்பவென்னும் வல்லொற்று விகாரமாயிற்று.

205. [மயில் கண்டன்ன மடநடை மகளிரொடு:]

மயில் கண்டன்ன மகளிரொடு - சாயலுடைமையான் மயிலைக் கண்டாற்போன்ற மகளிரொடு,

மடநடை மகளிர் - மடப்பம் பொருந்திய ஒழுக்கத்தினையுடைய மகளிர்.

தழையை யுடுத்து மயில் கண்டன்ன மகளிரென்க.

உடுத்தென்னும் வினையெச்சம் அன்னவென்னும் பெயரெச்சமாகிய உவம உருபோடு முடிந்தது.

கண்ணியினையும் கோதையினையும் சேர்த்தின கூந்தலினையம் மட நடையினையுமுடைய மகளிரென்க.

இம்மகளிர் தன்னைச் சேவிக்கு மகளிர்.

206. செய்யன் - சிவந்தவன்,

206 - 7. சிவந்த ஆடையன் செ அரை செயலை தண் தளிர் துயல் வரும் காதினன் - சிவந்த ஆடையுடுத்துச் சிவந்த அரையினையுடைய அசோகிற் குளிர்ந்த தளிர் அசையுங்காது பொருந்தி,

208. கச்சினன் கழலினன் செச்சை கண்ணியன் - கச்சைக் கட்டிக் கழலையணிந்து வெட்சிமாலையைச் சூடி,

209. குழலன் கோட்டன் குறு பல்லியத்தன் - குழலையூதிக் கொம்பைக் குறிதத்துச் சிறிய பல்லியங்களை எழுப்பி,

210 - 11. தகரன் மஞ்ஞையன் புகர் இல் சேவலங்கொடியன் - கிடாயைப் பின்னிட்டு மயிலையேறிக் குற்றமில்லாத கோழிக்கொடியை உயர்த்து,

நெடியன் - தான் வேண்டிய வடிவுகோடலிற் பிள்ளையாயிராது நெடுக வளர்ந்து,

தொடி அணி தோளன் - தோளிலே தொடியையணிந்து,

212. நரம்பு ஆர்த்தன்ன இன் குரல் தொகுதியொடு - நரம்பு ஆரவாரித்தாலொத்த இனிய மிடற்றையுடைய பாடு மகளிரோடே,

இவர்கள் தன்னைச் சேவித்துப்பாடும் மகளிர்.

213 - 4. [குறும்பொறிக் கொண்ட நறுந்தண் சாயல், மருங்கிற் கட்டிய நிலனேர்பு துகிலினன்:]

மருங்கில் கட்டிய குறும்பொறி கொண்ட - இடையிலே இறுகக் கட்டிய உதரபந்தத்தின் மேலே உடுப்பதாக உட்கொண்ட,

நிலன் நேர்பு நறு தண் சாயல் துகிலினன் - நாலவிட்டமையால் நிலத்தைப் பொருந்தி நறிய குளிர்ந்த மென்மையை உடைத்தாகிய துகிலினையுடுத்து,

215 - 6. [முழவுறழ் தடக்கையி னியல வேந்தி, மென்றோட் பல் பிணை தழீஇத் தலைத்தந்து :]

மெல் தோள் பல் பிணை இயல - மெல்லிய தோளினையுடைய பலவாகிய மான்பிணைபோலும் மகளிர் குரவையாடி அசைய,

இவர்கள் மெய்தீண்டி விளையாடுதற்குரிய மகளிர்.

முழவு உறழ் தட கையின் தழீஇ ஏந்தி தலைத்தந்து - தன்னுடைய

முழவையொத்த பெருமையையுடைய கையினாலே அவர்கள் கையினைத் தழீஇ எடுத்துக்கொண்டு முதற்கை கொடுத்து,

217. [குன்றுதொ றாடலு நின்றதன் பண்பே:] குன்றுதொறு ஆடலும் தன் நின்ற பண்பு - மலைகடொறுஞ்சென்று விளையாடுதலும் தனக்கு நிலைநின்ற குணம்;

ஆடையன் (206) கண்ணியன் (208) என்பன முதலியன வினையெச்ச வினைக்குறிப்புமுற்று; ''முன்னத்தி னுணருங் கிளவியு முளவே'' (தொல். எச்சவியல், சூ.63) என்னுஞ் சூத்திர விதியால் செய்தெனெச்சப் பொருளை உணர்த்தின,

கானவர் (194) குரவையயர (197) அதனைக்கண்டு மென்றோட் பல்பிணை (216) குரவையாடியசைய (215) அதனைப்பொறாதே செய்யன் (206) வேலன் (190) தொடுத்த கண்ணியைச்சூடி (192) உடுத்துப் (206) பொருந்திக் (207) கட்டி அணிந்து சூடி (208) ஊதிக் குறித்து எழுப்பிப் (209) பின்னிட்டு ஏறி (210) உயர்த்து வளர்ந்து தொடியை யணிந்து (211) துகிலையுடுத்துத் (214) தொகுதியுடனே (212) மகளிரோடே (205) மலைகடொறுஞ் சென்று (217) தழீஇ (216) ஏந்தித் (215) தலைத்தந்து (216) ஆடலும் நின்ற தன்பண்பென வினை முடிக்க.

''குரவை யென்பது கூறுங் காலைச், செய்தோர் செய்த காமமும் வென்றியு, மெய்தக் கூறு மியல்பிற் றாகும்'' எனவரும்.

அதாஅன்று - அதுவன்றி,

## பழமுதிர்சோலை

218. சிறு தினை மலரொடு விரைஇ மறி அறுத்து - சிறிய தினையரிசியைப் பூக்களோடே கலந்து பிரப்பரிசியாகவைத்து மறியையறுத்து,

219. வாரணம் கொடியொடு வயின் பட நிறீஇ . கோழிக்கொடியோடே தான் அவ்விடத்தே நிற்கும்படி நிறுத்தி,

220. ஊர் ஊர் கொண்ட சீர் கெழு விழவினும் - ஊர்தோறும் ஊர்தோறும் எடுத்துக்கொண்ட தலைமை பொருந்தின விழாவின் கண்ணும்,

221. ஆர்வலர் ஏத்த மே வரு நிலையினும் - தன்மேல் அன்புடையார் ஏத்துதலாலே தன் மனம் பொருந்துதல் வருகின்ற இடத்தினும்,

222. வேலன் தைஇய வெறி அயர் களனும் - படிமத்தான் இழைத்த வெளியாடுகளத்தினும்,

பிள்ளையார் வேலைத் தனக்கு அடையாளமாகக் கொண்டு திரிதலின், வேலனென்றார்; இது, ''வெறியறி சிறப்பின் வெவ்வாய் வேலன்'' (தொல். புறத், சூ.5) எனப் புறத்திற்கும் கூறியது.

223. காடும் காவும் கவின் பெறு துருத்தியும் - காட்டினும் பொழிலினும் அழகுபெறுகின்ற ஆற்றிடைக்குறையினும்,

224. யாறும் குளனும் - ஆறுகளினும் குளங்களினும்,

வேறு பல் வைப்பும்-முற்கூறிய ஊர்களன்றி வேறுபட்ட பலவாகிய ஊர்களினும்,

225. சதுக்கமும் - நாற்சந்தியினும்,

சந்தியும் - முச்சந்தியினும் ஐஞ்சந்தியினும்,

புது பூ கடம்பும் - புதிய பூக்களையுடைய கடம்பினும்,

226. மன்றமும் - ஊர்க்குநடுவாய் எல்லாருமிருக்கும் மரத்தடியினும்;

பொதியிலும் - அம்பலத்தினும்,

கந்து உடை நிலையினும்-ஆதீண்டு குற்றியையுடைய இடத்தினும்,

227. (மாண்டலைக் கொடியொடு மண்ணி யமைவர :) மாண் தலை கொடியொடு உரு கெழு வியனகர் (244) அமைவர மண்ணி - மாட்சிமைப்பட்ட தலையினையுடைய கோழிக்கொடியோடே உருகெழு வியனரை அமைவரப் பண்ணி,

ஒடு : வேறுவினையொடு.

இனி, 'ஆண்டலைக்கொடி' என்று பாடமாயின், பேய் முதலியன பலியை நுகராமல் தலை ஆண்மகன்றலையும், உடல் புள்ளின் வடிவுமாக எழுதின கொடி யென்க.

228. நெய்யொடு ஐயவி அப்பி-நெய்யோடே வெண்சிறுகடுகையும் அப்பி,

ஐது உரைத்து - தான் வழிபடுதற்குரிய மந்திரத்தைத் தோன்றாமல் உச்சரித்து,

229. குடந்தம்பட்டு - வழிபட்டு,

வணக்கம்பட்டென்று உரைப்பர்; குடவென்பது தடவென்பது போல வளைவை உணர்த்துவதோர் உரிச்சொல்லாதலின், அதனடியாகப் பிறந்த பெயருமாம்.

கொழு மலர் சிதறி - அழகிய மலர்களைத் தூவி,

230. முரண் கொள் உருவின் இரண்டு உடன் உடீஇ - தம்மிற் பகைத்தல்கொண்ட வடிவினையுடைய இரண்டு அறுவையை உள்ளொன்றும் புறம்பொன்றுமாக உடுத்து,

231. செ நூல் யாத்து - சிவந்தநூலைக் கையிலே காப்புக்கட்டி,

நூலொழுக்கி எல்லைப்படுத்தென்றுமாம்.

வெள் பொரி சிதறி - வெள்ளிய பொரியைத் தூவி,

232. மத வலி நிலைஇய மா தாள் கொழு விடை - மிகுதியையுடைய வலி நிலைபெற்ற பெருமையையுடைத்தாகிய காலையுடைய கொழுவிய கிடாயினது,

233. குருதியொடு விரைஇய தூ வெள் அரிசி - உதிரத்தோடே பிசைந்த தூய வெள்ளரிசியை,

234. சில் பலி செய்து - சிறுபலியாக இட்டு,

பல் பிரப்பு இரீஇ - பலபிரப்பும் வைத்து,

இனிப் பிரப்புக்கூடை யென்பாருமுளர்.

235. சிறு பசுமஞ்சளொடு நறு விரை தெளித்து - சிறிய பசு மஞ்சளோடே நறிய சந்தன முதலியவற்றையும் தெளித்து,

இனிச் சிறுபசுமஞ்சள் - மஞ்சளில் ஒரு சாதிவிசேடமுமாம்.

விரை : ஆகுபெயர்.

236 -7. [பெருந்தண் கணவீர நறுந்தண் மாலை, துணையற வறுத்துத் தூங்க நாற்றி :]

பெரு தண் கணவீரம் மாலை பெரிய குளிர்ந்த செவ்வலரி மாலையையும்,

நறு தண் மாலை - ஒழிந்த நறிய குளிர்ந்த மாலைகளையும்,

அறுத்து - தலையொக்க அறுத்து,

துணை அற தூங்க நாற்றி - தமக்கு ஒப்பில்லாதபடி அசையத் தூக்கி,

இனித் தம்மில் இணையொத்த அறுப்பாக அறுத்தென்றுமாம்.

238. நளி மலை சிலம்பில் நல் நகர் வாழ்த்தி - செறிந்த மலைப்பக்கத்திலுள்ள நல்ல ஊர்களைப் பசியும் பிணியும் பகையும் நீங்குகவென்று வாழ்த்தி,

நகர் - பிள்ளையார் கோயிலென்றுமாம்.

239. நறு புகை எடுத்து - நறிய தூபங்கொடுத்து,

குறிஞ்சி பாடி - அந்நிலத்திற்கு அடைத்த குறிஞ்சிப் பண்ணைப் பாடி,

240. இமிழ் இசை அருவியொடு இன்னியம் கறங்க - முழங்குகின்ற ஓசையினையுடைய அருவியோடே இனிய பல்லியங்களும் ஒலியா நிற்க,

241 - 2. உருவம் பல் பூ தூஉய் வெருவர குருதி செந்தினை பரப்பி - சிவந்த நிறத்தினையுடைய பல பூக்களையும் தூவி அச்சம் வரும் படி உதிரமளைந்த சிவந்த தினையினையும் பரப்பி,

242 - 4. குறமகள் முருகு இயம் நிறுத்து முரணினர் உட்க முருகு ஆற்றுப்படுத்த உரு கெழு வியன் நகர் - குறச்சாதியாகிய மகள் முருகன் உவக்கும் வாச்சியங்களை வாசிக்கப்பண்ணித் தெய்வமின்றென்பார் அஞ்சும்படியாகப் பிள்ளையார் வரும்படி வழிப்படுத்தின அச்சம் பொருந்தின அகற்சியையுடைய நகரின் கண்ணே,

''வேலன் வெறியாட் டயர்ந்த''(தொல். புறத்.சூ.5) என்புழிச் சிறுபான்மை ஏனையோரும் ஆடுவாரென்றலின் குறமகள் வெறியாட்டுக் கூறினார்.

குறமகள் (242) மண்ணி (227) அப்பி உரைத்துப் (228) பட்டுச் சிதறி உடீஇ யாத்துச் சிதறிச் செய்து இரீஇத் தெளித்து நாற்றி வாழ்த்தி எடுத்துப் பாடிக் கறங்காநிற்கத் தூஉய்ப் பரப்பி நிறுத்து ஆற்றுப்படுத்த நகரென வினை முடிக்க.

சாந்திசெய்ய ஆற்றுப்படுத்தாள்.

245. ஆடு களம் சிலம்ப பாடி - அவ்வெறியாடுகின்ற களம் ஆரவாரிப்ப அதற்கு ஏற்பனவற்றைப்பாடி,

245 - 6. [பலவுடன் கோடுவாய் வைத்து:] கோடு பல உடன் வாய் வைத்து அதற்கு ஏற்பனவற்றையும் சேரவூதி,

கொடு மணி இயக்கி - கொடிய மணியையும் ஒலிப்பித்து,

247. ஓடா பூட்கை பிணிமுகம் வாழ்த்தி - கெடாத வலியினையுடைய பிணிமுகமென்னும் பட்டத்தினையுடைய யானையை வாழ்த்தி,

பிணிமுகம் - மயிலுமாம்.

248. வேண்டுநர் வேண்டியாங்கு எய்தினர் வழிபட - காரியங்களை

விரும்புவோர் தாங்கள் விரும்பின காரியங்களை விரும்பினாற்போலப் பெற்று நின்றுவழிபட,

நகரிலே (244) பாடி வைத்து இயக்கி வாழ்த்தி வழிபட உறைதலு முரியன் (189) என்க.

விழவின் கண்ணும் (220) நிலையின் கண்ணும் (221) கந்துடை நிலையின் கண்ணும் (226) உறைதலுமுரியன் (189) என்க.

249. ஆண்டு ஆண்டு உறைதலும் - களனும் (222) காடும் காவும் துருத்தியும் யாறும் குளனும் வைப்பும் சதுக்கமும் சந்தியும் கடம்பும் மன்றமும் பொதியிலுமாகிய அவ்வவ்விடங்களிலே உறைதலு முரியனென்க.

அறிந்தவாறே - யான் அறிந்தபடியே கூறினேன்;

250. ஆண்டு ஆண்டு ஆயினும் ஆக - யான் முற்கூறிய அவ்வவ்விடங்களிலேயாயினுமாக, பிறவிடங்களிலேயாயினுமாக,

உம்மை : ஐயவும்மை.

250 - 51. [காண்டக, முந்துநீ கண்டுழி முகனமர்ந் தேத்தி:] முந்து நீ கண்டுழி காண் தக முகன் அமர்ந்து ஏத்தி - முற்பட நீ கண்ட பொழுது அழகு தக்கிருக்கும்படி முகம் விரும்பித் துதித்து,

முகனமரந்தென்றார், அவன் தெய்வத்தன்மையைக் கண்ட பொழுது அச்சம் பிறவாது நிற்க வேண்டுமென்றற்கு.

252. கை தொழூஉ பரவி - முன்னர்க் கையைத் தலைமேல் வைத்து வாழ்த்தி, கால் உற வணங்கி - பின்னர்த் திருவடி தலையிலேயுறும்படி தண்டனிட்டு,

253. நெடு பெரு சிமையத்து நீலம் பைஞ்சுனை - நெடிய பெரிய இமவானுச்சியில் தருப்பைவளர்ந்த பசிய சுனையிடத்தே,

நீலமென்றார், அதினின்ற நீலநிறத்தையுடைய தருப்பையை. அஃது ஆகுபெயர்; என்றது சரவணப் பொய்கையென்றவாறு.

254. ஐவருள் ஒருவன் அங்கை ஏற்ப - விசும்பும் வளியும் தீயும் நீரும் நிலனுமாகிய ஐவருள் தீ தன் அங்கையிலே ஏற்ப,

சதாசிவனும் மயேச்சுரனும் உருத்திரனும் அரியும் அயனும் பூதங்கட்குத் தெய்வமாகலின், ஐவரென்றார்; ஐவருளொருவனென்றது உருத்திரன் தெய்வமாகிய தீயை.

அவன் அங்கையேற்பவென்றது, இறைவனிடத்தினின்றும் இந்திரன் வாங்கிய கருப்பத்தினை முனிவர் வாங்கித் தமக்குத் தரிக்கலாகாமையின் இறைவன்கூறாகிய முத்தீக்குண்டத்திட்டதனைக் கூறிற்று.

255. அறுவர் பயந்த ஆறு அமர் செல்வ - அருந்ததியொழிந்த அறுவராலே பெறப்பட்ட ஆறுவடிவு பொருந்திய செல்வ,

என்றது : அங்ஙனம்அங்கியின்கணிட்டுச் சத்தி குறைந்த கருப்பத்தை முனிவரெழுவரும் வாங்கித் தம் மனைவியர்க்குக் கொடுப்ப அருந்ததியொழிந்தார் விழுங்கிச் சூன்முதிர்ந்து, சரவணப் பொய்கையிற் பதுமப்பாயலிலே பெற ஆறுவடிவாக வளர்ந்தமை கூறிற்று.

ஏற்கையினாலே (254) அறுவராற் பைஞ்சுனையிலே (253) பயக்கப்பட்ட செல்வ (255) வென்க ; இது பரிபாடலில், ''பாயிரும் பனிக் கடல்'' (5) என்னும் பாட்டானுணர்க.

256. ஆல் கெழு கடவுள் புதல்வ - கல்லாலின் கீழிருந்த கடவுளினுடைய புதல்வ,

கடவுளரென உயர்திணையாய் நில்லாது கடவுளென்பது தெய்வமென்னும் பொருட்டாய் அஃறிணை முடிபுகொள்ளும் உயர்திணையாய் நிற்றலின், அஃறிணைப்பாற்பட்டு, ''உணரக்கூறிய'' (தொல்.புள்ளி.சூ.110) என்னும் புறனடையான் முடிந்தது.

256 - 7. மால் வரை மலை மகள் மகனே - பெருமையையுடைய மலையாகிய மலையரையன் மகளுடைய மகனே,

வரை - மூங்கிலுமாம்.

மாற்றோர் கூற்றே - பகைவர்க்குக் கூற்றுவனே,

258. [வெற்றி வெல்போர்க் கொற்றவை சிறுவ:]

வெற்றி கொற்றவை சிறுவ - தான் வெல்லும்போரைச் செய்யும் கொற்றவை, என்றது, மகிடனைச் செற்றதனை.

259. இழை அணி சிறப்பிற் பழையோள் குழவி - பூணணிந்த தலைமையினையுடைய காடுகாளுடைய குழவி,

காடுகிழாளென்பது இக்காலத்துக் காடுகாளென மருவிற்று, அவளும் இறைவனுடைய சத்தியாகலின், அவளுடைய குழவியென்றார்.

260. [வானோர் வணங்குவிற் றானைத் தலைவ:]

வானோர் தானை தலைவ - தேவர்கள் படைத்தலைவ,

என்றது, தேவசேனாபதி என்றதாம்,

வணங்கு வில் - வளையும் வில்லையும்,

வில்லையும் தேவராகிய தானையையுமுடைய தலைவவென்க.

261. மாலை மார்ப - இன்பத்திற்குரிய மாலையணிந்த மார்ப,

நூல் அறி புலவ - எல்லா நூல்களையும் அறியும் புலவ,

புலவன் - அறிவுடையவன்,

262. செருவில் ஒருவ - போர்த்தொழிலில் ஒருவனாகி நிற்பாய், பொரு விறல் மள்ள - பொருகின்ற வெற்றியினையுடைய மள்ள, மள்ளன் - இளமைப்பருவத்தோன்.

263. அந்தணர் வெறுக்கை - அந்தணருடைய செல்வமாயிருப்பாய்,

அறிந்தோர் சொல் மலை - சான்றோர் புகழ்ந்து சொல்லப்படும் சொற்களின் ஈட்டமாயிருப்பாய்,

264. மங்கையர் கணவ - தெய்வயானையாரும் வள்ளிநாய்ச்சியாருமாகிய மகளிர்க்குக் கணவ,

மைந்தர் ஏறே - வீரர்க்கு இடபமே.

265. வேல் கெழு தட கை சால் பெரு செல்வ - வேல்பொருந்தின பெருமையையுடைய கையானமைந்த பெரிய செல்வ.

என்றது, வேல் வெற்றியாற்பெற்ற அச்செல்வத்தை.

266 - 7. (குன்றங் கொன்ற குன்றாக் கொற்றத்து, விண்பொரு நெடுவரைக் குறிஞ்சிக் கிழவ :)

குன்றம் கொன்ற குன்றா கொற்றத்து கிழவ - குருகாற் பெயர் பெற்ற மலையைப் பிளந்த குறையாத வெற்றியையுடைய கிழவ,

விண் பொரு நெடு வரை குறிஞ்சி கிழவ - தேவருலகைத் தீண்டும் நெடியவரைகளையுடைய குறிஞ்சி நிலத்துக்கு உரிமையுடையாய்,

அதற்கு உரியனாதல், ''சேயோன் மேய மைவரை யுலகமும்'' (தொல். அகத்திணை.சூ.5) என்பதனாலுணர்க.

268. பலர் புகழ் நல் மொழி புலவர் ஏறே - பலரும் புகழ்ந்து சொல்லும் நன்றாகிய சொற்களையுடைய பரசமயத்தினுள்ளார்க்கு ஏற்றின் தன்மையை உடையவனே,

என்றது : கல்வி மதத்தையுடைய யானைபோல்வார்க்குச் சிங்கவேறு போல்வாயென்றதாம்.

269. (அரும்பெறன் மரபிற் பெரும்பெயர் முருக :) பெறல் அரு மரபின் பெரும்பெயர் முருக - பிறர்க்குப் பெறலரிய முறைமையினையுடைய பெரும்பொருளையுடைய முருக,

பெயர் - பொருள். ''பெற்ற பெரும்பெயர் பலர்கை யிரீஇய''(பதிற்.90:23) எனவும், ''சொற்பெயர் நாட்டம்'' (பதிற்.21:1) எனவும் வரும். பெரும்பொருளென்றது வீட்டினை.

270. [நசையுநர்க் கார்த்து மிசைபே ராளா:] நசையுநர்க்கு ஆர்த்தும் பேர் இசை ஆள - அவ்வீட்டைப் பெறவேண்டுமென்று நச்சிவந்தார்க்கு அதனை நுகர்விக்கும் பெரிய புகழை ஆளுதலையுடையாய், பேரிசையென்று மாறுக.

271 - 2. [அலந்தோர்க் களிக்கும் பொலம்பூட் சேஎய் - மண்டமர் கடந்தநின் வென்றா டகலத்து:]

அலந்தோர்க்கு அளிக்கும் சேஎய் - பிறரால் இடுக்கட்பட்டு வந்தோர்க்கு அருள்பண்ணும் சேய்,

மண்டு அமர் கடந்த வென்று ஆடு நின் அகலத்து பொலம்பூண்சேஎய் - மிக்குச் செல்கின்ற போர்களை முடித்த வென்றடுகின்ற நினது மார்பிடத்தே பொன்னாற்செய்த பேரணிகலங்களையணிந்த சேயென்க.

273. பரிசிலர் தாங்கும் உரு கெழு நெடு வேள் - இரந்துவந்தோரை வேண்டுவன கொடுத்துப் பாதுகாக்கும் உட்குதல் பொருந்திய நெடிய வேளே,

274. பெரியோர் ஏத்தும் பெரும்பெயர் இயவுள் - தேவரும் முனிவரும் ஏத்தும் பெரிய திருநாமத்தையுடைய தலைவனே,

இயவுள் - கடவுளுமாம்.

275 - 6. [சூர்மருங் கறுத்த மொய்ம்பின் மதவலி, போர்மிகு:] போர் மிகு மொய்ம்பின் சூர் மருங்கு அறுத்த மதவலி - போர்த்தொழிலிலே மிகுகின்ற மொய்ம்பாலே சூரபன்மாவின் குலத்தை இல்லையாக்கின மதவலியென்னும் பெயரையுடையாய்,

பொருந - உவமிக்கப்படுவாய்,

பொருவப்படுமவன், பொருநனென நின்றது.

குரிசில் - தலைவனே,

276 - 7. [எனப்பல, யானறி யளவையி னேத்தி யானாது :] என யான் அறி அளவையின் ஆனாது பல ஏத்தி - என்று யானறிந்து நினக்குக்கூறிய அளவாலே நீயும் அமையாதே பலவற்றையும் கூறிப்புகழ்ந்து,

278. நின் அளந்து அறிதல் மன் உயிர்க்கு அருமையின் - நின் தன்மை யெல்லாம் முற்ற அளவிட்டறிதல் பல்லுயிர்க்கும் அரிதாகையினாலே,

279. நின் அடி உள்ளி வந்தனென் - நின் திருவடியைப் பெற வேண்டுமென்று நினைந்துவந்தேன்;

279 - 80. நின்னொடு புரைநர் இல்லா புலமையோய் - நின்னோடு ஒப்பாரில்லாத மெய்ஞ்ஞானத்தை உடையோய்,

280 - 81. என குறித்தது மொழியா அளவையின் . என்று சொல்லி நீ கருதிய வீடுபேற்றினை விண்ணப்பஞ் செய்வதற்கு முன்னே,

முந்துநீகண்டுழி முகனமர்ந்து (251) மகனே கூற்றே (257) குழவி (259) வெறுக்கை சொன்மலையாயிருப்பாய் (263) மைந்தரேறே (264) புலவரேறே (268) சேஎய் (271) வேஎள் (273) இயவுளே (274) மதவலி (275) குரிசில் (276) புலமையோய் (280) என்று முன்னர் எதிர்முகமாக்கி ஏத்தி (251) யென அண்மைவிளியல்லாதனவற்றை முன்னர்க் கூட்டி முடிக்க. அங்ஙனம் எதிர்முகமாக்கி யேத்திப் பின்னர்ப் பரவி வணங்கிச் (252) செல்வ (255) புதல்வ (256) சிறுவ (258) தலைவ (260) மார்ப புலவ (261) ஒருவ மள்ள (262) கணவ (264) செல்வ (265) கிழவ (267) முருக (269) இசைபேராள (270) பொருந (276) என்று அண்மையாக விளித்து, மன்னுயிர்க்கருமையின் (278) யானறி யளவையினேத்தி (277) நின்னடியுள்ளி வந்தனென் (279) என்று நீ குறித்தது மொழியா வளவையினென முடிக்க.

281 - 2. [குறித்துடன், வேறுபல் லுருவிற் குறும்பல் கூளியர்:] வேறு பல் உருவில் குறு பல் கூளியர் உடன் குறித்து - வேறுவேறாகிய பல வடிவினையுடைய சிறிய பலராகிய சேவித்து நிற்பார் சேரக்கருதி,

''நின், கூர்நல் லம்பிற் கொடுவிற் கூளியர்'' (புறநா.23 : 4-5) என்றார் பிறரும்

283. சாறு அயர் களத்து வீறுபெற தோன்றி - விழாவெடுத்த களத்தே தாங்கள் பொலிவுபெறத் தோன்றி,

284. [அளியன்றானே முதுவாயிரவலன்:] முதுவாய் இரவலன் தான் அளியன் - அறிவு முதிர்ந்த வாய்மையையுடைய புலவன்றான் அளிக்கத்தக்கான்.

285 - 6. (வந்தோன் பெரும நின் வண்புகழ் நயந்தென, இனியவு நல்லவு நனிபல வேத்தி:) பெரும நின் வள் புகழ் நயந்து இனியவும் நல்லவும் நனி பல ஏத்தி வந்தோன் என - பெரும, நினது வளவிய புகழினைக்கூற விரும்பிக் கேட்டோர்க்கு இனியனவும் உறுதிபயப்பனவுமாக மிக்க பலவற்றை வாழ்த்தி வந்தோனென்று கூற,

கூளியர் (282) குறித்துத் (281) தோன்றி (283) அளியன் (284) பெரும நின் வண்புகழைக் கூறநயந்து (285) இனியவும் நல்லவுமாக ஏத்தி (286) வந்தோன் (285) என்று கூறவென முடிக்க.

287. தெய்வம் சான்ற திறல் விளங்கு உருவின் - தெய்வத்தன்மையமைந்த வலிவிளங்கும் வடிவினையும்,

288. வான் தோய் நிவப்பின் தான் வந்து எய்தி - வானைத்தீண்டும் வளச்சியினையுமுடைய தான் அவையை வந்தணுகி,

289. அணங்குசால் உயர்நிலை தழீஇ - வருத்தமமைந்த தெய்வத் தன்மையை உள்ளடக்கிக் கொண்டு,

289 - 90. [பண்டைத்தன், மணங்கமழ் தெய்வத் திளநலங் காட்டி:] மணம் கமழ் தெய்வத்து பண்டை தன் இளநலம் காட்டி - மணம் நாறுகின்ற தெய்வத்தன்மையையுடைய முன்புண்டாகிய தன் இளைய வடிவைக் காட்டி,

291. [அஞ்ச லோம்புமதி யறிவனின் வரவென:] நின் வரவு அறிவல்அஞ்சல் ஓம்புமதி என - நீ வீடுபெற நினைத்துவந்த வரவையான் முன்னே யறிவேன்; அது நினக்கு எய்தலரிதென்று அஞ்சுதலைப் பரிகிரியென்று.

292. அன்புடை நன்மொழி அளைஇ - நின்மேல் அன்புடையவாகிய நல்ல வார்த்தைகளைப் பலகாலும் அருளிச் செய்து,

292 - 4. [விளிவின்று, இருணிற முந்நீர் வளைஇய வுலகத், தொருநீயாகித் தோன்ற:] இருள் நிற முந்நீர் வளைஇய உலகத்து ஒரு நீ ஆகிவிளிவு இன்று தோன்ற- இருண்ட நிறத்தையுடைய கடல் சூழ்ந்த உலகத்திடத்தே நீ ஒருவனுமே பிறர்க்கு வீடளித்தற்கு உரிமையாய்க் கேடின்றித் தோன்றும்படி,

294 - 5. விழுமிய பெறல் அரு பரிசில் நல்குமதி - சீரிய பிறராற் பெறுதற்கரிய வீடுபேற்றினைத் தருவன்;

''இகுமுஞ் சின்னு மேனை யிடத்தொடுந், தகுநிலை யுடைய வென்மனார் புலவர்'' (தொல். இடை சூ.27) என்றதனானாதல், ''அவ்வச் சொல்லிற்கு'' (தொல். இடை.சூ47) என்னும் புறனடையதனானாதல் மதி படர்க்கைக்கண் வருதல் கொள்க.

இனி மதிபலவுடனெனக் கூட்டி, அறிவுகள் பலவுடனே பரிசில் நல்குமென்று கூறுவாருமுளர்.

295 - 6. [பலவுடன், வேறுபஃறுகிலி னுடங்கி:] வேறு பல் துகிலின் பல உடன் நுடங்கி - வேறுபட்ட பலவாகிய துகிற்கொடிகளைப் போலத் தாம் பலவும் கூடவசைந்து,

295 - 7. அகில் சுமந்து ஆரம் முழு முதல் உருட்டி - அகிலை மேற்கொண்டு சந்தனமாகிய பெரிய மரத்தைத் தள்ளி.

297 - 8. வேரல் பூ உடை அலங்கு சினை புலம்ப வேர் கீண்டு - சிறுமூங்கிலினது பூவுடைத்தான அசைகின்ற கொம்பு தனிப்ப வேரைப் பிளந்து,

299 - 300. விண் பொரு நெடு வரை பரிதியின் தொடுத்த தண் கமழ் அலர் இறால் சிதைய - தேவருலகத்தைத் தீண்டுகின்ற நெடிய மலையிடத்தே ஞாயிற்றின் மண்டிலத்தைப்போல ஈ வைக்கப்பட்ட தண்ணியவாய் மணக்கின்ற விரிந்த

தேன்கூடு கெட,

300 - 301. நல் பல ஆசினி முது சுளை கலாவ - நன்றாகிய பல ஆசினிகளினுடைய முற்றிய சுளை தன்னிடத்தே கலக்க,

301 - 2. மீ மிசை நாகம் நறு மலர் உதிர - மலையினுச்சியிலுண்டான சுரபுன்னையின் நறிய மலர்கள் உதிர,

302 - 3. யூகமொடு மா முகம் முசு கலை பனிப்ப - கருங்குரங்கோடே கரிய முகத்தையுடைய முசுக்கலைகளும் நடுங்க,

''கலையென் காட்சி யுழைக்கு முரித்தே'', ''நிலையிற் றப்பெயர் முசுவின் கண்ணும்''(தொல். மரபு.(சூ.45,46) என்றார்.

303 - 4. பூ நுதல் இரு பிடி குளிர்ப்ப வீசி - புகரையணிந்த மத்தகத்தையுடைய பெரிய பிடி குளிரும்படி வீசி,

304 - 5. பெரு களிறு முத்து உடை வான் கோடு தழீஇ - பெரிய யானையினுடைய முத்தையுடையவாகிய வெள்ளிய கொம்புககளை உள்ளடக்கி,

305 - 6. [தத்துற்று, நன்பொன் மணிநிறங் கிளர:] நல் பொன் மணிநிறம் கிளர தத்துற்று - நல்ல பொன்னும் மணியும் நிறம் விளங்கும்படி மேலே கொண்டு குதித்து,

தத்துற்று - தத்துதலையுற்று.

பொன் கொழியா - பொடியான பொன்னைத் தெள்ளி,

307 - 8. வாழை முழு முதல் துமிய தாழை இளநீர் விழு குலை உதிர தாக்கி - வாழையினது பெரிய முதல் துணியத் தெங்கினது இளநீரையுடைய சீரிய குலை உதிர அவ்விரண்டினையும் மோதி,

309. கறி கொடி கரு துணர் சாய - மிளகினது கொடியின் கரிய கொத்துக்கள் சாய,

309 - 11. [பொறிப்புற, மடநடை மஞ்ஞை பலவுடன் வெரீஇக் கோழி வயப்பெடை யிரிய:] பொறி புற மட நடை மஞ்ஞை கோழிவய பெடை வெரீஇ பலவுடன் இரிய - பீலியையுடைத்தாகிய இடத்தினையும் மடப்பத்தை யுடைத்தாகிய ஒழுக்கத்தினையுமுடைய மயில்களோடே கோழியினுடைய வலியையுடைய பெடை வெருவிப் பலவும் சேரக்கெட,

311 - 4. [கேழலொ, டிருப்பனை வெளிற்றின் புன்சா யன்ன, குரூஉ மயிர் யாக்கைக் குடாவடி யுளியம், பெருங்கல் விடரளைச் செறிய:] கேழலொடு வெளிற்றின் இருபனை புல் சாய் அன்ன குரூஉ மயிர்யாக்கை குடாவடி உளியம், பெருங்கல் விடர் அளை செறிய - ஆண் பன்றியுடனே உள்ளே வெளிற்றினையுடைத்தாகிய கரிய பனையினது புல்லிய செறும்பையொத்த காரிய நிறத்தையுடைத்தாகிய மயிரினையுடைய உடம்பினையும், வளைந்த அடியினையுமுடைய கரடி பெரிய கல்விண்ட முழைஞ்சிலே சேர,

314 - 5. கரு கோடு ஆமா நல் ஏறு சிலைப்ப - கரிய கொம்பினையுடைய ஆமாவினுடைய நன்றாகிய ஏறுகள் முழங்க,

315 - 6. சேண் நின்று இழுமென இழிதரும் அருவி - மலையின் உச்சியினின்றும் இழுமென்னும் ஓசைபடக் குதிக்கும் அருவியையுடைய,

317. பழம் முதிர் சோலை மலை கிழவோனே - பழம் முற்றின சோலைகளையுடைய மலைக்கு உரிமையை யுடையோனே.

நுடங்கிச்சுமந்து (296) உருட்டிக் (297) கீண்டு (298) சிதையக் (300) கலாவ (301) உதிரப் (302) பனிப்ப (303) வீசித் (304) தழீஇத் தத்துற்றுக் (305) கொழியாத் (306) துமிய (307) உதிரத்தாக்கிச் (308) சாய (309) இரியச் (311) செறியச் (314) சிலைப்ப (315) இழிதரும் அருவி (316) யென முடிக்க.

கிழவோனென்ற பெயர், உடம்படுபுணர்த்தலாற் கொள்க.

கணவன் (6) மார்பினன் (11) சென்னியனாகிய (44) சேயுடைய (61) சேவடி படரும் உள்ளத்தோடே (62) செல்லுஞ்செலவை நீ நயந்தனையாயின் (64) நன்னர் நெஞ்சத்து இன்னசைவாய்ப்ப (65) இன்னே பெறுதி (66); அது பெறுதற்கு அவன் யாண்டுறையுமென்னிற் குன்றமர்ந்துறைதலுமுரியன்; அதுவன்றி (77) அலைவாய்ச்சேறலும் நிலைஇய பண்பு; அதுவன்றி (125) ஆவினன்குடி அசைதலுமுரியன்; அதுவன்றி (176) ஏரகத்துறைதலுமுரியன்; அதுவன்றிக் (189) குன்றுதொறாடலும் நிறதன் பண்பு; அதுவன்றி (217) விழவின்கண்ணும் (220) நிலையின்கண்ணும் (221) கந்துடை நிலையின் கண்ணும் (226) உறைதலு முரியன் (189) ; களனும் (222) காடும் (223) முதலியன ஆண்டாண்டுறைதலும் (249) உரியன் (189); நகரிலே (244) பாடி (245) வைத்து இயக்கி (246) வாழ்த்தி (247) வழிபட (248) உறைதலுமுரியன் (189); இஃது யானறிந்தபடியே கூறினேன் (249) ; இனி ஆண்டாண்டாயினுமாக, பிறவிடங்கிலே யாயினுமாக (250), முந்துநீகண்டுழிமுகனமர்ந்து முன்னர் எதிர்முகமாக்கி ஏத்திப் (251) பரவி வணங்கிப் (252) பின்னர் அண்மையாக விளித்து யானறியளவையினேத்தி (277) நின்னடி யுள்ளி வந்தேனென்று (279) நீ குறித்தது மொழிவதற்குமுன்னே (281) கூளியர் (282) குறித்துத் (283) தோன்றிப் (288) பெரும (285) இரவலன் நீ அளிக்கத்தக்கான் (284) வந்தோனென்று கூற (285) மலைகிழவோனாகிய (317) குரிசிலும் (276) தான்வந்தெய்தித் (283) தழீஇக் (289) காட்டி (290) அஞ்சலோம்புமதியென்று (291) அன்புடை நன்மொழியளைஇ (292) ஒரு நீயாகித் தோன்றும்படி (294) பெறலரும்பரிசில் நல்குவ (295) னென வீடுபெறக் கருதிய இரவலனை நோக்கி வீடுபெற்றானொருவன் ஆற்றுப்படுத்ததாக வினைமுடிக்க.

இது புறத்திணையியலுள், ''தாவினல்லிசை'' (தொல். புறத் சூ.36) என்னுஞ் சூத்திரத்துள், ''ஆற்றிடைக் காட்சி யுறழத் தோன்றிப், பெற்ற பெருவளம் பெறாஅர்க் கறிவுறீஇச், சென்றுபய னெதிரச் சொன்ன பக்கமும்'' என்பதனால் கந்தழியைப் பெற்றானொருவன் அதனைப்பெறாதானொருவனுக்குப் பெறுமாறு கூறி அவனை வழிப்படுத்துக் கூறுவானென்பது பற்றிச் செய்யுள் செய்தாராயிற்று.

கந்தழியாவது ஒருபற்றுமற்று அருவாய்த் தானே நிற்கும் தத்துவங் கடந்த பொருள்; அது, ''சார்பினாற்றோன்றாது தானருவாய்....மைதீர் சுடர்'' எனபதாம்; இதனை, ''உற்ற வாக்கையி னுறுபொரு ணறுமலரெழுதரு நாற்றம்போற், பற்ற

லாவதோர் நிலையிலாப் பரம்பொருள்'' (திருவா. அதிசயப்பத்து,9) என அதனை உணர்ந்தோர் கூறியவாற்றானுணர்க.

முருகாற்றுப்படையென்றதற்கு வீடுபெறுதற்குச் சமைந்தானோர் இரவலனை வீடுபெற்றானொருவன் முருகனிடத்தே ஆற்றுப்படுத்த தென்று பொருள் கூறுக.

*குமரவேளை மதுரைக் கணக்காயனார்மகனார் நக்கீரனார் பாடிய திருமுருகாற்றுப்படைக்கு மதுரை ஆசிரியர் பாரத்துவாசி நச்சினார்க்கினியர் செய்தவுரை முற்றிற்று.*

.....



## நச்சினார்க்கினியர் உரைச் சிறப்பு

திருமுருகாற்றுப்படைக்கு உரைகண்ட பண்டையுரையாசிரியர் கவிப்பெருமாள், பரிமேலழகர், நச்சினார்க்கினியர், பரிதியார், பெயர் குறிப்பிடப்பெறாத ஒருவர் என ஐவர் என்பர். நச்சினார்க்கினியர் உரை நீங்கலாக ஏனைய நால்வர் உரைக்கண்ணும் தமிழ்நடை சிறப்பாக அமையவில்லை. புறநானூற்று உரையாசிரியரும் பதிற்றுப்பத்து உரைகாரரும் அடியார்க்கு நல்லாரும் சாமுண்டிதேவரும் தக்கயாகப்பரணி உரையாளர் போன்றாரது உரைத்திட்பம் இவற்றுள் காணப்பட்டிலது. பரிமேலழகர் திருக்குறள் பரிபாடல்கட்கு உரைவரைந்த மாண்பு திருமுருகாற்றுப்படைக்கண் தோன்றிலது. நச்சினார்க்கினியர் உரையே பெரும்பாலும் இந்நால்வர் உரையிலும் நிகழ்கின்றது. புதுமையாக இன்னோர் கண்ட உரையிடங்கள் யாவும் வியத்தக்க கருத்துக்களைத் தழுவியுள்ளன என்னுமாறு சிறிதும் அமைந்தில. 'உலகங் காக்கும்' (அடியெண்:161) என்பதை 'உலகு அங்கு ஆக்கும்' என்று பிரித்துப் பொருள் கண்டார் உரையாசிரியர் ஒருவர். அப்பொருளின்கண் விசேட நயம் எதுவும் இன்று. சொற்பொருள் உரைத்தற்கண்ணும் நுண்மாண் நுழைபுலம் தோன்ற எப்பகுதியும் புலப்பட்டிலது. 'வெள்ளில் குறுமுறிகிள்ளுபு தெறியா' (37) என்னுமடிக்குப் பரிமேலழகர், விளவினது சிறிய தளிரை நறுக்கிப் பிள்ளையார் பாதங்களை உள்ளித் தெறித்து' என்று உரைகூறுகிறார். 'அத்தளிரை ஒருவர் ஒருவர்மேல் தெறித்துத் தப்பாமல் பட்டபோது கோழி ஓங்கிய கொடி வாழிய என்று ஏத்தி' என நச்சினார்க்கினியர் அடுத்த அடியோடு தொடர்புறுத்திப் பொருள் கூறும் நயம் விழுமிதாகவே தோன்றுகிறது.

பிறர் உரைகளிற் காணப்படாத நயங்கள் தோன்ற நச்சினார்க்கினியர் மாட்டுறுப்பு நிகழவும் நிகழாமலும் உரை கூறும் பகுதிகளை இனிக் காணப்புகுவோம். நூற்பக்கங்களில் அவை விரிவாக இடம் பெறுதலின் ஈண்டு அவை சொற்சுருக்கமுறவே விளக்கப்படுவன.

முருகாற்றுப்படை என்னும் தனிநிலைச் செய்யுட்கு இலக்கணம் தொல்காப்பியத்துள் இடம் பெறவில்லை. 'தாவில் நல்லிசை' எனத் தொடங்கும் புறத்திணையியல் இறுதிச் சூத்திரத்துள் 'கூத்தரும் பாணரும்' எனத் தொடங்கும் நான்கடிகளிலும் கூத்தராற்றுப்படை பாணாற்றுப்படை பொருநராற்றுப்படை விறலியாற்றுப்படை என்னும் நான்கற்கும் இலக்கணம் கூறப்பட்டுள்ளது. 'ஆற்றுப்படை' என்னும் தொடர்தானும் சூத்திரத்துள் சொல்லப்பட்டிலது. இளம்பூரண அடிகள் கூத்தராற்றுப்படை முதலான நான்கனையும் தம்முரையுள்

சுட்டுகிறார். சொல்.456 ஆம் சூத்திரத்து இச்சொல் நிகழ்கிறது. நச்சினார்க்கினியரே 'ஆற்றிடைக் காட்சி உறழத் தோன்றி' முதலான மூன்றடிகட்கும் தமது நுண்ணறிவால் முருகாற்றுப்படைக்கு இலக்கணம் அமையுமாறு உரை காணுகின்றார். பத்துப்பாட்டுள் முதலாவதாகக் கோக்கப்பட்டுள்ள இத் தெய்வீகப் பனுவற்கு இலக்கணம் தொல்காப்பியத்துள்ளும் இடம் பெற்றுள்ளதாகக் காட்டவேண்டும் என்ற அவரது வேணவாவின் விளைவு இது. பிற ஆற்றுப்படையுள் இரவலன் ஆற்றுப்படுக்கப்படும் புரவலன் பொருட் செல்வனாகவே வள்ளலாகவோ மன்னாகவோ இருத்தல் காண்கிறோம். ஆயின் ஈண்டு இப் புரவலன் அருட்செல்வனாம் முருகப் பெருமான். அப்புரவலனிடம் பெறும் பரிசில் நிலையற்ற பொய்ப்பொருளாம் பொருட்செல்வமாயிருப்ப, இப்புரவலனிடம் பெறும் பரிசில் கந்தழியாகிய மெய்ப்பொருளாம் முத்திச்செல்வம். 'இல்லறத்தை விட்டுத் துறவறநெறியில் நிற்றல் நன்று எனவும், இல்வாழ்வில் கண்ட காட்சி தீது எனவும் மாறுபடத் தோன்றுதலால், தான் முருகனை வழிபட்டு அவன்பால் கந்தழியாகிய பெருஞ்செல்வத்தைப் பெற்றவன், யாண்டும் திரிந்து அதுபெறாதார்க்கு அறிவுறுத்து, அவர்களும் அவனை வழிபட்டு அக்கந்தழிச் செல்வத்தைப் பெற்று உய்யுமாறு தான் சென்ற நெறியில் ஆற்றுப்படுத்துதல்' என்று அவ்வடிகளுக்கு நச்சினார்க்கினியர் பொருள் கூறினார். கந்தழியாவது, தான் எல்லாப் பொருட்கும் சார்பாய்த் தனக்கு ஒரு சார்பின்றி நிற்கும் தத்துவம் கடந்த பொருள். 'மெய்யுணர்தல்' அதிகாரத்தே 'மெய்ப்பொருள்' என்றும், 'உள்ளது' என்றும், 'செம்பொருள்' என்றும் தெய்வப்புலவரால் சொல்லப் பெற்ற 'பிரம்மம்' என்பதே அக்கந்தழி என்பது என்று நச்சினார்க்கினியர் விளக்கம் காண்கிறார். சைவமும் வைணவமுமாகச் சமயம் பரிணாமமமற்ற சங்ககாலத்தே, வேதாந்தமாகிய வைதிகமதமே நிலவிவந்தமையின், பரம்பொருளிடம் பரிசிலாகப் பெறும் செல்வம் 'மற்று ஈண்டு வாரா நெறி' யாகிய பிறவாப் பெருநிலையாம் கந்தழிச் செல்வமே என்பது ஆன்றோர் முடிவு.

*அடிகள் : 1 - 3*

ஞாயிறு உலகத்திருளை மாய்க்குமாறு போல, முருகன் தன்னை மனத்தால் தியானிப்பவர்க்கு அவரது மாயையை மாய்க்கிறான். பசுங்கடல் மீது செஞ்ஞாயிற்றின் தோற்றம் போல, பசியமயில் மீது செவ்வண்ணத்தனாய் அவன் தோன்றுகிறான் எனத் தொழிலுவமமும் வண்ணவுவமமும் கொள்ளுமாறு உரை காண்கிறார் நச்சினார்க்கினியர்.

*அடி : 3*

**ஓஅற** - தங்குதல் இல்லையாக. ஞானேந்தரியங்களும், கருமேந்திரியங்களும் தாம் செல்லுதற்குரிய பொருள்கள்மேல் சென்று தங்குதல் இல்லாதவாறு முருகன் பேரொளி விளங்குகிறது. அம்மேனியொளியைக் காணும் பேறுற்றதால், அவ்விந்திரியங்கள் தம் புறச்செயல் ஒழிகின்றன என்பது கருத்து. சுந்தரர்

தில்லைப்பெருமானைத் தரிசனம் செய்யுங்காலை, 'ஐந்துபேர் அறிவும் கண்களே கொள்ள' எனச் சேக்கிழார் அருளும் பாடலின் அனுபவநிலை இது.

அடி : 4

**மதனுடை நோன்தாள்** - அடியார்களது அறியாமையை உடைத்தற்குக் காரணமான வலியுடைய பாதங்கள். முருகன் பாதங்கள் தம்மைச் சாரும் அடியார்களது பிறவியாகிய (அவிச்சையால் விளையும்) பிணியினைப் போக்கும் மெய்ஞ்ஞானத்தை நல்கும் திறலுடையன.

அடி : 12. வரைகளையுடைமையின் மூங்கில் வரை எனப்பட்டது. ஆகுபெயர்.

14 இடையின் நுடக்கத்தால் அதன் வளைவு தோன்றிற்று.

15. இறைவனது ஆணையால் தானே சிவந்திருத்தலின், நிறம்பிடியாத துகில்என்றார் ஆசிரியர்.

17. தெய்வத்தன்மையான் இயல்பாகப் பெற்ற அழகு 'கைபுனைந்து இயற்றாக் கவின்பெறு வனப்பு' எனப்பட்டது.

43. முருகன் விரும்புதலின் சுரும்பினமும் மொய்க்காத சுடர்ப்பூங்காந்தள் எனப்பட்டது அம்மலர்.

62 - 63

மாட்டுறுப்பு நிகழ, சொற்கள் கொண்டு கூட்டாக இயைதலின் ஆழ்ந்த பொருள் இவ்வடிகட்கு உரைக்கப்படுகின்றது.

அசங்குசிதத் தியானத்தால், இறைவனுடைய திருவடி, உபாசகனால் அபேதமாகத் தியானிக்கப்படுகிறது. அத்திருவடியே பிரமமாம் முத்திநிலை. அவ்வாறு வழிபடுதற்குக் காரணமாக நல்வினைகளை இவன் பலபிறப்புக்களிலும் விரும்பிச் செய்துள்ளான். அதனால் நிகழ் பிறப்பில் இவன் உள்ளம் தலைமையுடைத்தாய் விளங்குகிறது. ''முருகன்பால் கந்தழிச் செல்வம் பெறுதற்குச் சமைந்த தக்கோனாகிய இரவல ! நீ முற்பிறப்புகளில் செய்துள்ள நல்வினைகளால், முத்திப்பேற்றுக்கு வேண்டும் சாதனம் பலவும் உன்னிடத்தே சேர்ந்துள. உனது நல்ல நெஞ்சத்தில் எழும் வேட்கையாகிய இனிய வீடுபேற்றைத் தவறாமல் இப்பொழுதே பெறுவாய்.''

'புலம்பிரிந்து உறையும் சேவடி படரும் நலம்புரி கொள்கைச் செம்மல் உள்ளமொடு செலவு நீ நயந்தனையாயின், நீ முன்னிய வினைபலவுடன் நன்னர் நெஞ்சத்து இன்நசை வாய்ப்ப இன்னே பெறுதி' எனச் சொற்களைக் கொண்டு கூட்டி இவ்வரும் பொருளைக் காண்கிறார். இஃது ஒருசாரார் கூறுமாறு சொற்களை அலைத்து உரைப்பதன்று; சிறந்த கருத்து இயன்று முடிய அணுகிய நிலையில் சொற்களைக் கொண்டு கூட்டும் இலக்கண நெறி. பின்வருவனவும் அது.

அடி : 70. **வீற்றிருத்தல்** - வருத்தமின்றி இருத்தல்.

அடி : 89

**தாஇல் கொள்கைத் தம் தொழில்** - வருத்தமில்லாத விரதங்களையுடைய தவத்தொழில. இத்தகு தவத் தொழிலைக் குறைவற முடிப்பார்தம் மனத்தில் பொருந்தித் தோன்றுகின்ற முருகனுடைய ஆறுமுகமும்.

அடி : 96

**அந்தணர்** - அந்தத்தை அணவுவார், வேதாந்தத்தையே நோக்குவார்.

அடி : 99

**செல்சமம் முருக்கி** - தன் திருவுள்ளத்துச் செல்கின்ற நடுவுநிலைமையைக் கெடுத்து. தேவரையும் அசுரரையும் பரம்பொருளாகிய இறைவன் ஒப்பக் கருதாமல் தேவரைக் காக்கவும் அசுரரை அழிக்கவும் திருவுள்ளம் பற்றுதலின், தன் நடுவுநிலைப் பண்பினைக் கெடுக்க வேண்டிற்று. சமம் என்பதற்கு நடுவுநிலை எனப் பொருள் கண்ட நயம் நயத்தக்கது.

அடி : 101, 102

வள்ளி **'குறவர் மடமகள்'** என்று குறிக்கப்படுதலின், பின்வரும் 'மடவரல்' என்னும் சொல்லை 'நகை' என்பதனொடு கூட்டி, உரை செய்கிறார். வள்ளியொடு மடவரல் நகை பொருந்திற்று ஒரு முகம். நகை - மகிழ்ச்சி. தனக்கு ஓர்அறியாமையை உலகம் ஏற்றிக் கூறுதற்குக் காரணமாகிய நகை என்க. காமநுகர்ச்சி இல்லாத இறைவன் இங்ஙனம் நகையமர்ந்தான், உலகில் இல்வாழ்க்கை நடத்தற்பொருட்டாக; அது **'தென்பால் உகந்தாடும்'** என்னும் திருவாசகத்தான் உணர்க என்று உரை கூறும் பகுதி எத்துணை நயமிக்கது!

அடி : 105, 6

மார்பில் கிடந்த உத்தம இலக்கணமாகிய மூன்று வரியினையும் தம்மிடத்தே வாங்கிய தோள் என்றார், அவ்வரிகள் தோள் அளவும் வந்து கிடந்தன ஆதலின்.

அத்தோள்கள் வலிமைமிக்கன; புகழால் நிறைந்தன; படைக்கலன்களை மாற்றார் மீது வீசி அவர்மார்பினை இடக்கவல்லன; விடுத்த அப்படைகளை மீண்டும் வாங்க வல்லன. 'வாங்குதோள்' என்பதற்கு இப்பொருள் நயம் நுண்ணியது ஒன்று, தெய்வப்படைக்கலனது மாட்சியைப் புலப்படுத்துதலின்.

*அடி : 107 முதலியன*

தெய்வ இருடியரது கருணையுள்ளத்தைக் காட்டுவன, மேற்கோளாகிய புறநானூற்றடிகள். அன்னோர்க்குப் பாதுகாவலாக முருகனது ஒருகரம் எடுத்தது என்ற உரைநயமும், தன்னை வழிபடும் அடியாரிடத்து வருங்கால் முருகன் யானையிவர்ந்து வருதல் இயல்பு எனவும், காதலின் உவந்து வரம் கொடுக்கும் முகத்திற்கு ஏற்ப ஒருகரம் அங்குசத்தைச் செலுத்த அதன் இணைத்த கரம் தொடைமேலே கிடந்தது எனவும் கூறும் உரைநயமும், எஞ்சிய பொருள்களை ஏமுற நாடி விளங்கும் முகத்திற்கு ஏற்ப, இறைவனது மோனமுத்திரை மார்போடு விளங்கும் கரத்தினையும் அதன் இணைத்த கரம் மார்பில் தாழும் மாலையோடு சேர்ந்து அழகுபெறும் காட்சியையும் சுட்டி விளக்கவுரை காட்டும் நயமும், பெரிதும் வியத்தக்கன. முருகப்பெருமானுடைய பன்னிரு கைகளும் ஆறுமுகங்களின் பகுதியொடு பொருந்துமாறு தொழில் ஆற்றுதல், பிறவுரைகளினும் சிறப்புறத் தெளிவுற இவருரையால் உணர்ந்து மகிழ்கிறோம்.

*அடி : 114 - 115*

''ஒருகை கீழ் வீழ்தொடியொடு ... இரட்ட'' என்ற பகுதிக்கு
'ஒருகை தொடியொடு மீமிசைக் கொட்ப கீழ்வீழ் ஒருகை பாடு
இன்படுமணி இரட்ட' எனக் கூட்டி உரை வகுத்திருப்பது,
சிறந்த பொருட் புலப்பாடு கருதியே என்க.

*அடி : 126 - 127*

அழகோடு வடிவாலும் நிறத்தாலும் வலம்புரிச் சங்கினை ஒக்கும் வெள்ளிய நரைமுடி எனச் சிறப்பாகப் பொருள் காண்கிறார்.

*அடி : 130*

நன்பகல் - எப்பொருளும் நுகர்தற்கு நன்றாகிய பகற்பொழுதுகள் .

*அடி : 132*

பகைமை நெடுங்காலம் நிற்பது செற்றம்.

*அடி : 135*

கோபத்தின் பின்னாகக் சிறிதுபொழுது நிற்பது சினம்.

*அடி : 135 - 136*

தவத்தான் மெய்வருத்தம் உளவேனும் மனத்தான் வருத்தம் சிறிதும் அறியப்படாத இயல்பினர். இடும்பை - மனவருத்தம்.

அடி : 138

மாசுஇல் தூ உடை - தெய்வத்தன்மையால் அழுக்கேறாத தூய உடை. அழுக்கேறாமைக்குக் காரணம் கூறினார்.

அடி : 140, 141

எஃகு செவியாலே சுருதியை அளந்து நரம்பைக் கட்டின சுற்றுதலுறும் வார்க்கட்டினையுடைய நன்றாகிய யாழிசையிலே பயின்ற, ஈரமுடைய நெஞ்சாலே எக்காலத்தும் மெல்லிய வார்த்தை சொல்லுதலைப் பொருந்திய கந்தருவர்...

சுருதியை அளந்து நரம்பினைக் கட்டினாலன்றி நல்யாழ் நவிலாமையும், அன்புடைய மனங்கொண்டாலன்றி மென்மொழி பேசலாகாமையும் உரைத்திறனால் புலப்படுதல் காண்மின்.

அடி : 148

பாம்பினுடைய விடங்காலும் எயிற்றின் நால்வகையைக் குறிக்கின்றார்.

அடி : 154

அழித்தல் தொழிலாற்றும் இறைவனுடைய ஏவலனை உருத்திரன் என்று உரை கூறினார். இறைவனுக்குரிய அடைமொழிகள் சிவாமிசம் கருதிப் புணர்க்கப்பட்டன.

அடி : 161

'உலகம் காக்கும் ஒன்றுபுரி கொள்கை' என்னும் அடியைக் காத்தற் கடவுளாம் திருமாலுக்கு உரித்தாகக் கொண்டு கூட்டியவாறு.

அடி : 163

பிள்ளையார் சபித்தலாலே நிலவுலகில் தோன்றி மயக்கமுறுகின்ற நான்முகனைப் பழைய நிலையில் நிறுத்தவேண்டி - என ஏமுறுதலைப் பிரமனுக்குக் கொண்டு கூட்டினார், சாபம் பெற்றமை கருதி.

அடி : 164

படைத்தல் தொழில் அநாதியானமை சுட்ட, 'தாமரை என்னும் எண்ணின் மிகுதியை ஊழியொடு கூட்டி உரைத்தலும் ஆம்' என்றார். ஈண்டு, 'பயத்தல்' காட்டுதல் என்னும் பொருட்டு.

அடி : 167

பதினொருவராகிய மூவர் என்றது, 'பதினொரு மூவர்' என்னும் இருபெயரொட்டுப்பண்புத்தொகையை விரித்தெழுதியவாறு. நிலைமொழியையும்

உயர்திணைப் பொருட்டாக விரித்துக் காட்டினார். ஆதித்தர் முதலிய நால்வரும் பகுத்துக் காண்டற்கண் தம்முள் பன்னிருவர் முதலாகப் பலராக வேறுபடத் தோன்றுதலைப் 'பகலில் தோன்றும் இகலில் காட்சி'. அடி : 166 என்ற அடியது விளக்கத்தால் புலப்படுத்தினார்.

அடி : 168

பதினெண்கணங்களாவாரைப் பெயர்சுட்டினார். 'செய்யியர்' போல நிற்கும் சொல்லைத் தொழிற்பெயர் (வினையாலணையும் பெயர்) என இடம் நோக்கி விளக்கினார். முன்னர் 'முடிமார்' (89) என்பதனையும் தொழிற்பெயராகவே கொள்ளல்வேண்டும்.

பிற்கால நூலார் முற்றெச்சம் என்றதனை, 'வினையெச்சமுற்று' என்று சுட்டுதலே இவ்வுரையாசிரியர் மரபு.

முனிவரும் கந்தருவரும் முற்படச் செல்லுதற்கு நயமான காரணம் உரையிற் சுட்டுகிறார். ஆவினன்குடி தம் காலத்தில் சித்தன்வாழ்வு என்னும் பெயரொடு விளங்குவதை, பிற்காலத்து ஔவையார் பாடலொன்றைக் காட்டிக் குறிப்பிடுகிறார். 'சோமன்' என்னும் சொல்லாட்சி பிற்காலத்தது என்க.

அடி : 177

வழுவு என்பது முதனிலை என்பது தோன்ற இலக்கணம் குறித்தார்.

அடி : 179

இளமையைக் காக்கும் நெறியைப் பிரமசரியம் என வேதம் கூறியதாக உரை கூறினார்.

முச்சதுரம் - முக்கோணம். முத்தீ எழும் குண்டத்திற்கு மூவகை வடிவுகளைச் சுட்டினார்.

கொண்டுகூட்டி உரைத்தல் நயத்தால், 'இரு பிறப்பாளர்' உரிய அடைமொழிகளொடு புலப்பட்டவாறு காண்க. 'நறுமலர் ஏந்திக் கூப்பிய கையராய் நவிலப் பாடும் பொழுதறிந்து நுவல' என்று, இரு பிறப்பாளர்செயலை முறையே கொண்டுகூட்டிய நயம் மகிழ்மின்! மந்திரம் மறைய உச்சரிக்கப்படுதலும், ஒலிவடிவம் குன்றாது பலப்பட உச்சிரிக்கப்படுதலும் உடையது என்பது உரைநயத்துள் பொதிந்துள்ளது.

அடி :195

**தேக்கள்** - தேனாற் செய்த கள்

அடி : 198

**விரல் உளர்ப்பு** - விரலினது அலைப்பு; விரல்களால் மொக்குள் களை இதழ் விரியச் செய்தல்.

*அடி : 204*

எழுவாய்த் தொடர்போல இயல்பாக நிற்பதனை, ஏழன்தொகைப் பொருளதாக்க இலக்கணம் கூறினார்.

*அடி : 206*

**செய்யன்** : குணப்பண்பு; சிவந்த ஆடையன்: தொழிற்பண்பு.

முருகனைச் சேவிக்கும் மகளிரும், சேவித்துப்பாடும் மகளிரும், மெய்தீண்டி விளையாடுதற்குரிய (பேதைப்பருவத்து) மகளிரும் என முத்திறத்தினர் உரை நயத்தால் தோன்றுகின்றனர்.

*அடி :213, 214*

மருங்கிற்கட்டிய துகில், குறும்பொறிக் கொண்ட துகில், நிலன்நேர்பு சாயலுடைத்தாகிய துகில் - எனத் துகிற்கு அடைமொழியாக உரைக்கப் பட்டமை காண்க.

ஆடையன், காதினன், கச்சினன் முதலிய வினையெச்ச வினைக்குறிப்பு முற்றுக்களைச் செய்து என்னும் வாய்பாடு தோன்ற உரை கூறிய நயத்திற்கு 'முன்னத்தின் உணரும் கிளவியும் உளவே, இன்ன என்னும் சொன்முறையான' (சொல்.459) என்னும் எச்சவியற் சூத்திரத்துக்குத் தாம் வரைந்த உரையால் விளக்கம் கூறுகிறார்.

ஆட்டுக்கிடாய் முன்செல்ல, முருகன் தான் மயிலிவர்ந்து தொடர்வதைத் 'தகரன் மஞ்ஞையன்' (210) என்னும் வினையெச்சக் குறிப்பு முற்றுக்கள் செய்தென் எச்சமாக உரைசொல்லப்படுவதன் வாயிலாகவன்றி எவ்வாறு உணரவல்லேம் ?

*அடி :221*

ஆர்வலர் ஏத்துதலாலே முருகனது மனம் பொருந்துதல் வருகின்ற இடத்திலும் - முருகன்மனம் ஈடுபடுதற்கு அடியாரது பத்திநிலை காரணமாதலை உரை சுட்டும் நயம் நோக்கி மகிழ்மின் !

*அடி : 225, 226*

சதுக்கம், சந்தி, மன்றம் - உரைப்பொருள் உணரத்தக்கன.

*அடி : 227*

அமைவரப் பண்ணுதல் கொடிக்கண் இன்மையின், கொடியொடு என்புழி 'ஒடு' வேறுவினை ஒடு என உரைக்கப்பட்டது.

*அடி : 228*

ஈண்டு, வழிபடு மந்திரம் புறத்தே தோன்றாமல் உச்சரிக்கப்படும் என்றார். தோத்திரம் வாய்விட்டு உச்சரிக்கப்படுதலும், மந்திரம் புறம் தோன்றாமல் உச்சரிக்கப்படுதலும் மரபு.

அடி : 232 கிடாய் என்றது ஆட்டுக்கிடாயினை.

அடி : 234

பிரப்பு - குறுணிவீதம் கொள்கலன்களில் பரப்பிவைக்கும் நிவேதனப் பொருள்.

அடி : 236

செவ்வலரி மாலையொடு பிறபூக்கள் தொடுத்த மாலைகளையும் கொண்டுகூட்டித் தழுவினார்.

அடி : 237

துணைஉற - இணையொத்திருக்குமாறு (இப்பொருட்குப்பாடம் 'உற' என்றிருக்கவேண்டும்.

அடி : 243

முரணினர் உட்க - தெய்வம் இன்று என்பார் அஞ்சும்படியாக முருகனை எழுந்தருளுமாறு வழிப்படுத்தின.

அடி :250

முன்கூறிய இடங்களிலோ பிற இடங்களிலோ ஆயினுமாக என உரை கூறுகிறார்.

அடி : 253

சரவணம் - நாணற்காடு. நாணல் எனவே, தருப்பையும் அடங்கிற்று. 'சரவணப் பொய்கை' தோன்றுமாறு நீலம் என்பதற்கு ஆகுபெயரால் பொருள் கூறினார்.

அடி : 254

ஐவருள் ஒருவன் - உரைப்பொருள் நுண்மை காண்மின்.

அடி : 256

மலைமகள் - மலையரையன் மகள்.

அடி : 258

'வெல்போர்' என அடுத்து நிகழ்தலின், வெற்றியைக் கொற்றவையொடு கூட்டி வெற்றியை உலகிற்குக் கொடுக்கும் வனதுர்க்கை என்று உரைத்தார்.

அடி : 262

மள்ளன் - இளமைப்பருவத்தோன்

அடி : 268

புறச்சமயவாதிகளை வெல்லும் வைதிகச் சமயத்தார்க்கு முருகன் துணை நிற்குமாற்றைப் புலப்படுத்தினார்.

அடி : 269

பெரும்பெயர் - பெரும்பொருளாம் முத்திச் செல்வம். அக் கந்தழிச் செல்வத்தை அடியார்க்கு நல்குமவனே என்பது விளி. அடுத்த அடி இக்கருத்தை விளக்கிற்று.

அடி : 270

இசைபேராள - வலிமிகாமை கருதிப் 'பேரிசையாளா' என மாற்றினார்.

அடி : 274

பெரியோர் - தேவரும் முனிவரும்.

அடி : 275

'மதவலி' என்ற பெயருக்கு ஏற்ப, போர்மிகுமொய்ப்பினாலே சூரனது குலத்தை இல்லையாக்கின - என அடை புணருமாறு கொண்டுகூட்டினார். சூர்மருங்கறுத்த மொய்ம்பினன் ஆதலின், பொருதொழில் வல்லுந என்று 'பொருந' என்னும் சொற்குப் பொருள் கூறாது, பொருவப்படுமவன் 'பொருநன்' என நின்றது என இலக்கணம் கூறி, பொருந - (வீரர்க்கு) உவமிக்கப்படுவோனே என்று உரை கூறினார். 'முருகுஒத்தீயே முன்னியது முடித்தலின் (புறநா.56) என்பது நக்கீரரது வாக்கு.

அடி : 280

புலமையோய் - மெய்ஞ்ஞானத்தை அருளுவோனே

அடி : 281

குறித்தது - கந்தழிச் செல்வம்
சேய்மை விளியும் அண்மை விளியும் தோன்ற முடிவு கூறும் நயம் இவரது அரிய உரைத்திறன்.

அடி : 282

கூளியர் - சேவித்து நிற்குமவர் (என்றது, முருகனுடைய பழவடியார் கூட்டம்)

அடி : 284

முதுவாய் இரவலன் - அறிவுமுதிர்ந்த வாய்மையையுடைய இரவலன். 'மூதறிவு வாய்த்த' என உரையாது, 'வாய்' என்பதனையும் இரவலற்கு அடையாக்கிய நயம் உணரப்படும். வாய்மொழி பேசுதல் அடியவரது தலையாய குணப்பண்பு என்க.

அடி : 289

தெய்வஒளியை மானிடயாக்கை காணப்பொறாதாகலின், 'வருத்தம் அமைந்த தெய்வத்தன்மையை உள்ளடக்கிக் கொண்டு' எனப் பொருள் உரைத்தார். 'தேவந்தி என்பாள் மனைவி அவளுக்குப், பூவந்த உண்கண் பொறுக்கென்று - மேவித்தன், மூவா இளநலம் காட்டி' (சிலப்.9 : 33-35) என்றார் பிறரும்.

அடி: 290

முருகின் சொற்பொருளாகத் திரு.வி.க. மணம் - தெய்வத்தன்மை - இளமை - அழகு - என நான்கும் கொண்டதற்கு இவ்வடியே மூலமாவது. 'தனது மூலசொரூபத்தை' என்பதனைப் புலப்படுத்தவேண்டி, 'முன்பு உண்டாக்கிய தனது இளையவடிவைக் காட்டி' என்று உரை வகுத்தார்.

அடி : 293 - 95

உலகத்திடத்தேநீ ஒருவனுமே பிறர்க்கு வீடு அளித்தற்குரியையாய்க் கேடின்றித் தோன்றும்படி, சீரிய பிறரால் பெறுதற்கு அரிய வீடுபேற்றினைத் தருவன்.

இவ்வுரைப்பகுதி வேதாந்தக் கருத்தையுட்கொண்டது. பிரமத்தையுணர்ந்து சீவன் முத்தனாய் வாழும் பிரம்மவித்துத் தானும் அப்பிரமத்தைப் பிறர்க்கு உணர்வித்து அவர்களையும் சீவன்முத்தராய் வாழ்விக்கவல்லான் என்பது கருத்து. எல்லாச் சீவர்களிடத்தும் தன் ஆன்மாவே பிரம்மமாக அதிட்டித்து நிற்பதை உணரும் சீவன்முத்தன், தானே எங்கும் இருப்பதாக உணர்கிறான். தன்னை அதிட்டித்து நிற்கும் பிரம்மமே எல்லாரிடமும் உண்மையைக் காணுமவன், அவ் அகண்டாகார விருத்தி ரூபமான ஞானத்தால் தானே எங்கும் உளானாக ஓர்ந்துணர்கிறான் - என்று பொருள் கூறினும், வேதாந்தக் கருத்தாகவே அமையும் என்க.

அடி 295

**நல்குமதி:** முருகன் கந்தழியை நல்கும் எனப் படர்க்கையிடத்து முன்னிலைக்குரிய 'மதி' அசைநிலை வந்தது. 'அவ்வச் சொல்லிற்கு' (சொல்.297) என்னும் புறனடைச் சூத்திரத்தால் இதனை வழு அமைக்கின்றார். மதி பலவுடன் எனக்கூட்டி 'அறிவுகள் பலவுடனே பரிசில் நல்கும்' எனக் கூறுவாருமுளர் என்றார். இவ்வுரை பரிமேலழகர் உரையுள் காணப்படுகிறது. பரிதியாரும் இதனைச் சுட்டுகிறார். இவ்விடம் இவர்களுரை முற்பட்டமையைக் காட்டுவது போலத் தோன்றும்.

அடி : 317

'கிழவன்' என்னும் அன்ஈற்றுப் பெயர் 'கிழவோன்' என ஓன் ஈறாக வருவதற்குத் தொல்காப்பியனார் விதி கூறிற்றிலர். ஆயினும் 'கிழவோன்' எனத்தொல்காப்பியச் சூத்திரங்களில் வருதலின், விதியின்றேனும் ஆசிரியர்க்கு அஃது உடன்பாடே எனக் கொள்ள வேண்டும் என்பது உடம்பொடுபுணர்த்தலாம்.

அடிகள் : 57,58

இவ்வடிகள் நச்சினார்க்கினியர் புராணக் கதையாகக் குறித்த செய்தி 'பாயிரும் பனிக்கடல்' என்று தொடங்கும் பரிபாடலுட் கண்டது. அடிகள் 254,55: இவற்றிலும் இச்செய்தியே இடம் பெறும்.

அடி : 59, 60

கவிழிணர் மாமரம் பற்றிய செய்தி நச்சினார்க்கினியர் தம்காலத்து வழங்கிவந்ததனைக் குறிப்பது.

அடி :162

பிள்ளையார் அயனைச் சபித்த வரலாறாகக் குறிப்பதும் அது.

கந்தபுராணத்தில் இவை இடம்பெற்றில என்று இவ்வுரைப்பகுதியை ஏலாது என மறுத்தல் சாலாது. ''நச்சினார்க்கினியர் பன்னூல் பயின்ற செந்நெறிச் செல்வராதலின், தாமே ஒன்றும் படைத்திட்டு மொழியார்'' என்பது பாயிரவிருத்தியுள் அரசஞ்சண்முகனார் கூற்று.

அடிகள் : 106,126,198-99,234

இவற்றில் நச்சினார்க்கினியர் ''இவ்வாறு உரைப்பாருமுளர்'' எனவும் ''இது பாடமாயின் இதற்குப் பொருள் இவ்வாறு கூறுக'' எனவும் உரைத்தமைக்கு ஏற்ற உரைப்பகுதிகள் ஏனையோர் உரையில் காணப்பட்டில.

பரிமேலழகர் திருக்குறட்கும் பரிபாடற்கும் கண்ட உரைத்திட்பம் இந்நூலுரையுள் தோன்றவில்லை. இவ்வுரையைப்பற்றி, திருக்குறட்கு நுண்பொருள்மாலை வரைந்த காரிரத்தினகவிராயர் ஒன்றும் குறிப்பிட்டிலர். பரிப்பெருமாள், பரிதி இன்னோர் வரைந்த திருக்குறள் உரை சிறப்புற்றிலாமை போன்றே இப்பனுவல் உரைகளும் அமைந்துள.

பெயர் தெரியாத உரையாளருரை ஒருவாறு சிறப்புடைத்தாகிறது. அடுத்த நிலையது பரிமேலழகர் உரை. ஏனையிருவருரையும் அத்துணைச் சிறப்புற்றிலை. இவ்வுரைகளிடைக் காணப்படும் வாக்கிய முடிவுப் பிழை போன்றவை ஏடெழுதுவோரால் நேரிட்டிருத்தல் வேண்டும்.

சிறந்த பொருள் கருதிச் சொற்கள் சில இடங்களில் நச்சினார்க்கினியரால் கொண்டு கூட்டப்பட்டுள்ளன. இஃது இவர் வரைந்த உரைக்கு அழகூட்டிப் பொருள் ஏற்றம் தருவதாகவே கொள்ளவேண்டும்.

அமரர் உ.வே. சாமிநாதய்யரது தூய பதிப்பால் நச்சினார்க்கினியருரை நின்று நிலவும் நீரதாய் நிகழ்கிறது.

...





ஸ்ரீ முருகன் துணை

**வா**ன் கலந்த மாணிக்கவாசகப் பெருமான் தமிழ்த் தேன் சொட்டும் திருவாசகத்தில்,

**"அவனருளாலே அவன்தாள் வணங்கி "** என்று பாடுகிறார். ஆம்; 'ஈர்த்து என்னை ஆட்கொண்ட எந்தைபெருமான்' முருகப்பெருமான் திருவருளாலே திருமுருகாற்றுப்படை எனும் அருந்தமிழ் நூலுக்கு என்னால் இயன்றவரை,

"எல்லோருந் தொழுதகைய குமரனடியிணை வழுத்தி"ப் பொருள் கூற முயல்கிறேன். நற்றமிழ்ப்புலமை நக்கீரன் யாத்த இத்திருமுருகாற்றுப்படை கற்றவரும் மற்றவரும் போற்றி ஓதி உணர்வது. இதற்குப் பொருள் கூறுவதென்பது எளிய செயலன்று. இருப்பினும் அப்பெருமான் அருள் பெற்ற பல பெரியவர்கள், அறிஞர்கள், அடியவர்கள் இத்திருமுருகாற்றுப்படைக்குக் கண்டிருக்கும் பொருளை இங்கு ஓரளவு கொண்டு வந்து தரும் முயற்சி இது.

முருகவழிபாடு நம்நாட்டில் மிகத்தொன்மையானது. இன்று நமக்குக் கிடைத்துள்ள தமிழ் நூல்களில் தொன்னூலும் முன்னூலுமான தொல்காப்பியத்திலேயே பழந்தமிழகத்தில் மலைக்குத் தெய்வமாக

முருகப்பெருமான் போற்றப்படுகிறான். இதைத் தொல்காப்பியம் அகத்திணை இயலின்,

'மாயோன் மேய காடுறை உலகமும்
சேயோன் மேய மைவரை உலகமும்
வேந்தன் மேய தீம்புனல் உலகமும்
வருணன் மேய பெருமணல் உலகமும்
முல்லை குறிஞ்சி மருதம் நெய்தலெனச்
சொல்லிய முறையாற் சொல்லவும் படுமே.'

என்பதிலிருந்து அறியலாம்.

சேயோன் முருகன், கடல்சூழ் உலகில் முதலில் தோன்றிய நிலமாகிய மலைக்கு, முதல் தெய்வமாகக் கொள்ளப்படுகிறான்.

மேலும் எட்டுத்தொகை நூல்களில் ஒன்றான குறுந்தொகையின் கடவுள் வாழ்த்துப் பாடல் இவ்வாறு தொடங்குகிறது:-

''தாமரை புரையுங் காமர் சேவடிப்
பவழத் தன்ன மேனித் திகழொளிக்
குன்றி யேய்க்கும் உடுக்கைக் குன்றின்
நெஞ்சுபக எறிந்த அஞ்சுடர் நெடுவேல்
சேவலங் கொடியோன் காப்ப
ஏம வைகல் எய்தின்றால் உலகே''.

இதற்கு,

''முருகப் பெருமான் தாமரைபோன்று விரும்பப்படும் சிவந்த திருவடிகளை உடையவன், செம்பவளம் போல் சிவந்த மேனியன்,
குன்றி மணியைப் போலச் சிவந்த ஆடையை அணிபவன்,
கிரௌஞ்ச மலையைத் தன் நெடுவேலால் பிளந்தவன் முருகன்.
ஆணவம், அஞ்ஞானம் ஆகியவற்றின் வடிவான சூரனுடைய
உடலையும் நெஞ்சத்தையும் பிளக்கிறான் முருகன்.

இவ்வாறு, கொடியவர்க்குக் கொடியவனாய் நின்று
முருகன் இவ்வுலகைக் காக்கின்றான்.
இதனால், இவ்வுலக உயிர்கள் பாதுகாப்பாகவும்
- மகிழ்வோடும் வாழ்கின்றன " என்பது பொருள்.

இதே போன்று ஐங்குறுநூற்றில்,

'முருகென மொழியும் வேலன்' என்று அவன் அழகு ஆராதிக்கப்படுகிறது; அடுத்து, பரிபாடலில்

'பெரும் பெயர் முருகன்' என்ற அடைமொழி நிகழ்கிறது.
அவனிடம் புலவர் பெருமான், யாம் இரப்பவை

''அருளும் அன்பும் அறனும் மூன்றும்
உருளிணர்க் கடம்பின் ஒலிதாரோயே''

என்று அப்பெருமானின் அருள்பேற்றை யாசிக்கும் சிறப்பு கூறப்படுகிறது.

மேலும், அகநானூற்றில்,

'முருகன் அன்ன சீற்றத்து'

என, அவன் பகைவர்மேல் கொள்ளும் சீற்றத்தின் ஏற்றமும் தெரிவிக்கப்படுகிறது.

புறநானூறு,

'முருகொத் தீயே முன்னியது முடித்தலின்'

(56) என, அவன் 'பொருநன்' (முருகு.276) ஆம் சிறப்பினை இயம்புகிறது.

பொருநர் ஆற்றுப்படையில்,

'முருகற் சீற்றத்து உருகெழு குரிசில்' என, அவனது சீற்றத்தின் மாண்பு பேசப்படுகிறது. இவை யாவும் ஒரு சில எடுத்துக்காட்டுகளே. எட்டுத்தொகை,

பத்துப்பாட்டில் உள்ள நூல்களில் பல இடங்களில், அப்பெருமானின் தொன்மையும் முதன்மையும் தோற்றப்பொலிவும் போர்த்திறனும் அறக்கருணையும் மறக்கருணையும் ஆர்வலர்க்கு அருள்தரும் சிறப்பும் போற்றப்படுகின்றன.

இதே போன்று, வேத ஆகமங்களிலும், ஸ்ரீஸ்காந்தமகாபுராணத்திலும் முருகப்பெருமானின் அவதார நோக்கம், அயனைச் சிறையில் அடைத்தது, அசுரர் குலம் அழியக் கொண்ட போர் வெற்றிகள் என்பன பெரிதும் போற்றப்படுகின்றன.

இருக்குவேதம், சிவனை, ஒருமுறை பிரணவ ஒலியால் அழைக்கிறது; முருகனையோ,

"சுப்ரமண்யோம், சுப்ரமண்யோம், சுப்ரமண்யோம்"என மும்முறை ஓம் ஓம் ஓம் எனப் பிரணவத்தை இணைத்துக் கூவி அழைக்கிறது.

சாந்தோக்கிய உபநிஷத்தில்,

முருகன், 'ஸ்கந்தன்' என்றழைக்கப்படுகிறான்.

காமிகம், காரணம், சுப்பிரபேதம், குமாரதந்திரம், அம்சுமத்பேதம்போன்ற சிவாகமங்களில் முருகனைப் பற்றிய குறிப்புகள் மிகுந்து காணப்படுகின்றன.

சுப்பிரபேதம் என்ற ஆகமநூலில் முருகனின் பிறப்பும், கார்த்திகை மாதரால் வளர்க்கப்பட்ட சிறப்பும், அப்பெருமானுக்கு ஆலயம் அமைக்கும் விதியும் கூறப்படுகின்றன.

அம்சுமத்பேதத்தில் முருகனை சிறப்பாகப் பஞ்சதால உயரத்தில் அமைக்கும் முறை கூறப்படுகிறது.

உத்ரகாமிகத்தில் முருகனுக்கான திருக்கோவில், நகரின் தலைப்பிலாவது இடையிலாவது, அக்னி, இயமன், நிருதி, வருணன், வாயு, ஈசானன் இவர்கள்

திசைகளிலாவது, இவற்றின் இடையிலாவது, அல்லது சிவன் கோயிலில், காடுகளில், பெரிய மரங்களினடியில், தலைநகரில், ஏனைய புண்ணியத்தலங்களில் அமைக்க ஏற்ற இடம் கூறப்பட்டுள்ளது.

குமாரதந்திரம் என்னும் ஆகமம் முழுவதுமே முருகனுடைய வரலாறும், பிரதிட்டை முறையும், விழாவும், பூசையும், விரதமும், தீட்சையும், பிறவும் கூறப்படுகின்றன.

பூர்வகாரணாகமம், விஷ்ணு தர்மோத்தரம், பிருகத்சம்கிதை, சில்பரத்தினம் போன்ற ஆகம, சிற்ப நூல்களிலும் முருகன் வடிவ அமைப்பு, அப் பெருமானின் ஆடை, கொடி, வாகனம் ஆகியவை கூறப்படுகின்றன.

வான்மீகத்திலும், மகாபாரதத்திலும், குமாரசம்பவத்திலும், பத்மபுராணத்திலும் முருகனின் பிறப்பும் வளர்ப்பும் கூறப்படுகின்றன. 'அ' கார, 'உ' கார, 'ம' காரம் என்ற ஓங்காரஸ்வரூபமே ஸ்ரீ சுப்ரமணியக் கடவுள் என்றும், அவன் கலியுக வரதனென்றும் வேதங்கள் முழங்குகின்றன.

மேலும், வேதமே மயிலாகவும், ஓங்காரமே சண்முகனாகவும், ப்ரம்ம வித்தையே சக்திவேலாகவும் மனங்கொண்டு குமரனை வழிபடுவதால், வீடுபேறு கிடைக்கிறது என்று புராணங்கள் விரித்துக் கூறுகின்றன. காளிதாசனின் இரகுவம்ச மகாகாவியத்தில், பார்வதியும் பரமசிவனும் சுப்பிரமணியன் என்ற மகனைப் பெற்று மகிழ்ந்ததாகக் கூறப்படுகிறது.

சிவமந்திரம், சிவத்தோடு முருகன் பேதமின்றி இணைந்திருக்கிறான் என்றும், சிவனே முருகனாகவும், முருகனே சிவனாகவும் இருக்கின்றனர் என்றும் கூறுகிறது. கந்தபுராணத்திலும், இத்தத்துவம் விளக்கப்படுகிறது:-

''மறைகளின் முடிவால் வாக்கால்
மனத்தினால் அளக்கொ ணாமல்
நிறைவுடன் யாண்டு மாகி
நின்றிடும் நிமல மூர்த்தி
அறுமுக உருவாய்த் தோன்றி

அருவொடு சரவ ணத்தின்
வெறிகமழ் கமலப் போதின்
வீற்றிருந்து அருளி னானே ''

(திருவவதாரப்படலம்)

என்றும் 'ஈசனே தன் ஆடலால் மதலை ஆயினன்' என்றும் இப்புராணம் கூறுகிறது.

தணிகைப் புராணத்தில் கச்சியப்ப முனிவர்,

''தனக்குத் தானே மகனாகிய தத்துவன்''

என்று பாடுகிறார்.

சிவனுக்கும் முருகனுக்கும் பேதமில்லை என்பதைக் கந்தபுராணம் உறுதிப்படுத்துகிறது. சிவபெருமானின் நெற்றிக்கண்களிலிருந்து தோன்றிய தீப்பொறிகள் ஆறும், சரவணப் பொய்கையில் ஆறுகுழந்தைகளாகத் தாமரை மலர்களின் மேல் விளையாடிக் கொண்டிருந்தபோது, சிவபிரான் உமாதேவியோடு சரவணப் பொய்கையை அடைந்தார்; உமை அம்மையை நோக்கி, அங்கு, தாமரை மலர்களின் மீது வீற்றிருக்கும் முருகனாகிய குழந்தைகளைச் சுட்டிக்காட்டி,

(ஆதலின்) நமது சக்தி அறுமுகன்
அவனும் யாமும்
பேதகம் அன்றால் ; நம்போல் பிரிவிலன்
யாண்டும் நின்றான்;
ஏதமில் குழவி போல்வான்; யாவையும்
உணர்ந்தான்; சீரும்
போதமும் அழிவில் வீடும் போற்றினர்க்கு
அருள வல்லான்''

(கந்தப்புராணம் - திருவிளையாட்டுப்படலம்)

என்று திருவாய்மலர்ந்தருளினார். இதனால், சிவபெருமான், தம்மை வழிபடும் அன்பர்களுக்குப் பற்பல பேறுகளை அருளும் வகையில் கொண்டருளும் திருவுருவங்களில் முருகன் திருவுருவமும் ஒன்றாகும் என்பது பெறப்படுகிறது. மரமும் அதில் இருக்கும் வயிரமும் போல் சிவனும் முருகனும் ஒன்றானவர்; வேறல்லர். சிவனே முருகன்; முருகனே சிவன்.

சிவபெருமானுக்கு ஐந்து முகங்கள், ஐந்தெழுத்துக்கள், முருகனுக்கு ஆறு முகங்கள் ஆறு எழுத்துக்கள். தம்முடைய ஈசானம், தத்புருடம், அகோரம், வாமதேவம், சத்யோசாதம் என்ற ஐந்து முகங்களும், அதோமுகம் என்ற கீழ்நோக்கிய முகமும் கொண்டு சிவபெருமானே ஆறுமுகங்களுடன் முருகனாக வந்தார் என்பர்.

ஈசானம் என்பது எல்லாவற்றையும் ஆளுந்தன்மையுடையது;
தத்புருடம் என்பது தேவசரீரம், மானுட சரீரம் ஆகியவற்றில் அதிட்டித்து நிற்பது;
அகோரம் என்பது சாந்தமாக இருப்பது;
வாமதேவம் என்பது அறம், பொருள், இன்பம், வீடு ஆகியவற்றை ஆன்மாக்களுக்கு அருள வல்லது;
சத்யோஜாதம் என்பது உயிர்களுக்கு, சீவகோடிகளைத் தோற்றுவித்து உள் தோன்றி அருள வல்லது.

இந்த ஐந்து முகங்களுடன் கீழ்நோக்கும் அதோ முகமும் சேர்ந்து ஆறுமுகம் ஆகிச் சிவம் உயிர்கட்குத் தனிப் பெருங்கருணை புரிகின்றது. கந்தர்கலிவெண்பா,

'ஐந்து முகத்தோ டதோமுகமுந் தந்து
திருமுகங்கள் ஆறாகி' என்று கூறுகிறது.

சிவபெருமானின் ஐந்து முகங்களும் அம்மையின் ஒரு முகமும் சேர்ந்து ஆறுமுகங்களாயின என்றும் கூறுவர். முருகனுக்குச் சிவபெருமானின் முற்றறிவு, எங்கும் நிறைந்து நிற்றல், இயல்பாகவே பாசங்களினின்றும் நீங்குதல், பேரருள் உடைமை, தன் வயத்தனாதல், முடிவிலாற்றல் உடைமை என்னும் ஆறு குணங்களும் ஆறு திருமுகங்களாக அமைந்தன. கந்தபுராணம்,

''ஏவர்தம் பாலு மின்றி எல்லைநீர் அமலற் குள்ள
மூவிரு குணனும் சேய்க்கு முகங்களாய் வந்த தென்னப்
பூவியல் சரவ ணத்தண் பொய்கையில் வைகும் ஐயன்
ஆவிகள் அருளு மாற்றால் அறுமுகம் கொண்டா னன்றே''

(திருவவதாரப்படலம்)

என்று கூறுகிறது. வியட்டிப் பிரணவமாகிய அ,உ,ம், நாதம், விந்து, சக்தி என்ற ஆறும் முருகனின் திருமுகங்களாகவும், பிரணவம் ஒன்றும் (ஓம்) திருவைந்தெழுத்து (சிவாய நம) ஐந்தும் ஆக ஆறும் சண்முகக் கடவுளின் திருமுகங்களாகவும் அமைந்தன எனப் புராணங்கள் கூறுகின்றன. இவையே அல்லாமல், கணபதியை ஓங்கார வடிவில் வழிபடும் காணாபத்தியம், குமரனைப் பேரின்ப வடிவினனாக வழிபடும் கௌமாரம், சூரியனைப் பேரொளி வடிவினனாக வழிபடும் சௌரம், விஷ்ணுவை எங்கும் நிறைந்தவனாக வழிபடும் வைணவம், சக்தியைத் தாயாக வழிபடும் சாக்தம், சிவனைத் தந்தையாக வழிபடும் சைவம் என்ற இந்த ஆறு வைதிகச் சமயத்தின் கூட்டே முருகப் பெருமானின் ஆறு திருமுகங்களாகவும் அமைந்தன என்பதை

> ''ஆறு சமயக் கடவுள் வேறு வேறின்றி யான்
> ஒருவனே அங்கங் கிருந்து
> அன்பர்க்கு முத்திதரு வித்தென்று யாவர்க்கும்
> அறிவித்த வதன மணியே ! ''

என்று போரூர்ப் பிள்ளைத்தமிழ் சிறுபறை கொட்டுகிறது

ஆதிசக்தி, இச்சா சக்தி, கிரியா சக்தி, பராசக்தி,ஞானசக்தி, குடிலசக்தி ஆகிய ஆறு சக்திகளும் ஆறு முகங்களாக வந்தன என்றும் கூறுவர். ஆறுமுகங்களும் ஐசுவரியம், வீரியம், புகழ், திரு, ஞானம், வைராக்யம் இவற்றைத் தரும். ஆறெழுத்துக்களில் 'ச' என்பது இலட்சுமி விலாசத்தையும், 'ர' சரசுவதி கடாக்ஷத்தையும், 'வ' என்பது வீடுபேற்றையும், 'ண' என்பது பகைமை போக்கிய வெற்றியைத் தரும் என்றும், 'ப' என்பது இயம பயத்தை நீக்கும் என்றும், 'வ' என்பது நோயற்ற வாழ்வளிக்கும் என்றும் கூறுவர்.

மேலும், ஆறுமுகத்தின் உண்மைகளை உணர்த்தும் கணபதி, பிரம்மா, திருமால், உருத்திரன், மகேசுவரன், சதாசிவம் ஆகிய இந்த அறுவரும் முருகனுடைய சொரூபமே. ஆறுமுகங்களினின்றும் வெளிப்படும் ஒளிகள்:

1. ஞானப்பிரகாசம் 2. ஞானானந்தப்பிரகாசம் 3. சர்வஞானவியாபகப் பிரகாசம் 4. சுத்தஞான சாக்ஷிப்பிரகாசம் 5. சர்வ பரிசுத்த பிரமஞானானந்தம் 6. அநாதி நித்ய பிரமஞானானந்த சிவப்பிரகாசம் என்பனவாகும்.

பரம்பொருள், கருணை வெள்ளம் பொழியும் ஆறு திருமுகங்களும், பன்னிரண்டு திருக்கரங்களும் கொண்டு உலகமெல்லாம் உய்யும் வண்ணம், முருகக் கடவுளாகத் திரு அவதாரம் செய்தருளியது:-

'அருவமும் உருவம் ஆகி அநாதியாய்ப் பலவாய் ஒன்றாய்
பிரமமாய் நின்ற சோதிப் பிழம்பதோர் மேனி ஆகக்
கருணைகூர் முகங்கள் ஆறும் கரங்கள்பன் னிரண்டும் கொண்டே
ஒரு திருமுருகன் வந்தாங்(கு) உதித்தனன் உலகம் உய்ய'

என்று (திருவவதாரப் படலம்) கந்தபுராணம் கூறும்.

சமயங்கள் ஆறு; கோசங்கள் ஆறு; ஆதார கமலங்கள் ஆறு. அத்துவாக்கள் ஆறு. சாத்திரங்கள் ஆறு. சமம், தமம், விடல், சகித்தல், சமாதானம், சிரத்தை என வேதாந்த ஞான சாதனங்கள் ஆறு. சகலமும் ஆறாக உள்ளது போல் முருகனும் ஆறு முகங்களைக் கொண்டு, அனைத்தும் ஆனவனாய் விளங்குகிறான். சிவத்திற்குரிய 'பஞ்சாக்கரத்தோடு' ஏகாட்சரபிரம்மமாகிய ஓர் எழுத்துப் பிரணவமாம் 'ஓம்' சேர்ந்து 'சடாக்கர' மாகிறது. அருணகிரிநாதர்:

"ஓரெழுத்தில் ஆறெழுத்தை
ஓதுவித்த பெருமாளே!" என்று பாடுகிறார்.

மேலும், அப்பெருமானிடம், அழிவிலாச் சடக்கர மந்திரத்தை, உள்ளத்தில் கண்டு தியானிக்க அருளுமாறு வேண்டுகிறார்.

'உலப்பின் றாறெனு மக்கரம்'

(நிறுக்குஞ் சூதன ... திருச்செந்தூர் திருப்புகழ்)

ஓங்காரத்தின் ஒலி வடிவம் இறைவன், எல்லா உயிர்களையும் தொழில் படுத்துகிறான் என்பதையும், ஓங்காரத்தின் வரிவடிவம், எல்லா உயிர்களிடத்தும் இறைவன் நீங்காமல் உறைகிறான் என்பதையும் காட்டுகின்றன. திருமூலர்,

'ஓங்காரத் துள்ளே யுதித்த ஐம்பூதங்கள்
ஓங்காரத் துள்ளே யுதித்த சராசரம்
ஓங்காரா தீதத்துயிர் மூன்றும் உற்றன
ஓங்கார சீவ பரசிவ ரூபமே' (பாடல் 2628)

எனக் கூறியுள்ளார்.

தமிழ் மொழி, என்றும் இளமை மாறாத மொழி;
எம்பெருமான் முருகன், என்றும் மாறாத இளமையன்;
தமிழில், உயிர் எழுத்துக்கள் பன்னிரண்டு;
முருகப்பெருமானின் தோள்கள், பன்னிரண்டு;
தமிழில் மெய்யெழுத்துக்கள் பதினெட்டு;
முகத்திற்கு மூன்று கண்களாக முருகனுக்குக் கண்கள் பதினெட்டு.
உருவமில்லாதவன் உலகியற்றும் ஆண்டவன்; ஆனால், அவன்
ஆறு திருமுகங்கள், பன்னிரண்டு கரங்கள், பதினெட்டுக் கண்கள்
கொண்ட அருள் உருவம் தாங்கினான் .
முருகவேள் முகங்கள் ஆறு.
தமிழில் இனஎழுத்துக்கள் ஆறு.
மு ரு க என்ற எழுத்துக்களில் ஒவ்வொன்றும்
மெய்யெழுத்தில் ஒவ்வோர் இனத்தைச் சார்ந்திருக்கிறது.
கந்தவேள் கரத்தமைந்த வேல்
தமிழில் உள்ள ஆய்த எழுத்தை ஒத்தது.
சிவம் என்பது சத்து, சத்தி என்பது சித்து, முருகன் என்பது
ஆனந்தத்தைக் குறிக்கும். இதுவே, சச்சிதானந்தம். உண்மை என்பது
சிவபெருமான்; அறிவு என்பது சக்தி; இன்பம் என்பது
முருகன்; மூன்றும் சேரவே, மோட்சமாகிய சச்சிதானந்தமாகும்.

யஜுர் வேத தைத்திரியோபநிடத ஆனந்தவல்லி வசனத்தில், முருகப்பெருமான் 'ஆனந்தம் ப்ரஹ்ம' என ஆனந்தமூர்த்தியாகக் குறிப்பிடப் படுகிறான். ஸ்ரீஸ்காந்த மகா புராணத்தில் 34-ஆவது அத்தியாயத்தில், ஆனந்த வடிவினனாகிய சிவபெருமான் ஆனந்தக் கடலாகிய தனது மகனின் அளவிடற்கரிய அங்கங்களைத் தொட்டகாலை அமுத நீரில் மூழ்கியதாகக் குறிப்பிடப்படுகிறது.

அருணகிரிநாதர் கந்தவேளை 'ஆனந்த வேள்' எனக் குறிப்பிடுகிறார்.
மேலும் அவர், முருகனைக் காணத் தமக்கு

'செங்கோடனைச் சென்று கண்டு தொழ
நாலாயிரம் கண்படைத்திலனே அந்த நான்முகனே'

என்று பாடியுள்ளார்.

பாம்பனடிகள் 'ஆனந்த வத்துவின் கழல் வாழ்த்தி வணங்குவாம்' எனக் கூறுகிறார். முருகப்பெருமான் பல நாமங்களால் அழைக்கப்படுகிறான்:-

1. பிள்ளையார்:- சிவபெருமானுக்குப் பிள்ளையாதலால் பிள்ளையார் என்றழைக்கப்படுகிறான்.

2. சரவணபவன்: நாணல் நிறைந்த பொய்கையில் தோன்றியதால் சரவணபவன் என்றும்,

3. கங்கைமைந்தன்: தீப்பொறிகளைக் கங்கை சுமந்து சென்று சரவணத்து உய்த்து வளர்த்ததால் கங்கை மைந்தன் என்றும் காங்கேயன் என்றும்,

4. கந்தன் :பார்வதியம்மையினால் ஒன்று சேர்க்கப்பட்டதால், கந்தன் என்றும், தோள்வலி மிக்கவன் அதாவது பகைவர்களின் ஆற்றலை வற்றச்செய்பவன் என்று பொருள். வடமொழி அமரகோச உரை 'ஸ்கந்தயதி சத்ரூன் சோஷயதீதி ஸ்கந்த:' என்று கூறுகிறது.

5. கார்த்திகேயன்: கார்த்திகை மாதர் அறுவரால் பாலூட்டி வளர்க்கப்பட்டதால் கார்த்திகேயன் என்றும், அறுமீன் காதலன் என்றும்,

6. ஆறுமுகன்: ஆறுமுகங்கள் கொண்டவன் என்பதால் அறுமுகன் என்றும், சண்முகன் என்றும்,

7. முருகன் : (பாலசுந்தரம்) தெய்வத்தன்மையும், இளமையும், அழகும், மணமும் உடையவன் என்றும்,

8. குகன் : அன்பர்களின் இதயக் குகையிலே இருப்பவன் என்றும், (இதைத் தைத்திரீயாருண சாகை கூறுகிறது),

9. குமாரன் : என்றும் இளமைத் தன்மை உடையவன், அழகன், ஆன்மாக்களுக்கு அருள் புரிபவன், தீயவற்றை அழிப்பவன் என்றும்,

10. விசாகன் : மயிலை வாகனமாக உடையவன் என்றும், வைகாசி விசாக நாளில் தோன்றியவன் என்றும்,

11. வேள் : விரும்பத்தக்கவன்; தலைவன் (முருகவேள், கந்தவேள், செவ்வேள்) என்றும்,

12. சாமி : எல்லாம் உடையவன் (தகப்பன் சாமி, கந்தசாமி, பாலசாமி)

என்றும் அழைக்கப்படுகின்றான். அதாவது உலகங்களையும் உயிர்களையும் உடைமையாக உடையவன்; வடமொழி 'அமரகோசம்' நிகண்டில், முருகப்பெருமான் தேவசேனாபதி, வீரதீரமுடையவன், சுவாமி, கஜமுகன்தம்பி எனக் குறிப்பிடப்படுகிறான். 'தேவசேனாபதி சூர: ஸ்வாமீ கஜமுகாநுஜ' என்பதாகும். முருகப்பெருமானுக்கு, சுப்ரமணியர் என்ற சிறப்பான திருப்பெயரும் அமைந்துள்ளது. 'சு' என்பது ஆனந்தத்தைக் குறிக்கும். ப்ரம்ம = பரவஸ்து; ந்ய (ண்ய) அதினின்றும் உதித்தது; அதாவது இன்பமும்

ஒளியும் வடிவுமாகவுடைய சிவபரம் பொருளான சுப்பிரமணியம். (சிவசுப்பிரமணியன், வேங்கடசுப்பிரமணியன், பாலசுப்பிரமணியன்) இவ்வாறு முருகப்பெருமான், உயிர்கள் மேல் காட்டும் கருணையால் பல பெயர்களால் அழைக்கப்படுகிறான். இவை யாவும் உபசார வழக்கேயாம். கந்தபுராணம்,

'கங்கையின் புதல்வ னென்றும் கார்த்திகை மைந்த னென்றும்
செங்கண்மால் மருக னென்றும் சேனையின் செல்வ னென்றும்
பங்கயன் முதலோர் தேறாப் பரஞ்சுடர் முதல்வன் தன்னை,
இங்கிவை பலவுஞ் சொல்வது ஏழைமைப் பால தன்றோ' என்று கூறுகிறது.

(யுத்த காண்டம் - இரணியன் யுத்தப் படலம்)

சிவபெருமானைப் போலவே, குமாரக் கடவுளும் ஐந்து தொழில் இயற்றுபவர்; கோழிக்கொடியானது படைத்தல் தொழிலையும், மயில் வாகனமானது காத்தல் தொழிலையும், சக்திவேலானது அழித்தல் தொழிலையும் செய்ய இச்சா சக்தி வடிவமாகிய வள்ளியம்மையார் மறைத்தல் தொழிலைச் செய்வதாகவும், கிரியாசக்தி வடிவமாகிய தெய்வயானை அம்மையார் அருளல் தொழிலைச் செய்வதாகவும் தத்துவங்கள் பகர்கின்றன.

குமாரதந்திரம், முருகக் கடவுளின் மூர்த்தங்கள் பதினாறு என்று கூறும்; அவையாவன :-

1. ஞானசத்திதரர் 2. கந்தர் 3. தேவசேனாபதி 4. சுப்பிரமணியர் 5. கஜாரூடர் 6. சரவணபவர் 7. கார்த்திகேயர் 8. குமாரர் 9. சண்முகர் 10. தாரகாந்தகர் 11. சேனாபதி 12. பிரமசாத்தர் 13. கல்யாணர் 14. பாலசுப்பிரமணியர் 15. கிரவுஞ்சத்துவசர் 16. மயூரவாகனர்.

மேலும் சித்தன், சேய், சேயோன், வேள், வேலன், அரன் மகன், குருநாதன், சேவற்கொடியோன், கடம்பன், கலையுணர் புலவன், குழகன், குறிஞ்சி வேந்தன், குன்றெறிந்தோன், கௌரி நந்தனன், சண்முகன், சிலம்பன், சுரேசன், சூர்ப்பகைவன், செட்டி, சேந்தன், தாரகற் செற்றோன், தெய்வானைக் காந்தன், தேவசேனாபதி, சேனானி, பாவகி, மஞ்ஞை ஊர்தி, மாயோன் மருகன், முருகன், வரைபக எறிந்தோன், வள்ளிமணாளன், பாகுலேயன், வேலன், சங்கத் தலைவன்,கந்தசாமி, குமாரசாமி, முத்தையன்,ஞானசக்திதரன், என்றின்ன பல பெயர்களால் அர்ச்சிக்கப்படுபவன் ஆறுமுகன்.

அகத்தியர், நக்கீரர், பொய்யாமொழிப்புலவர், அருணகிரிநாதர், குமரகுருபரர், பாம்பன்சுவாமிகள், வாரியார் சுவாமிகள் போன்ற எண்ணற்ற செந்தமிழ்ப் புலவர்கள் முருகப் பெருமானின் அருள் பெற்று அப்பெருமானைப் பாடிப் பரவினர் .

சங்கநூல்கள் தவிரப் பின்னால் தோன்றிய சிலப்பதிகாரம், சீவகசிந்தாமணி போன்ற காப்பியங்களிலும் முருகன் பேசப்படுகிறான். சிலப்பதிகாரத்தில், குறமகளிர், சூரனை வென்ற வேலவன் வெற்றியைப் பாடுகின்றனர் :-

அது:

''உரையினி மாதராய் உண்கண் சிவப்பப்
புரைதீர் புனல்குடைந் தாடினோ மாயின்
உரவுநீர் மாகொன்ற வேலேந்தி ஏத்திக்
குரவை தொடுத்தொன்று பாடுகம்வா தோழி''

என்பதாகும். மேலும்,

''முன்பு பெரிய கடல் நடுவே புகுந்து
சூரபதுமனாகிய மாமரத்தை அறுத்த ஒளி உமிழும்
வெள்ளியவேல், சிறப்புமிகு திருச்செந்தூர்,
திருச்செங்கோடு, சுவாமிமலை, ஏரகம் ஆகிய இடங்களை
விட்டு நீங்காத முருகனின் கையிடத் தாகிய வேலேயாம்''

என்னும் பொருளுடைய அப்பாடல் வருமாறு :

''சீர்கெழு செந்திலுஞ் செங்கோடும் வெண்குன்றும்
ஏரகமும் நீங்கா இறைவன்கை வேலன்றே
பாரிரும் பௌவத்தின் உள்புக்குப் பண்டொருநாள்
சூர்மா தடிந்த சுடரிலைய வெள்வேலே''

இவைபோன்ற பல குறிப்புக்கள் இக்காப்பியத்தில் இடம்பெற்றுள்ளன.

சீவகசிந்தாமணியில்,

'பூவினுட் பிறந்த தோன்றல்' ,
'மாத்தடிந்தா னன்ன மாண்பினான்'
'முருகன் எஃகம் ஓரிரண்டனைய கண்ணாள்'

என்பன போன்ற குறிப்புகளும் பிறவும் காணப்படுகின்றன. பன்னிரு திருமுறைகளிலும் முருகப் பெருமான் பாராட்டப்படுகின்றான். திருஞானசம்பந்த சுவாமிகள் பாடியருளிய மூன்று திருமுறைகளிலும் பன்னிரண்டு இடங்களில் முருகன் பாராட்டப்படுகிறான். இராமன தீச்சரப் பதிகத்தில்,

1. 'தழை மயிலேறவன்' என்றும்
2. திருமீயச்சூர்ப் பதிகத்தில்,
   மாயச்சூர் அன்று அறுத்த மைந்தன்' என்றும்
3. பிரமபுரப் பதிகத்தில்,
   'இளங்குமரன் சேந்தன்' என்றும்
4. திருநறையூர்ச் சித்தீச் சரப் பதிகத்தில்
   'மடமயிலூர்தி' என்றும்
5. திருப்புகலூர்ப் பதிகத்தில் 'சாமி' என்றும்
6. தென்குடித்திட்டைப் பதிகத்தில் 'குமரவேள்' என்றும்
7. திருக்கழுமலப் பதிகத்தில் 'கந்தன்' என்றும் முருகன் குறிப்பிடப்படுகிறான்.

திருநாவுக்கரசு சுவாமிகள் தேவாரத்தில்,

1. 'ஆறுகொலாம் அவர்தம் மகனார் முகம்'
2. 'கடம்பன் (தந்தை')
3. 'சேந்தனை மகனாக் கொண்டார்'
4. 'குறவிதோள் மணந்த செல்வக்குமரவேள் (தாதை')
5. 'கடம்பமர் காளை (தாதை')
6. 'விரிநீர்ப் பரவைச் சூரட்ட வேலவன் (தாதை')
7. 'மயிலூர்தி முருக வேள் (தன்ஐ')
8. 'நங்கடம்பனைப் (பெற்றவள் பங்கினன்')
9. 'சமர சூரபன்மாவைத் தடிந்த வேற்குமரன் (தாதை')
10. ' குமரன் (வணங்கும் கழற் பூரணன்')
11. ' கடம்பன் (தாதை')
12. 'சரவணத்தான் (கைதொழுது சாரும் அடி')

என 20 பதிகங்களின் மேலும் முருகப்பெருமான் குறிக்கப்படுகிறான். இவ்வாறு முருகனைப் பற்றிய புகழ்மொழியோடு சிவன் மொழியப் பெற்றுள்ளான்.

சுந்தரமூர்த்தி சுவாமிகள் தேவாரத்தில்,

1. 'பொருள் பலமதுடை அசுரன் தாரகனைப்
   பொருது பொன்றுவித்த பொருளினை
   (முன்படைத்து உகந்த புனிதன்')
2. 'குறவனார் தம்மகள் தம்மகனார் மணவாட்டி
3. 'பொன்னானை மயிலூர்தி முருக வேள் ( தாதை')
4. 'சேந்தன் (அப்பன்')
5. 'கடற்சூர் தடிந்திட்ட செட்டி(யப்பன்')
6. 'குமரன் (திருமால் பிரமன் கூடிய தேவர் வணங்கும் அமரன்')

எனச் சிவனுடன் முருகன், சேர்த்துக் குறிப்பிடப்படுகின்றான்.

மணிவாசகப்பெருமான் திருப்பொற் சுண்ணத்திலும், திருவுந்தியாரிலும் முறையே,

'நல்வேலன் தாதை'
'குமரன்தன் தாதை'

என்று பாடுகிறார். திருக்கோவையாரில் முருகனின் வீரம், வாகனம், கொடி, படைக்கலன், வீடு ஆகியவற்றைக் குறிப்பிடுகிறார். முருகப்பெருமான் 'சிற்றம்பலத்தான் சேய்' எனவும், 'சினவேலொருவர்' எனவும், 'புரிசேர் சடையோன் புதல்வன்' எனவும், 'புற்றொன்றரவன் புதல்வன்' எனவும், குறிப்பிடப்படுகிறான். அப்பெருமானின் வாகனத்தை 'சேய்கடவும் மயில்' எனவும், கொடியினை 'கொடிவாரணம்' எனவும், வேற்படையினை 'சூர் தடிந்த அயில்' எனவும், உறையும் திருப்பரங்குன்றத் திருத்தலத்தை 'பரங்குன்றில் நின்ற புதல்வன்' எனவும், வடிவை 'நெல்லின் தோன்றும் அவன் வடிவே' எனவும் அந்நூலில் குறிப்பிடப்படுகிறார்.

ஒன்பதாம் திருமுறையாம் திருவிசைப்பாவில், திருமாளிகைத்தேவர் கோயில் (சிதம்பரம்) திருவிசைப்பாவில்,

அனகனே! குமர விநாயக சனக!'

எனப் பாடுகிறார்.

சேந்தனார் திருவிடைக்கழி திருவிசைப்பாவில், பல அடைமொழிகளை, முருகப் பெருமானுக்குச் சூட்டி மகிழ்கிறார்:-

1. 'மேலுலாந் தேவர் குலமுழு தாளும்
குமரவேள் வள்ளிதன் மணாளன்'
2. 'வேலுலாம் தடக்கை வேந்தன்'
3. 'கோழிவெல் கொடியோன்'
4. 'தூவி நல்பீலி மாமயிலூரும் சுப்பிரமணியன்'
5. 'கங்கைதன் சிறுவன் கணபதி பின்னிளங் கிளையே'
6. 'பொன்மலை வில்லிதன் புதல்வன்' முதலாகப்
பல இடங்களிலும் பாடுகிறார்.

கருவூர்த்தேவர் திருச்சாட்டியக்குடி திருவிசைப்பாவில்,'திருமகன் முருகன்' எனப் பாடுகிறார்.

பத்தாவது திருமுறையாகிய திருமந்திரத்தில்,அசுரனின் ஆற்றலுக்கு அஞ்சிய தேவர்கள் இறைவனிடம் வந்து அசுரன்வலிமையைக் கூறிமுறையிடுகிறார்கள்; இறைவன், 'அம்பவள மேனி அறுமுகனே ! நீ அமரர் பகையை வென்று கொன்று வருக' என ஆணையிடுகிறார். அவ்வழகிய பாடல்அடிகள் வருமாறு:-

'எம்பெருமான் இறைவா முறையோ என்று
வம்பவிழ் வானோர் அசுரன் வலிசொல
அம்பவள மேனி அறுமுகவன் போயவர்
தம்பகை கொல்லென்ற தற்பரன் தானே'

(பாடல் எண்:503)

மேலும், "இறைவர், அறுகோணவடிவாய் ஆறுமுகங்களோடு தோன்றினார்; கந்தஸ்வாமி கலந்திருந்தார்; இவரை, இறைவனுக்கு மைந்தன் என்று இயம்பினார்கள்" எனவும் கூறப்படுகிறது. 'சண்முகன்' , 'கந்தன் சுவாமி' , 'அறுமுகத்தின் அதிபதி'என வரும் தொடர்களால் அறியலாம்.

பதினோராம் திருமுறைப் பிரபந்தங்களுள் ஒன்றாகிய 'திருக்கயிலாய ஞானவுலா' வில்

'செருக்குடைய சேனாபதி மயில்மேல் முன் செல்ல'

என்றும்,

நக்கீரர் அருளிய போற்றித் திருக்கலி வெண்பாவில்,

‘வானவர்கள் வேண்ட மயிலூரும் கோனவனைச்
சேனாபதியாகச் செம்பொன் முடிகவித்து
வானாள வைத்த வரம் போற்றி’ என்றும் கூறப்படுகிறது.

நக்கீரர் இயற்றிய ‘திருஈங்கோய்மலையெழுபதில் முருகன்

‘இன்பக்குமரர் (முது தாதையார் குன்று’)

என்று குறிப்பிடப்படுகிறான்.

திருக்கழுமல மும்மணிக்கோவையில்,

‘கொம்பிட்ட கோழிக்கொடி வேந்தன்’ என்றும்,

திருவிடைமருதூர் மும்மணிக்கோவையில்,

‘பூவலர்க் குடுமிச் சேவலம் பதாகை
மலைதுளைபடுத்த கொலைகெழு கூர்வேல் இறைவன்’ என்றும்

நம்பியாண்டார் நம்பி அருளிய திருத்தொண்டர் திருவந்தாதியில்,

‘சத்தித் தடக்கைக் குமரன் (நல்தாதை’)

என்றும் கூறப்பட்டுள்ளான்.

பன்னிரண்டாம் திருமுறையாகிய பெரியபுராணத்தில்,

1. ‘முன்னே வந்தெதிர் தோன்றும் முருகனோ’ என்றும்
2. ‘முருகலர் அலங்கற் செவ்வேள், முருகவேள்’ என்றும்,
3. ‘மயிலுடைக் கொற்ற ஊர்தி வரையுரங் கிழித்த திண்மை
அயிலுடைத் தடக்கை வென்றி அண்ணலார் அருளினாலே’

என்றும்

4. ‘ வென்றிவேள் ’என்றும்
5. ‘ குன்றம் எறிந்த வேலன் ’ என்றும் ‘நெடுவேலோன்’,‘எந்தையார் மைந்தர்’, ‘சேந்தன்’, ‘சரவணத் தனயர்’ என்றும் பல இடங்களில் முருகப்பெருமான் மொழியப்பெறுகிறான்.

இவையன்றி, கணபதி, கந்தன் ஆகிய இருவரையும் இணைத்த தோத்திரங்களாக எட்டுத் திருப்பாடல்கள் காணப்படுகின்றன. இவ்வண்ணம், 'சிவனேமுருகன் ' , 'முருகனே சிவன் ' என்று பேசும் சம்புபக்கமும், 'முருகன்தாதை', 'உமையவள் சேய்' 'குமரன் முதல் தேவர் தங்கள் நம்பி' என்று அன்பாக மகனாகப் பேசும் அணுபக்கமுமாகத் திருமுறைகள், முருகனது பெருமையை எடுத்துக் கூறுகின்றன.

நாலாயிர திவ்யபிரபந்தத்தில், முதலாயிரத்தில், தொண்டர்அடிப்பொடியாழ்வார் திருப்பள்ளி எழுச்சியில,

''இரவியர் மணிநெடுந் தேரொடும் இவரோ?
இறையவர் பதினொரு விடையரும் இவரோ?
மருவிய மயிலினன் அறுமுகன் இவனோ?
மருதரும் வசுக்களும் வந்துவந் தீண்டிப்
புரவியோடு ஆடலும் பாடலும் தேரும்
குமர தண்டம் புகுந்தீண்டிய வெள்ளம்
அருவரை யனைய நின் கோயில்முன் இவரோ?
அரங்கத் தம்மா! பள்ளி எழுந்தருளாயே'' (6வது பாசுரம்)

என்று, முருகன் குறிப்பிடப்படுகிறான்.

திருமங்கையாழ்வார், 'வள்ளி கொழுநன் முதலாய மக்களொடு முக்கணான்' எனச் சிவபெருமானைச் சுட்டும் போது, அவர்தம் மக்களைக் கூறுகிறார். மேலும், 'வேளும் சேயும் அனையார்' எனவும் 'திறல் முருகன் அனையார்' எனவும் பாடுகிறார்.

நம்மாழ்வார், குமரனார் 'கொடிக்கோழிக் கொண்டான்' எனவும் முருகனைக் குறிப்பிடுகிறார்.

ஒரு சமயம் ஆதிசங்கராசாரிய சுவாமிகள், திருச்செந்தூர் வந்தபொழுது அபிநவகுப்தன் என்பவன் அவர்கள்மீது அழுக்காறுகொண்டு, ஆபிசார வேள்வி செய்து அவர்களுக்குக் கயரோகநோய் உண்டாகுமாறு செய்தான். பகைவனுக் கருளும் நன்னெஞ்சம் கொண்ட அவர் அபிநவகுப்தனைச் சபிக்காது, செந்தில் நாயகன் திருவருள் வேண்டி, 'ஸ்ரீ சுப்ரமணியபுஜங்கம்' இயற்றிப் பாடித் தமது நோய் விலகப்பெற்றார். அந்நூலில், முருகப்பெருமானைப் பல அடைமொழிகளாலும், புகழ்மொழிகளாலும் போற்றுகிறார். இந்நூல் தமிழில் மொழிபெயர்க்கப்பட்டுள்ளது. அதில் சில அழகிய தொடர்கள் :-

1. 'அறுமா முகச் சோதி இதயத்திருந்த' எனவும்
2. 'மயிலூர்தி சதுர்வேதம் அறைகின்ற பொருளோன்' எனவும்
3. 'துங்க பராசக்தி அருள் சேய்' எனவும்
4. 'திரை பந்தியாய் வந்த கரை நின்ற செந்தில் சேயோன்' எனவும்
5. 'ஒரு சோதி வடிவோடு குகைமேவு செந்தூர்
   உயிருக் கோருயிர் செம்பொனடி பற்றுவோம்' எனவும்
6. 'குறையாத அருள் வீசு விழி பன்னிரண்டு' எனவும்

வருமாறு காணலாம்.

கம்பராமாயணத்தில்,

1. 'மயில் ஊர் கந்தனை அனையவர் கலைதெரி கழகம்'
2. 'ஓர் குமரன் அன்னான்'
3. 'சூர் அறுத்தவனும்'

முதலாகப் பல இடங்களில் முருகப்பெருமான் கூறப்படுகிறான்.

கச்சியப்ப சிவாசாரிய சுவாமிகள் இயற்றிய கந்தபுராணம், கருணையே வடிவான கந்தவேளின் பிறப்பையும், பெருமையையும், வீரத்தையும், அருட்கொடையையும் கூறும் புராணங்களில் சிறந்தது . இதில் முருகப் பெருமானுக்குப் பல அடைமொழிகளையும், புகழ்மலர் மொழிகளையும் தூவிப் பரவுகிறார், கச்சியப்பர். அவற்றில் சில :

1. 'வேண்டினர் வேண்டியாங்கு வேலவன் புரிந்துமேவும்'
2. 'என் உள்ளத்தில் உலவும் சிவன் உமைக்கினிய மைந்தன்'
3. 'மூவர்கள் முதல்வன்'
4. 'பல்லுயிர்த் தொகை படைப்பது நினைந்தனன் பரிவால்'
5. 'எல்லோரும் தொழுதகைய குமரனடி'
6. 'வில்லோர் பரவும் திறல் வேலவன்'
7. 'மூவிரு முகமுடை முதல்வன் வண்மையை
   நாவினி லொருவரால் நவிலற் பாலதோ'
8. 'கார்த்திகைக் காதலன்'
9. 'வாகைசேர் குமர வள்ளல்'

10. 'கருணையால் எந்தை நின்னை
நெற்றியங் கண்ணால் தந்தான்'
11. 'இகபரம் உதவுவான்'
12. 'ஞான நாயகன்'
13. 'எங்குமாகி இருந்திடு நாயகன்'
14. 'அறிஞர்க்கு அறிஞன்'
15. ' திறல் மேலான்'
16. 'ஆண்தகை வரம்பு சான்ற அறுமுகன்'
17. 'பரத்தின் மேற்படு பண்ணவன்'
18. 'கழல் சேர்ந்தார்க்கு அருத்திகொள்
முத்தியும் ஆக்கமும் ஈவோன்'

அருணகிரிநாதர் முருகப்பெருமானையே பாடிப் பரவும்'பரம பதிவிரதை' நிலைப் பக்தர்; அவர், அப்பெருமான்மீது தூவும் செஞ்சொல் மலர்களில் சில :-

1. 'முடிமேலே அஞ்சலி செய்வோர்கள் நேயக்கார'
2. 'தொழுது வழிபடுமடியார் காவற்காரப் பெருமாளே'
3. 'அவன், கால்பட் டழிந்ததுஇங் கென்தலை மேலயன் கையெழுத்தே'
4. 'வேதாமுதல் விண்ணவர் சூடு மலர்ப் பாதா'
5. 'தீர தீர தீராதி தீரப் பெருமாளே'
6. 'செந்தமிழ் சொல்பாவின் மாலைக்கார'
7. 'அயனைக் குட்டிய பெருமாளே'
8. 'அந்தண் மறைவேள்விக் காவற்கார'
9. 'செஞ்சொல் அடியார்கள் வாரக்கார'
10. 'மதுர வாணியுற்ற கழலோனே'
11. 'ஒன்றைத் தெரியக் கொஞ்சித் தமிழைப் பகர்வோனே'
12. 'என்று முளானே மனோகர வயலூரா'
13. 'முத்தமிழால் வைதாரையும் அங்கு வாழவைப்போன்'
14. 'என்றும் இளையோனே'
15. 'மயில்மேலே அகமகிழ்வு கொண்டு சந்ததம் வருகுமர'
16. 'அன்பர்க்கேயாம் இன்சொற் சேயே'

17. 'தனிமயில் கொண்டு பார் சூழ்ந்தவனே'

18. சூர குலாந்தகனே'

பகழிக் கூத்தர் வைணவ மரபினர்; இவர் தமக்கு ஏற்பட்ட வயிற்றுவலிக் கொடுமை தாங்காது வருந்தித் தெய்வத் திருவருளால் திருச்செந்தூரில் எழுந்தருளியிருக்கும் முருகப் பெருமான்மீது 'திருச்செந்தூர்முருகன் பிள்ளைத் தமிழ்' பாடித் துன்பம் நீங்கப் பெற்றார். அந்த அழகிய பிள்ளைத்தமிழில் முருகனை,

1. 'செந்தமிழுக்கு வாய்த்த திருச்செந்திற் பதிவாழும் கந்தன்' எனவும்
2. 'சரவண மிலங்க வந்த கந்தன்' எனவும்
3. 'சீர் கொண்ட நக்கீரனைச் சிறைவிடுத்தவர்' எனவும்
4. 'தெய்வக் களிற்றை மணம் புணர்ந்த சிறுவா' எனவும்
5. 'சைவநெறி ஈடேற வரு கவுணி யக்குழவி' எனவும் பாடுகிறார்.

இவர்போன்று குமரகுருபரர், குமரன் அருளால், ஊமை நீங்கிப் பேசும் திறன் பெற்றுப் பாடும் அருள் பெற்றவர்.

அவர் முருகப் பெருமான் மீது பரவும் சொன் மலர்களில் சில :

1. 'இளம் பருதி நூறா யிரங்கோடி போல
   வளந்தரு தெய்வீக வடிவும்'
2. 'மறை முடிவாம் சைவக் கொழுந்தே! தவக்கடலே!
   வானுதவும், தெய்வக் களிற்றைமணஞ் செய்தோனே'
3. 'மலையாள் வயிறு வாய்த்த முழுமணியே'
4. 'அருள்மொழி திருமுக மசைய'
5. 'அழகு கனிந்து முதிர்ந்த விளங்கனி'

19 ஆம் நூற்றாண்டில் வாழ்ந்த இராமலிங்க வள்ளலார் காட்டும் முருகனைக் காண்போம் :-

1. 'சீர்கொண்ட தெய்வ வதனங்கள் ஆறும்' என்றும்
2. 'பெம்மான் என்றடி குறித்துப் பாடும் வகை
   புரிந்த பெருமானே' என்றும்
3. 'சைவம் தழைக்கத் தழைத்தாண்டி'என்றும்

4. 'தெய்வ வடிவேல் முருகரே' என்றும்
5. 'பண்ணேறு மொழியடியார் பரவி வாழ்த்தும் பாதமலர்' என்றும்
6. 'கருணைக் கடல்' என்றும்

இவை முதலாக அவர் பரவுவன காண்க.

இருபதாம் நூற்றாண்டில் வாழ்ந்த முருகனடிமைகளில் தலைசிறந்தவர் பாம்பன் அடிகள்.

அடிகளாருக்கு, ஆறு அத்துவாக்களைக் கடந்தவனும், ஆறாதாரப் பொருளும், ஆறு காலங்களில் வணங்கத்தக்கவனும், ஆறுதலை உடையவனும், ஆறக்கரப்பதியும், ஆறுபடை வீட்டினனும், ஆகிய அறுமுகப் பெருமான்மீது அளவிறந்த காதல். அதனால் எதையும் ஆறு என்ற எண்ணிக்கையுடன் கூறுவார். ஆறுகாலம் பூசிப்பவர்; ஆகவே, தாம் பாடிய பாடல் தொகையும் ஆறு என்ற எண்ணுடையதாக அமையவேண்டும் என்ற எண்ணத்தில் அறுமுகன்மீது ஆறாயிரத்து அறுநூற்று அறுபத்தாறு பாடல்களைத் தொடுத்தவர். அவர் பாடல்களிலிருந்து சில தேன் துளிகள்:

1. 'அண்டமாய் அவனி யாகி அறிவொணாப் பொருளது ஆகித்
   தொண்டர்கள் குருவு மாகி'
2. 'அறு சமயத் தலைவனே' (ஓம் ஷண்மத பதயே நமோ நம)
3. 'உமை இளமதலை'
4. 'மங்கலச் செல்வத்தின் அதிபதியே' (ஓம் சுபநிதி பதயே நமோ நம)
5. 'வேலுக்கு இறைவனார்'
6. 'இகபர மிரண்டிற்கும் அதிபதியே' (ஓம் இகபர பதயே நமோ நம)

திருச்சிற்றம்பல நாடிகள் அகவலிலிருந்து சில அடிகள்:

'ஓம் எனும் தாரக ஒண்பொருள் சிவனுக்கு
ஆம் என மொழிந்தே அருள்குரு ஆனோன்;
பொற்புறு பொதிய வெற்புறு முனிக்கு
நற்பொருள் விளக்கும் ஞான தேசிகன்
பொய்வழிச் சமணப் புலையிருள் நீக்கிச்
சைவம் வளர்க்கும் சம்பந்த மூர்த்தி;
முருகன், குமரன், மூவிரு முகன், மால்
மருகன், சிவனருள் மைந்தன், கந்தன்,

மலைமகள் பாலன், வயங்கிளர் வேலன்,
கலைபயில் புலவன், கார்த்தி கேயன்,
வளைஒரு மருப்பு வாரண முகவற்கு
இளையவன், குமரன், மயில் ஏறும் பெருமாள்,
சூரசங் காரன், சுப்பிர மணியன்,
வீரருள் வீரன், விரைகழல் கடம்பன்,
சேந்தன், வள்ளி, தெய்வ யானை
காந்தன், செவ்வேள், காங்கேயன், சிலம்பன்,
ஆயிரம் நாமத்(து) ஐயன், தூய்யன்,
சேய், அருள் கோமான், சேவல் துவசன்'

எனச் சொல்லருவியாய் வருமாறு காண்க.

இருபதாம் நூற்றாண்டுக் கவிஞர்களும் ஆன்மீகப் பெரியவர்களும் அருளாளர்களும் முருகப்பெருமானை வழுத்திப் பாடுகின்றனர்.

பாரதியார்

1. 'சுருதிப் பொருளே வருக'
2. 'தோகைமேல் உலாவும் கந்தன் சுடர்க் கரத்திருக்கும்
 வெற்றி வாகையே சுமக்கும் வேலை வணங்குவது
 எமக்கு வேலை' என்று பாடுகிறார்.

கவிமணி தேசிக விநாயகம் பிள்ளை

'பன்னிருகை ஏந்துமெழில் செந்தில் இறைவா!

என்று பாடுகிறார்.

நாமக்கல் கவிஞர்

'இளமையந்த முருகன்' என்கிறார்.

புரட்சிக் கவிஞர் பாரதிதாசன், திருமுருகாற்றுப்படையின் முதல் ஈர் அடிகளுக்குப் பொருள் கூறுவார் போல்,

'சீர் கடப்பந்தார் குலுங்க மயில்மேலே அலை
சீறு கடல் மேலுதித்த வெயில்போலே வர
இது வேளை குகப் பெருமானே'

என்று அழகிய உவமையால் அப்பெருமானைப் பாடுகிறார்.

கவிஞர் கண்ணதாசன்,

'கந்தன் காலடியை வணங்கினால் கடவுளர் யாவரையும்
வணங்குதல் போலே' எனப்பாடுகிறார்.

வாரியார் சுவாமிகள், 'கந்தக் கடவுளே நமது சொந்தக் கடவுள்' என்று கூறுவார்கள்.

'முருகு' என்னுஞ் செஞ்சொல் அழகு, இளமை, மணம், கடவுள்தன்மை ஆகியவற்றைக் குறிக்கும்; அழகு உறைகின்ற இடமெல்லாம் அம்முருகு கொலு வீற்றிருக்கின்றது; முருகன் வீற்றிருக்கிறான். அவன் முருகன் என்ற சொல்லிலே இன்பந்தரும் தூய கற்கண்டாக இன்ப வடிவினனாய் உயர்ந்த பண்புகளின் உறைவிடமாய் விளங்குபவன்; உயர் தனிச் செம்பொருளாய், கண்ணிற்கு அழகாய், காதிற்கு நாதமாய், நாவிற்கு அமுதமாய், மூக்கிற்கு மணமாய், உடலுக்கு இனிய பரிசமாக, கருத்திற்கு விருந்தாக, உயிருக்கு உணர்வாக - இப்படி எல்லாமாக இருப்பவன் எம்பெருமான் முருகன்.

அப்பெருமான் அகந்தை நீக்கும் ஆண்டவன்; அருணகிரிநாதர், கந்தர் அநுபூதியில்,'பொறையாம் அறிவால் அரிவாய் அடியோடும் அகந்தையையே' என்று பாடுகிறார். கலியுகத்தில் கண்கண்ட தெய்வம் அப்பெருமான். எங்கும் நீக்கமற நிறைந்திருக்கும் பரம்பொருள். அடியார்கள் இடர்ப்படும் இடமெல்லாம் அவன் திருமுகங்கள் காணப்படுகின்றன. இன்னலில் சிக்கி 'முருகா' என அழைப்போரைக் காக்க அவனுடைய திருக்கரங்கள் எங்கும் வியாபித்துள்ளன. கந்தபுராணத்தில்,

'எங்கணும் பணி வதனங்கள், எங்கணும் விழிகள்,
எங்கணும் திருக்கேள்விகள், எங்கணும் கரங்கள்,
எங்கணும் திருக்கழலடி எங்கணும் வடிவம்,
எங்கணும் செறிந்தருள் செயும் அறுமுகத் திறைக்கே'

(மகேந்திர காண்டம் - காவலாளர் வதைப் படலம்) என்று கூறப்படுகிறது.

முருகப் பெருமான் தீராத இடர் தீர்ப்பவன்; பயில்வோர்உள்ளக்குகைக் கோயிலிலே தங்கியிருப்பவன்; பிறவிப் பிணி தீர்ப்பவன்; கயிலைத் தரிசனப் பலன் தருபவன்; கரையாத பாவத்தைக் கரைப்பவன். அக இருள் நீக்கி மனச்சாந்தி அளிப்பவன்; ஆபத்து விலக்குபவன்; ப்ரம ஞானம் அளிப்பவன்; கர்மவினை யறுப்பவன்; அமுத லாபம் அளிப்பவன்; பகை அழிப்பவன்; இயமபயம் அகற்றுபவன்; திவ்விய தரிசனம் அளிப்பவன்; வரமளிக்கும் வள்ளல்.

செந்தமிழ்த் தெய்வம் செவ்வேள் முருகன்; தமிழிருக்கும் இடமெல்லாம் அத்தலைவன் இருப்பான்; தமிழால் வைதாரையும் வாழவைப்பவன்; செந்தமிழ்ப் பாவின் மாலைக்காரன்; தலைச்சங்கத்திலிருந்து தமிழாய்ந்த தலைவன்; அன்று உருத்திரசன்மனாக வந்து இறையனார் அகப்பொருளுக்கு நக்கீரர் உரையே சிறந்தது எனத் தெளிய உதவியவன்.

கச்சியப்ப சிவாசாரியரின் கந்தபுராணம் அரங்கேறச் சோழநாட்டு நற்புலவனாய் வீரசோழியம் ஏந்தி வந்தவன்.

தொல்காப்பியர் தொடங்கி இன்றுவரை உள்ள கவிஞர்களுக்குப் பற்றுக்கோடாகவும் உற்ற துணையாகவும் நின்று உதவுபவன் முருகன். அவனது புகழ் அளவிடற்கரியது. கச்சியப்பர் கூறுவது போல்

மூவிரு முகமுடை முதல்வன் வன்மையை
நாவினில் ஒருவரால் நவிலற் பாலதோ?

(தாரகன் வதைப் படலம்)

இத்துணைப் பெருமைக்கும் பேற்றிற்கும் கருணைக்கும் வீரத்திற்கும் உரிய முருகப் பெருமானுக்கு என ஒரு தனி நூலாக, முதல் நூலாகத் திருமுருகாற்றுப்படை பாடியுள்ளார் நற்றமிழ்ப் புலவர் நக்கீரர். சங்க நூல்களில், ஒவ்வொரு தொகைகைநூலுக்கும் ஒவ்வொரு கடவுள் வாழ்த்தை அமைத்துப் பாடியிருக்கிறார்கள் புலவர் பெருமக்கள். பத்துப்பாட்டுத் தொகுப்பில் தனியே கடவுள் வாழ்த்து இல்லாவிட்டாலும் திருமுருகாற்றுப்படையே முதல் பாட்டாக அமைவதால் பத்துப்பாட்டுக்குரிய கடவுள் வாழ்த்தாகவே அஃது அமைகிறது. ஆற்றுப்படை வரிசையில் அமைந்த நூல்கள் பல. கூத்தராற்றுப்படை, சிறுபாணாற்றுப்படை, பொருநராற்றுப்படை,

பெரும்பாணாற்றுப்படை, விறலியராற்றுப்படை என்றெல்லாம் ஆற்றுப்படை நூல்கள் அமைந்துள்ளன.

'ஆறு' என்பதற்கு வழி என்றும் 'படை' என்பதற்கு 'படுத்துதல்' , 'செலுத்துதல்' என்றும் பொருள் கூறல் சிறக்கும். திருமுருகாற்றுப்படை என்பது திருமுருகனிடத்து ஆற்றுப்படுத்துவதாகும். முருகாற்றுப்படை என்பதற்கு வீடுபெறுவதற்குப் பக்குவமுடைய ஒருவனை வீடுபெற்றான் ஒருவன் முருகனிடத்தே ஆற்றுப்படுத்துவது என்று பொருள் கூறலாம். இங்கு முக்திநிலை கூறப்படுகிறது. அதாவது ஜீவன்முத்தியை அடைந்தவன் வழிப்படுத்துகிறான் எனப்பொருள்கொள்ள வேண்டும். இத்திருமுருகாற்றுப்படை இம்மை, மறுமை இரண்டிற்கும் இன்பமளிக்கும் பெருநூல். நாம் நாடிப் பற்றிய காலத்தில் குறைவிலா நிறைவு உடைய பொருளால் தரப்படும் திருவருட்செல்வம் நம் உள்ளத்தில் நிறைகிறது. இத்தகைய திருவருட் செல்வத்தைக் கொடுப்பவன் முருகன் ஆதலால் 'திரு' எனும் அடைமொழி இந்நூலுக்கு முதலாகத் திகழ்கிறது. பொதுவாக ஆற்றுப்படையில் ஒருவனை வழிப்படுத்துபவன், வழிப்படுத்தப்படும் அந்த இரவலன், அவ்விரவலனுக்குப் பொருள் தரும் தலைவன் என மூவரது நிலை கூறப்படும். ஆனால் இத் திருமுருகாற்றுப்படையில் தலைவன் நிலையே கூறப்படுகிறது. ஏனைய ஆற்றுப்படைகளில் கூறப்படும் மூவரும் நூலெழுந்த காலத்தவர், பின்னால் நிலையில்லாதவர்; ஆனால் இத்திருமுருகாற்றுப்படையில் பேசப்படும் இம்மூவரும் என்றும் நிலைத்து நிற்பது கண்கூடு. முருகவேளே உலகவள்ளல்களால், ஒழிக்க முடியாத கொடிய பிறவித்துன்பத்தை ஒழிக்க வல்லவன். உலக வள்ளல்கள் அனைவரினும் மேம்பட்டவனும் தனிச் சிறப்புடையவனும் அவனேயாவான். உலக வள்ளல்கள் காலத்தாலும் இடத்தாலும் கட்டுப்பட்டவர்கள்; முருக வள்ளலோ காலத்தாலும் இடத்தாலும் கட்டுப்பட்டவனல்லன். உலக வள்ளல்கள் பொருள் தரும் வள்ளல்கள்; முருக வள்ளலோ பொருளோடு அருள் தரும் வள்ளல். பொருள் ஒரு காலத்தில் ஒருவரிடத்தில் இருந்து மற்றொரு காலத்தில் அவரை விட்டு நீங்கிப் போவது; அழிந்து போவது. அருளோ என்றும் நிலையாக நிற்பது; அழியாதது. பொருள் வள்ளல்கள் போலல்லாது அருள்தரும் முருகன் எங்கும் நீக்கமற நிறைந்தவன். இருந்த இடத்திலிருந்தே வணங்கித் துதித்து அவன் அருளைப் பெறலாம். இதனால்தான் இந்நூல் பத்துப்பாட்டுள் முதன்மை பெற்றுத் திகழ்கிறது. 11ஆம் திருமுறையிலும் இடம்பெற்றுப் பண்டுதொட்டு இன்றுவரை போற்றப்பட்டு

வருகிறது. இது நூலென்ற அமைப்பில், அளவில், பாராட்டிப் படிக்கப்படுவதல்லாமல், தெய்வமாகவும் போற்றப்பெறுகிறது. திருவிரிஞ்சை முருகன் பிள்ளைத்தமிழில் குழவி முருகனைத் தெய்வங்கள் காத்தல் வேண்டும் என்று கூறும் காப்புப் பகுதியில் இந்நூலும் காவல் தெய்வமாக நல்லிடம் பெற்றுள்ளது.

திருவாசகத்தில் சிவபுராணத்தின் இறுதியில்,

'சொல்லிய பாட்டின் பொருளுணர்ந்து சொல்லுவார்
செல்வர் சிவபுரத்தின் உள்ளார் சிவனடிக் கீழ்ப்
பல்லோரும் ஏத்தப் பணிந்து' என்று கூறப்படுகிறது.

இச்சிவபுராணம் பலராலும் பாராயணம் செய்யப்படுவது; அதே போன்று திருமுருகாற்றுப்படையும் முருக பக்தர்களாலும் பிறபக்தர்களாலும் பாராயணம் செய்யப்படுவது. இதை ஓதினார் தீது நீங்குவர். இத்திருமுருகாற்றுப்படை புலவராற்றுப்படையைச் சார்ந்தது என்பர். நச்சினார்க்கினியர்அக்கருத்தை மறுத்து உரைக்கின்றார். இது நிற்க.

தமிழர்கள் நிலத்தைக் குறிஞ்சி, பாலை, முல்லை, மருதம், நெய்தல் என ஐந்தாகப் பகுத்துப் பார்த்தனர்; ஒவ்வொரு நிலத்தின் இயல்பு, வாழும் விலங்குகள், மக்கள், தொழில், மலர், தெய்வவழிபாடு முதலாக அறுதியிட்டு அடையாளம் காட்டினர்.நக்கீரர் திருப்பரங்குன்றம் மருதநிலம், சீரலைவாய் நெய்தல் நிலம், ஆவினன்குடி முல்லை நிலம், பழமுதிர்சோலை குறிஞ்சிநிலம் என பாண்டிய நாட்டில் நான்கு தலங்களைக் கூறி, சோழநாட்டில் மருதநில வைப்புக்கூறி, குன்று தோறாடலில் எல்லா நாட்டு எல்லா மலைகளையும் தழுவியிருப்பது இங்கு போற்றற்குரியது. இவ்வுலகு, நிலமகள் நீலநிற ஆடை புனைந்தது போன்று எங்கும் கடலால் சூழப்பட்டது. உலகம் தோன்றிய காலத்தில் உலகு கடலில் மூழ்கியிருக்கும்போது நீர் வடிய ஆரம்பித்தால், முதலில் தெரிவது மலை.

'கல்தோன்றி மண்தோன்றாக் காலத்தே வாளோடு
முன்தோன்றி மூத்த குடி'

எனத் தமிழ்மறக்குடி கூறப்படும். முதல் நிலமாகிய குறிஞ்சி உயர்ந்தது; மலையும் மலை சார்ந்த இடத்தையும் குறிப்பது; வடமொழியில் 'பூசைக்குரியவன் உச்சி நிலையில் இருப்பான்' என்று கூறுவார்கள். தமிழர்கள் தமிழ்த்தெய்வமான முருகப்பெருமானை

உயர்ந்த இடத்திலே வைத்து வழிபட்டனர். சங்கநூல் அப்பெருமானை 'மலைகிழவோன்' என்றும், 'குறிஞ்சித்தலைவன்' என்றும் கூறும். கிழவன் என்பதற்கு 'உரியவன்' என்பது பொருள். சங்கநூல்களில் குறுந்தொகையில் 'கடியுண் கடவுள்' என்று கூறப்படுகிறது. அதாவது புதியவற்றை ஏற்பவன் என்பது பொருள். திருமுருகாற்றுப்படையின் கடைசி அடி' பழமுதிர் சோலை மலைகிழவோனே' என வருகிறது.

அருணகிரிநாதரது திருப்புகழில் சில இடங்களில் இத்திருமுருகாற்றுப்படையைப் பற்றிய குறிப்புகள் வருகின்றன. திருஏரகம் திருப்புகழில்,

'வளவாய்மை சொற் ப்ரபந்தம் உள
கீரனுக்கு உகந்து மலர்வாயிலக்கணங்கள் இயல்பு
ஓதி, அடி, மோனை, சொற்கு இணங்க
உலகம் உவப்ப என்று உன் அருளால்
அளிக்கும் கந்தப் பெரியோனே'

('கடிமா மலர்க்கு'என்ற திருஏரகம் திருப்புகழ்) அதாவது செம்மைச் சொல்லமைப்புத் திறமுடைய, நக்கீரருக்குத் தமிழ்இலக்கணங்களின் இயல்புகளைச் செங்கனிவாய் மலர்ந்து ஓதுவித்து, அடி, மோனை, சொல் என்ற யாப்புக்கு இணங்க 'உலகம் உவப்ப' என்று அடியெடுத்துத் தந்து திருமுருகாற்றுப்படை என்னும் சீரிய நூலைப் பாடச் செய்த கந்தப்பெருமானே' என்ற பொருள்பட வருதல் காண்க.

மேலும்

'கீதவிசை கூட்டி வேதமொழி சூட்டு
கீரனிசை கேட்ட க்ருபைவேளே' என்றும் பாடுகிறார்.

சிவப்பிரகாச சுவாமிகள்,

'பாவுள் முந்துற வந்து நிற்கும்
முருகாற்றுப் படை மொழிந்தான்' என்று பாடுகிறார்.

அந்தகக் கவி வீரராகவ முதலியார்,

'தவிராத வெவ்வினை தவிர்க்கும் முருகாறு'

என்று பாடுகிறார். திருமுருகாற்றுப்படை, முருகில் ஒளிரும் நுண்ணியல்புகளின் பரிணாமம் எனக் கூறலாம்.

முருகனின் தொன்மையும் மணங்கமழும் தெய்வத்தன்மையும் நூல்முழுதும் விரவியும் பரவியும் உள. அவை சொன்மலரால் தூவி ஆராதிக்கப்படுகின்றன.

இத்திருமுருகாற்றுப்படையை இயற்றிய நக்கீரர் மதுரையைச் சேர்ந்தவர். மதுரை மேல மாசிவீதியில் நக்கீரர் கோயில் இருப்பதும், திருப்பரங்குன்றத்தில் நக்கீரருக்குச் சிலையிருப்பதும், திருஈங்கோய் மலையில் நக்கீரருக்கு வழிபாட்டிற்காக நிவந்தம் அளித்த செய்தியைக் கூறும் கல்வெட்டு இருப்பதும், நக்கீரர் இந்நூலால் சமய உலகில் பெற்ற பெருஞ்சிறப்பையும் விளக்கும்.

தொல்காப்பியர் காலத்தில் குறிஞ்சிநிலத்து நிகழ்ந்த முருகவழிபாடு, பின் எல்லை கடந்து, நாட்டில் பரவியது; திருப்பரங்குன்றம், திருச்சீரலைவாய், திருவாவினன்குடி, திருஏரகம் ஆகிய தலங்களிலும் பழமுதிர்சோலைமலையிலும், பல மலைத் தலங்களிலும், சிறப்பாக முருக வழிபாடு நடந்தது; நடந்துவருகிறது.

இத்திருமுருகாற்றுப்படையை நக்கீரர் பாடக் காரணமாகக் கதை ஒன்று சொல்லப்படுகிறது. மதுரைத் திருவிளையாடல் புராணத்திலும் திருப்பரங்குன்றப் புராணத்திலும் சீகாளத்திப் புராணத்திலும் நக்கீரர் திருமுருகாற்றுப்படையைப் பாடிய வரலாறு கூறப்படுகிறது. இந்த வரலாற்றில் ஒவ்வொரு புராணத்திலும் சில வேறுபாடுகள் காணப்படுகின்றன.

ஆயினும் இப்புராணங்கள் கூறுவதிலிருந்து நக்கீரர் சிவபெருமான்முன் எதிர்வாதம் செய்ததும், அதனால் இறைவன் கோபத்திற்கு ஆளாகித் துன்பமடைந்ததும், பின் இறையருளால் மீண்டும் பழைய நிலையை எய்தியதும் அனைத்திற்கும் பொதுவான வரலாறு எனத் தெரிகின்றது.

சிவப்பிரகாச சுவாமிகள் இயற்றிய சீகாளத்திப் புராணத்தில் இக்கதை கீழ்க்கண்டவாறு கூறப்படுகிறது:-

பாண்டிய நாட்டிலே, சோமசுந்தரக் கடவுள் அறுபத்து நான்கு திருவிளையாடல்கள் இயற்றிய மதுரையம் பதியிலே, சரஸ்வதி அன்னையின் அருள்பெற்று, உலக முழுமையும் தம் புகழை நாட்டி, பொய்யடிமையில்லாப் புலவர் எனப் பெயர் பெற்ற நக்கீரதேவர், கபிலதேவர், பரணதேவர் முதலிய நாற்பத்தெண் புலவர்களும், சிவபெருமானைச் சங்கப்பலகை கேட்டு வணங்குகின்றனர்.

அப்பெருமான் புலவர் உருக்கொண்டு எழுந்தருளிச் சங்கப் பலகையை அருளினார். அப்பலகை நுண்மாண் நுழைபுலம் கொண்ட புலவர்களுக்கு 'முழம் வளர்ந்து இடங்கொடுக்கும்' தன்மையது. சிவபெருமானே இறையனார் என்னுந் திருநாமத்தோடு அவர்களுள்ளே ஒரு புலவராய் வீற்றிருந்து ஐயந்திரிபுகளை அகற்றியருளினார்.

அந்நாளில், வங்கிய சூடாமணி என்னும் பாண்டியன், இவர்களுக்கு உற்ற துணைவனாகவும் கற்றறிந்த மேன்மை உடையவனாகவும் விளங்கினான். அப்பாண்டியன், வசந்த காலத்திலே ஒரு நாள் மேல்மாளிகையிலே தன் மனைவியோடு வீற்றிருந்தபோது, தென்றலோடு கலந்து ஒரு திவ்வியமணம் வீசுவதை உணர்ந்தான். அது அவன் மனைவியின் கூந்தலிலிருந்து வீசுவதை அறிந்து 'இம்மணம் இவள் கூந்தலுக்கு இயற்கையோ! செயற்கையோ' என ஐயுற்றான். தன் மனத்தெழுந்த ஐயத்தை நீங்கச் செய்யும் செய்யுளியற்றும் புலவருக்கு ஆயிரம் பொன் பரிசளிக்கப்படும் என அறிவித்தான். இந்த ஆயிரம் பொன்னை ஓர் முடிப்பாக்கி அதைச் சங்க மண்டபத்தில் முன்னே தூக்கினான். புலவர்களுக்கு அரசன் கருத்து விளங்காமையால் வெவ்வேறு பொருளில் பாடல்கள் இயற்றி அரசனிடம் பாடினர். அவற்றில் பாண்டிய மன்னனுக்கு உடன்பாடு இல்லை. அதனால் பொற்கிழி அறுப்பாரின்றி இருந்தது. அந்நாளில் உரோகணி நட்சத்திரத்தில் சனி பிரவேசிக்க, சூரிய கிரகணமும் சந்திர கிரகணமும் அமாவாசை பௌர்ணமைகளிலே அடுத்துவர, செவ்வாய் முற்பட்டு சுக்கிரன் பிற்பட்டமையால் மழையில்லை, விளைச்சல் இல்லை. பசிப்பிணி வருத்தியது. அப்போது மதுரையில் சோமசுந்தரக் கடவுளை வழிபடும் ஆதிசைவர்களிலே ஒருவனாகிய தருமி என்பவன்சோமசுந்தரக் கடவுளிடம் தான் வேறு தேசத்திற்குச் சென்று பிழைத்து, மதுரை செழித்தபின் திரும்பி வருவதாகக் கூறினான். சோமசுந்தரக் கடவுள் திருவருள் சுரந்து, 'கொங்குதேர் வாழ்க்கை' எனத் தொடங்கும் பாடலை எழுதித் தந்தருளி, அப்பாடலைப் பாண்டியனிடம் காட்டிப் பொற்கிழி பெற்றுக்கொள்ளுமாறு கூறினார். பாடலைப் பெற்றுச் சென்ற தருமி, பாண்டியனிடம் அப்பாடலை வாசித்துக் காட்டினான். பாண்டியன் தன் ஐயம் தீரும் வகையில் பாட்டு அமைந்திருந்ததால் மகிழ்ந்தான். மேலும் அவன் 'இப்பாடலைச் சங்கப் புலவர்கள் பால் சென்று அரங்கேற்றுவீராக' என்றுரைத்தான். தருமியின் பாடலைக் கேட்ட நக்கீரர், தம் கல்விச் செல்வத்தினால் அதிகரித்த இறுமாப்பினால்'இப்பாடல் குற்றமுடையது' என்று உரைத்தார். அதுகேட்ட தருமி மனம் வருந்தி, சோமசுந்தரக் கடவுள் சந்நிதியை அடைந்து 'ஒப்புயர்விலாத பெருமானே! சில்வாழ்நாளையும் சிற்றறிவையுமுடைய ஒரு புலவர்

தேவரீர் செய்யுட்குக் குற்றங்கூறினார்' என முறையிட்டான். அப்பெருமான், புலவர் வடிவங்கொண்டு சங்கமண்டபத்திற்கு வந்து, 'குற்றமற்ற நமது செய்யுளுக்குக் குற்றங் கூறினவர் யாவர்? என்று வினவினார். நக்கீரர் 'யானே கூறினேன்' என்று தருக்கோடு விடைகூறினார். நக்கீரர் 'பெண்கள் கூந்தலுக்கு செயற்கையாலல்லாது இயற்கை மணம் இல்லை' என்றார். பெருமான் 'அரம்பையர் கூந்தலுக்கு மணம் இயற்கையன்றோ?' என்று கேட்க, நக்கீரர் அதுவும் செயற்கை மணமே என்று கூறினார். இந்தச் சொற்போரின் உச்சக் கட்டமாக சோமசுந்தரக் கடவுள், ''நாளும் நீ வழிபடும் காளத்திநாதரது பாகத்தமர்ந்த ஞானப் பூங்கோதையின் கூந்தல் மணம் எத்தன்மையது?'' என்று வினவினார். 'அதுவும் செயற்கையானதே' எனச் சாதித்தார் நக்கீரர். இறைவன் நெற்றிக்கண்ணையும் சடைமுடியையுங் காட்டினார். நக்கீரர் விபரீத உணர்ச்சியால், கடவுளை நோக்கி, 'நீர் வடிவமுழுதும் கண்ணைக் காட்டினும், உமது பாடல் குற்றமே' என்று கூறித் தமது கொள்கையில் உறுதியாக இருந்தார். சினமுற்ற சிவபிரான் நக்கீரரை நோக்கி 'வேதங்களால் புகழப்படும் அம்பிகையினது கூந்தலை எம்மோடு மாறுபட்டுப் பழித்தாயாதலால் நீ குட்ட நோய் கொண்டு இம்மையில் அலைக' என்று சாபமிட்டார். நக்கீரர் தம் தவறு உணர்ந்து வேண்ட, அப்பெருமான் திருவுள்ளமிரங்கி 'நக்கீரனே! நீ சென்று கயிலையைக் காணின் இக் கொடுநோய் நீங்கும்' என்று அருளி மறைந்தார்.

நக்கீரர் சிவபிரான் தந்த சாபத்தால் பிணி உடலில் பரவுவதை உணர்ந்தார். அந்நோய் முதிருவதற்கு முன்னே கயிலை அடைந்து சாப விமோசனம் பெறவிரும்பினார். சங்கப் புலவர்களைத் தனித்தனியே அழைத்து 'நண்பர்களே, உங்களோடு உடன் வசிக்கும் வாழ்வை இழக்கிற பாவியாகிய என்னை மறவாதீர்' என்று வியாதி காரணமாக விலகி நின்றார். அவர்கள் அதை அறிந்து நெருங்கியணைந்து கண்ணீர்பெருக உள்ளம் குழைந்து, பயனற்றோம், யாங்களே பாபமுதிர்ச்சி உடையவர்கள்' என்று வருந்தினர். நக்கீரர் அவர்களைத் தனித்தனியே தழுவி, ''நட்பிற்கு, ஒரு தேயத்தராய் உடன் கலந்து பழகுதல் வேண்டுவதில்லை, உணர்ச்சி ஒத்தலே சிறப்பு என உணர்ந்த பெரியீர்!, சிறியேன் பொருட்டு வருந்தற்க; யான் செல்கிறேன்'' என்று கூறி விடைபெற்றார். இனி இம்மதுரையையும் சோமசுந்தரக் கடவுளையும் அங்கயற் கண்ணம்மையையும் பாண்டியனையும் சங்கப் புலவர்களையும் எக்காலம் காணப் பெறுவோம் எனவும், இனிப் 'பொருந்திய கல்வி உடைய புலவர்கள் நாற்பத்தேழுபேரென்று உலகம் உரைக்குமோ? எனவும் தமிழினிமையினை எடுத்து யாவர்க்கு உணர்த்துவோம் எனவும் வருந்தி

வருந்திக் கூறி விடைபெற்றார். நக்கீரரின் இந்நிலையைச் சிவப்பிரகாசர் மிக அழகாகக் கூறுகிறார்:-

''என்றினி மதுரை காண்பேம் !
எப்பகல் சவுந்த ரேசன்
தன்திரு வடிகள் காண்பேம் !
தாயைஎஞ் ஞான்று காண்பேம்
வென்றிவேல் தரும வேந்தர்
வேந்தனை எந்நாட் காண்பேம் !
ஒன்றுயிர்த் துணையாம் சங்கத்
துறவை எப்பொழுது காண்பேம் ! '' என்றும்

'இணங்குநூல் புலவர் நாற்பான் எழுவர்என்று உரைக்கும் கொல்லோ?' என்றும்

'இனித்தமிழினிமை யாவர்க்கு எடுத்துஇசைத் திடுவம் மன்னோ'

என்றும் உருகி வருந்துவதாகக் கூறப்படுகிறது.

சோழநாடு, மகதநாடு, தொண்டைநாடு என்பவற்றில் உள்ள தலங்களையும், பருப்பதம், விருபாக்ஷம், கல்யாணபுரம், காசி திருக்கேதாரம் முதலிய தலங்களையும் தரிசித்து இமயமலையை அடைந்தார் நக்கீரர். உற்ற பிணி மிகவும் வருத்தியது. அங்கு கடலை ஒத்த ஓர் தடாகத்தில் நீராடி நியதி முடித்து, அதன் கரையில் ஒரு தழைத்த ஆலமரத்தடியில் தியானித்திருந்தார். அச்சமயத்தில் ஆலமரத்தினின்றும் ஓர் இலை பாதி நீரிலும் பாதி நிலத்திலும் அமைய விழுந்தது; நீரில் விழுந்த பாகம் மீனாகவும், தரையில் விழுந்த பாகம் பறவையுமாகி இழுத்துக்கொண்டன. இதைக் கண்டு அதிசயமுற்று, நக்கீரர் தியான நிலை தவறினார். ஒரு கரிய வலிய கொடிய பூதம் ஒரு குகைக்கு நக்கீரரைத் தூக்கிச் சென்றது. முன்பே அக்குகையில் தொள்ளாயிரத்துத் தொண்ணூற்றொன்பதின்மர் அடைபட்டிருந்தனர்; இப்பொழுது பூதம் கொண்டு வந்த இவரால் ஆயிரத்தவர் எண்ணிக்கை நிறைவுற்றது. பூதம் நீராடச் சென்றது. மற்றவர்கள் நக்கீரர் வரவால் தாம் உயிர் இழக்க உள்ள நிலையைக் கூறி வருந்தினர்; நக்கீரரையும் வசைபாடினர்.

நக்கீரர் வருந்தினார்; சிந்தித்தார். குமரகுருபரனை வழிபடின் துன்பங்கள்

கதிரவனைக் கண்ட பனியெனத் தொலையும் என்பதையும், ஆறெழுத்தை உச்சரித்தோர் அநாதிகாலம் தொடங்கியே அகலுதற் கரிதாய்த் தொடர்ந்த பிறவிநோய் அகன்று வேதாகமங்களால் விளம்புதற்கரிய மெய்யின்ப வீட்டிலே வீற்றிருக்கப்பெறுவர் என்பதையும் எண்ணினார். ஐந்துபெரும்பூதங்கள் வாய்ப்பட்டு அல்லலுறும் சீவான்மாக்களை உய்வித்துத் தன் செம்பொற் சிறு சதங்கை அணிந்த திருவடி நிழலிலே வைக்கும் குமரவேளுக்கு இச்சிறு பூதத்தால் ஏற்பட்ட துன்பம் துடைத்தல் அரிதோ என உணர்ந்து திருமுருகாற்றுப்படை பாடினார். அறுமுகக்குரிசில், தண்டமிழ் நக்கீரன் தமிழ்த்துதியால் மகிழ்ந்து, கடலிடைத் தோன்றும் செஞ்ஞாயிறு போல் மயில் வாகனத்தில் எழுந்தருளினார். புலவர் பெருமானை உண்ண அப்பூதம் அணுகவே கதை ஆயுதத்தால் பூதத்தை மோதி அழித்தார். யாவரையும் சிறைவிடுத்துத் திருவருள் பாலித்தார், நக்கீரர் முருகப் பெருமானைப் பணிந்து சிவபெருமான் இட்ட சாபத்தையும், தனது கயிலைப் பயணத்தையும் கூறினார். கந்தவேள் கருணை கூர்ந்து, ஆலவாயெந்தை இன்ன கயிலை என்று உரையாமையால் தென்கயிலையினாலும் தீப்பிணி தீருமெனத் திருவுளங்கொண்டு பொய்கை ஒன்றைக் காட்டி "இதில் மூழ்கினால் திருக்கைலையைக் காண்பாய்" எனவும், "எம்மைத் துதித்து இத்திருப்பாடலை ஓதினார் இஷ்ட சித்திகளை அடைவார் எனவும்" அருளி மறைந்தார்.

நக்கீரதேவர், அக்குழகனை வணங்கி, அப்பொய்கையிலே மூழ்கி, மேற்கடல் மறைந்த கதிரவன் கீழ்க்கடலில் எழுந்ததுபோலத் தென்கயிலை தோன்றப் பொன் முகலியில் எழுந்தார். அவரது வியாதி அகல மணிபோலத் திருமேனி விளங்கியது. நெஞ்சில் அன்பு மேலிட்டது; விழிகளில் நீர் சொரியக் கரங்களைச் சிரமேல்குவித்து நாகலிங்கப் பெருமானையும் ஞானப்பூங்கோதையம்மையையும் பணிந்தார்; ஐந்தெழுத்தை அகலாது உச்சரித்து அன்பால் உருகினார்; கயிலை பாதி காளத்தி பாதியாகக் கலந்து ஒற்றுமைப்படுத்தி வெண்பா அந்தாதி ஒன்றைப் பாடினார். காளத்திநாதர் தரிசனம் கிட்டியது. "வேண்டும் வரம் யாது?" எனக் கேட்டார் ஈசர். நக்கீரர் "இப்பிணி ஒழித்தருளியது போலவே அடியேனைப் பற்றியுள்ள ஆணவப் பிணியையும் அகற்றியருளல் வேண்டும்' என வேண்டினார். இறைவர் கீரனைத் தம்திருவடி நிழலிலே இருத்தியருளினார்,

பெரும்பற்றப்புலியூர் நம்பி இயற்றிய திருவிளையாடல் புராணத்திலும், பரஞ்சோதியாரின் திருவிளையாடல் புராணத்திலும், மதுரையில் சண்பகமாறன் என்று

அழைக்கப்பட்ட பாண்டியன் வங்கியசூடாமணி என்ற மன்னனுக்கு, '' பெண்கள் கூந்தலுக்கு இயற்கை மணமுண்டோ'' என்றெழுந்த ஐயம் தொடங்கி, சிவபெருமான் நக்கீரர் இடை நிகழும் விவாதம் வரை ஏறத்தாழ ஒன்றாகவே நிகழ்ச்சிகள் கூறப்படுகின்றன. பெரும்பற்றப்புலியூர் நம்பி திருவிளையாடல் புராணத்தில், தருமி கொண்டு வந்த பாடல் சிறந்தது என்பதை நக்கீரர் உணர்ந்தார். இதை நம்பி கீழ்க்கண்டவாறு தமது பாட்டில் இசைக்கிறார்:-

'பொற்புறும் அவனைக் கண்டு
பொறாமையால் இருந்த கீரன்
சொற்பொருள் அறியாப் பார்ப்பான்
நீ இதைச் சொல்லித் தந்த
நற்கவிப் புலவன் தன்னைக்
கொண்டுவா நாடி, உன்றன்
முற்கவிதைக்குக் குற்றம்
உண்டுபோ என முனிந்தான்'

நக்கீரர் அக்கவிதை சிறந்தது, அதை இயற்றியவர் நற்கவிப் புலவன் என உணர்ந்தார். ஆனால் அழுக்காறு அவரது அறிவை மறைக்கிறது. அதனால்

'முற்கவி தைக்குக் குற்றம்
உண்டுபோ '

என்று கூறிப் பாடலில் குற்றமிருப்பதாகக் கூறித் தருமியைக் கோபத்தோடு திருப்பி அனுப்பிவிடுகிறார்.

சீகாளத்திப்புராணம், பெரும்பற்றப்புலியூர் நம்பி திருவிளையாடல் புராணம், பரஞ்சோதியார் திருவிளையாடல்புராணம் ஆகிய மூவர் புராணங்களிலும் கீழ்க்கண்டவாறு சில வேறுபாடுகள் காணப்படுகின்றன:-

1. சீகாளத்திப் புராணத்தில் நாட்டில் ஏற்பட்ட பஞ்சம் காரணமாகத் தருமி சோமசுந்தரக் கடவுளிடம் தான் வேறு தேசத்திற்குச் சென்று பிழைத்து,

மதுரை செழித்த பின் திரும்பி வருவதாகக் கூறியதாகவும், சோமசுந்தரக் கடவுள் அருள்சுரந்து 'கொங்குதேர் வாழ்க்கை' எனத் தொடங்கும் பாடலை இயற்றித் தந்ததாகவும் கூறப்பட்டுள்ளது. ஆனால் மற்ற இரு திருவிளையாடல் புராணங்களிலும், தருமி தனக்குத் திருமணம் முடிக்கப் பொருள் வேண்டி, "பாண்டியன் மனக்கருத்தினைப் புலப்படுத்தும் செய்யுள் ஒன்று தந்தருள்க" எனச் சோமசுந்தரக் கடவுளிடம் வேண்டிப் பெற்றதாகக் கூறப்படுகிறது.

2. சீகாளத்திப் புராணத்தில் சிவபெருமான் நக்கீரர்க்கு 'நீ குட்டநோய் கொண்டு அலைக' என்று சாபமிட்டதாகக் கூறப்பட்டுள்ளது. மற்ற இரு புராணங்களும் சிவபெருமான் நுதல்விழிச் செந்தீயின் வெம்மை பொறுக்கலாற்றாமல் நக்கீரர் பொற்றாமரை வாவியில் வீழ்ந்து மூழ்கினார் எனவும், புலவர்களெல்லாம் பொறுக்கலாற்றாராய், வேண்டுவார் வேண்டியவற்றை ஈந்தருளும் சுந்தரேசர் முன் இறைஞ்ச, அப் பெருமான் உமையம்மையோடு எழுந்தருளி நக்கீரனை அருட் கண்ணால் நோக்கியருளினார் எனவும், நக்கீரர், தாம் ஞானப்பூங்கோதையார் கூந்தலுக்குக் குற்றங் கூறிய பிழையினைப் பொறுத்தாண்ட இறைவனின் பெருங்கருணைத் திறனை, நினைந்து நினைந்து உருகியவராய், கயிலைபாதி காளத்திபாதியந்தாதி பாடித் துதித்தார் எனவும் தம் திருவடியைப் பற்றினோரைப் பிறவிக்கடலினின்றும் கரையேற்றுபவராகிய முதல்வர், நக்கீரனது கையினைத் தமது திருக்கையால் பற்றி அவ்வாவியினின்றும் கரையேற்றி அருளினார் எனவும் பாடுகின்றன.

3. சீகாளத்திப்புராணம், திருமுருகாற்றுப்படையையும் அந்தாதியையும் கூறுகிறது. பரஞ்சோதிமுனிவர் அருளிய திருவிளையாடலானது, அந்தாதி, கோபப்பிரசாதம், பெருந்தேவபாணி, எழுகூற்றிருக்கை என்னும் நான்கு நூல்களையும் சுட்டுகிறது. நம்பி திருவிளையாடல், அந்தாதியைச் சுட்டுவதுடன், இறையனார் களவியலையருளிய வரலாற்றையும் புலவர்கள் அதற்கு உரைகண்ட வரலாற்றையும் கூறுகின்றது.

4. நம்பி இயற்றிய திருவிளையாடல் புராணம் சொக்கநாதர் புலவராய் அமர்ந்திருந்தபொழுது அவர்க்கு இன்ன இன்ன பெயர்கள் வழங்கின என்று குறிக்கிறது.

5. சீகாளத்திப் புராணம், அக்காலத்துப் பாண்டி நாட்டில் நிகழ்ந்த வற்கடத்தை விரித்துரைக்கின்றது. இரு திருவிளையாடற்புராணங்களிலும் வற்கடம் கூறப்படினும், இக்கதை நிகழ்ந்த காலத்தை ஒட்டிக் கூறப்படவில்லை.

6. சீகாளத்திப்புராணம், நக்கீரர் திருமுருகாற்றுப்படையைக் கயிலைமலையில் பாடியதாகக் கூறுகிறது.

7. தருமிக்குப் பொற்கிழி நல்குவிக்கச் சொக்கநாதர் 'கொங்குதேர் வாழ்க்கை' என்ற பாட்டருளியதும், அவர் புலவராய்ச் சங்கமேறியதும் ஆகிய செய்திகள் கல்லாடம், திருநாவுக்கரசு நாயனார் தேவாரம், பெரியபுராணம் முதலியவற்றில் கூறப்படுகின்றன.

8. சீகாளத்திப்புராணம் கூறும் வறகடநிகழ்ச்சி மணிமேகலை, சிலப்பதிகாரம் களவியல் உரை ஆகியவற்றில் கூறப்படுகிறது.

திருப்பரங்கிரிப்புராணம், நக்கீரச் சருக்கத்தில், திருமுருகாற்றுப்படை பாடிய வரலாற்றைக் கூறுகிறது.

நக்கீரர், கடவுளரில் சிவபிரானையும், மானுடரில் பாண்டியனையும் தவிரப் பிறர் யாரையும் பாடுவதில்லை என்ற கொள்கையோடு இருந்தார். அதை உணர்ந்த முருகப் பெருமான், நக்கீரர் தம்மைப் பாடுவிக்கத் திருவுள்ளங்கொண்டவராய், உக்கிரண்டாபரணனை அழைத்து, ''சரவணப் பொய்கைக்குப் போதரும் நக்கீரரை ஒரு குற்றம் கற்பித்து மலையில் சிறைப்படுத்து'' எனப் பணித்தார். நக்கீரர் சரவணப் பொய்கையில் பூசனை புரிந்தார். அவ்வண்டாபரணன் அங்கு இருந்த அரச மரத்தின் இலை ஒன்றினைக் கிள்ளியிட, அவ்விலையின் ஒரு பகுதி நீரிலும் மற்றொரு பகுதி நிலத்திலும் விழவே, அவ்விரு பகுதியும் முறையே மீனும் பறவையுமாகி ஒன்றை ஒன்று பற்றி இழுத்துக் கொண்டன. அதனைக் கண்ட கீரனார், இரக்க மேற்கொண்டு, அவற்றைப் பற்றி நகத்தினால் பிரித்துவிட்டார். இவ்வாறு பிரித்து விடவே அம்மீனும் பறவையும் உயிர் நீத்தன. சமயங்கருதிக் காத்திருந்த அண்டாபரணன் 'முருகப் பிரானது பரங்குன்றத்தில் கொலைப் பாதகம் புரிந்தனை' என்று கூறி அவரை எடுத்துச் சென்று ஓர் மலை முழைஞ்சினுள் அடைத்திட்டான். நக்கீரனார் 'இது கந்தவேளைப் பாடாக்குறை' என உணர்ந்து திருமுருகாற்றுப்படை பாடினார். அப்பாட்டின் இறுதியில் 'கிழவோனே' என முடித்திருத்தலைக் கண்டு, முருகப்பெருமான் நக்கீரர் கனவில் தோன்றி, ''நீ நம்மைக் 'கிழவன்' என்றனை, நாம் கிழவராய் வரப்பன்னாள் செல்லவேண்டும்'' என்று சொல்லி மறைந்தருளினார். பின்னர் நக்கீரர்

'குன்ற மெறிந்தாய் குரைகடலிற் சூர்தடிந்தாய்
புன்றலைய பூதப் பொரும்படையாய் - என்றும்
இளையா யழகியா யேறூர்ந்தா னேறே
உளையாய்என் உள்ளத் துறை'

என்ற வெண்பா இயற்றித் துதித்தார். இப்பாடலில் 'இளையாய்' என அழைத்திருப்பது கண்டு நெடுவேளானவர் மனமகிழ்ந்து பல்வகைத் தேவருடன் எழுந்தருளி, வேற்படை விடுத்துக் குகையினைத் திறந்து நக்கீரனாரையும் மற்றவரையும் விடுவித்தார். நக்கீரர் வெளிவந்து அறுமுகப்பெருமானை மணிமயில் மேற்கொண்டு வருமாறு பலவாறு போற்றிசைத்து, திருமுருகாற்றுப்படையினை மெய்யன்புடன் ஓதுவார் வேண்டும் வரங்களைத் தந்தருள வேண்டினார். பின் தினமும் திருமுருகனை வழிபட்டு வரலானார் என்பது இப்புராணம் கூறும் வரலாறு .

திருப்பரங்குன்றத் தலவரலாற்றிலும், நக்கீரர் திருமுருகாற்றுப்படையினைப் பாடியருளினார் என்னும் வரலாறு கூறுப்பட்டுள்ளது. இதன்படி நக்கீரர் சிவபூசை தவறியதும், பூதமொன்று அவரை எடுத்துச் சென்று ஒரு குகையில் முன்பே தன்னால் அடைக்கப்பட்டிருந்த 999 பேரோடு அடைத்ததாகவும், தாமும் மற்றவர்களும் குகையினின்றும் விடுபட நக்கீரர் முருகப்பெருமான்மீது திருமுருகாற்றுப்படையைப் பாட, முருகன் தோன்றி அனைவரையும் பிழைக்க அருளியதாகவும் கூறப்படுகிறது.

இவ்வரலாறுகள் எப்படி இருப்பினும் கீழ்க்கண்ட கருத்துக்கள் உணரத்தக்கவை:-

1. சீகாளத்திபுராணம் கூறுவதிலிருந்து, இறைவன் நக்கீரரைக் காளத்திக்குப் போகச் சொன்னதில் ஒரு பொருள் உண்டு. காளத்தியில் எழுந்தருளியிருக்கும் அம்பிகைக்கு ஞானப்பூங்கோதை என்பது பெயர். வடமொழியில் ஞானப் பிரசூனாம்பிகை என்று கூறுவார்கள். அம்பிகையினுடைய கூந்தல் ஞானமணம் வீசுவது என்ற கருத்தை அப்பெயர் புலப்படுத்துகிறது. அதனால் அங்கே சென்றால் அப்பெருமாட்டியின் திருவருளால் உணர்வு பெற்றுப் பாவம் நீங்கும் என்ற எண்ணத்துடன் இறைவன் நக்கீரரைக் காளத்திக்குப் போகச் சொன்னான்.

2. குகையில் அடைபட்ட நக்கீரர் தம்மால் 999 பேர்கள் உயிர் இறக்கப்போவதை எண்ணி வருந்துகிறார். சிவபெருமான் இட்ட சாபம் விடுபட வேண்டும்; அதனால் அப்பொழுது ஒளி உருவான முருகப்பெருமானை அவர் எண்ணுகிறார். அன்பர்களின் இதயக்குகையாகிய தகராகாசத்தில் இருப்பவன் முருகன்; ஆதலின் குகன் என அவன் அழைக்கப்படுகிறான். அதனால் சிவனார் மகனார் திருப்பாதம் தொழுது தனது துன்பத்தை நீக்கிக் கொள்ள எண்ணினார் கீரர். மேலும் சிவனே முருகன், முருகனே சிவன் என்ற தத்துவத்தாக்கமும் இருந்திருக்கக்கூடும். திருமுருகாற்றுப்படையைப்

பாடுகின்றவர் தொடக்கத்திலேயே கதிரவனை வைத்துப் பாடுகிறார்; ஒளிமயமான முருகன் அருள் திறத்தைக் கூறுகிறார்.

நக்கீரரை மலைக்குகையில் அடைத்த கற்கிமுகி என்ற பூதம் குதிரைமுகம் உடையது எனத் திருப்புகழில் கூறப்படுகிறது:

'துரகமுகக் கோதைக்கிடை
புலவரில் நக்கீரர்க்குதவிய பெருமாளே' என்பது.

திருவகுப்பில்,

'அருவரை திறந்துவன் சங்க்ராம கற்கிமுகி
அபயமிட அஞ்சலென் றங்கீரனுக் குதவி' என்று வருகிறது.

'இவுளி முகியைப் பொருத ராவுத்தனானவனும்' என்றும் குறிப்பு வருகிறது. மேலும் குகையில் அடைபட்ட புலவராகிய நக்கீரரது செவ்விய சொல்லாகிய திருமுருகாற்றுப்படையை ஏற்றுக்கொண்டு மலையைப் பிளந்து வழிதிறந்துவிட்ட வேலவா என்ற கருத்தில்

'மலைமுகஞ் சுமந்த புலவர் செஞ்சொல் கொண்டு
வழிதிறந்த செங்கை வடிவேலா'

என்று பாடுகிறார் அருணகிரியார். மேலும் முருகப்பெருமான் தெய்வயானை தரும் இன்பத்தினும் திருமுருகாற்றுப்படை தரும் இன்பத்தில் மகிழ்பவன் என்ற கருத்தில்,

'கைமா மயில் செவ்வி நக்கீரர் சொற்றித்தித்ததே'

என்றும் கந்தர்அந்தாதியில் பாடுகிறார்.

திருவிரிஞ்சை முருகன் பிள்ளைத்தமிழில் இவ்வரலாறு,

'பேரான குன்றந் திறந் திவுளி முகியைப்
பிளந்து நக்கீரர் தமையும் பெரிய வேல் கொண்டு.....'

என்று கூறப்படுகிறது.

இனி, திருமுருகாற்றுப்படை என்னும் சொன்மலர்களும் பொருட்கனிகளும் நிறைந்து, இன்பம் தரும் சோலைக்குள் செல்வோம். திருப்பரங்குன்றத்தில் முருகப்பெருமானின் திருமேனிச்சிறப்பும், திருச்சீரலைவாயில் அவனுடைய ஆறுமுகங்களும் பன்னிரு கரங்களும் காட்டும் தத்துவ விளக்கங்களும், திருவாவினன்குடி, திருஏரகத்தில் அடியார்களின் மாட்சியும், குன்றுதோறாடல், பழமுதிர்சோலைப் பகுதிகளில் வேலன்வழிபாடும் முருகன் தோன்றும் இடங்களும் அடங்கியுள்ளன. குன்றுதோறாடலில் அவன்பண்பு நலனும் பழமுதிர்சோலையில் அப்பெருமானைத் தோத்தரிக்கும் சொற்களும் கூறப்பட்டுள்ளன.

திருப்பரங்குன்றம் முருகப்பெருமானின் முதல் படைவீடு; மூலாதாரத்தலமாகும். இது சிவபெருமானின் தலங்களிலும் ஒன்றாகும்; இது திருஞானசம்பந்தர், சுந்தரமூர்த்தி சுவாமிகள் ஆகியோரால் பாடப்பெற்ற தலம். நக்கீரன் வாழ்ந்த கூடல்மாநகருக்கு அருகில் உள்ள இப்பரங்குன்று முருகவேளுக்கும் முக்கண்ணனுக்கும் பொதுவாக உள்ள தலம்; பண்டைத் தமிழ்நூல்களான கலித்தொகை, அகநானூறு, குறிஞ்சிப்பாட்டு, சிலப்பதிகாரம், பரிபாடல் முதலான பல நூல்களிலும் கூறப்படுகிறது. திருப்புகழில் அருணைவள்ளல், கதிரவனும் மதியும் கார்முகிலும் தினமும் மயங்குமாறு விண்ணளவு உயர்ந்து விளங்கும் திருப்பரங்குன்றில் திருமுருகன் எழுந்தருளியிருக்கிறான் என்ற கருத்தில்,

''மதியும் கதிரும் புயலும் தினமும்
மறுகும்படி அண்ட மிலங்கிட
வளர்கின்ற பரங்கிரி வந்தருள் பெருமாளே''

(சருவும்படி எனும் - திருப்பரங்குன்றத் திருப்புகழ்) என்று பாடுகிறார்.

திருப்பரங்குன்றத்தில் கடம்ப மரத்தடியிலே முருகப்பெருமான் வீற்றிருந்தார் என்று கூறப்படுகிறது. அங்கிங்கெனாதபடி எங்கும் நீக்கமற நிறைந்திருக்கும் இறைவன் ஒருசில இடங்களில் உறைபவன் என்பது சரியா என்பது ஆராயப்படவேண்டும். இறைவன் சீவர்களது அறிவால் உணரப்படாதவன்; இருப்பினும் உயிர்கள்பால் தான் கொண்ட கருணை மேலீட்டால் அருள்உருக் கொண்டு தன் அன்பர்கள் கருதிய வடிவில் சென்று காட்சி நல்குவன் என்றும் தோற்றம் முதலிய ஐந்தொழிலுக்கும் அவ்வருள் திருமேனி இன்றியமையாததாகிறது என்றும் கூறுகிறது, சிவஞான சித்தியார். சிற்றறிவினராகிய

சாமானிய மக்கள் இறைப்பொருளைத் திருக்கோயில் திருவுருவ வழிபாடு செய்தே எய்துதல் இயலும். உருவங்களும் செயலும் வெவ்வேறாக ஓதப்படினும், சிவன் வேறு முருகன் வேறல்லர். எனவே, சிவபெருமானுக்கோதிய அளவைநூலோர் மொழிகள் முருகக்கடவுளுக்கும் ஒக்கும். திருப்பரங்குன்றப் படைவீட்டினை 'உலகம்' என்ற மங்கலச் சொல்லாட்சியுடன் தொடங்குகிறார் நக்கீரர்.

'உலகம் உவப்ப வலனேர்பு திரிதரு
பலர்புகழ் ஞாயிறு கடற்கண் டாஅங்கு
ஓவற இமைக்குஞ் சேண்விளங் கவிரொளி'
உறுநர்த் தாங்கிய மதனுடை நோன்தாள்
செறுநர்த் தேய்த்த செல்லுறழ் தடக்கை
மறுவில் கற்பின் வாணுதல் கணவன்'

(1 - 6)

உலக உயிர்கள் மகிழுமாறு எழுந்து மேருவை வலம் வந்து திரிதலைச் செய்கிறான் கதிரவன். அக்கதிரவன் நீலக் கடலிடத்தே எழுகின்ற செம்மை போன்று, அன்பர்கள் உள்ளத்தே ஒளிருவதும், அவர் கருத்திற்குச் சேய்த்தே நின்று விளங்குவதுமாகிய இயற்கை ஒளியாகியவன் முருகப்பெருமான். அவனுடைய அழகும் வலிமையுமுடைய திருவடிகள் வந்தடைந்தோர்களுடைய தீவினையையும் அறியாமையையும் போக்கி அவர்களைக் காக்கும். அவனுடைய திருக்கரங்கள் இடியைப் போல் பகைவரை அழிக்கவல்லன. அப்பெருமான் குற்றமற்ற கற்பினையும் ஒளி பொருந்திய நெற்றியினையுமுடைய தெய்வயானையின் கணவன்.

உலகம் என்பது உயர்ந்தோர் மாட்டே. உலகத்தைப் பல கவிஞர்கள் முதலில் வைத்துப் பாடுவது மரபு. புறநானூற்றுப் புலவன் இளம்பெருவழுதி 'உண்டாலம்ம இவ்வுலகம்' என்ற பாடலில் உலகை நினைக்கிறான். திருவள்ளுவர் அகரத்தை வைத்து ஆரம்பிக்கிறார்; அப்பாடலை உலகை வைத்து முடிக்கிறார்.

'அகர முதல எழுத்தெல்லாம் ஆதி
பகவன் முதற்றே உலகு'.

கவிச்சக்கரவர்த்தி கம்பர்,

'உலகம் யாவையும் தாமுள வாக்கலும்'



‘பலர்புகழ் ஞாயிறு கடற்கண்டு ஆங்கு....’

என இராமகாவியத்தைத் தொடங்குகிறார். சேக்கிழார் பெருமான் பெரிய புராணத்தை 'உலகெலாம் உணர்ந்து ஓதற்கரியவன்' என்று தொடங்குகிறார். ஸ்ரீகாந்த மகாபுராணம், அண்டங்கள் அவனிடத்தில் தோன்றி அவனிடத்திலேயே ஒடுக்கம் அடைவனவாகக் கூறுகிறது. உலகை இயக்கும் ஆண்டவன் படைக்கும் அனைத்துமே அவனுடைய குழந்தைகள். சங்கத்தமிழ்ச் சான்றாண்மைப் புலவர் **கணியன் பூங்குன்றனார்,**

*'யாதும் ஊரே; யாவரும் கேளிர்'*

என்று உலகம் தழுவிய சிந்தனையை எழுப்பி, தமிழ் கூறும் நல்லுலகு இன்றுவரை இந்தத் தொடரை வணங்குமாறு பெருமைப்படச் செய்தார். திருஞானசம்பந்தர் பெருமான் சமணர்களுடன் வாதிடும்போது பாடிய வைகையை எதிர்த்துச் செல்லும் பாசுரத்தில் 'வையகமும் துயர் தீர்கவே' என அருளினார். இங்கு கூடச் சமணர்கள் நீங்கலாக என்று பாடவில்லை. நக்கீரர் முருகப்பெருமானின் அருளைப் பெற விரும்பிப் புறப்பட்ட புலவனை ஆற்றுப்படுத்தும்போது 'உலகம்' என்ற மங்கலச் சொல்லாட்சியுடன் தொடங்குகிறார். முன்பே கூறியவாறு இதற்கு மேலும் ஒரு காரணத்தைக் கூறலாம். இப்பாடல் எழுந்த வரலாற்றின் படி நக்கீரர் குகையில் அடைபட்டு இருளில் இருக்கிறார். வெயில்சுட நிழலை எண்ணுபவர் போல் இருளில் உள்ளவருக்கு ஒளி நினைவுக்கு வருகிறது. கந்தப்பெருமானை வைத்துப் பாடும்போது அவருக்குக் கதிரவன் நினைவுக்கு வருகிறான். முச்சுடர்களாகிய கதிரவன், சந்திரன், அக்னி ஆகியவற்றுள் தலைமைச் சுடராகத் திகழ்பவன் கதிரவன். அக்கினி நெருப்பாகவும் விளக்காகவும் அமைவது; ஒரு குறிப்பிட்ட பரப்பில் முடிவது; கதிரவனிடமிருந்து ஒளியைப் பெற்று இரவில் சந்திரன் தன் வெண்மைக் கதிர்களால் தண்மை தருவது. ஆனால் கதிரவன் ஒளியாட்சி விரிந்தது; பரந்தது. கதிரவன் உறங்கிக் கொண்டிருக்கும் உயிர்களை எழுப்பி உணர்வுபெறச் செய்து, அவற்றை இயங்கச் செய்பவன். இறைவனின் படைப்பு நுட்பத்தில் இருளும் இரவும் இன்றியமையாதவை ஆகின்றன. அவை உயிர்கள் பகலில் கொண்ட உழைப்பிற்குப் பின் அமைதியையும் ஓய்வையும் அளிப்பவை. வள்ளுவப் பேராசான்,

'உறங்குவது போலும் சாக்காடு'

எனக்கூறுகிறார். திருமூலர், இரவுறக்கத்தைக் குறிப்பிடும்போது 'தினப்பிரளயம்' எனக் கூறுவார். உலகின் முறையான செயல்கள் பகலில் தொடங்குகின்றன.

நக்கீரர்

'உலகம் உவப்ப வலன்ஏர்பு திரிதரு
பலர்புகழ் ஞாயிறு கடற்கண் டாஅங்கு'

என்று தொடங்குகிறார்.

சேக்கிழார் பெருமான், திருஞானசம்பந்த நாயனார் புராணத்தில், உலகிற்குச் சேமம் செய்ய, இளஞாயிறு தோன்றுவது போல், ஞானசம்பந்தர் பெருமான் எழுந்தருளியதாகக் குறிப்பிடுகிறார்.

மேலும், தாமரை மலரில் பிறந்த முருகன் போல் திகழ்வதாகத் திருஞானசம்பந்தக் குழந்தையை வருணிக்கிறார்:-

'சேமவுத யப்பரிதி யில்திகழ் பிரானைத்
தாமரை மிசைத்தனி முதற்குழவி என்ன' எனப் பாடுகிறார்.

திருநாவுக்கரசர் அவதாரத்தை சேக்கிழார் பெருமான்,

'உலகில் வரும் இருள் நீக்கி ஒளி விளங்கு கதிர் போற்பின்
மலரும் மருள் நீக்கியார் வந்தவதாரம் செய்தார்' என்று போற்றுகிறார்.

உலகிற்கு நலனையும், பாதுகாப்பையும் அளிப்பவன் கதிரவன். அக்கதிரவன் பல்லுயிர்களாலும் போற்றப்படுபவன்; எல்லா நாட்டவருக்கும் சமயத்தவருக்கும் இனத்தவருக்கும் பொதுவானவன் எல்லாச் சமயமும் போற்றும் புகழுக்கு உரியவன். இந்துசமயத்தில் கதிரவனை முழுமுதற் கடவுளாக வழிபடும் சமயம் 'சௌரம்' என்று அழைக்கப்படுகிறது. பஞ்சாயதன பூசை என்னும் வழிபாட்டில் சூரியனுக்கு ஓர் தனி இடம் உண்டு. சிவபூசையிலும் முதல் இடம் உண்டு. தமிழ்நாட்டில் தஞ்சாவூர் மாவட்டத்தில் உள்ள 'சூரியனார் கோயிலும்' வடநாட்டில் உள்ள 'கோனார்க்' என்ற கோவிலும் சூரியனுக்கென்று எழுந்தவை. நம் நாட்டில் சூரிய வணக்கம் தொன்மையானது. வேதத்தில் ஆருணம் என்பது சூரிய வணக்கத்திற்குரியது. அகத்தியர் இராமனுக்கு 'ஆதித்திய இருதயம்' என்ற கதிரவன் துதியை உபதேசித்ததாகக் கூறப்படுகிறது. இளங்கோ அடிகள் சிலப்பதிகாரத்தில் மங்கலவாழ்த்துப் பாடலில்,

'ஞாயிறு போற்றுதும்; ஞாயிறு போற்றுதும்'

எனக் கதிரவனைப் போற்றுகிறார். இத்துணை மாட்சிமையால் ஞாயிறு,

'பலர் புகழ் ஞாயிறு' என்று நக்கீரரால் போற்றப்படுகிறது. இங்கு நக்கீரர் பல ஒருமைப்பாடும் வேறுபாடுகளும் கொண்ட அழகிய அருணோதயக் காட்சியைப் படைக்கிறார்.

இனி இப்பகுதிக்குப் பொருள் காண்போம். காலைக் கதிரவன் உலக உயிர்களெல்லாம் மகிழும் விதத்தில் மகா மேருவை வலமாகச் சுற்றிப் பவனி வருகிறான். கதிரவனின் பெருமை கருதி அவனைப் பலரும் போற்றிப் புகழ்கின்றனர். விண்வெளி, நீலமாய்க் காட்சியளிக்கிறது; கடல் நீல நிறம்; காலை நேரத்திலே நீலத்திரைக்கடல் பரப்பின் முகட்டிலே சிவந்த கதிரவனைக் காண்பதுபோல, நீலமயில்மீது கோலச் செவ்வேள் ஆதியும் அந்தமும் இல்லா அரும் பெருஞ் சோதியாகக் காட்சிதருகிறான். கதிரவன் புறஇருளை நீக்கி உயிர்கள் ஆக்கமும் ஊக்கமும் பெற்றுத் தத்தம் வினை இயற்ற உதவுகிறான். உலகினை இருளினின்றும் காத்து வருவதால் அவனை யாவரும் துதித்து வணங்குகின்றனர். முருகப்பெருமான் மாயிருஞாலம் குற்றமின்றி விளங்குமாறு புறஇருளையும் கெடுப்பவன். அன்பர்தம் அகஇருளையும் நீக்கி இன்பம் தருபவன். உயிர்கள், ஆணவப் பேர்இருளில் பட்டுத் தம் உண்மைநிலையை உணர்வதில்லை; அதனால் சடம்போலக் கிடக்கின்றன. இறைவன் அவ்வுயிர்களிடத்தில்அருள்பாலித்து விழிப்பூட்டுகிறான்; இன்ப உணர்வை அளிக்கிறான்; வீடுபேற்றை எய்த அருளுகிறான். இதனால் ஞாயிற்றையும் இறைமைக்கூறாக்கிப் பல சமயத்தவரும் போற்றிப் புகழ்கின்றனர். சேக்கிழார் பெருமான் திருஞான சம்பந்தர் புராணத்தில், 'பலர் தொழும் புகலி மன்னன்' என்றும் 'பலர் புகழ் தென்னவன் அறியும் பான்மையால்' என்றும் பாடுகிறார். இதேபோல் சிறுத்தொண்ட நாயனார் புராணத்தில்,

'பலர் புகழ் திருநாமம்' என்கிறார்.

மயில்மீது முருகன் அமர்ந்திருக்கும் குறிப்பால், முருகப்பெருமான் பிரணவத்தின் உள்ளுறைபவன் என்ற தத்துவம் கூறப்படுகிறது. இப்பகுதிக்கு உரைகூறும் நச்சினார்க்கினியர், கடலிடத்தே தோன்றும் காலைக் கதிரவன் உவமையைத் தொழில், வண்ணம் பற்றி வந்தது என மிகவும் போற்றுகிறார். ஆங்கு: " இது வினையெச்ச உவமம்: "விரவியும் வருஉ மரபின என்ப" என்பதனால், தொழில் உவமமும், வண்ணவுவமமும் பற்றி வந்தது. என்னை? ஞாயிறு இருளைக் கெடுக்குமாறு போலத் தன்னை மனத்தால் நோக்குவார்க்கு மாயையைக் கெடுத்தலில் தொழில் உவமமும், தன்னைக்

கட்புலனால் நோக்குவார்க்குக் கடலின் பசுமையும் ஞாயிற்றின் செம்மையும் போல, மயிலிற் பசுமையும் திருமேனிச் செம்மையும் தோன்றலின் வண்ணவுவமமும் கொள்ளக் கிடந்தமை காண்க'' என்றுசிறப்பாக உரை காண்கிறார்.

முருகன் மாணிக்கம் நிகர் செம்பொருள்
மயில் மரகதம் நிகர் நீலவண்ணம்.

இவ்வாறு மரகத்தின் மீது மாணிக்கம் பதித்தாற் போன்றஅழகிய இனிய காட்சியை அருணகிரிநாதர் கீழ்க்கண்ட அடிகளால் கூறி இன்புறுகிறார் :-

1. 'மயிலேறிய சேவகனே' (கந்தர் அநுபூதி)
2. 'வள்ளிக்கு வாய்த்தவனே மயிலேறிய மாணிக்கமே' (கந்தர் அலங்காரம்)

இங்கு ஒரு பொருள் ஆய்விற்கு உரியது. இறைவன், திருவள்ளுவர் கூறுவதுபோல் 'தனக்கு உவமை இல்லாதான்'

''மாற்றம் மனங்கழிய நின்ற மறையோன்''

சிந்தனைக்கும் சொல்லுக்கும் அறிவிற்கும் அப்பாற்பட்டவன். அப்பர்பெருமான்,

'ஆரொருவ ருள்குவா ருள்ள த்துள்ளே
அவ்வுருவாய் நிற்கின்ற அருளுந் தோன்றும்'

என்று பாடுகிறார்.

காரைக்காலம்மையார்,

'நூலறிவு பேசி நுழைவிலா தாந்திரிக
நீல மணிமிடற்றா னீர்மையே - மேலுலந்தது
தெக்கோலத் தெவ்வுருவா யெத்தவங்கள் செய்வார்க்கும்
அக்கோலத் தவ்வுருவே யாம்' என்று பாடுகிறார்.

கந்தபுராணம்,

''அருவுமாகுவன் உருவமுமாகுவன் அருவும்
உருவுமற்றதோர் தன்மையுமாகுவன்''

என்கிறது. இறைவன் அன்பர்களின் தியான பூசாமுறை பற்றி மந்திராதி வடிவங்களைத் தரிக்கிறான். முருகப்பெருமான், 'வேத மந்திர சொருபன்'.

அருணகிரிநாதர் 'வார்த்தைச் சிற்பர' என்று கூறுகிறார். மேலும்

"காணொணாதது உருவோடருவது" என்றும்

"உருவா யருவாய்" (கந்தர்அநுபூதி) என்றும் பாடுகிறார்.

இவ்வாறு உவமையிறந்தவனை இவ்வுலகப் பொருட்களுடன் உவமிப்பது ஏற்றதா? என்பது சிந்தனைக்குரியது. அன்பர்கள் அவன்மேல் கொண்ட காதலால் அவனுக்குப் பல நாமத்தைச் சூட்டிப் போற்றுகின்றனர். மணிவாசகப் பெருமான்,

'ஒரு நாமம் ஓர் உருவம் ஒன்றும் இல்லாற்கு, ஆயிரம்
திருநாமம் பாடி, நாம்-தெள்ளேணம் கொட்டாமோ!'

என்று பாடுகிறார். அன்பர்கள் இறைவனைப் பல நாமம் கூறிப் பரவுகின்றனர்; பல பொருள்களோடு உவமித்து மகிழ்கின்றனர். இது, தமிழ்ச் சான்றோரிடம் வழிவழியாக இருந்து வரும் மரபாகும். திருக்கோவையாரில் ஐந்தாம் செய்யுளின்

'அணியும் அமிழ்தும் என்னாவியும் ஆனவன்'

என்னும் அடிக்குப் பேராசிரியர்,

"இவை இறப்ப இழிந்தன வாயினும் பொருளது புரைவே
புணர்ப்போன் குறிப்பின் மருளற வரூஉம் மரபிற்றென்ப"

என்பதனான், ஈண்டுச் சொல்வானது கருத்துவகையானும், உலகத்துப் பொருள்களும் அவற்றினூங்கு மிக்கன இன்மையானும் உயர்ந்தனவாய் உவமையாயின' என உரை எழுதுகிறார். அப்பரடிகள் திருக்குடந்தைக் கீழ்க்கோட்டத் திருத்தாண்டகத்தில், சிவபெருமானை,

'செக்கர்ஒளி, பவளஒளி, மின்னின் சோதி
செழுஞ் சுடர்த்தீ, ஞாயிறு, எனச் செய்யர் போலும்'

என்று பாடுகிறார்.

இங்கு, ஞாயிறு, உலகப் பொருள்களில் உயர்ந்து நிற்பது; ஒளிப்பிழம்பானது. இறைத் தொழிலாகிய ஆக்கல், அளித்தல், அழித்தல் ஆகியவை ஞாயிற்றிடத்தும் அடங்கியுள்ளன. இறைவனுக்குரிய எட்டு வடிவங்களுள் ஞாயிற்று மண்டிலமும் ஒன்று; ஞாயிற்றினிடத்தில் இறைத்தன்மை மிக்குத் தோன்றுதலால் அதனையே இறைவனாக வைத்து வணங்குகிறார்கள்.

திருவள்ளுவர்,

'அகர முதல எழுத்தெல்லாம் ஆதி
பகவன் முதற்றே உலகு.'

என அகரத்தினை இறைக்கு உவமையாகக் கூறுவது குறிப்பிடத்தக்கது.

இதே போன்று சைவத்திருமுறைகளில் இறைவன்

'அகர முதலானை'

எனக் குறிப்பிடப்படுகிறான்.

கதிரவன் உதயத்தைக் கந்தனுக்கு ஒப்பிட்டார் கவிஞர்; மறைகளின் முடிவால் வாக்கால் அளக்கவொண்ணாத முருகப்பெருமான் கதிரவனுக்குச் சமமானவனோ என்ற ஐயம் எழக்கூடும். நக்கீரர் அடுத்தஅடியில் முருகப்பெருமானைக் கதிரவனிடமிருந்து வேறுபடுத்தி, உயர்த்திக் காட்டுகிறார்.

'ஓவற இமைக்குஞ் சேண்விளங் கவிரொளி'

முருகப் பெருமான் ஒளிமயமானவன். அன்பர்கள்தம் பத்துக் கருவிகளும் தத்தமக்குரிய பொருள்களிடத்தே செல்லாதனவாய் அடங்கியபொழுது அவர்கள்தம் உள்ளத்தே ஒளிர்பவன்; அவர்கள் கருத்திற்குச் சேயனாய் நின்று விளங்கும் ஒளிமயமானவன். வடமொழி ஸ்ரீ காந்த மகாபுராணத்தில் ஒளிக்கெல்லாம் ஒளியாய் ஒப்பற்ற பரஞ்சோதி அப்பெருமான் என்றும், சூரியன் சந்திரன் விண்மீன்கள் ஆகியன முருகன் அருளால் தான் விளங்குகின்றன என்றும், நூலில் புனைந்த மணிகள் போல் இவ்வுலகங்கள் முருகனால் கட்டிக் காக்கப்படுகின்றன என்றும் கூறப்படுகிறது. சிவபெருமான் நெற்றிக் கண்களினின்றும் நெருப்புப் பொறிகளாய்த் தோன்றியதால் 'அக்னிப்பூ' என்றும் 'அக்னிமைந்தன்' என்றும் முருகன் அழைக்கப்படுவதாகவும் கூறுகிறது அப்புராணம்.

ஒளியுருவான அப்பெருமான் திருவருள் கிட்டும் அன்பர்களின் உள்ளமும் வாழ்வும் ஒளிமயமாகும். அப்பேரொளி 'ஓ' அற இமைக்கிறது; ஓ அற என்பதற்கு 'இடைவிடாமல்' , 'நீக்கம் இல்லாமல்' என்பது பொருள். ''சேண் விளங்கு அவிரொளி'' என்பதால் வாக்கு, மனம் கடந்த காலாதீதமான ஒளி கூறப்படுகிறது. இடம், காலம் ஆகிய எல்லையைக் கடந்து நிற்பது அப்பேரொளி. பேரொளியாகத் தியானித்தல் திருமுறைகளிலும் விதிக்கப்பட்டது. அன்பர்களின் இதயக் குகையில் ஒளியாக வீற்றிருப்பவன் முருகன். அதனால் அவன் 'குகன்' என்று அழைக்கப்படுகிறான். திருமூலர், இறைவனை 'தூரத்திற் சோதி' என்றும் 'தொகுத்திருள் நீக்கிய சோதியவன்' எனவும் கூறுகிறார்.

பாரதியார்,

'குகையில் வளரும் கனலே'

என்று பாடுகிறார்.

இறைப்பொருளை ஒளியென்றே மெய்நூல்கள் ஓதுகின்றன. திருநாவுக்கரசர்

'ஆயிரம் ஞாயிறுபோலும் ஆயிரம் நீண்ட முடியானும்' என்றும்,

' பேரொளியைப் பெரும்பற்றப் புலியூரானை' என்றும் பாடுகிறார்.

பெரியாழ்வார்,

'ஆதியஞ்சோதி ! மறந்தறியேன்' என்கிறார்

(பெரியாழ்வார் திருமொழி 4-10-9)

மணிவாசகப் பெருமான் 'மெய்ச் சுடருக் கெல்லாம் ஒளிவந்த பூங்குழல்' என்றும் 'சோதியே! சுடரே! சூழொளி விளக்கே' என்றும் பாடுகிறார். புறவிருளைக் கெடுத்துப் புறப்பொருளை உயிர்கட்குத் தெளிவுறுத்துகிறான் கதிரவன். கந்தவேள் உயிர்களின் அகக்கண்ணை மறைக்கும் ஆணவப் பேரிருளை அகற்றி மெய்ப்பொருளைத் தெரிந்துணர்த்தும் அறிவுப் பேரொளியாக விளங்குகிறான். சேக்கிழார் பெருமான் கண்ணப்ப நாயனார் புராணத்தில், திண்ணனார் 'பொங்கிய ஒளியின் நீழல் பொருவில் அன்புருவம் ஆனார்' என்று பாடுகிறார். இறைவனைப் பேரொளியாகத் தியானித்தல், சிவாகமங்களில் விதிக்கப்பட்டது. அருணகிரிநாதர், முருகப்பெருமான் காட்டிய அருள் ஒளியால் தம்மைச் சுற்றியிருந்த இருள் அகன்றுவிட்டது என்றும் ஞானமலையின் உச்சியில் இருந்த தேனைச் சுவைத்து இன்புறும்படியாக அவன் அருள் பாலித்தான் என்றும் பாடுகிறார்.

'ஒளியில் விளைந்த உயர்ஞான பூதரத்து உச்சியின் மேல்
அளியில் விளைந்தது'

மேலும் அவர் ஆணவ இருளையகற்றி சிவஞானத்தை வழங்குபவன் முருகன் என்பதை,

'சோதி சிவஞானக் குமரேசா' என்ற அடியில் கூறுகிறார்.

முருகப்பெருமானின் திருவடிகள் தரும் ஞான ஒளியை,

'உதிக்குஞ் செங்கதிர் சிந்தும்'

(குழைக்கும் சந்தனம் - திருச்செந்தூர் திருப்புகழ்) என்ற அடியில் கூறுகிறார்.

சீர்பாத வகுப்பில், இத்திருவடிகள் சிறப்பு

'உததியிடை கடவுமர கதவருண குலதுரக
உபலளித கனகரத சதகோடி சூரியர்கள்
உதயமென அதிகவித கலபசுக மயிலின்மிசை
உகமுடிவின் இருளகல ஒருசோதி வீசுவதும்'

என்று கூறப்படுகிறது. கந்தர் அநுபூதியில் 'மணியாய் ஒளியாய்' என அப்பெருமான் போற்றப்படுகிறான்.

பேரூர்ப் புராணம் நிருத்தப் படலம் :

'ஒளியா ஒளியதன் ஒளியா யொளியதன் ஒளியுந் தனிதரு
மொளியாகி' என்று குறிப்பிடுகிறது.

அடுத்து அப்பெருமானின் திருவடிச் சிறப்பைக் கூறவருகிறார் நக்கீரர். அப்பெருமானின் தாள்கள்,

'உறுநர்த் தாங்கிய மதன்உடை நோன்தாள்'

முருகப்பெருமானின் வலிய திருவடிகள், தம்மைச் சரணடைந்த அன்பர்கள் தீவினையைப் போக்கி, அவர்தம் அறியாமையை நீக்கி, அவரைத் தாங்கும் தன்மை கொண்டவை.

திருமூலர், எங்கும் நிறைந்து பெரிய உலகங்களை நிலைபெறச் செய்தலாகிய தாங்குதலைச் செய்து நீக்கமற நிற்கும் இறைவன் திருவடியை,

'எங்கும் பரந்தும் இருநிலந் தாங்கியுந்
தங்கும் படித்தவன் தாள்' (பாடல் :327) எனப் போற்றுகிறார்.

வள்ளுவப் பேராசான்,

''தனக்குவமை இல்லாதான் தாள் சேர்ந்தார்க் கல்லால்
மனக்கவலை மாற்றல் அரிது.''

என்று கூறுகிறார்; கடவுள் வாழ்த்து அதிகாரத்தில் 10 குறளில் 7 குறள்களில் இறைவனின் திருவடிகளின் பெருமையைக் கூறுகிறார். ஆண்டவன், அனைத்து உயிர்களிடத்தும் பற்று வைப்பவன்; அவன் பாதத்தாமரைகள் அவன் அடியார்களுக்குப் பற்றுக்கோடாக நிற்பவை. இறைவனின் வலத் திருவடியை ஞானசக்தியாகவும் இடத் திருவடியைக் கிரியா சக்தியாகவும் குறிப்பிடுவது சைவ மரபு.

பரிபாடல்''நின்னிற் சிறந்தநின் தாளிணையவை'' என்று கூறுகிறது. இறைவன் தன்னை வந்தடைந்தவர்கள் தீவினையைக் களைந்து, அவர் செயலெல்லாம் தன்செயலாக ஏற்றுக்கொண்டு, அவரைத் தானாக்கி அவர் பழவினைக்கட்டை எல்லாம் தானே முன்நின்று போக்கும் பெருமை தோன்றத் தாங்கும் தாள்களையுடையவன்.

நக்கீரர் திருஈங்கோய் எழுபதில், இறைவன் நம் பாவங்களை நம்மைக் கண்டு வளைந்தோடச் செய்யும் வலிமையும் வண்மையும் உடையவன், வினை நீங்கிய அடியார் மகிழ தான் மகிழ்பவன் என்ற கருத்தில்,

'........நம்மேல்
வினை வளையச் செற்றுகந்தான்
வெற்பு'

(பாடல் : 50) என்று கூறியுள்ளார்.

மேலும் இறைவன் தாள்களை

'பூப்பிடி பொன் தாளான் பொருப்பு' (பாடல்:69) என்று பாடுகிறார்.

சிவஞான சித்தியார் , அடியவர்

' பாதகத்தைச் செய்திடினும் பணியாக்கும்' இறைவனது திறனை வியந்து பேசுகிறது.

இதேபோன்று, இறைவன் அடியாரைத் தாங்கும் மாண்பினை

'கிடைக்கத் தருமேநற் கேண்மையார்க் கல்லால்
எடுத்துச் சுமப்பானை இன்று ' என்று (திருவருட்பயன் - 65) கூறுகிறது.

கண்ணன் கீதையில்,

''எல்லாப் பற்றையும் விட்டு என் திருவடியைப் பற்றிக்கொள்;
நான் உன்னைத் தாங்குகிறேன்''

என்று கூறினான். மேலும், வைணவ மரபில் இறைவன் தன் அடியவர்களிடம் 'என்னை நீ சரணடைந்தால், உன்னை நான் காப்பேன்' என்று கூறுவதாகச் சொல்லப்படுகிறது.

('மாம் ஏகம் சரணம் வ்ரஜ').

நம் அப்பர் பெருமான்,

'தன் கடன் அடியேனையுந் தாங்குதல்
என் கடன் பணி செய்து கிடப்பதே'

என்று இறைவனிடம் தம்மைத் தாங்குமாறு வேண்டுகிறார். மேலும் அவர்

திருநல்லூர்த் திருத்தாண்டகத்தில்,

''நனைந்தனைய திருவடியென் தலைமேல் வைத்தார்
நல்லூரெம் பெருமானார் நல்லவாறே''

என்று இறைவன் தம் திருவடிகளை தம் தலையில் சூட்டியருளிய பேற்றைப் போற்றுகிறார்.

சுந்தரர், 'மற்றுப் பற்றெனக்கின்றி நின்றிருப்பாதமே மனம் பாவித்தேன்
பெற்றலும் பிறந்தேனினிப் பிறவாத தன்மை வந்தெய்தினேன்'

என்று, பற்றற்றவன் பாதம் பற்றியதைப் பாடுகிறார்.

பெரியாழ்வார், 'பாத தூளிபடுதலால், இவ்வுலகம் பாக்கியம் செய்ததே' (4-4-6) என்றும் 'திருப்பொலிந்த சேவடி என் சென்னியின் மேல் பொறித்தாழி (5-4-7) என்றும் பாடுகிறார்.

மணிவாசகப் பெருமான்,

> 'தந்தது, உன்தன்னைக் கொண்டது
> என்தன்னைச்
> சங்கரா ஆர்கொலோ சதுரர்?'

என்று தம்மை ஒப்படைக்கும் சரணாகதி நிலையைக் கூறுகிறார். மேலும் 'பாதாளம் ஏழினும் கீழ் சொல்கழிவு பாதமலர்' என்றுபாடுவார். மீண்டும் திருவெம்பாவையின் ஈற்றுப் பாடல் முழுதும் திருவடியின் போற்றியாக அமைத்துள்ளார். மேலும், மணிவாசகப்பெருமான் 'போற்றி எல்லா உயிர்க்கும் தோற்றமாம் பொற்பாதம்' என்று பாடுகிறார். 'நாதனார் கழல்கள் வாழ்த்தி வழிபடும் நலத்தின் மிக்கார்' என்பது சேக்கிழார் பெருமான் திருவாக்கு. மேலும் 'மலர் சிலம்படி வாழ்த்தி வணங்குவாம்' என்றும் பாடுகிறார். திருநாவுக்கரசு சுவாமிகள் வேண்டுகோளை ஏற்று சிவபெருமான் அவருடைய சென்னியிலே திருநல்லூரிலே சூட்டிய திருவருள் பேற்றைச் சேக்கிழார்பெருமான்,

> 'நன்மைபெரு கருள்நெறியே வந்தணைந்து நல்லூரில்
> மன்னுதிருத் தொண்டனார் வணங்கி மகிழ்ந்தெழும்போதில்
> உன்னுடைய நினைப்பதனை முடிக்கின்றோம்'என்றவர்தம்
> சென்னிமிசைப் பாதமலர் சூட்டினார் சிவபெருமான்'

என்று பாடுகிறார். மனிதனுக்குத் தொட்டிலில் தொடங்கிச் சுடுகாடுவரை அடுக்கடுக்கான துன்பங்கள் வருகின்றன. அவன் பல சோதனைகளைக் கடக்க வேண்டியிருக்கிறது. சிவபிரான் காரைக்கால் அம்மையாரைத் தம் அன்னை என்று ஏற்றார். முன் அம்மையார் இல்வாழ்வில் இருந்தபோது ஒரு சோதனை ஏற்பட்டது. புனிதவதியான அம்மையார் இறையடியார்களுக்கு இன்னமுதூட்டும் இயல்பினர்.

> 'நம்பர் அடியார் அணைந்தால் நல்ல திரு அமுதளித்தும்
> செம்பொன்னும் நவமணியும் செழுந்துகிலும்' **தந்து மகிழ்பவர்.**

ஒருநாள், அவர் கணவர், இரு மாங்கனிகளைத் தம் இல்லத்திற்கு அனுப்பி வைத்தார். கனிகளைப் பெற்று வைத்த புனிதவதியார் இல்லத்துக்கு சிவன் அன்பர் ஒருவர் வந்தார். அவருக்கு உணவு படைக்க எண்ணிய புனிதவதியார், சோறு மட்டும் சமைத்திருந்தார். காய்கறிகள் சமைக்கப் பெறவில்லை. கறியமுது உதவாமல் திருவமுது மட்டும் கைகூடப்பெற்ற நிலை. ஆனால் சிவனடியார்க்கு உடன் உணவு பரிமாற வேண்டிய

அவசரம். தம் கணவன் அனுப்பிய இரு மாம்பழங்களில் ஒன்றை வைத்து உணவு படைத்தார். அடியவர் பழத்துடன் உணவை உண்டு மகிழ்ந்து சென்றார். பின் கணவன் உணவருந்த வந்தான். கணவன் உணவில் எஞ்சிய ஒரு மாங்கனியை இட்டார் மனைவியார். அதை உண்ட கணவன், அதன் சுவை மேலீட்டால், மேலும் ஒரு கனி உள்ளதைக் கொண்டு வருமாறு கூறினான். இப்பொழுது அம்மையாருக்குத் துன்பம் வருகிறது; சோதனை ஏற்படுகிறது. கணவரிடம் உண்மையை உரைக்க முடியவில்லை. மனம் தளர்ந்தார். சிவபெருமான் திருவடிகளைத் தம் மனத்தில் முற்றும் பொருந்த வைத்து உருகினார். அப்பெருமானின் திருவருளால் அம்மையார் கையில் இனிய கனி ஒன்று வந்து பொருந்தியது. அதனைக் கணவனுக்குப் பரிமாறினார். இந்நிகழ்ச்சியைக் குறிப்பிடும் சேக்கிழார் பெருமான்,

''அம்மருங்கு நின்றயர்வார் அருங்கனிக் கங் கென் செய்வார்
மெய்ம்மறந்து நினைந்துற்ற இடத்துதவும் விடையவர்தாள்
தம்மனங் கொண்டுணர்தலுமே அவர் அருளால் தாழ்குழலார்
கைம்மருங்கு வந்திருந்தது அதிமதுரக் கனியொன்று''

என்று பாடுகிறார்.

இங்கு அம்மையார், ஒருமையுடன் இறைவன் திருவடியை நினைத்த மாத்திரத்தில், இடர் நீங்கப் பெறுகிறார். அம்மையார் ஆண்டவனிடத்து வைத்த உறுதியான அன்பு, அவரை இடரிலிருந்து காக்கிறது.

நக்கீரர் 'உறுநர்' என்ற சொல்லைப் பயன்படுத்துகிறார். ('ஊறு' என்பது துன்பத்தைக் குறிக்கும். உறு என்பதன் அடியாகப் பிறந்தது). முருகப்பெருமானின் தாள்கள் தம்மைச் சாரும் அன்பர்களின் துன்பச் சுமையைப் போக்கி, தீவினையை அறுக்கும் தாள்கள்; அவை அறியாமையை அகற்றும் ஆற்றல் கொண்டவை. உயிர்கள் பிறவிதோறும் அறியாமையைக் கூட்டுகின்றன. பிறவிக்குக் காரணமாக அமைவதே அறியாமை என்னும் அவிச்சை.

திருவள்ளுவர்,

'இருள்சேர் இருவினையும் சேரா இறைவன்
பொருள்சேர் புகழ்புரிந்தார் மாட்டு' என்று பாடுகிறார்.

அதாவது கடவுளின் உண்மைப் புகழை விரும்பி நினைப்பவரை, அறியாமையால் விளையும் நல்வினை தீவினை ஆகிய இரு வினைகளும் பற்றா என்பது பொருள். முருகப்பெருமானின் தாள்கள் ஞானமயமானவை; அப்பெருமானின் திருவடிகளில் இடையறாது ஞானஒளி வீசுவதால் 'மின் சரணம்' என அருணகிரியார் போற்றுகிறார். மேலும், கந்தர் அலங்காரத்தில் ஓர் அரிய கருத்தைத் தெரிவிக்கிறார். அதாவது

'தொண்டர்கண்டு அண்டி மொண்டிருக்கும்
சுத்த ஞானமெனும்
தண்டையம் புண்டரீகம்' என்று பாடுகிறார்.

ஞானஒளி முன்பு, அறியாமை அகன்றோடும். அறியாமை இருள் மயம்; ஞானம் ஒளிமயம். உயிர்கள் அறியாமையில் மூழ்கி அல்லலுறுகின்றன.

ப்ருகதாரண்யக உபநிடதத்தில் 'தமஸோ மா ஜோதிர்கமய' என்று கூறப்படுகிறது; அதாவது 'இருளிலிருந்து என்னை ஒளிக்கு இட்டுச்செல்' என்பதாகும். முருகப்பெருமான் சோதிப்பிழம்பானவன். அவனது தாள் ஞான மயமானது. அடியவர்களின் அறியாமையை உடைத்து, செருக்கை அழித்துத் துன்பத்தைக் களைந்து, இன்பத்தை அளித்து, அவர்களைக் காக்கும் குளிர்ச்சியான தாள். அருணை வள்ளல்,

'பண்பு சேர் பாதத் தாமரை' என்றும்
'உபய சீதள பங்கய மென்கழல்'
(அனக பாரம திருப்பகழ்) என்றும்
'சேமக் கோமள பாதத் தாமரை' என்றும் பாடுகிறார்.

சேமம் என்பது இன்பம். இறைவன் திருவடியில் இன்பம் இருக்கிறது. அது நினைக்குந் தோறும், காணுந் தோறும், பேசுந்தோறும் தித்திக்கும் திறனுடையது. சேமம் என்பதற்கு காவல் எனவும் பொருளுண்டு. மாறாத இளமை உடைய அத்திருவடிகள் அடியார்களுக்குக் காவலாய் நிற்பன.

மேலும், அவர்

'பாத செந்தாமரைகள் தாழ் பெரும்பாதை
வழியே படிந்து'

உய்யும் பெருநெறியை வேண்டுகிறார். சரவணனின் 'சரண கமலாலயத்தை அரை

நிமிஷநேரமட்டு' மாவது நினைந்துருகும் பேற்றை யாசிக்கிறார். (திருஏரகம் 12 வது பாடல்) முருகனிடம் 'பங்கய பதங்கள் தந்து' அருள வேண்டுகிறார். (கண்டு மொழி திருப்பகழ்) கந்தர் அலங்காரத்தில்

'.............................. புண்டரீகத்திருஞ்
செக்கச்சிவந்த கழல்வீடு தந்தருள்' என வேண்டுகிறார்.

இறைவன் திருவடிகளைத் தாமரைக்கு நிகர் எனக்கூறல் மரபு. தாமரையில் மணம்வீசும். இறைவன் இணையடிகள் ஞான மணத்தை வீசுவன. தாமரை மலரில் வண்டுகள் அமர்ந்து தேனருந்தும். இறையடிகள் தரும் கருணையை அடியார்கள் பருகிப் பவப்பசியை மாற்றுவர். தாமரை நிறம் செம்மை. இறையடிகள் செம்மைப் பண்பால் சிறக்கும். தாமரை தண்ணளியால் உயரும். இறையடிகள் பிறவி வெப்பம் நீக்கிப் பேரின்பம் நல்குவன. இறைவனது திருவடி, ஞான ஒளி வீசுவது. 'நான்', 'எனது ' எனும் அகப்பற்றும், புறப்பற்றும் ஆன்மாக்கள் அத்திருவடிகளைப் பற்றினால் தாமே விலகும். 'இருதாளிலன்பு தருவாயே' என்கிறார் அருணகிரிநாதர். பிறப்பு, இறப்புத் தொடர்ச்சியால் ஆன்மா களைத்துவிடுகிறது. இக் களைப்புத் தீர இறைவன் திருவடி நிழலில் இன்புற வேண்டும் ஆன்மா.

மணிவாசகப்பெருமான்,

'எல்லாப் பிறப்பும் பிறந்து இளைத்தேன்' என்றும்,

'மெய்யே உன் பொன்னடிகள் கண்டின்று வீடு உற்றேன்' என்றும்,

'இணையார் திருவடியென் தலைமேல் வைத்தலுமே
துணையான சுற்றங்கள் அத்தனையுந் துறந்தொழிந்தேன்'

என்றும் பாடுகிறார்.

அருணகிரிநாதர்,

'மறை போற்றரிய ஒளியாய்ப் பரவு'

(நிலையாப் பொருளை திருப்புகழ்)

என்றும்,

'ஆரணங்கள் ஆகமங்கள் புகழ்தாளும்'

(தோலெலும்பு திருப்புகழ்)

என்றும் பாடுகிறார்.

அருணகிரிநாதர் தம் சென்னிமீது முருகப்பெருமான் திருவடி சூட்டியருளிய பேற்றைக் கீழ்க்கண்ட பாடல்களில் நினைவு கூர்கிறார்.

1. 'இபமுகவனுக் குகந்த இளையவ மருக்கடம்ப
எனது தலையிற் பாதங்கள் அருள்வோனே'
(களபமுலை- திருப்பகழ்)

2. 'சாடுந் தனிவேல் முருகன் சரணம்
சூடும்படி தந்தது சொல்லுமதோ
வீடுஞ்சுரர் மாமுடி வேதமும் வெங்
காடும் புனமுங் கமழுங் கழலே' (கந்தர் அநுபூதி)

3. 'கால்பட்டழிந்ததிங் கென்றலை மேலயன்
கையெழுத்தே' (கந்தர் அலங்காரம்)

4. 'இன்ப ஞானம் தருள் வாயே' (பஞ்சபாதன் திருப்பகழ்)

5. 'எனதுதலையில் பதங்கள் அருள்வோனே' (களபமுலையைத்திறந்து)
திருப்புகழ்

மேலும் அவர் முருகனை "அன்பர்இன்ப நண்ப" என்று அழைப்பார். சேக்கிழார் பெருமான் கூறுவது போல் 'பவமதனை அற மாற்றும் பாங்கினில் ஓங்கிய ஞானம்' கொண்டவை அவன் திருவடிகள்; தன் இருதாள் இறைஞ்சும் அடியார்களின் இடைஞ்சல் களைகிறான் அப்பெருமான். அத்திருவடியே வீடாகும். வேதமுடிவிலே விளங்கும் திருவடிகள் முருகன் திருவடிகள். குமரகுருபரர் கந்தர்கலியில் 'யான் எனதென்று அற்ற இடமே திருவடி' என்கிறார். நக்கீரர், முருகப்பெருமானின் ஐந்தொழில் இயற்றும் ஆற்றலைத் திருவடிமேல் வைத்து 'நோன்றாள்' என்றார். அத்திருவடிகளே உயிர்களின் துயர்போக்கும் தன்மை கொண்டமையாலும் பிறவிப் பிணிக்கு மருந்தானமையாலும் முருகப்பெருமானின் நற்றாளை முதலில் வைத்துப் பாடுகிறார்.

அடுத்து, திருமுருகப்பெருமானின் திருக்கரங்களின் சிறப்பைக் கூறவருகிறார் செந்நாப்புலமை நக்கீரர். அதாவது முருகப்பெருமானின் அறக்கருணையைக் கூறியவர் அவனது மறக்கருணையைக் கூறவருகிறார்:-

'செறுநர்த் தேய்த்த செல்லுறழ் தடக்கை' என்று கூறுகிறார். 'செறுநர்' என்பது

அழிக்கத்தக்கவரைக் குறிக்கும். ஆண்டவன் படைத்த உயிர்கள் அனைத்தும் அவனுடைய குழந்தைகள்; அவனிடத்திருந்து சமமான அன்பையும் அருளையும் பெறும்உரிமை உடையவை என்று கூறும்போது, மக்களில் சிலரை, இறைவனே அழிப்பது முறையா என்ற வினா எழுகிறது. அசுரர்களும் ஆண்டவனால் படைக்கப் பட்டவர்கள் தாம்; ஆனால் அவர்கள் பிற உயிர்களுக்கு இன்னல் செய்வதைத் தம் கொள்கையாகக் கொண்டவர்கள். மனிதர்களிலும் அசுரர் முதலியோர்களிலும் தேவர்களிலும் இன்னல் இயற்றுபவர்கள் உள்ளனர். இத்தகையோர் இறைவன் திருவருள் பற்றாது, தீவினை நயந்து, பிறர்க்கும் தமக்கும் கேடு சூழ்விக்கும் இயல்புடையவர்கள். இவ்வாறு நன்னெறி பற்றாது கெடுவார் மேலும் கெட்டழியா வண்ணம், அவர்கள்தம் உடற்பொறையை மாற்றி, அவர்களை உய்யக்கோடலும் இன்றியமையாததாகிறது. இவ்வாறு இறைவன் மேற்கொள்ளும் அழித்தற் செயலும் அருள்பற்றிய செயலேயாகும். சிவபெருமானின் நெற்றிக்கண் மன்மதனை எரித்தது நிக்ரக சக்தியைக் காட்டுகிறது. இதே நெற்றிக் கண்ணால் முருகனைத் தோற்றுவித்து அசுரரை அழித்துத் தேவர்களைக் காத்தது அப்பெருமானின் அநுக்கிரக சக்தியைக் காட்டுகிறது. இத்தகைய இறைவன் அருட்செயல் சிவஞானசித்தியாரில் கூறப்படுகிறது:-

''தந்தைதாய் பெற்ற தத்தம் புதல்வர்கள் தஞ்சொ லாற்றின்
வந்திடா விடின் உறுக்கி வளாரினால் அடித்துத் தீய
பந்தமும் இருவர் எல்லாம் பார்த்திடிற் பரிவே யாகும்
இந்த நீர் முறைமை யன்றோ ஈசனார் முனிவுமென்றும்''

(சித்தியார் சுபக்கம்:106)

எனவே, 'எக்கிரமத்தினாலும் இறைசெயல் அருளே' யாகும். காளிதாசனின் குமாரசம்பவத்தில், பிரமன், 'சிவபெருமான் மன்மதனை எரித்தாலும் பின் அவனுக்குப் பழைய உடலையே அளித்துக் காப்பார்' எனக் கூறுகிறார். இவ்விடத்தில் கவிஞன், 'மேகம் உயிர்கள் வாழ, வளம் பெற மழையைத் தருகிறது. இடியையும் கொணர்ந்து சில உயிர்களுக்கு இன்னலையும் தருகிறது. மேலோர் இடியன்ன சாபத்தைத் தருவர். அவர்கள் கோபம் நீங்கியபின் அமுதமென அருளும் புரிவர்' என்று கூறும் கருத்து நோக்கற்பாலது. முருகப்பெருமானின் கைகள் பெரியன; இடியைப் போலப் பகைவரை அழிக்கும் வன்மையானவை. இங்கு 'செல்' என்பது ஆகுபெயராய் முகிலில் வெளிப்படும் இடியைக் குறிக்கும். வான் மழை வழங்கலால் உலக உயிர்கள் வாழ்ந்து வருகின்றன. முகில் மழை பெய்து உலகை ஓம்புதல் இயற்கையின் கடப்பாடு. ஆனால் மழையோடு இடியும் இவ்வுலகெய்திச் சில உயிர்களைக் கொல்கிறது; அது

அவ்வுயிர்கள் ஈட்டிய தீவினைப் பயனேயன்றி மழையின் குற்றமன்று. அதனால், முருகப்பெருமான் விண் தரும் மழையென மன்னுயிர் காக்கிறான்; அழிக்கத்தக்கவரை இடிபோல் அழிக்கிறான்; இங்கு 'விரைவு' பற்றி இடி உவமை எடுத்தாளப்படுகிறது.

'உறுநரைத் தாங்குகிறது தாள்
செறுநரைத் தேய்க்கிறது தடக்கை'

இராமகாவியங்களில்,

இராமன் பாதத்துகள் பட்டவுடன் அகலிகையை கல்லுருவினின்றும் பெண்ணுருவமாக மாறும் மாண்பும் உயர்வும் கூறப்படுகிறது.

இதை வான்மீகம், இரகுவம்சம், அத்யாத்ம இராமாயணம், கம்பராமாயணம், மானச இராமாயணம் ஆகியவற்றின் கவிஞர்கள் மிக ஏற்றமாக வருணித்து மகிழ்கின்றனர். நம்கவிச் சக்ரவர்த்திக் கம்பன்,

'கைவண்ண மங்குக் கண்டேன் கால்வண்ண
மிங்குக் கண்டேன்'

என்று தீயோரைக் கடிதலும் நல்லோரைக் காத்தலுமாகிய இருவகைத் திறனை வியந்து போற்றுகிறார்.

அத்யாத்ம இராமாயணக் கவிஞன்அகலிகை கல்லுரு நீங்கி நல்லுரு பெற்றதின் தொடர்ச்சியாக ஒரு நெகிழ்ச்சியான நிகழ்ச்சியைக் கூறுகிறான். அதாவது விசுவாமித்ரன், இராகவன், இலக்குவன் மூவரும் கங்கையைக் கடக்க வேண்டியிருக்கிறது. அங்கு நிறுத்தி வைக்கப்பட்ட ஒரு படகில் மூவரும் ஏற முயல்கின்றனர். படகோட்டி இராமனைப் படகில் ஏறாமல் தடுக்கிறான். காரணம் வினவியபோது இராமா! உன் பாதத் துகள் பட்டுக் கல்லுரு பெண்ணுரு கொண்டதாகக் கேள்வியுற்றேன். என் படகில் ஏறி அதுவும் பெண்ணாகிவிட்டால் என் பிழைப்பு என்னாகும் ? எனவே, உன் பாதங்களை நான் அலம்பியபின் ஏறவும் என்று வேண்டியதாகக் கூறப்படுகிறது.

(சர்க்கம்.6 - சீதாசுயம்வர காண்டம்)

மானச இராமாயணத்தில் அகலிகையின் சாப விமோசனத்திற்குப் பின் அகலிகை இராமனிடம்,

'பிரபு'நான் வண்டாக வடிவெடுத்து உன் பாதத்தாமரையில் பெருகும்

இன்பத்தேன் துளியை என்னாலும் பருகும் வரம் எனக்குத் தர வேண்டும்' என்று வேண்டுவதாகக் கூறப்படுகிறது.

(சுலோகம்.1152- பாலகாண்டம் மானச இராமாயணம்)

திருவருட்பயனில் இந்நிலை,

'நலமிலன் நண்ணார்க்கு நண்ணினர்க்கு நல்லன்
சலமிலன் பேர்சங்கரன்' என்று போற்றப்படுகிறது.

அற்புதத் திருவந்தாதியில்,

'சார்ந்தார்க்குப் பொற்கொழுந்தே ஒத்திலங்கிச் சாராது
போந்தார்க்குத் தீக்கொடியின் பெற்றியவாம்' என்று கூறப்படுகிறது.

அப்பெருமானின் அறக்கருணையையும் மறக்கருணையையும் கூறிவிட்டு, அவன்

'மறுவில் கற்பின் வாள்நுதல் கணவன்'

என்று கூறுகிறார் நக்கீரர். மனைவியரின் கற்பே ஆடவர் செய்யும் எந்தச் செயலிலும் வெற்றி தருவதாகும். இது கலித்தொகை (39) முதலிய சங்கச் செய்யுள்களின் சாரமாகும். குற்றமற்ற கற்புச் சிறப்பினை உடைய ஒளி பொருந்திய நெற்றியினைக் கொண்ட தெய்வானையின் கணவனாகச் செவ்வேள் விளங்குகிறான். நக்கீரர் முதல்படைவீடாகிய திருப்பரங்குன்றத்தில், தெய்வயானை திருமணம் நடந்ததை நினைவூட்டுகிறார். இந்திரனுக்கும் தேவர்களுக்கும் அவர்கள் இழந்த தேவலோக அரசையும் வாழ்வையும் சூரனைவென்று மீட்டுத் தந்த வள்ளல் முருகன். முருகனை அடைய வேண்டுமென்று தவமியற்றியவர்கள் வள்ளியும், தெய்வானையும். இந்திரன் முருகப்பெருமான் செய்த உதவிக்கு நன்றிக்கடன் பட்டவன். அதனால் நன்றிக்கடனாக இந்திரன் அளிக்கத் தெய்வானையை ஏற்றுக்கொள்கிறான் முருகன். தேவயானை மணம், கற்பு மணம்; வள்ளியம்மையாரின் திருமணம் களவின்வழி அமைந்தது. தெய்வயானை அம்மையார் கிரியா சக்தி. கர்மயோகத்தை முதலாவதாக அனுஷ்டிக்க வேண்டிய அவசியம் பற்றி முதலில் தெய்வானையைக் கூறுவதாகக் கொள்ளலாம். மேலும் சக்தி வழியாகப் பரம்பொருளை உணரும் சித்தாந்த மரபுவழி இது.

'மறுவில் கற்பின் வாணுதல் கணவன்'

என்று முருகப்பெருமான் அறிமுகம் செய்யப்படுகிறான். அருணகிரிநாதர் திருப்புகழில்,

'முத்தைத்தரு பத்தித் திரு நகை
அத்திக்கு இறை'

என்று தெய்வயானையம்மையாரை முதலில் வைத்துப் பாடுவது இங்குக் குறிப்பிடத்தக்கது. அடியவரைக் காக்கும் சிட்ட பரிபாலனமும், கொடியவரை அழிக்கும் துட்ட சங்காரமும் இறைவனின் கிரியா சக்தி அம்சங்களாதலாலே, இங்குத் தெய்வயானை கூறப்படுகிறார். இறைவன் மீது காதலாகிக் கசிந்துருகும் அடியவர் செயலை வல்வினை, மெல்வினை என அருள்நூல்கள் உரைக்கும். இதே போன்று தம் கணவரையே தெய்வமாகக் கருதும் மகளிரின் கற்பையும், அறக்கற்பு மறக்கற்பு என இலக்கியப் பேராசிரியர்கள் பாகுபடுத்திப் பேசுவர். கண்ணகி மதுரையை எரியூட்டிய செயல்போன்றவை மறக்கற்பாகும். தற்காத்துத் தற்கொண்டாற் பேணித் தகை சான்ற சொற்காத்துச் சோர்வில்லாது வாழ்ந்து, தம் கணவர் உயிர்துறப்பத் தம் உயிரும் தானே கழியுமாறு அமையும் கற்புடைமை அறக்கற்பாகும்.

மேலும், இறைவனோடு மாறுபாடின்றி, இயைந்து நடப்பவள் இறைவி. அதனால் 'மறுவில் கற்பின் வாணுதல்' என்றார். சிவஞானசித்தியார்,

'எத்திறம் நின்றான் ஈசன் அத்திறம் அவளும் நிற்பள்' (சித்தி.74) என்று கூறுகிறது. கற்புடைமையால் அக அழகும், வாணுதல் உடைமையால் புறஅழகும் கூறப்படுகின்றன. கற்புடைமையை வியந்தோதல் கவி மரபு. திருவள்ளுவர் 'கற்பென்னும் திண்மை' என்கிறார். கம்பர் 'கற்பினுக்கு அணி' எனச் சீதாபிராட்டியாரை வியந்தோதுவார். அருணகிரிநாதர் 'உத்தமி புதல்வன்' என விநாயகப் பெருமானைக் குறிப்பிடுகிறார். இதுவரை கூறியதிலிருந்து பெறப்படுவன:

முருகப்பெருமான் காலைக்கதிரவன் நீலத்திரைக் கடலிடத்தே எழுவது போல் நீலமயில் மீது கோலமாகத் தோற்றமளிக்கிறான். நீக்கமின்றி எப்போதும் நெடுந்தூரம் சென்று விளங்கும் ஒளியை உடையவன். கதிரவன் உலகின் புறவிருளைப் போக்குவது போன்று, தன்னை மனத்தால் நோக்குவார் அகஇருளை அகற்றுகிறான் அப்பெருமான். அவன் திருவடிகள், தம்மை வந்தடைந்தோர்களின் தீவினையையும் அறியாமையையும் போக்கி, அவர்களைக் காக்கும். அவன் திருக்கரங்கள், இடியைப் போலப் பகைவரை அழிக்க வல்லன. அவன் குற்றமற்ற கற்பினையும் ஒளிபொருந்திய நெற்றியினையும் உடைய தெய்வயானையின் கணவன். அடுத்து,

'கார்கோள் முகந்த கமஞ்சூல் மாமழை
வாள்போழ் விசும்பில் வள்உறை சிதறித்
தலைப்பெயல் தலைஇய தண்நறுங் கானத்து
இருள்படப் பொதுளிய பராரை மராஅத்து
உருள்பூந் தண்தார் புரளும் மார்பினன்'

(7-11)

இங்கு முருகப்பெருமான் திருமார்பில் அணிந்துள்ள கடம்பமலர் மாலையைப் பற்றிக் கூறவருகிறார் நக்கீரர்.

கடம்பமாலை போகத்துக்குரிய மாலை. ஆடவர்கள் மார்பில் அணிவது 'தார்' என்று அழைக்கப்படும்; மகளிர் மார்பில் அணிவது கோதையாகும். முருகப்பெருமான் அணியும் மாலைக்கான கடம்பமலர் இயல்பைக் கூறுகிறார் புலவர்பெருமான். கார்காலம் தொடங்குகிறது. கடலின்கண் நீர் முகந்து நிறைந்த சூல் கொண்ட மேகங்கள் சூரிய சந்திரர்கள் இருளைப் போக்கும் ஆகாயத்திலிருந்து செறிந்த நீர்த்துளிகளைச் சிதறிக் கார்காலத்து முதல்மழையைப் பொழிகின்றன. மழைபெய்ததால் குளிர்ந்த மணம் மிக்க காட்டில் பலவகை மலர்களும் நிறைந்து நறுமணம் வீசுகின்றன. இக்காட்டில் பருத்த அடிமரத்தினையுடைய செங்கடம்பு, இருள் உண்டாக்கும்படியாகத் தழைகளைப் பரப்பி வளமாக வளர்ந்துள்ளது; அக்கடம்பினது தேருருள் போலும் மலரால் புனைந்த குளிர்ந்த மாலை அசையும் மார்பினை உடையவன் முருகன். இக்கடம்பு இயல்பாகவே மாலைபோல மலர்கிறது எனக்கொள்ளலாம். இம்மலர் அணிபவன் முருகன் என்பதால் முருகனுக்குக் 'கடம்பன்' என்று பெயர் வழங்கப்படுகிறது. சிலப்பதிகாரத்தில் 'கார் கடப்பந்தார் எங்கடவுள்' எனக்கூறப்படுகிறது. இத்தகைய குறிப்புகள் மணிமேகலையிலும், நற்றிணையிலும் புறநானூற்றிலும் காணப்படுகின்றன.

முதலில் ஞாயிற்றைச் சொல்லி, இப்பொழுது மழையைச் சொல்வதால் பண்டைத் தமிழர் மரபுவழி காப்புக் கூறியதாகக் கொள்ளலாம். சிலப்பதிகாரத்தில்,

'ஞாயிறு போற்றுதும் ஞாயிறு போற்றுதும்' எனக் கூறிப் பின்
'மாமழை போற்றுதும் மாமழை போற்றுதும்' எனக் கூறப்படுகிறது.

சேக்கிழார் பெருமான் கண்ணப்ப நாயனார் புராணத்தில், 'முருகலர் அலங்கற் செவ்வேல்

முருகவேள் முன்னிற் சென்று' என்று பாடுகிறார். முருகு என்பது வாசனையையும் குறிக்கும். இங்கு, கந்தக் கடவுளுக்குரிய கடம்ப மலர் மாலை என்பது பொருள். வள்ளுவப் பெருந்தகையும் கடவுள் வாழ்த்திற்கு அடுத்து வான்சிறப்பை வைத்துள்ளார்.

இந்த முறைமையில் முதலில் ஞாயிறும் பின் வான்மழையும் கூறப்படுகின்றன. அதாவது இறைவன் திருவருளால் மழைபொழிதலும் அம்மழையாலே உலகின்கண் தவமும் அறமும் தழைப்பதும் ஈண்டைய குறிப்பாகும். திருமூலர் 'அமுதூறு மாமழை' என்கிறார்.

இனி, முருகன் குறிஞ்சி நிலத் தெய்வமாதலால், அப்பெருமான் சூடும் கண்ணியாகிய செங்காந்தள் மலரின் சிறப்பைக் கூறவருகிறார் நக்கீரர். அதற்குமுன் முருகன் இனிது உறையும் மலைவளம், சோலையின் எழில்நலம், ஆங்கு வந்து உவந்து மகிழும் சூரர மகளிரின் அழகு, ஆடல் ஆகியவற்றைக் கூறுகிறார்.

'மால்வரை நிவந்த சேண்உயர் வெற்பில்
கிண்கிணி கவைஇய ஒண்செஞ் சீறடிக்
கணைக்கால் வாங்கிய நுசுப்பின் பணைத்தோள்
கோபத்து அன்ன தோயாப் பூந்துகில்
பல்காசு நிரைத்த சில்காழ் அல்குல்
கைபுனைந்து இயற்றாக் கவின்பெறு வனப்பின்
நாவலொடு பெயரிய பொலம்புனை அவிர்இழைச்
சேண் இகந்து விளங்கும் செயிர்தீர் மேனி' (12 - 19)

குறிஞ்சிநிலக்கடவுள் முருகன். அந்நிலத்தில் மூங்கில்கள் வளர்ந்து வானளாவி நிற்கின்றன. இங்கு முருகப்பெருமானின் எழில் சிறப்பையும் வீரத்தையும் போற்றும் தேவமகளிர் வந்து விளையாடுகின்றனர். அவர்களைச் சூரரமகளிர் என்பர். 'சூர்' என்பது அச்சத்தைக் குறிக்கும். அவர்களுடைய அழகே அச்சமூட்டவல்லது போலும்! அச்சூரர மகளிர், சதங்கை பொருந்திய ஒள்ளியவாகிய அடியை உடையவர்கள்; திரட்சியான கால்களை உடையவர்கள். உள்வாங்கிச் சிறுத்திருக்கும் இடையையும் பருத்த தோளினையும் உடையவர்கள். இந்திரகோபப் பூச்சிகளைப் போன்று இயல்பாகவே சிவந்த பூத்தொழில் அமைந்த துகிலினை அணிந்திருக்கிறார்கள். பலமணிகள் சேர்த்துக் கோத்த சில வடங்களால் ஆகிய மேகலையை அணிந்த அல்குலினை உடையவர்கள் அம்மகளிர். ஒருவர் கையால் ஒப்பனை செய்து தோற்றப்பொலிவை ஏற்படுத்தவேண்டாமல்,

இயல்பாகவே பெற்ற அழகினையும், சாம்பூநதம் எனும் நாவல்பழத்தால் பெயர் கொண்ட பொன்னால் அமைந்து விளங்கும் அணிகலன்களையும், தொலைவிலும் சென்று ஒளிரும் நிறத்தினையும் உடையவர்கள்.

இப்பகுதியில் நக்கீரர் சிறந்த சொல்லாட்சியைப் பயன்படுத்தியிருக்கிறார்.

'கைபுனைந் தியற்றாக் கவின்பெறு வனப்பு' என்கிறார்.

மானிட மகளிர்போல் தாய், செவிலியர் முதலியோர் ஒப்பனை செய்து பிறப்பிக்கும் அழகு போலன்றி, இவர்கள் தெய்வ மகளிர் ஆதலால் இயல்பாகவே அழகினை உடையவர்கள் என்பது பொருள். இவர்கள் அணிந்திருக்கும் ஆடை மாந்தர் துகில் போல் ஒருவரால் நிறம்பிடிக்கப்படுவது அன்று. இவர்களுடைய அணிகலன்கள் சாம்பூநதம் எனும் பொன்னால் செய்யப்பட்டவை. வடமொழியில் சம்பு என்பது நாவல் மரத்தின் பெயர். நாவற்கனிச் சாறு பாயும் சம்புநதியின் கண் தோன்றும் பொன், நால்வகைப் பொன்னுள் ஒன்றாக வைத்துச் சாம்பூநதம் எனப்படும். இதனை

'சாதரூபங் கிளிச்சிறை ஆடகம்
சாம்பூ நதமென வோங்கிய கொள்கையிற்
பொலந்தெரி மக்கள்'

என்ற சிலப்பதிகாரம் (14:201:3) அடிகளால் அறியலாம். இத்தேவமகளிர் மாசுமறுவற்ற திருமேனி உடையவர்கள் என்பதால் 'செயிர்தீர் மேனி' என்றார்.

அடுத்து, இத்தேவமாதர்களின் செயல்களையும் விளையாட்டுக்களையும் கூறவருகிறார் புலவர்:-

'துணையோர் ஆய்ந்த இணைஈர் ஓதிச்
செங்கால் வெட்சிச் சீறிதழ் இடைஇடுபு
பைந்தாள் குவளைத் தூஇதழ் கிள்ளித்
தெய்வ உத்தியொடு வலம்புரி வயின்வைத்துத்
திலகம் தைஇய தேம்கமழ் திருநுதல்

மகரப் பகுவாய் தாழமண் ணுறுத்துத்
துவர முடித்த துகள்அறு முச்சிப்
பெருந்தண் சண்பகம் செரீஇக் கருந்தகட்டு
உளைப்பூ மருதின் ஒள்இணர் அட்டிக்
கிளைக்கவின்று எழுதரு கீழ்நீர்ச் செவ்வரும்பு
இணைப்புறு பிணையல் வளைஇத் துணைத்தக''

(20-30)

இத்தேவமகளிர் கூந்தல் நெய்ப்பினையுடைய கூந்தல்; தோழியர்கள் பாராட்டும் வனப்புக் கொண்டது. இத்தேவமகளிர்க்குத் துணை நிற்கும் தோழிப் பெண்கள் கோதிவகிர்ந்த ஒத்த நுனியையும் பளபளப்பையும் உடைய கூந்தலுக்கு மேலும் அழகூட்டுகின்றனர். சிவந்த காம்புகளை உடைய சிறிய வெட்சிப் பூக்களின் இதழ்களை விடுபூவாகத் தூவி, அதற்கு நடுவில் பசுங்காம்பினை உடைய குவளைப் பூவின் மாசற்ற இதழ்களைக் கிள்ளியிட்டு முடிக்கிறார்கள். செந்நிறமும் நீலமும் சேர்ந்து ஒரு தனியழகைத் தருகின்றன. அதற்குமேல் சீதேவி என்னும் தலையாபரணத்தையும் வலம்புரி வடிவாகச் செய்த தலையாபரணத்தையும், வைத்தற்குரிய இடத்தில் சூட்டுகிறார்கள். இனிமை திகழும் இவர்களது அழகிய நெற்றியில் திலகம் விளங்குகிறது. அந்நெற்றியிலே பிளந்த வாயினையுடைய மகரமீனின் வடிவமாக அமைந்த தலைக்கோலம் தங்கித் தாழ்ந்து காணப்படுகிறது. இவர்களுடைய முற்றமுடித்த குற்றமற்ற கொண்டையிலே பெரிய குளிர்ந்த சண்பகப் பூவைச் செருகுவர்.

அடுத்து, மருத மரத்தின் பூக்கள். இவை கரிய புறவிதழினையும், உள்ளே துளையையும் உடையவை. அம்மருதின் ஒளிபொருந்திய பூங்கொத்துக்களை அதன் மேல் இட்டு வைப்பர். நீரின் கீழே உள்ள பசிய கிளையினின்றும் மேலே எழுந்து தோன்றுகின்ற சிவந்த அரும்புகளைச் சேர்த்துக் கட்டியமாலையை அதை அதன்மேல் வளைவாகச் சூட்டுவர். அதாவது உச்சிக் கொண்டையிலே குளிர் சண்பகப்பூவைச் செருகி, அதன்மேல் ஒளி பொருந்திய மருதப் பூக்களின் கொத்துக்களை வைத்து, பின் நீர்க்கீழ் உள்ள பசிய கிளையினின்றும் மேலே எழுந்து தோன்றுகின்ற சிவந்த அரும்புகளால் சேர்த்துக் கட்டிய மாலையை அவற்றின் மேல் வளைவாகச் சூட்டுவர். இத்துணை எழில் நலத்தைத் தலையலங்காரத்தில் காட்டிய புலவர் பெருமான் அத்தேவ மகளிரின் பிற அலங்காரங்களையும் கூறவருகிறார்.

'...................... துணைத்தக
வண்காது நிறைந்த பிண்டி ஒண்தளிர்
நுண்பூண் ஆகம் திளைப்பத் திண்காழ்
நறுங்குறடு உரிஞ்சிய பூங்கேழ்த் தேய்வை
தேங்கமழ் மருதிணர் கடுப்பக் கோங்கின்
குவிமுகிழ் இளமுலைக் கொட்டி விரிமலர்
வேங்கை நுண்தாது அப்பிக் காண்வர
வெள்ளில் குறுமுறி கிள்ளுபு தெறியாக்
கோழி ஓங்கிய வென்றடு விறற்கொடி
வாழிய பெரிதென்று ஏத்திப் பலருடன்
சீர்திகழ் சிலம்பகம் சிலம்பப் பாடிச்
சூரர மகளிர் ஆடுஞ் சோலை''

(30-41)

இச்சூரர மகளிர் காதுகள், வளப்பத்தையும் வனப்பையும் உடையவை. அசோகத் தளிர்களை ஒன்றுக்கு ஒன்று ஒப்பாக அமையும்படி அறுத்து, அமைத்து, அக்காதுகளிலே இட்டு நிறைத்திருப்பர். நுண்ணிய வேலைப்பாடமைந்த ஆபரணங்களை அணிந்த இவர்களது மார்பிடத்தே, அத்தளிர்கள் அசைந்து கொண்டிருக்கும். இவர்களுடைய மார்பகங்கள் கோங்கினது குவிந்த மொட்டினைப் போல இளநலம் கொண்டு விளங்குவன. அவற்றின்மீது திண்ணிய வைரம் பாய்ந்த சந்தனக் கட்டையை உரைத்துப் பெற்ற மணமிகு செங்குழம்பை அப்பியிருக்கிறார்கள். அது, மருதப்பூவை அப்பினாற் போன்ற மாட்சியைத் தருகிறது. அந்த ஈரம் புலருமுன்பு விரிந்த மலரையுடைய வேங்கைப் பூவினது நுண்ணிய தாதையும் அதன்மேல் அப்பியிருக்கிறார்கள். அணிநலம் பெற்ற அரமகளிர் விளாமரத்தின் முற்றா இளந்தளிரினைக் கிள்ளி ஒருவர்மேல் ஒருவர் வீசி ஆடுகின்றனர். இதற்குப் பரிமேலழகர், கவிப்பெருமாள் போன்ற உரையாசிரியர்கள் வெள்ளிய விளவின் தளிரை முருகன் திருவடியில் தெளித்து எனப் பொருள் காண்பர். காண்பவர்களுக்குத் தம்மேனி அழகினால் அச்சத்தை விளைவிக்கும் அச்சூரர மகளிர் தம் திருமேனி அழகால் சிறந்து, அணிகலன்களால் மேலும் அழகோடு விளங்கி, மலர்கள் புனைந்த மாட்சிக் கோலத்தால் பொலிவுற்று, மலைச்சாரல் சோலையிடத்தே விளையாடுகின்றனர். அவர்கள் அவ்வாறு விளையாடுங்கால் 'வஞ்சியாது எதிர்நின்று கொன்று நிற்கும் வெற்றியையுடைய கோழிக்கொடி நெடுங்காலம் வாழ்வதாக!' என



'சூரர மகளிர் ஆடும் சோலை' .....'அஞ்சுவரு பேய்மகள்'

**வாழ்த்துகின்றனர். அவர்கள் அனைவரும் ஒருங்கே கூடிச் சீர்மைமிகு மலையிடமெல்லாம் எதிரொலிக்குமாறு, முருகனை ஏத்திப் பாடுகின்றனர். இத்தகைய அழகிய சோலை அது.**

**நக்கீரர் கூறும் 'கோங்கின் குவிமுகிழ் இளமுலை' என்ற தொடரை ஒத்தவை:-**

**சிறுபாணாற்றுப்படையில்,**

'கோங்கின் அவிர்முகை எள்ளிப் பூணகத் தொருங்கிய
வெம்முலை' **என்றும்**

**கலித்தொகையில்,**

'முதிர் கோங்கின் முகைஎன ..... நின் இளமுலை'

**என்றும் அகநானூற்றில் 'கோங்கு முகைத்தன்ன குவிமுலை' என்றும் புறத்தில் 'கோங்கின் முகை வனப்பு எய்திய இளமுலை' என்றும் கூறுமாற்றால் உணரலாம்.**

**சேவற்கொடியைப் பிடித்த கரம் முருகனின் திருக்கரம். சேவல் நாதஸ்வரூபமாக விளங்குவது; புறஇருள் போக்கும் கதிரவன் வரவைக் கூறுவது; ஞானசூரியனான முருகப் பெருமானை அகஇருள் போக்கக் கூவி அழைக்கிறது.**

**குறுந்தொகையில்,**

'சேவலங் கொடியோன் காப்ப
ஏம வைகல் எய்தின்றால் உலகே'

**என்று கூறப்படுகிறது. அதாவது கையில் கோழிக் கொடியைப் பிடித்த அக்குமரன் பாதுகாப்பதால் உலகம் இன்பமான நாள்களை அடைந்தது என்பது பொருள்.**

**அருணகிரி நாதர் திருப்புகழில்,**

'படைபட்ட வேலவன் பால்வந்த
வாகைப் பதாகை என்னும்
தடைபட்ட சேவல் இறகடிக்
கொள்ள' **எனப்பாடுகிறார்.**

**மேலும், 'திக்கது மதிக்கவரு குக்குடம்' என்றும் பாடுகிறார்.**

வேளைக்காரன் வகுப்பில்,

'வானகிரி யைத்தனது தாளிலிடியப் பொருது
வாகைபுனை குக்குட பதாகைக் காரனும்'

எனக் கூறப்படுகிறது. கோழிக்கொடி, முருகன் வெற்றியை உடையவன் என்பதற்கு அடையாளம் மட்டுமன்றிப் பக்தர்களுக்கு எப்போதும் வெற்றிதரும் இயல்புடையது. கந்தபுராணம், முருகப்பெருமான் நடத்திய வெம்போரில் அக்கினிதேவன் கோழிக்கொடியாகி, அவனது திருத்தேர்மீது ஏறி அண்டங்கள் பொடிபடக் கூவியதாகக் கூறுகிறது. முதலில் முருகனுக்குரிய கடப்பந்தார் கூறப்பட்டது. பின் முருகவேளுக்குரிய அடையாளக் கொடியாக, கோழிக்கொடி கூறப்பட்டது. அடுத்து அப்பெருமானுக்குரிய அடையாளப்பூவைக் கூறவருகிறார்.

'மந்தியும் அறியா மரன்பயில் அடுக்கத்துச்
சுரும்பு மூசாச் சுடர்ப்பூங் காந்தள்
பெருந்தண் கண்ணி மிலைந்த சென்னியன்.'

(42 - 44)

ஒவ்வொரு தெய்வத்திற்கும் ஓர் அடையாளப் பூவைக் குறிப்பது வழக்கம். சிவனுக்குக் கொன்றையையும், திருமாலுக்குத் துளப மாலையையும் குறிப்பிடுவது வழக்கம். இங்கு, தேவமகளிர் ஆடிப்பாடும் இச்சோலையில், குரங்குகளும் ஏறிப் பயின்று அறியவியலாதவாறு மரங்கள் உயர்ந்து நிறைந்துள்ளன; அவ்விடத்தே வண்டுகள் மொய்த்தலில்லாத நெருப்புப் போன்ற செங்காந்தள் மலர்ந்திருக்கின்றன. இக் காந்தள்மலர்களால் ஆன குளிர்ந்த தலைமாலையை அணிந்து கொண்ட திருமுடியினை உடையவனாகச் செவ்வேள் திகழ்கிறான். இங்கு காந்தள் மலர்கள் வண்டுகள் மொய்க்காதவை. தெய்வத்திற்குரிய மலர்களில் வண்டுகள் மொய்ப்பதில்லை என்பார்கள். முருகப் பெருமான் அணிந்திருத்தலால் தெய்வத் தன்மை கருதி வண்டுகள் மொய்க்கவில்லை. 'மந்தி' என்பதற்குக் குரங்கு என்றும் கதிரவன் என்றும் உரையாசிரியர்கள் பொருள் காண்பர். குரங்கு எனில் மரங்களின் உயர மேம்பாடு புலப்படும். கதிரவன் எனில் மரங்கள் ஒன்றோடொன்று செறிந்து நிற்கும் செறிவு மேம்பாடு புலப்படும்.

தேவமகளிர், மென்சீறடியினையும் திரண்ட காலினையும் வலம்புரி வடிவமைந்த தலைக் கோலத்தையும் திலகமிட்ட நெற்றியையும் தோளினையும் துகிலினையும் அல்குலினையும் வனப்பினையும் இழையினையும் மேனியினையும் உடையராய் இட்டும் கொட்டியும் அப்பியும் தெறித்தும் ஆடியும் பாடியும் மகிழும் சோலை. அதன் மலையடுக்கத்து மலர்ந்த காந்தள் மலர் சூடிய சென்னியையுடையன் முருகன். இதுவரை இயற்கை எழில் நலத்தையும் தேவமகளிர் தம் ஒப்பனை இல்லாத அழகையும், ஆடலையும் பாடலையும் கோழிக்கொடியை வாழ்த்தும் பெருமையையும், முருகன் அணியும் கடம்பந்தார் மாலையையும், காந்தள் சென்னியையும் எடுத்துக் கூறிய நக்கீரர் இனி மென்மையினின்றும் மாறுபட்ட வன்மைக்காட்சி ஒன்றைக் காட்டத் தொடங்குகிறார். தேவமகளிர் இளமையும் அழகும் உடையவர்கள். ஆனால் இதற்கு மாறான தோற்றத்தால், செயலால் அச்ச மூட்டும் பேய்மகளை இங்குக் காட்டுகிறார் நக்கீரர்.

''பார்முதிர் பனிக்கடல் கலங்கவுள் புக்குச்
சூர்முதல் தடிந்த சுடரிலை நெடுவேல்
உலறிய கதுப்பின் பிறழ்பல் பேழ்வாய்ச்
சுழல்விழிப் பசுங்கண் சூர்த்த நோக்கின்
கழல் கண் கூகையொடு கடும்பாம்பு தூங்கப்
பெருமுலை அலைக்குங் காதின் பிணர்மோட்டு
உருகெழு செலவின் அஞ்சுவரு பேய்மகள்'' (45-51)

விளங்குகின்ற இலை வடிவானதும் நுனியை உடையதுமானது முருகனின் நீண்ட வேலாயுதம். அது நிலத்திலே பழமையாக உள்ள குளிர்ந்த கடலும் நிலை குலையும்படி அதனுள்ளே புகுந்து அங்கே ஒளிந்து கொண்ட சூரபன்மாவை இருகூறாகப் பிளந்தது. அவ்வாறு, சூரனும் அவுணரும் வீழ்ந்த போர்க்களத்தில், பேய்கள் நிணம் உண்டு ஆடுகின்றன. ஒரு பேய்மகள் உலர்ந்த தலைமயிரினை உடையவள். அவளுடைய பற்கள் நிரை ஒவ்வாதவை. அவளது வாய் பெரியது. அவள் கோபத்தால் சுழல்கின்ற பசிய கண்களை உடையவள். கொடிய பார்வையை உடையவள். அவளது காதில் பேராந்தையும் கடிய பாம்பும் தூங்குகின்றன. அக்காதுகள், அவளது பெரியமார்பில் வீழ்ந்து வருத்துகின்றன. சொரசொரப்பானது அவளது வயிறு. அவள் நடை அச்சமூட்டுவது. கண்டவர்களுக்கு அச்சந்தோன்றுகிற பேயாகிய மகளது காட்சி இது.

இங்கு ஒரு வெம்மையான போர்க்களக் காட்சியை நம்முன் கொண்டு வந்து நிறுத்துகிறார் நக்கீரர். போர்க்களத்தில் பகைவர்களாகிய அவுணர்கள் இறந்துவிழ, எங்கும் பிணங்கள் பரந்து கிடக்கின்றன; தங்களுக்கு உணவு கிடைத்த மகிழ்ச்சியிலே பேய்கள் துள்ளுகின்றன; கூத்தாடுகின்றன. போர்க்களத்தில் விழுந்து கிடக்கும் உடம்புகளையும் அங்கங்களையும் பேய்கள் உண்டு களித்துக் கூத்தாடுவதாகக் கூறுவது கவிமரபு. பைரவர் பேய்களுக்கு இட்ட சாப வரலாறு அது என்று புராணம் கூறுகிறது. முருகன் வென்ற போர்க்களக் காட்சியை, அருணகிரிநாதர் தேன்தமிழ்த் திருப்புகழில் கூறுகிறார்:-

''அவுணர் உரத்துதிரக்
குளத்திற் குதித்துக் குளித்துக் களித்துக்
குடித்து வெற்றிக்
களத்தில் பெருக்கிக் கழுதாட வேல்தொட்ட
காவலனே'' என்று பாடுகிறார்.

கந்தபுராணம், சூரனைப் ''பாவமே பயிலும் சூரபன்மன்'' என்கிறது. அவன் மட்டுமல்லன்; அவனது குலமே அழிக்கப்படவேண்டும். முருகன் கைவேல் ஞான சக்தியானது. அசுரர்கள் இயற்றும் மாயையை அறுக்கும் ஆற்றல் கொண்டது. சிவஞான சித்தியார்,'சத்திதான் யாதோ என்னில் தடையில்லா ஞானமாகும்' என்று கூறுகிறது. குமாரதந்திரத்தில்,

'இச்சா ஞானக்ரியா சக்திரூப சக்தி தரம் பஜே'

என்று கூறப்படுகிறது. சூரபன்மன் இருபேருருவின் ஒருபேரியாக்கை கொண்டு விளங்குகிறான். அதாவது குதிரைத் தலையும் மனித உடலுமாகிய இரண்டு பெரிய வடிவங்களும் ஒன்றாயமைந்தது அச்சூரனின் உடம்பு. இது அவனது முன்னைவினைப் பயன். ஆற்றல் வாய்ந்த வேலால் இவ்வுடம்பு அறுபட்டு, வேறு வேறாகத் துண்டிக்கப்படுகிறது. கவிழ்ந்து தொங்கும் பூங்கொத்துக்களை உடைய மாமரமாக அவன் மாறி நிற்கிறான். அவனை அழித்த நிலையை அருணகிரியார்,

'செங்கைவேல் வென்றிவேல் கொண்டு சூர்
பொன்றவே சென்று மோதும் ப்ரதாபா' என்றும்
'சூரனங்கம் விழ'

(காரணித்தவரை திருப்புகழ் - திருஆவினன்குடி)

என்றும் பாடுகிறார்.

திருமங்கையாழ்வார் தமது பாசுரத்தில்,

'வெற்புடைய நெடுங்கடலுள் தனிவேல் உய்த்தவேள்'

என்று முருகவேளையும் அவன் கைவேலையும் நெடுங்கடலுள் பாய்ச்சிய வேலின் ஆற்றலையும் பாடுகிறார்.

இப்பகுதியில், 'பார்முதிர்' என்பதற்குப் 'பாராகிய நிலம் முற்றுப் பெற்ற' என உரை கூறுகிறார் உச்சிமேல் புலவர் கொள் நச்சினார்க்கினியர். மண்ணிடத்தே முதிர்ந்த கடல் என்றும் பொருள் கூறுகிறார்; அதாவது நிலத்தினும் நீர் முன்தோன்றியது என்பது கருத்து. பொதுவாகத் தமிழ்நூல் மரபின்படியும் வேதக்குறிப்பின்படியும் பரம்பொருளினின்றும் ஆகாயம் தோன்றி, அதனினின்றும் காற்றுத் தோன்றி, அதனின்றும் நெருப்புத்தோன்றி, அதனினின்றும் நீர்தோன்றி, அதனினின்றும் நிலம் தோன்றிற்று என்பது மரபு.

'குருதி யாடிய கூருகிர்க் கொடுவிரல்
கண்தொட்டு உண்ட கழிமுடைக் கருந்தலை
ஒண்தொடித் தடக்கையின் ஏந்தி வெருவர
வென்றுஅடு விறற்களம் பாடித் தோள்பெயரா
நிணம்தின் வாயள் துணங்கை தூங்க'

(52 - 56)

அச்சமூட்டும் நடையையுடைய அப்பேய்மகள், போர்க்களத்தில் பிணங்களை உண்டதால் குருதி தோய்ந்த கூரிய நகங்களையுடைய வளைந்த விரல்களோடு காணப்படுகிறாள். கண்ணைத் தோண்டி உண்டபின், மிக்க புலால் நாற்றம் வீசும் கரிய தலை ஒன்றைத் தனது ஒளிவீசும் வளையல் அணிந்த பெரிய கைகளில் ஏந்தி வருகிறாள்; மற்றவர்க்கு அச்சமூட்டும் வகையில் நிணம் தின்னும் வாயை உடையவளாகத் தோன்றுகிறாள்; முருகப்பெருமான் சூரபன்மனை வஞ்சியாது எதிர் நின்று கொன்ற வெற்றிக் களத்தைப் பாடி மற்றப் பேய்களோடு சேர்ந்து தோள்களை அசைத்துத் துணங்கைக் கூத்தாடுகிறாள். நிணத்தைத் தின்று கொண்டே அக்களிப்புமிகுதியால் பேய் துணங்கைக் கூத்தாடினாள் என்ற கருத்தால் 'நிணந்தின் வாயள் துணங்கை தூங்க' என்றார். இத்தகைய கூத்தைச் சிலப்பதிகார அரும்பத உரையாசிரியர் சிங்கிக் கூத்தென்பர். அடுத்து,

'இருபேர் உருவின் ஒருபேர் யாக்கை
அறுவேறு வகையின் அஞ்சுவர மண்டி
அவுணர் நல்வலம் அடங்கக் கவிழ்இணர்
மாமுதல் தடிந்த மறுஇல் கொற்றத்து
எய்யா நல்இசைச் செவ்வேல் சேஎய்'

(57 - 61)

சூரபன்மன் குதிரை முகமும் மனித உடலும் உடையவனாக இருந்தான் என்று ஒரு பழைய வரலாறு கூறுகிறது. மனிதனும் விலங்குமாய் இரண்டு பெரிய வடிவினையுடைய அச்சூரன், மாமரத்தின் உருவினைக் கொண்டு, கவிழ்ந்த பூங்கொத்துக்களுடன் கீழ்மேலாக முருகனுக்கு அஞ்சிக் கடலில் நின்றான். அச்சம் தோன்றப் போரிலே மண்டிச்சென்று, அவுணர்க்கு நல்வெற்றி இல்லாமல் போகும்படி முருகன் அவனைக் கொன்றான்.

சூரபன்மன் இருபேருருவின் ஒரு பேரியாக்கை கொண்டு விளங்குவதற்குக் காரணம் அவனது முற்பிறவியே யாகும். இது தொடர்பாகப் புராண வரலாறு ஒன்று கூறப்படுகிறது.

"சாகத்தீவை ஆண்ட பிரபாகர மன்னனுக்குப் பிறந்தவர்கள் சூரன், பதுமன், சிங்கன், தாரகன் எனும் நால்வரும். இவர்களில் சூரனும் பதுமனும் அகத்திய முனிவரின் அருளுரைப்படி முருகவேளின் மயில் ஊர்தியாகவும் கோழிக் கொடியாகவும் விளங்க விரும்பினர். சிங்கன் திரணபிந்து முனிவரின் அருளுரைப்படி, காளியின் சிங்க ஊர்தியாகவும், தாரகன் விருடப யோகி முனிவரின் அருளுரைப்படி மகா சாத்தாவின் யானை ஊர்தியாகவும் விளங்க விரும்பினர். அவர்கள் நாற்பதினாயிரம் ஆண்டுகள் தவமிருந்தனர். அவ்வமயம் கருடனும், அன்னமும் மயில், சேவல், சிங்கம், யானை ஆகியவற்றிடம் சூரன் முதலிய நால்வர் தவம் செய்யும் கருத்தைத் தெரிவித்தன. அது கேட்ட அந்நான்கும் அந்நால்வரின் தவத்தைக் கெடுத்து, 'நீவிர், எம் பெரும்பேற்றினை விரும்பியதால் எங்கள் முகங்கொண்டு பூதங்களாகக் கடவீர்' எனச் சாபமிட்டன. அவ்வண்ணமே ஆய அந்நான்கு பூதங்களும் கயிலையில் தங்கியிருந்த மயில் முதலிய நான்கையும் கண்டு வழிபட்டுத் தங்கள் கருத்து முற்றுப்பெற வேண்டின. இவ்வாறு கயிலையில் தங்கியிருக்குங்கால் தேவர்களுக்கும் அசுரர்களுக்கும் இடை நடந்த போரில் தேவர்களுக்குத் துணையாக நின்று போரிட்டு அசுரரை அழித்தன. அண்டாபரணன்

சாபத்தால் நால்வரும் அசுரர்கள் ஆனார்கள். பின் மயில் கோழி முதலிய நான்கிற்கும் கருடன் அன்னம் ஆகிய இரண்டிற்கும் பகைமூளுமாறு கோள் கூறினர்; அவ்வீர் இனங்களை அழிக்க முற்பட்டனர். மால், அயன் மூலம் இவையறிந்த முருகவேள், அந்நால்வரையும் அழைத்து ' நீவிர் ஆற்றிய குற்றத்திற்காக அசுரர் மரபில் தோன்றி இத்தேவர்களுக்குத் துன்பம் செய்மின். அதனால் நீவிரும் அழிவீர்' என்று அருளினான். அதுகேட்ட நால்வரில் சூரனும், பதுமனும் 'யாங்கள் அவ்வாறு அழிந்தபின் மயிலும் கோழியுமாகி உமக்கு ஊர்தியும் கொடியுமாக வேண்டும்' என வேண்ட, முருகனும் அருளினார்'' இவ்வரலாறு, பாம்பன் சுவாமிகள் அருளிய சுப்பிரமணிய வியாசத்தில் இடம் பெற்றுள்ளது. முற்பிறவியில், இருவராய் இருந்து வாழ்ந்தமையின் சூரன் 'இருபேருருவின் ஒரு பேரியாக்கை' என்று கூறப்படுகிறான்.

இனி, 'அறுவேறு வகையின் அஞ்சுவர மண்டி' என்ற தொடரை முருகனுக்கு உரியதாக்குவர் நச்சினார்க்கினியர். கவிப்பெருமாள் ஆறுமுகமுடைய முருகன் என்ற வகையில் பொருள் காண்பர். பரிதியார் சிவபெருமான் நெற்றிக் கண்ணிலிருந்து தோன்றிய அறுவகைப் பொறி எனப்பொருள் கூறுவர். நச்சினார்க்கினியர், சரவணப் பொய்கையில் அறுவகை வடிவுடன் என்ற கருத்தில் 'ஆறாகிய வேறுபட்ட கூற்றாலே' என்று கூறுகிறார். இது தொடர்பான கதை ஒன்றையும் தெரிவித்துள்ளார்.

அதாவது, சிவபெருமான் கருப்பத்தை இந்திரன் கையில் கொடுக்க, அவன் சப்த இருடிகளிடம் கொடுக்க, அதை அவர்கள் அவிசாகத் தீயிலிட்டுப் பின் தம் மனைவியர் கையில் கொடுக்க, அவர்களில் அருந்ததி தவிர ஏனைய ஆறு பெண்களும் உண்டு கருத்தரித்துச் சரவணப் பொய்கையில் குழந்தைகளாக ஈன்றனர். ஆக, ஆறு கூறாக வளர்கின்றபோது இந்திரன் வச்சிராயுதத்தை அவற்றின் மீது எறிய, அவ் ஆறு வடிவங்களும் ஒரு வடிவம்கொண்டு முருகனாகி இந்திரனை வழியழித்துப் பின் சூரபன்மனைக் கொல்வதற்கு, அவ்வடிவம் ஆறாகிய வேறுவேறு வகையான கூற்றினால் நெருங்கி மண்டிச் சென்றது எனப் பரிபாடல் 5 ஆவது பாடலில் கூறப்பட்டுள்ளது. மேலும், 'அறுவேறு வகையின் அஞ்சுவர' என்ற தொடருக்குச் சூரபன்மனின் அறுவகைப் படையும் அஞ்சுமாறு என்றும் பொருள் கூறுவர்.

மகாபாரதம், வான்மீகிராமாயணம், பத்மபுராணம் ஆகியவற்றில் இப்பொருள் மீது மேலே கூறியதற்கு சற்று மாறுபட்ட கதை கூறப்படுகிறது.

**வான்மீகத்தில்:**

பாலகாண்டம் 36வது சர்க்கத்தில் கூறப்படுவதாவது :-

இராமனும் இலக்குவனும் விசுவாமித்ர முனிவரிடம் கங்கை மூன்றாகப் பிரிந்து பாயும் காரணம் பற்றி வினவினர். விசுவாமித்திரன் இவ்வரலாற்றை விளக்கும்போது முருகன் வரலாறும் மொழியப் பெருகிறது. இவ்வரலாற்றின்படி இறைவன் பார்வதித் திருமணம் இனிது நடைபெற்றபின் பொறிபுலன் வென்ற அப்பெருமான் பார்வதியை அணைந்தார். தேவ ஆண்டுகள் கழிந்தன. அவர்களுக்கு மகப்பேறு இல்லை. தேவர்கள் மனம் வருந்தினர். பிரமனிடம் முறையிட்டனர். பிரமன் தேவர்களோடு திருக்கயிலை அடைந்து மகாதேவனை வணங்கினர். அப்பெருமானின் வீரிய ஆற்றலை எடுத்து விளம்பி, 'மூவுலகின் நன்மை கருதி தேவரீரே அக்கினி வடிவு கொண்டு அதைத் தாங்கவேண்டும்' என்று முறையிட்டனர். இதை ஏற்ற இறைவன் தீப்பிழம்பாகிய வீரியத்தை அக்கினியிடம் அளித்தார். அது பூமியில் நழுவி உலகெங்கும் பரவியது. வெப்பம் தாக்கியது. அஞ்சிய தேவர்கள் உருத்திர வீரியத்தைத் தாங்குமாறு ஆணையிட்டனர். அக்கினி அதைக் காப்பாற்ற அது வெண்மலையாயிற்று. கருமுதிர்ந்தது. கங்கையிலே விட்டான். கங்கை அதைத் தாங்காது தாழ்ந்து மூன்றாகப் பிரிந்தாள். விரைந்து அசைந்து நாணல் காடு சூழ்ந்த சரவணப் பொய்கையில் கொண்டு சேர்த்தாள். அங்குள்ள தாமரைப்பூவிலே முருகனாகிய குழந்தை அவதரித்தது. இதைக் கண்ட பார்வதி கோபங்கொண்டு தேவர்களுக்கும் மகப்பேறு இல்லாமல் ஒழியட்டும் என்று சபித்தாள்.

வியாசரின் மகாபாரதத்தில் சல்லிய பர்வம் 46-47 வது அத்தியாயங்களில் இப்புராண வரலாறு கீழ்க்கண்டவாறு கூறப்படுகிறது:-

முன்னொரு காலத்தில், மகாதேவனின் வீரியம் நழுவி அக்கினியில் வீழந்தது. அதனை அவன் தாங்கும் ஆற்றலில்லாமையால் வருந்த, பிரமதேவன் ஆணையின்படி கங்கையில் விட்டான். கங்கை சுமந்து சென்று இமயமலையில் விட்டாள். அது அங்கேயே வளர்ந்து குழந்தையாயிற்று. அக்கினிப்பூவென, அழகிய அக்குழந்தையை கார்த்திகை மாதர் தங்கள் பிள்ளை இவன் எனக்கூவினர். கார்த்திகை மாதர் கருத்தறிந்த முருகன், அவர்களுக்கு அருள்பாலித்து முலைப்பாலுண்டார். மேருமலையன்ன பொன்னிற மேனியால் உலகு ஒளி பெற்று விளங்க வளர்ந்தார். கங்கை சுமந்ததால் **'காங்கேயன்'**

என்றும் கார்த்திகை மாதர் பாலூட்டி வளர்த்ததால் **'கார்த்திகேயர்'** என்றும் அழைக்கப் பெற்றார். தேவமகளிர் குழந்தை மகிழ ஆடினர். பூத கனங்கள் பாதுகாத்தன. குழந்தை வளர்ந்ததும் இறைவனை நோக்கி வந்தார். அங்கிருந்த சிவன், பார்வதி, அக்கினி, கங்கை குழந்தை யாரை நோக்கி வருகிறான் என ஆவலோடு காத்திருந்தனர். சுப்பிரமணியக் கடவுள் நான்கு வடிவங்கொண்டு நான்கு பேரையும் ஒரே காலத்தில் அடைந்தார். சிவனை அடைந்த வடிவு **ஸ்கந்தர்** எனவும், பார்வதியை அடைந்த வடிவு **விசாகர்** எனவும், அக்கினியை அடைந்த வடிவு **சாகர்** எனவும், கங்கையை அடைந்தவர் **நைகமேயர்** எனவும் பெயர் பெற்றார். சுப்பிரமணியனின் அழகையும் ஆற்றலையும் உணர்ந்த பிரமதேவர் பதினெட்டுக் கணங்களுக்கும் உலகனைத்திற்கும் **சேனாபதியாக** இருக்கும் சிறந்த பதவியைத் தந்தனர். தேவர்கள் பல பூதகணங்களைப் படைத்து இவருக்குச் சேனையாகக் கொடுத்தார்கள். உருத்திரர் வலிமைமிக்க முப்பதினாயிர வெள்ளம் சேனையைக் கொடுத்தார். திருமால், பெருமைமிக்க வைஜயந்தி மாலையைத் தந்தார். உமையவள் அழுக்கில்லாத இரு உடைகளைத் தந்தாள். கங்கை கமண்டலங்கொடுத்தாள். குரு தண்டம் கொடுத்தான். கருடன் மயிலைக் கொடுத்தான். அருணன் கோழியைக் கொடுத்தான். வருணன் ஆடு கொடுத்தான். பிரமன் போரில் வெற்றி ஈட்டும் வரத்தையும் மான்தோலையும் அளித்தான். இவற்றை ஏற்று சுப்பிரமணியர் **தேவசேனாபதியானார்**. தேவர்களுக்கு பகைவனும் மகாபலியின் பிள்ளையும் கொடியவனுமான வாணன் கிரவுஞ்சத்தைச் சரணடைந்தான். சுப்ரமணியர் சத்தியாயுதத்தால் கிரவுஞ்சத்தைப் பிளந்து அசுரனைக் கொன்றார். அசுரசைனியங்களும் அழிக்கப்பட்டன. ஸ்கந்தரைச் சிலர் ஸநத்குமாரராகக் கருதுகிறார்கள். சிலர் கங்கை மைந்தனாகக் கூறுகிறார்கள். சிலர் சிவகுமாரனாகச் சிந்திக்கிறார்கள். சிலர் கிருத்திகாதேவியின் பிள்ளையாகப் போற்றுகிறார்கள். இவ்வாறு, யோகிகளுக்குத் தலைவரான இவரைப் பலரும் பலகோடிவிதமாகப் பாராட்டினார்கள் என்று கூறப்பட்டு உள்ளது.

பத்மபுராணம் :

(41வது சர்க்கம் சுலோகம் 118-217 முடிய) இவ்வரலாறு வேறுவிதமாகக் கூறப்படுகிறது.

மகாகவி காளிதாசனின் இரகுவம்ச மகாகாவியத்தில், இரண்டாம் சர்க்கம் சுலோக எண்.75 இல் சிவனுடைய தேஜஸை அக்னி சுமந்து சென்று கங்கையிடம் கொடுத்து சுப்பரமணியன் தோற்றம் நிகழ்ந்த வரலாறு கூறப்படுகிறது. இவற்றை விட வடமொழி

ஸ்காந்தத்திலும் தமிழ்க் கந்தபுராணத்திலும் கூறப்படும் புராணவரலாறுகள் சிறந்தவை. ஏற்புடையவை. வடமொழி ஸ்காந்தம் சம்பவகாண்டத்தில், அத்தியாயம் இருபத்தைந்து இருபத்தாறு இருபத்தெட்டில் கீழ்க்கண்டவாறு கூறப்படுகிறது:-

சிவபெருமானைத் தேவர்கள், தங்கள் சேனைக்கு ஒரு தலைவனைப் படைத்துத் தருமாறு வேண்டுகின்றனர். தயாநிதியான சிவன், ஆறுமுகத்தோடு ஒளிவீசும் திருமேனியைக் கொண்டார்; அம்பிகையை விருப்பத்துடன் பார்த்தார். பரமனின் ஆறு நெற்றிக்கண்களிலிருந்து கோடி சூரியனை ஒத்ததும், காலாக்கினிக்கு ஒப்பானதுமான தேஜஸ் வெளிப்பட்டது. உலகமுழுதும் வியாபித்தது. அனைவரும் அஞ்சினர். இத்தேஜசின் ஒளி ஆற்றலிலிருந்து தம்மைக் காக்குமாறு தேவர்கள் வேண்டினர். இறைவன் அத்தேஜஸை மனதால் நினைத்தார். நினைத்த மாத்திரத்தில் அது, சூட்சுமமாகவும் சாந்தமாகவும் ஆகி இறைவன், இறைவியரை அடைந்தது. சிவபெருமான், அக்னியையும் வாயுவையும் பார்த்து அந்த ஆறு உருக்கொண்ட தேஜஸைத் தேவநதிக்கு எடுத்துச் சென்று, நாணல்புதர் நடுவில் சேர்க்குமாறு கூறினார். இருவரும் தங்கள் வலியின்மையைத் தெரிவித்தனர். சிவபிரான் தேஜஸை இலேசாக்கி, அவர்கள் அதனைத் தாங்கும் ஆற்றலையும் அவர்களுக்குத் தந்தார். அவர்கள் கங்கைக் கரையில் நாணல்காட்டின் நடுவில் அதனை வைத்தனர். கங்கை வற்றினாள். இருப்பினும் அவள் நாணற்காட்டின் நடுவில் உள்ள தாமரை மலரின் நடுவில் அதைச் சேர்த்தாள்; அங்கு ஆறுமுகங்களையும் பன்னிரண்டு கரங்களையும் இரண்டு பாதங்களையும் உடைய மிக்க அழகானதும் மங்களத்தைத் தருவதுமான குழந்தை உண்டாயிற்று; அப்பொழுது திக்குகள் தெளிந்தன; பிராணிகளுக்குச் சுகமான காற்று வீசியது; மூவுலகிலும் தேவகணங்களுக்கு மிகுந்த மங்களமுண்டாயிற்று. இந்திரன் முதலிய தேவர்கள் வணங்கினர்; திருமால் ஆறு கார்த்திகை மாதர்களை அழைத்து அவர்களை, குழந்தைக்குப் பால் கொடுக்கச் சொன்னார். கார்த்திகை மாதர்களை அனுக்ரகம் செய்யும் வகையில் முருகப்பெருமான் ஆறுமூர்த்திகளாக ஆயினார். தாமரை மலரில் தவழும் அக்குழந்தைகளை ஒவ்வொருவரும் ஒரு குழந்தையாக எடுத்துப் பால் கொடுத்து வளர்த்தனர். இறைவன், இறைவியுடன் குழந்தைகளைக் காண வருகிறார். அன்னை பராசக்தி ஆறு குழந்தைகளையும் ஒன்றாக எடுத்து மார்பில் தழுவுகிறாள். ஆறு உருவமும் ஒருருவமாக அதாவது இரண்டு கால்கள், பன்னிரண்டு புயங்கள், ஆறு முகங்கள், பதினெட்டுக் கண்கள் கொண்ட திருவுருவாயின. குழந்தைக்கு அன்பினால் பெருகிய மங்களமான தனது பாலைப் பொற்கிண்ணத்தில் கொடுத்தாள் அன்னை.

கல்வியும் ஞானமுமான அப்பாலை, குழந்தை அருந்தியது. பரமசிவன் மகிழ்ந்து கார்த்திகைப் பெண்களுக்கு அருள்பாலித்தார். இனி முருகனைக் கார்த்திகை மாதர்கள் வளர்த்ததால், அவன் 'கார்த்திகேயன்' என்று அழைக்கப்படுவான் என்றும், 'உலகில் மாந்தர் கார்த்திகை நட்சத்திரத்தன்று விரதம் அனுஷ்டிப்பார்கள்; விரதம் அனுஷ்டிக்கும் பக்தர்களுக்கு வேண்டிய பொருளை முருகன் அருளுவான்'' என்றும் அருளினார்.

கச்சியப்பர் கந்த புராணத்திலும் இவ்வரலாறு கூறப்படுகிறது. இறைவனின் நெற்றிக் கண்ணிலிருந்து ஆறு பொறிகள் எழுகின்றன. தேவர்கள் அஞ்சுகின்றனர். சிவபெருமான் அப்பொறிகளைத் தம்அங்கையால் அடக்கி வாயுவிடம் கொடுக்கிறார். வாயு தொடர்ந்து எடுத்துச் செல்லவியலாமல் அக்னியிடம் ஒப்படைக்கிறான். அக்னியும் ஆற்றாது கங்கையில் சேர்க்கிறான். அக்கங்கை அதைச் சரவணப் பொய்கையில் சேர்க்கிறாள். அங்கு அருவமாயும் உருவமாயும், அநாதியாயும், ஒன்றாயும், பலவாயும் பரப்பிரம்மமாயும் நின்ற பரமசிவ சோதிப்பிழம்பே ஒரு திருமேனியாக வடிவு கொண்டது. பரம்பொருள், கருணை வெள்ளம் பொழியும் ஆறு திருமுகங்களும், பன்னிரண்டு திருக்கரங்களும் கொண்டு உலகுஉய்ய முருகக் கடவுளாகத் திருஅவதாரம் செய்தது. திருமாலாதி தேவர்கள், கார்த்திகைப் பெண்களைக் குழந்தைக்குப் பாலூட்டுமாறு பணித்தனர். கார்த்திகைப் பெண்களிடையே போட்டி ஏற்படாதபடி குமாரக்கடவுள் ஒருவரே ஆறு குழந்தைகளாகப் பிரிந்தருளினார். கார்த்திகைப் பெண்கள் ஆளுக்கொரு குழந்தையை எடுத்துப் பாலூட்டினர். சிவபெருமான் உமையம்மையுடன் அங்குத் தோன்றி, அறுமுக அண்ணலின் தன்மையைப் பார்த்து அகமகிழ்ந்தார். இறைவன் இறைவியிடம் 'நீ உன் புதல்வனைக் கொண்டு வருவாய்'' என்று பணித்தருளினார். இறைவி சரவணப்பொய்கையில், தாமரை மலரில் தவழும் குழந்தைகள் ஆறையும் அள்ளி எடுத்து அணைத்தாள். ஆறு குழந்தைகளின் உடல்களும் ஒருடலாகமாறின. தலைகள் ஆறாகவே நின்றன. அம்பிகை ஆறுகுழந்தைகளையும் அணைத்தபோது ஆறுதிருவுருவங்களும் ஒன்றுகூடின. அதனால் முருகன் 'கந்தன்' என்று பெயர் பெற்றான். உலகின் நலனுக்காக கடவுள் பஞ்சபூதங்களில் படிப்படியாக வெளி, காற்று, கனல், புனல், மண் இவற்றின் வழியே தோற்றம் பெறுகிறார் என்பது முருகன் திருஅவதாரத்தின் தத்துவம். இறைவனின் நெற்றிக் கண்ணிலிருந்து புறப்பட்ட பேரொளிச் சுடர் வானத்தில் நின்று, பின் காற்றின் கையில் புகுந்து, தீயைச் சென்றடைந்து, அங்கிருந்து கங்கையாகிய நீரில் தவழ்ந்து நிலத்தில் எய்தியது. ஞானாக்கினியில் அருவமாகத் தோன்றிக் கருணைப் பொய்கையில் உருவமாகப்

பொலிந்தது. அருவமான ஞானமயப் பரம்பொருள் பக்தர்களிடம் கருணை கொண்டே வடிவுகொள்கிறது என்பதும் தத்துவம்.

'மாமுதல் தடிந்த' என்ற பகுதிக்கு உரைகூறும் நச்சினார்க்கினியர் "மா" என்பதற்கு அவுணரெல்லாம் தம்முடனே எதிர்ந்தால் வலியிலே பாதி தங்கள் வலியிலே கூடும்படி மந்திரங்கொண்டிருந்து சாதித்தொரு மாமரம் என்று கூறுகிறார். இவ்வாறு கீழ்நோக்கி வளர்ந்திருந்த மாமரத்தை முருகன், சேதித்தமையால் அவுணர் வலம் அடங்கிற்று. இந்த மாமரத்தைப் பற்றிய வரலாறு பழங்கால நூல்களில் காணப்படுகிறது. அசுரர்கள் சேர்ந்து தங்களுக்குப் பலமாக இந்த மாமரத்தை வைத்திருந்தார்கள் என்றும், மந்திர சக்தியால் காப்பாற்றி வந்த அம்மரமே சூரனுக்கு உயிர்நிலையாக இருந்தது என்றும் அதனை முருகப் பெருமான் வேலால் பிளந்தான் என்றும் கூறப்படுகிறது. 'திரையெறி மலைகளிற் கவடுபல போக்கி நின்ற மா' என்கிறது கல்லாடம்.

மற்றொரு வரலாறும் கூறப்படுகிறது. பண்டை மன்னர்கள் தத்தமக்குரிய காவல் மரம்ஒன்றை வளர்த்து வந்தார்கள் என்றும் பகைவர்கள் போரிடும்போது அக்காவல் மரத்தை வெட்டித் தமது வெற்றியை நிலை நாட்டினர் என்றும் கூறப்படுகிறது. இத்தகைய காவல் மரம் பற்றிச் சங்க நூல்களிலும் குறிப்புகள் காணப்படுகின்றன.

தேவலோகத்தையும் வென்று அண்ட கோளகை முழுதும் அடக்கி ஆண்டதால் சூரனது வெற்றி நல்வலமாயிற்று. முருகன் கைவேல், சூரனின் இரண்டு பெரிய வடிவினை உடைய ஒன்றாகிய பெரிய உடலை அற்று விழச் செய்கிறது. அவுணர்கள் வெற்றியில்லையாம்படி தடுக்கிறது. சூரனாகிய மாமரத்தை வெட்டி வீழ்த்தியது. முருகன் குற்றமில்லாத வெற்றியினையும் அளக்கவொண்ணாத நல்ல புகழினையும் செவ்வேலையும் உடையவன். ஞானசக்தியே முருகனின் வேலாதலின் 'செவ்வேல்' ஆயிற்று. சிலப்பதிகாரம் 'சூர்மாதடிந்த சுடரிலைய வெள்வேலே' என்று கூறுகிறது. அருணகிரி நாதர், 'சூர்மா மடியத் தொடு வேலவனே' எனப் பாடுகிறார். ஆன்ம விளக்கத்தின் தடையாகிய பகை நீக்க வல்லது, அவன் கைவேல். உலகினைப் படைத்துக் காத்து அழித்து மறைத்து அருள் செய்யும் ஐந்தொழிலும் இறைவனுடையவை. உயிர் அறியாமையால் தீநெறிச் செல்லாமல் தடுப்பதே இறைநோக்கம். மாமரம் தலைகீழாய் நிற்பதாகக் கூறப்படுவது நன்னெறியில் செல்லாது தீநெறியில் படர்ந்த உயிர் என்னும் குறிப்புடையது. முருகப்பெருமான் அளக்கவொண்ணாதவன்; அறிவிற்கு

அப்பாற்பட்டவன். அண்டியவர்களுக்கு அருள் சுரக்கும் பெற்றியன். அதனால் அவன் புகழ் முழுதும் உயிர்களால் அறியப்படாததாயிற்று. ஆகவே, 'எய்யா நல்லிசை' என்றார். அருணகிரிநாதர் திருச்செந்தூர் திருப்புகழில், முருகனின் புகழ் ஒருபோதும் தாழாது நின்று அருளும் பேற்றை யாசிக்கிறார்:-

'நின்சொல் கோடாது என்கைக்கு
அருள் தாராய்' (ஓரா தொன்றைத்திருப்புகழ்)

முருகன் வீரத்தையும், வேலின் சிறப்பையும், சூரசங்காரத்தையும் கூறிய நக்கீரர் அப்பெருமானிடம் ஒரு புலவரை ஆற்றுப்படுத்துகிறார்,

''சேவடி படரும் செம்மல் உள்ளமொடு
நலம்புரி கொள்கைப் புலம்பிரிந்து உறையும்
செலவு நீ நயந்தனை ஆயின் பலவுடன்
நன்னர் நெஞ்சத்து இன்நசை வாய்ப்ப
இன்னே பெறுதிநீ முன்னிய வினையே''
(62-66)

''சேயோனின் சேவடியினை விரும்பி நேர்மையான உள்ளத்தொடு நன்மையே நாடும் கொள்கையினைக் கொண்டுள்ளாய்; நீ உன் இருப்பிடத்தினின்றும் நீங்கி முருகனிடம் செல்லுதலைக் கருதுவாயாயின் மிகவும் நன்று; நல்ல நெஞ்சிலே நீ கொண்டுள்ள இனிய விருப்பம் ஈடேறும். நீ முயன்று மேற்கொண்டுள்ள செயலின் பயனை இப்பொழுதே பெறுவாய்''

இங்கு நக்கீரர், நலம்புரி கொள்கையுடன் வரும் புலவனைப் பாராட்டுகிறார். இப்புலவன், முந்திய வல்வினைகள் தீர்க்கும் முருகப்பெருமானின் திருவடியில் செல்லுதற்குரிய தலைமை பெற்ற உள்ளமுடையவன். நன்மைகளைச் செய்யும் நாட்டமுடையவன். ஆணவ அழுக்கு நீங்கிய 'அமலமாகிய சிந்தை' யை உடையவன். பக்தியும் அறிவும் பரவிய மனத்தினன். முருகன்மீது உருகும் செயல் தந்து உணர்வு கொள்ளும் பேற்றை யாசிப்பவன்.உண்மை உணர்ந்து எஞ்ஞான்றும் தங்குதற்குரிய நெறியில் செல்லும் செலவை அவன் மேற்கொண்டுள்ளான். முருகப்பெருமானின் அருளைப் பெறும் தகுதிகள் அனைத்தும் பெற்றுள்ளான். அவன் குறிக்கோள் முருகப்பெருமானின் திருவடியைச் சார்வது. காரணம் திருவடியே வீடாகும். இப்பகுதிக்கு

விளக்கம் கூறும் நச்சினார்க்கினியர்,

'திருவடியே வீடாயிருக்கும்'' என்றார், அது,
தென்னன் பெருந்துறையான்
காட்டாதனவெல்லாம் காட்டிச் சிவங்காட்டித்
தாள்தாமரை காட்டித் தன் கருணைத் தேன்காட்டி'
(திருவா - திருவம்மானை - 6)

என்பதாலும், பிறருந் திருவடியைக் கூறுமாற்றானும் உணர்க' என்று கூறுகிறார்.

அப்பர் பெருமான்,

''புண்ணியா நின்னடிக்கே போதுகின்றேன்
பூம்புகலூர் மேவிய புண்ணியனே''

என்று திருவடியை வேண்டுகின்றார்.

சிவஞானசித்தியாரில்

'ஞானத்தால் சிவனடியைச் சேர்வர்' என்றும், (சித்தி-அபக.263)
'இறைவனடி ஞானமே ஞானமென்பார்'(சித்தி-சுபக.279)

என்றும் கூறப்படுகிறது.

வீடுபேற்றிற்குச் சேயோன் சேவடி படரும் செம்மல் உள்ளம் வேண்டும். இஃது ஏனைப் பற்று நீங்கி, முருகப்பற்றில் ஈடுபடும் அன்பு நெறியாகும். இது சென்ற பிறப்புகளில் நலமே புரிந்து பழகிய பழக்கத்தால் இப்பிறப்பில் எய்தப் பெறுவது. இது புலனை அடக்கி, மனத்தை, யாண்டும் நிறைந்திருக்கும் இறைவனிடம் நிற்கச் செய்து அவனோடு கலந்து நிற்கும் பாவனையால் உண்டாகும். இறைவன் 'அன்பினில் விளைந்த ஆரமுது' , 'ஆரேனும் அன்பு செயின் அங்கே தலைப்படுவான்'. அருணகிரிநாதர் முருகன் திருவடிக்குத்தாம் வழிவழியடிமை என்பதைப் பல பாடல்களில் கூறுகிறார்.

திருச்செந்தூர் திருப்புகழில்

1. 'தாளிலுறு வழியடிமை யன்பு கூருமது சிந்தியேனோ' என்றும்
2. 'முடியவழி வழியடிமை யெனுமுரிமை யடிமைமுழு
துலகறிய மழலைமொழி கொடுபாடு மாசுகவி' என்றும் பாடுகிறார்.

அருணகிரிநாதர் முருகப்பெருமானிடம்

'அன்பாக வந்து உன்தாள் பணிந்து
ஐம்பூத மொன்ற'

நினைக்கும் பேற்றை வேண்டுகிறார். மேலும், இறைவனிடம் மாறாத அன்பு வைத்தால் அவன் அருளைப் பெறலாம். அதனால் இறைவன் திருவடித் தாமரை மீது அன்புவைக்கும் பேற்றை அருணகிரிநாதர் யாசிக்கிறார்.

'அருட்பயம் பங்கயம் அன்புறாதோ' எனப் பாடுகிறார்.
'அன்புடன் ஆசார பூசை' செய்யவும் வேண்டுகிறார்.

'உன்பதம்' புணர்க்கைக்கன் புதந் தருள்வாயே' எனவும் வேண்டுகிறார். (நிதிக்குப் பிங்கலன் திருப்புகழ்). மேலும் அவர் விரிந்து கிடக்கின்ற பொறிகளை ஒருமுக மாக்கும் நிலையை 'ஞானங்கொள் பொறிகள் கூடி' என்று வேண்டுகிறார். இப்பேறு முருகன் அருளால் எளிதில் எய்தப்பெறுவது. இப்பகுதியில் நக்கீரர் பல தேர்ந்தெடுத்த சொற்களைப் பயன்படுத்துகிறார். 'சேவடி படரும் செம்மல் உள்ளம்' என்கிறார். செம்மல் உள்ளம் எய்தப் பெறுவது எவ்வாறு? ஒருவருக்கு வீடுபேற்றின்கண் விருப்பம் உண்டாதல் வேண்டும். அதனைப் பெறும் தகுதி எய்துதல் வேண்டும்; இது பல பிறவிகளிலும் ஏற்பட்டு, நிகழ்ந்து முற்றுப் பெறுவது. அதனால் 'செம்மல் உள்ளமாகிறது'. அவ்வழி நல்வினை செய்தல் 'நலம்புரி கொள்கையாகும்'. ஞானம் எய்துதல் 'புலம்பிரிதல்' ஆகும்; ஐம்புலன் அவாவை அடக்கவேண்டும். இதுதான் வைராக்கியம். திருவள்ளுவர் உயிர்களுக்கு எக்காலத்தும் கெடாது வருகின்ற பிறப்பினை உண்டாக்கும் வித்து, அவா ஆகும் என்கிறார்.

''அவாஎன்ப எல்லா உயிர்க்கும் எஞ்ஞான்றும்
தவாஅப் பிறப்பீனும் வித்து''

திருமூலர்,

'ஆசையறுமின்கள் ஆசையறுமின்கள்
ஈசனோடாயினும் ஆசையறுமின்காள்' என்று கூறுகிறார். (2570)

அருணகிரிநாதர்,

''பிறவியற நினைகுவனெ னாசைப் பாடைத் தவிரேனோ''

என இறைஞ்சுகிறார். புலம் பிரிந்து உறைதல், உலகப் பற்றற்று வாழ்தல்; அது இறையைப் பற்றுவதாலேயே வரும்.

''பற்றுக பற்றற்றான் பற்றினை அப்பற்றைப்
பற்றுக பற்று விடற்கு'' என்கிறது வள்ளுவம்.

திருமுறைகளில்,

'அடியார் மேல் பையநின்ற வினை மாற்றுவார்'
'பந்தித்து நின்ற பழவினைகள் தீர்ப்பான்'
'முந்திய வல்வினைகள் தீர்ப்பான்
பந்தித்த வல்வினைப் பற்றறப் பிறவிப்
படுகடல் பரப்புத் தவிர்ப்பான்'
'பாட்டும் பாடிப் பரவித்திரிவார் ஈட்டும் வினைகள் தீர்ப்பான்'

என அடியார் வினை தீர்க்கும் ஆண்டவன் பண்பு கூறப்படுகிறது.

நாம் பிரபஞ்சச் சேற்றில் உழல்கிறோம்; இந்தப் பிரபஞ்சச் சேற்றினின்றும் நாம் மீளவேண்டுமானால், அவன் தாள்களைப் பற்றும் அவாவும் முயல்வும் வேண்டும். பிரபஞ்சச் சேற்றினின்றும் நம்மை விடுவித்துக் கொள்வது எளிதன்று. அருணகிரிநாதர் கந்தர் அலங்காரத்தில்,

'பேற்றைத் தவஞ்சற்றும் இல்லாத என்னைப்
பிரபஞ்ச மென்னும்
சேற்றைக் கழியவழி விட்டவா!'

எனப்பாடுகிறார். மேலும் அவர் சிலர் அழியும் இந்த யாக்கை மீதும், பசுபாசத்தே சீவாத்மாவாகிய உயிர் இச்சைப்படும் உலகப் பற்றுக்களின் மீதும் காமமுறுவதை எண்ணி இரங்குகிறார். திருச்செந்தூர் திருப்புகழில் (சேமக்கோமள பாதத் தாமரை)

'காம க்ரோத உலோப பூதவி
காரத் தேயழி கின்ற மாயா
காயத்தே பசு பாசத்தே சிலர்
காமுற்றேயும் அது என் கொலோ தான்'

என்று பாடுகிறார். ஆக, பிரபஞ்சச் சேற்றை நீக்க இறைவன் திருவருள் வேண்டும்.

இங்குப் புறப்பட்டு வரும் புலவன், செவ்வேள் முருகனின் செம்மைத் திருவடியை அடையும் பெருமையான உள்ளத்துடன் வருகிறான். பிரபஞ்சச் சேற்றை விட்டுச் செந்தாமரையன்ன முருகனின் திருவடியை அடைய விரும்பிப் புறப்பட்டவன், அழுக்கினின்றும் நீங்கி அன்பும் அழகும் ஆனந்தமும் அமைதியும் தரும் இடத்தை நாடி வருகிறான். இனி அவனை இப்பிறவியினின்றும் காப்பது இறைவனடி. ஆண்டவன் ஈர்த்து நம்மை ஆண்டு கொள்ள வருகிறான். நம் அன்பைவிட, அவன் நம்மேல் வைத்திருக்கும் அன்பு பெரிது; மணிவாசகப்பெருமான்

''தீர்ந்த அன்பாய அன்பர்க்கு அவரினும்
அன்ப போற்றி''

எனப் பாடுகிறார். அருணகிரிநாதர் 'தேடும் அன்பர் சகாயர்' என்று கூறுகிறார். (விந்ததினூறி - திருச்செந்தூர் திருப்புகழ்). மேலும் ஆன்மாவின் தனிமை அகல மெய்யறிவைப் பெறவேண்டும். இதனை அருணகிரிநாதர் 'தனிமை கழிய அறிவு தரவேணும்' (தமரு மமரு திருப்புகழ்) என்று வேண்டுகிறார். மேலும் அவர் ஐம்பொறிகளின் வழிச் செல்லும் ஆசைகளை அறுக்க வேண்டும் என்பதைக் கந்தரநுபூதியில் மிக அழகாகத் தெரிவிக்கிறார்.

'கைவாய் கதிர்வேல் முருகன் கழல்பெற்
றுய்வாய் மனனே ஒழிவாய் ஒழிவாய்
மெய்வாய் விழிநாசியொடும் செவியாம்
ஐவாய் வழிசெல்லும் அவாவினையே.'

இங்கு அருள் தருபவன், அவ்வருளைப் பெறுபவன் ஆகிய இருவர் தகுதியையும் கூறுகிறார் நக்கீரர். முருகனின் நிறம் செம்மை; திருவடி செம்மை. கரங்கள் அருளை வாரிவழங்கும் பேற்றால் செம்மையானவை சுழற்றும் வேல் செம்மை; அருணகிரிநாதர்,

'உலா உதய பானு சதகோடி உருவான வொளி
வாகு மயில் வேலங் கையி லோனே'
(அவாமரு—திருப்பகழ்) என்று போற்றுகிறார்.

அப்பெருமானை அடையப் புறப்படும் அன்பனின் உள்ளம் செம்மையானது; தூய்மையானது. மேலும் இறையடி எய்துதலை 'உறையும்' என்றும் அச்செலவு நயத்தல்

அரிதாகலின் 'நயந்தனையாயின்' என்றும் குறித்தார்; நயந்தனை எனின், அது பலவுடல்களில் தொடர்ந்து முற்றிய நன்னர் நெஞ்சமுடையை ஆதலைக் காட்டும் என்பதால் 'நன்னர் நெஞ்சம்' என்றும் உலகப் பொருள்களிற் செலுத்தும் அவாப் போலல்லாது இது வீடுபேற்றிற் செலுத்தும் ஆசையாகலின் 'இன்னசை' என்றும் அதனைப் பெற நீ நயத்தலால் உடன் பெறுவாய் என்பதை 'இன்னே பெறுதி' என்றும் இயம்பினார். இவ்வாறு திருவடி பற்ற விரும்பும் செம்மல் உள்ளம், புலம்பிரிந்து உறையும் வைராக்கியம், நலம்புரிகொள்கை என்னுமிவை, இன்நசையுடன் இருக்குமானால், பூர்வ புண்ணியமும் சேர, இப்பொழுதே நீ கருதியபேறு கிடைக்கும். இச்சாதனத்தைக் கைக்கொண்டவர்கள் ஞானியாவார்கள்; அவர்கள் இறைவனை அண்டபிண்ட சராசரம் அனைத்தையும் அவனாகக் காண்பர். அவர்களுக்கு இயற்கை அனைத்தும் அவனுடைய விசுவரூபம். 'விசுவம்' என்றால் சிருட்டிக்கப்பட்ட சகலமுமாம் சமஷ்டி என்பதாகிய ரூபம். அவன் விராட்புருஷன். எங்கும் நீக்கமற நிறைந்திருக்கும் இறைவன், சீவர்கள் உய்யும் பொருட்டுப் பல இடங்களில் கோயில் கொண்டருள்பவன். அவற்றுள் முதலில் திருப்பரங்குன்றை அறிமுகப் படுத்துகிறார் நக்கீரர். திருப்பரங்குன்றம் அப்போது சிற்றூர்; இன்றுகூட நாம் சிற்றூரை அறிமுகப்படுத்தும்போது, இன்னநகரின் பக்கத்தில் இத்தனைகல் தொலைவில், இன்னதிசையில் உள்ளது இவ்வூர் எனக்கூறுகிறோம். இதே வழக்கில் திருப்பரங்குன்றம் கூறுமுன் மதுரையைக் கூறுகிறார் நக்கீரர். மதுரையில் நக்கீரர் வாழ்ந்தார். பாண்டிய மன்னர் செங்கோல் திறம்பாது ஆண்ட நகரம் அது. ஒரு நகருக்கு வேண்டிய அணிகலன்களான கோட்டை கொத்தளங்கள், செல்வச் சிறப்பு, கல்விச் சிறப்பு பகைவரின்மை எனப் பல உயர்வும் மாட்சியும் கொண்டது மதுரை.

'செருப்புகன்று எடுத்த சேண்உயர் நெடுங்கொடி
வரிப்புனை பந்தொடு பாவை தூங்கப்
பொருநர்த் தேய்த்த போர்அரு வாயில்
திருவீற் றிருந்த தீதுதீர் நியமத்து
மாடமலி மறுகின் கூடல் குடவயின்
இருஞ்சேற்று அகல்வயல் விரிந்துவாய் அவிழ்ந்த
முள்தாள் தாமரைத் துஞ்சி வைகறைக்
கள்கமழ் நெய்தல் ஊதி எல்படக்
கண்போல் மலர்ந்த காமர் சுனைமலர்
அம்சிறை வண்டின் அரிக்கணம் ஒலிக்கும்
குன்றுஅமர்ந்து உறைதலும் உரியன்; அதா அன்று' (67 - 77)



'குன்றமர்ந்து உறைதலும் உரியன்'.

மதுரை நகர் போர் ஒடுங்கிப் புகழ் ஓங்கிய நகர். மதுரையின் கோட்டை வாயிலின்மீது பகைவரைப் போருக்கு அழைப்பன போலத் தொலைவிலிருந்து காணக்கூடிய உயர்ந்த பெரிய கொடிகள் விளங்குகின்றன. கோட்டை வாயிலிலே வரிந்து கட்டிய பந்துகளும் பொம்மைகளும் தொங்குகின்றன. அவை, பயனற்றுக் கிடக்கும்படி பகைவர்கள் அழிக்கப்பட்டமையால், போர்த்தொழில் அரிதாகிவிட்ட வாயில் அது. திருமகள் இனிது வீற்றிருக்கும் குற்றமற்ற கடைவீதிகளையும், மாடங்கள் மிக்க தெருக்களையுமுடைய மதுரைக்கு மேற்கே உள்ளது இத்திருப்பரங்குன்றம்.

மதிலின் வாயிலில், 'வரிப்புனை பந்தொடு பாவைதூங்க' என்று கூறுகிறார் நக்கீரர். பந்தையும் பாவையையும் தூங்கவிடுவதில் ஒரு குறிப்புண்டு. ''எம்மை வெல்லும் ஆண்மையாளர் எவருமிலர். எம் பகைவரை யாம் பெண்டிர் போலக் கருதுகிறோம்; அவர்கள் விரும்பினால் தாம் விளையாடி மகிழ இவற்றைக் கொள்க' என்பது குறிப்பாகும். இப்பகுதிக்கு உரை கூறும் நச்சினார்க்கினியர்,

''பகைவரை மகளிராக்கி அவர் கொண்டு விளையாடுவதற்குத்
தூக்கின என்றவாறு''

என்பார். நூலால் வரிந்து புனையப்பட்ட பந்தும் பாவையும் , அறுப்பாரின்மையால் தூங்கியே விடும்படி என்பதாகும். இங்ஙனம் தொங்கும் வழக்கம், பிற நூல்களிலும் கூறப்படுகிறது. நீண்டகாலம் போரின்மையால் அமைதியும் வளனும் கொண்டு விளங்குகிறது இந்நகர். 'நான்மாடக்கூடல்' என்பது மதுரைக்குரிய மற்றொரு பெயர். மதுரை விசாலமான வீதிகள் கொண்டது. அங்கு அறவாணிகம் நடைபெறுகிறது.

'தமவும் பிறவும் ஒப்பநாடிக்
கொள்வதூஉம் மிகைகொளாது
கொடுப்பதூஉம் குறைகொடாது
பலபண்டம் பகர்ந்துவீசும்'

அங்காடித் தெருக்கள் அவை. தீமை அற்ற அங்காடிகள் என்பதால்,

'தீது தீர் நியமம்' என்றார். வாணிகத்தால் வளம் குவிகிறது. திருமகள் இந்நகரில் விரும்பி வாழ்கிறாள். திருமகள் சிறப்புடன் எழுந்தருளியிருக்கும் தீமை தீர்ந்த கடைகள் என்பதால்,

'திரு வீற்றிருந்த தீதுதீர் நியமத்து' என்றார். அஃதாவது, 'அகனமர்ந்து செய்யாள் உறையும்' நகர் என்பது பொருள். திருப்பரங்குன்றத்தின் சிறப்பைக் கூறவந்த நக்கீரர் நான்மாடக்கூடலின் உயர்வை ஓதியிருப்பதற்குக் காரணம், அவர் கடைச்சங்க காலப் புலவர்களில் ஒருவராக வீற்றிருந்ததும், சோமசுந்தரக்கடவுள் ஆட்சி செய்யும் தலம் என்பதும் கருதியேயாகும். மேலும் பாண்டியனையும் இதனுள் கொண்டு வரும் விருப்பமும் இதற்குக் காரணமென்பார் ஓர் உரையாசிரியர்.

இவ்வாறு, சிறந்தோங்கும் மதுரைக்கு மேற்கே திருப்பரங்குன்றம் அமைந்துள்ளது. முள்ளைத் தண்டிலே கொண்ட தாமரை மலர்கள், கருமையான சேற்றினை உடைய அகன்ற வயலிலே மலர்ந்துள்ளன. அத்தாமரை மலர்களிலே வண்டுக் கூட்டம், தேனையருந்தி மலர்ப்படுக்கையிலே உறங்கின. வைகறை வருகிறது; கதிரவன் எழுகிறான்; தாமரை இதழ்விரிகிறது. வண்டுகள் விழித்தெழுந்தன. அழகிய சுனையிடத்துக் கண்ணைப் போலும் நெய்தல் பூக்கள் மலர்ந்தன; அவை தேனின் மணம்வீசின. நெய்தல் மலர்களிலே அழகிய சிறகினை உடைய வண்டுக் கூட்டம் படிந்து ஊதித் தேனுண்டது. பின், கண்போல் மலர்ந்த சுனை மலரின்கண் சென்று, ஆரவாரிக்கிறது. இத்தகு திருப்பரங்குன்றத்திலே நெஞ்சமர்ந்து இருத்தலும் உரியன் முருகப்பெருமான். இத்திருப்பரங்குன்றம் மதுரை மா நகருக்கு மேற்குத் திசையில் உள்ளது என்பதை அருணகிரிநாதர் திருப்பரங்குன்றம் திருப்புகழில் 'குடக்குத் தென்பரம் பொருப்பு' என்று பாடுகிறார்.

இங்கு முருகப்பெருமானுடைய திருவடித் தாமரைகளிலே சீவான்மா தான் என்னும் நினைப்பற்று, ஆணவம் ஒடுங்கித் தன் செயல் அற்றுக் கிடத்தல் வேண்டும் என்பது குறிப்பு. முருகப்பெருமானுடைய திருவடிகளை நாடிச் செயல் ஒடுங்கிய ஆன்மா, மெய்ஞ்ஞானம் எனும் ஒளி பெற்று, முருகனின் கடைக்கண் நோக்காகிய அருள் பழுத்த தேனைச் சுவைத்துப் பேரின்ப வீடுபேறு அடையும் என்பது உணர்த்தப்படுகிறது. இங்கு மலர்ந்த தாமரை மலரில் தேன் பருகச் சென்ற வண்டுகள் கதிரவன் மறைவால் மலர்இதழ்க் கதவுகள் மூடியதால் வண்டுகள் அங்கேயே உறங்குகின்றன. ஆண்டாள்,

''பூங்குவளைப்போதில் பொறி வண்டு
கண்படுப்ப'' என்று பாடுகிறாள்.

இதற்கு, உள்ளுறைப் பொருள் உரைப்பவர்

"ஞானிகளின் இதய மலரிலே தெய்வ வண்டாகிய இறைவன், கண்வளர்வதற்கு இது நினைவுக்குறி" என்று கூறுவர்.

முருகப்பெருமான் 'குகன்' என்று மொழியப்படுகிறான். குகை என்பது தகராகாசமாம். தகரமாகிய இதய புண்டரீகத்தில் சிதாகாசமாகிய வித்தை இருத்தலின் அது தகர வித்தையாகும். இந்தத் தகரவித்தை பற்றிய விளக்கம் யஜுர் வேதத்துப் பிருஹதாரண்யக உபநிடதத்திலும், பாம்பன் சுவாமிகள் இயற்றி அருளிய தகராலய இரகசியத்திலும் கூறப்படுகிறது. அதனால் முருகப்பெருமான் அன்பர்களின் இதய குகையில் இனிது வீற்றிருப்பவன். ஸ்ரீ ஸ்காந்தமகா புராணத்தில் சம்பவ காண்டத்தில் அத்யாயம் 35 இல் முக்கட் பரமன் பார்வதியிடம் முருகனின் குணநலங்களைத் தெளிவுபடுத்துகிறார். அதில் 15ஆம் சுலோகத்தில், வேதங்களில் இதய கமலத்தின் நடுவில் உள்ள இடைவெளி குகை எனக் கூறப்படுகிறது. முன்பே எடுத்தோதியவாறு அன்பர்களின் இதய கமலத்தைத் தன் இருப்பிடமாகக் கொண்டதால் முருகன் குகன் என மொழியப்பெறுகிறான் எனக் கூறப்பட்டுள்ளது. மகாகவி காளிதாசனின் இரகுவம்ச காவியத்தில் சர்க்கம் 10 சுலோகம் 23இல் தேவர்கள், திருமாலிடம் தம் குறைதீர முறையிடுவது கூறப்படுகிறது. அதில் திருமால் அன்பர்களின் இதயத்தில் ஒளியுருவாய் இருப்பதாகக் குறிப்பிடப்படுவது நோக்கற்பாலது. அதா அன்று - அதுவன்றியும்

## திருச்சீரலைவாய்

அடுத்து, திருச்சீரலைவாயில் எழுந்தருளிய முருகன் சிறப்பைக் கூறவருகிறார் நக்கீரர். முருகன், குறிஞ்சி நிலக்கடவுள்; மலைகளிலே வசிக்கும் மாணபினன்; ஆனால் திருச்செந்தூர்க் கடற்கரையில் எழுந்தருளியிருக்கிறான். நீலத்திரைக்கடல் ஓரத்திலே நித்தம் தவஞ்செய்தற்குரிய தலம் அது. பிறவி என்பது பெருங்கடல். எம்பெருமான் முருகன் எழுபிறப்பாகிய கடலை நாம் கடப்பதற்கு உதவிடும் ஓடக்காரன். அருணகிரிநாதர் திருவேளைக்காரன் வகுப்பில்,

'யாதுநிலை யற்றலையும் எழுபிறவிக் கடலை
ஏறவிடு நற்கருணை ஓடக்காரனும்' என்று பாடுகிறார்.

மேலும் அவர், 'சிவபெருமான் கருணைக்கடல். அதினின்றும் அடித்த ஓர் அலை கரையில் முருகனாக நிற்கிறது' என்பார்.

'திங்கள் அரவு நதிசூடிய பரமர்
தந்த குமரஅலையே'

(தொந்தி சரிய - திருச்செந்தூர் திருப்புகழ்)

திருச்சீரலைவாய் என்பது, இன்று தூத்துக்குடி மாவட்டத்தில் உள்ள திருச்செந்தூர் ஆகும். சங்க நூல்களில் அலைவாய், செந்தில் என்ற இரு பெயர்களால் இது அழைக்கப்படுகிறது. தொல்காப்பியம் பொருள் 114 ஆம் சூத்திரம் நச்சினார்க்கினியர் உரையுள் 'பையுள் மாலை' என்று தொடங்கும் பாடலில்,

'நெடுவேல் திகழ்பூண் முருகன் தீம்புனல் அலைவாய்'

என்று கூறப்படுகிறது.

அகநானூற்றில்,

'திருமணி விளக்கின் அலைவாய்ச்
செருமிகு சேஎய்' என்றும்

புறநானூற்றில்,

'வெண்டலைப் புணரி அலைக்கும் செந்தில்
நெடுவேள் நிலைஇய காமர் வியன்துறை'

என்றும் கூறப்படுகிறது.

மேலும், சிலப்பதிகாரத்தில் இளங்கோ அடிகள்,

'சீர்கெழு செந்திலும் செங்கோடும் வெண்குன்றும்
ஏரகமும் நீங்கா இறைவன்'

என்று போற்றுகிறார்.

தேவாரத்தில் அப்பர் சுவாமிகள்,

'நம்செந்தில் மேய வள்ளி மணாளற்குத்
தாதை கண்டாய்' என்று குறிப்பிடுகிறார்.

முருகப்பெருமான், சூரபன்மனோடு வெஞ்சமர் இயற்றி, வெற்றி பெற்று ஜயாபிஷேகம் செய்து கொண்டஇடம். ஆதலின் இதற்கு 'ஜெயந்தி' என்ற பெயர் வந்தது. பின் இது செந்தியாயிற்று; அது மருவிச் செந்தில், செந்தூர் என்று வழங்கியது என்பர்.

ஸ்ரீ ஆதிசங்கரர் ஸ்ரீ சுப்பரமண்ய புஜங்கத்தில்,

'முருகன் சந்நிதி யடைந்தோர் பிறவிப் பெருங்கடலை
நீந்தி வந்துள்ளனர்'

என்று பாடுகிறார். பிறவிப் பெருங்கடலில் அல்லலுறுகிற ஆன்மாக்களை உய்வு பெறச் செய்யும் துறைமுகப்பட்டினம் என்பதை 'யதா சந்நிதானம்' என்று தொடங்கும் பாடலில் கூறுகிறார்.

அருணகிரிநாதர் முருகனை,

'செந்தில் நகர் வாழும் ஆண்மைக்காரப்
பெருமாளே' என்றும் (முந்து தமிழ்மாலை - திருச்செந்தூர் திருப்புகழ்)

'சிந்தை மகிழ அன்பர் புகழு செந்திலுறையு முருகோனே' என்றும்

(மங்கை சிறுவர் திருப்புகழ்)

'செஞ்சொற் புலவர்கள் சங்கத் தமிழ்தெரி செந்தில்' என்றும் பாடுகிறார்.

மேலும் அவர்,

'கயிலை மலை அனைய செந்தில் பதி வாழ்வே'

என்றும் 'பரமபதமாய செந்தில்' என்றும் பாடுகிறார். இன்னும் 'செந்திலை உணர்ந்து உணர்ந்து உணர்வு உற' என்கிறார். இத்தலத்தில் முருகப்பெருமான் எழுந்தருளியிருக்கிற தத்துவத்தையும், உட்கருத்துக்களையும் ஓங்கார வடிவில் அமைந்துள்ள ஆலயத்திறத்தையும் மெய் அறிவால் உணர்ந்து மெய்யறிவு பெறும் பேற்றை வேண்டுகிறார். கந்தர் அலங்காரத்தில்

'ஒருகோடி முத்தந் தெள்ளிக் கொழிக்குங் கடற்
செந்தில் மேவிய சேவகனே'

எனக்குறிப்பிடுகிறார். வென்றிமாலைக் கவிராயர், திருச்செந்தூர் முருகன் மீது ஒரு புராணம் பாடியிருக்கிறார். பகழிக் கூத்தர் என்ற புலவர் வைணவர்; திருச்செந்தூர் முருகன் அருளால் வயிற்றுவலி நீங்கப்பெற்று, பிள்ளைத் தமிழ் பாடினார். அத்திருச்செந்தூர் பிள்ளைத் தமிழில் முருகனைத் தாலாட்டுகிறார். அதில் திருச்செந்தூர் சிறப்பை ஓர் அழகிய உவமையால் கூறுகிறார். பொய்கையில் அன்னங்கள் வாழ்கின்றன. ஆண் அன்னங்கள் இரை தேடச் சென்றன. பொய்கையில் எருமை ஒன்று இறங்கி நீரைக் கலக்கிக் கொண்டிருந்தது. நீரில் இருந்த வரால் மீன் ஒன்று துள்ளி எருமையின் மடியை இடித்தது. தனது கன்று பாலைக் குடிப்பதாக எண்ணிய எருமை மடியினின்றும் பால் மிகச் சுரக்கவே, அது நீரில் பரவியது. அங்கிருந்த பெண் அன்னங்கள் நீரினின்றும் பாலைப் பிரிக்கும் ஆற்றலால் பாலை உண்டு மகிழ்ந்தன. இவ்வாறு அன்னங்கள் வாழும் இடத்திற்கே உணவளித்த வள்ளல் முருகன் வாழும் பதி திருச்செந்தூர். அதில் உறையும் உமை மைந்தனைத் தாலாட்டுகிறார் புலவர். செந்தில்நாதன் திருவருளால் ஊமையாய் இருந்த குமரகுருபரர் ஊமை நீங்கிக் கந்தர்கலிவெண்பா பாடினார்.

திருச்செந்தூர், சுவாதிட்டானத் தலமாகும். இங்கு, மூலமூர்த்தி ஒருதிருமுகமுடையவன். உற்சவமூர்த்தி ஆறுதிருமுகமுடையவன். ஆறுமுகக்



'வேழ மேல்கொண்டு...'

கடவுளாக, திருச்செந்தூரில் எழுந்தருளியிருக்கும் நிலையே தியானத்திற்கு ஏற்றமுறை என்பர். மூலவர் நின்ற திருக்கோலமாக ஒரு திருமுகமும், அபயம் வரதம் பூ செபமாலை இவற்றை ஏந்திய நான்கு திருக்கரங்களும் கொண்டு, கிழக்கு நோக்கிக் காட்சி தருகிறார். ஆனால் நக்கீரர் திருச்செந்தூர் முருகனை ஆறு திருமுகங்களும் பன்னிரு புயங்களும் கொண்ட அர்ச்சாமூர்த்தியாய்க் காட்டுகிறார். இது ஆகம விதிமுறைப்படி கூறப்படுகிறது. அவனே ஐந்தொழில் இயற்றுபவனாகவும் கூறப்படுகிறான். இது உருவ வழிபாடு. இங்கு முருகப்பெருமான் புராண புருஷனாகவும், ஆகமப் பொருளாகவும் காட்சி தருகிறான்.

இங்கு ஆறு திருமுகங்களின் மாண்பும் செயலும், பன்னிரு கரங்களின் மாண்பும் செயலும் விரித்துக் கூறப்படுகின்றன.

'வைந்நுதி பொருத வடுஆழ் வரிநுதல்
வாடா மாலை ஓடையொடு துயல்வரப்
படுமணி இரட்டும் மருங்கின் கடுநடைக்
கூற்றத்து அன்ன மாற்றரு மொய்ம்பின்
கால்கிளர்ந்து அன்ன வேழம் மேல்கொண்டு'

(78 - 82)

முருகப்பெருமான் யானை மீது ஏறிவருகிறான். அங்குசத்தின் கூரிய நுனி பதிவதால் வடு விளங்கும் அழகிய நெற்றியை உடையது அந்த யானை. அதன் மத்தகத்தே பொன்னரி மாலையும் பட்டமும் கிடந்து அசைகின்றன. அந்த யானையின் இருமருங்கிலும் தாழ்ந்து கிடக்கும் மணிகள் மாறிமாறி ஒலிக்கின்றன. வேகமான நடையை உடையது அவ்யானை. அது இயமனைப் போல் வலியைப் பெற்றிருக்கிறது. அது பிறரால் தடுத்தற்கரிய வலிமையும், காற்று எழுந்ததைப் போல வேகமுமுடையது. இத்தகைய யானைமீது ஏறி முருகப்பெருமான் விரைந்து வருகிறான்.

முருகப் பெருமானுக்கு மூன்று வாகனங்கள். நாரதர் நடத்திய வேள்வி, நெறிபிறழ்ந்த போது, அந்த வேள்வித் தீயினின்றும் தோன்றிய முரட்டு ஆட்டுக்கடாவை முருகன் அடக்கி வாகனமாகக் கொண்டவன். பிணிமுகம் என்ற பெயர்கொண்ட யானை மற்றொரு வாகனம்; பின்னால் மயில்வாகனம். போர்க்களத்தில் முருகப்பெருமானைப் பலபோர்முறைகளைக் கையாண்டும், சூரனால் வெற்றிபெற முடியவில்லை. சக்கரவாகப் பறவை உரு எடுத்தான் அவன். பறவை உருவங்கொண்ட சூரனைத் தேரில் சென்று பொருவது முறையன்று என்று கருதினார் கந்தவேள். இந்திரனை நோக்கினார்.

ஆண்டவன் அருட்குறிப்பை உணர்ந்த இந்திரன் மயில் உருவங்கொண்டான். இந்திரனாகிய மயில்மீது ஏறி, சூரனாகிய சக்கரவாகப் பறவையைத் தொடர்ந்தார் முருகப்பெருமான். பரிபாடலில், இந்திரன் மயில் வாகனமாக முருகனைச் சுமந்த வரலாறு,

'வானத்து வளங்கெழு செல்வன்தன் மெய்யின்
பிரித்துத்திகழ் பொறிப்பீலி அணிமயில் கொடுத்தோன்'

என்ற அடிகளில் கூறப்பட்டுள்ளது. கந்தபுராணம் இந்திரன் மயிலாகி முருகப்பெருமானைச் சுமந்த வரலாற்றைப் பின் வருமாறு கூறுகிறது:

'சூர்திகழ் மஞ்ஞை ஏறிச் சுமக்குதி எம்மை என்னாப்
பார்திசை வானம் முற்றும் பரிஎன நடத்தலுற்றான்'

அடுத்துச் சூரபன்மன் முருகன் சக்தி வேலால் இருகூறாகப் பிளக்கப்பட்டபோது, ஒரு பாதி சேவலாகவும், மறுபாதி மயிலாகவும் ஆயினான். முருகப்பெருமான், சூரபன்மனுக்கு அருளினார். சேவல் அவர் தேரில் ஏறிக் கொடியாக நின்று கூவியது. கந்தவேள் இந்திரனாகிய மயிலினின்றும் இறங்கி, சூரபன்மனாகிய மயிலின்மீது ஏறி, அதையே தமது நிரந்தர வாகனமாக்கிக் கொண்டார். திருத்தணி, சுவாமிமலை போன்ற முருகன் தலங்களில், யானை உருவம் முருகனின் சந்நிதானத்திற்கு எதிரில் வைக்கப்பட்டுள்ளது. முருகன் அரசன். அவனே ஆண்டியாகவும் உள்ளான்; ஒரு மன்னனுக்கு உரிய வாகனங்களில் யானை சிறந்த வாகனம். அதனால் யானை வாகனத்தில் முருகன் எழுந்தருளியிருப்பதாக நக்கீரர் கூறுகிறார். இந்த யானை கூற்றுவனைப் போல் வலிமையுடையது; காற்றைப் போல் விரைவு கொண்டது.

சேக்கிழார் பெருமான் எறிபத்த நாயனார் புராணத்தில், யானை ஊழிக்காற்றுப்போல் செல்லும் விரைவினை,

'மேல்கொண்ட பாகர் கண்டு விசைகொண்ட களிறு சண்டக்
கால் கொண்டு போவார் போலக் கடிதுகொண் டகலப் போக'

என்று பாடுகிறார். திருச்சீரலைவாயில், முருகப்பெருமான் ஏறிவரும் யானையின்

மருங்கினையும், நடையினையும் வலிமையினையும் கூறுகிறார் புலவர். இங்கு ஒரு கருத்து ஆழ்ந்து நோக்கப்படவேண்டும்.

திருப்பரங்குன்றப் பகுதித் தொடக்கத்தில், முருகன் நீல மயில்மீது அமர்ந்திருக்கும் கோலக் காட்சியை உணர்த்தினார். இங்குப் பிணிமுகம் எனும் யானைமீது எழுந்தருளும் பெற்றியைக் காட்டுகிறார். இரண்டுமே பிரணவ தத்துவார்த்த அடிப்படையில் அமைந்த கருத்துக் கொண்டவை. ஆனால், ஒரு வேறுபாடு. மயிலில் ஆரோகணிக்குங்கால், மயிலின் தோகைகளுக்குள் அடங்கி நடுவே வீற்றிருக்கும் காட்சி பிரணவத்தின் மத்தியில் இருப்பதையும், யானைமீது எழுந்தருளியிருக்கும் காட்சி பிரணவத்தின் உள்ளும் புறமும் வீற்றிருப்பதையும் குறிப்பிட்டு நிற்கும்.

'ஓங்காரத் துட்பொருளாய் நின்றான் கண்டாய்' என்கிறார் அப்பரடிகள்.

அருணகிரிநாதர், பழமுதிர்சோலைத் திருப்புகழில்,

'ஆன தனிமந்த்ர ரூப நிலை கொண்ட தாடும்மயில்'

என்று போற்றுகிறார். அதாவது 'ஓம்' எனும் குடிலையின் சொரூபமாக மயில் ஆடுகின்றது. அவ்வோங்காரத்தின் நடுவே ஆண்டவன் அருட்சோதியாக வீற்றிருக்கிறான். மற்றொரு பாடலில், 'ஓங்கார பரியின்மிசை வரவேணும்' எனப் பாடுகிறார்.

ஆகவே, பிரணவத்தின் உட்பொருளும் அவனே; அதைத் தன் வாகனமாகக் கொண்டு நடத்துபவனும் அவனே. மேலும், பிணிமுகம் என்ற யானை வருகிறது. ஒளிவீசும் அந்த முகபடாம் தெரிகிறது; மணியோசை கேட்கிறது. ஒளி முந்தியும், ஓசை பிந்தியும் வரும் தத்துவம் கூறப்படுகிறது. சப்தம் என்பது ஓசை; ஸ்பந்தனம் என்பது அசைவு. அசைவு உண்டாகும் போது ஓசை உண்டாகும். சிவபெருமான் உமையம்மையோடு சேர்ந்த காலத்தில் உண்டான ஸ்பந்தனமும் ஸப்தமுமே பிரணவமாகும்; அதுவே முதல் அசைவும் நாதமும். மணிஓசை பிரணவ ஓசையின் சாயையாகும். இவ்வாறு பிந்து நாத தத்துவம் சொல்லிப் பகுதியைத் தொடங்குகிறார் நக்கீரர். அடுத்து, யானை மீது எழிலார் தோற்றமுடன் வீற்றிருக்கும் எம்பெருமான் முருகனின் தோற்றப் பொலிவையும், திருமுகங்கள் ஆறினையும், கரங்கள்

பன்னிரண்டையும், அவை இயற்றும் தொழிலையும் கூறவருகிறார் புலவர் பெருமான்.

'ஐவேறு உருவின் செய்வினை முற்றிய
முடியொடு விளங்கிய முரண்மிகு திருமணி
மின்உறழ் இமைப்பின் சென்னிப் பொற்ப
நகைதாழ்பு துயல்வரூஉம் வகைஅமை பொலங் குழை
சேண்விளங்கு இயற்கை வான்மதி கவைஇ
அகலா மீனின் அவிர்வன இமைப்பத்
தாஇல் கொள்கைத் தம்தொழில் முடிமார்
மனன்நேர்பு எழுதரு வாள்நிற முகனே' (83 - 90)

முருகப்பெருமான் திருமுடியில் மகுடம் பொருந்தியிருக்கிறது. ஐந்துவகை உறுப்புகளும் நிரம்பிய வேலைப்பாட்டையுமுடையது அது. அக்கிரீடத்திலே வெவ்வேறு நிறங்களோடு விளங்குகின்ற அழகிய மணிகள் மின்னலைப் போல ஒளிவிட்டு, அவனது சிரசை அழகுபடுத்துகின்றன. அவன் காதுகளில் ஒளி தங்கி அசையும் தொழில்நுட்பமமைந்த பொன்னால் செய்த மகரக்குழைகள் விளங்குகின்றன. அம்மகரக் குழைகள், தொலைவினும் சென்று ஒளிரும் திங்களைச் சூழ்ந்த விண்மீன்கள் போன்று ஒளிர்கின்றன. வருத்தங்களைப் பொருட்படுத்தாத கொள்கையோடு தமது தவத்தொழிலை முடிக்கின்றவர்களுடைய மனத்திலே பொருந்தி, ஒளிமிக்க அவனுடைய திருமுகங்கள் தோன்றுகின்றன.

இங்கு 'ஐவேறு உருவின் செய்வினை முற்றிய முடி' என்பது தாமம், முகுடம், பதுமம், கிம்புரி, கோடகம் என்னும் ஐந்து வகையாகச் செய்யப்படும் தொழில்திறம் முற்றிய தலையணிகலனைக் குறிக்கும். திவாகரம்,

'தாம முகுடம் பதுமங் கோடகங்
கிம்புரி முடியுறுப் பைந்தெனக் கிளப்பர்' என்று கூறுகிறது.

முருகனின் முகம் மதிபோலவும், அவனுடைய காதுகளில் அணிந்துள்ள குழைகள் மதியினைச் சூழ்ந்துள்ள விண்மீன்கள் போலவும் தோற்றமளிக்கின்றன.

குமரகுருபரர், இக்குழைகளின் ஒளியை

'பரிதி பலவும் எழுந்து சுடர்
பாலித்தாற் போலக் குலவு மகரக் குழையும்' என்று கூறி மகிழ்கிறார்.

**அடுத்து, 'தாஇல் கொள்கைத் தம்தொழில் முடிமார்' என்பது தவத்தொழிலில் தலைநின்று முற்றுப்பெற்ற பெரியோரைக் குறிக்கும். இத்தகைய சான்றோர் உள்ளத்தில், இறைவன், உருக்கொண்டு காட்சி தருவன். இறைவன் ஆன்மாக்களின் இதயத்தாமரையில் இனிது வீற்றிருப்பவன். அவனை உள்நாடி பற்றி உணர்தல் வேண்டும். திருமூலர்,**

'எண்ணாயிரத் தாண்டு யோகம் இருக்கினும்
கண்ணாரமுதனைக் கண்டறிவா ரில்லை
உண்ணாடி உள்ளே ஒளிபெற நோக்கிற்
கண்ணாடி போலக் கலந்து நின்றானே' (பாடல் எண்.583) **என்கிறார்.**

அப்பர்பெருமான்,

'............என்னுள்ளே
தேடிக் கண்டு கொண்டேன்' **என்றும்**

'நினைப்பவர் மனங்கோயிலாக் கொண்டவன்' **என்றும் பாடுகிறார்.**

**திருவகுப்பில், 'உணர்வுவிழி கொடுநியதி தமதூடு நாடுவதும்' ஆன நிலை பேசப்படுகிறது. மாணிக்கவாசகர்,**

'சிந்தையே கோயில் கொண்ட எம்பெருமான்' **என்று கூறுகிறார்.**

**அருட்பிரகாசவள்ளலார்,**

'கூற்றறியாத பெருந்தவர் உள்ளக்
கோயிலிலிருந்த குணப்பெருங்குன்றே' **என்று பாடுகிறார்.**

**அருணகிரிநாதர்,**

'அன்பர் உளமேவும் பரமர்' **என்பார். (விரை மருவு திருப்புகழ்)**

**'மலர்மிசை ஏகினான்' என்ற திருக்குறளுக்குப் பொருள் கூறும் பரிமேலழகர்,**

'அன்பால் நினைவாரது உள்ளக் கமலத்தின்கண்
அவர் நினைந்த வடிவோடு விரைந்து சேறலின்' **என்று கூறுகிறார்.**

சிவஞானசித்தியாரில்

'சோதிக்குட் சோதியாத் தோன்றிடுவன் காணே'

(சிவ - சித்தி - 317)

என்று கூறப்படுகிறது. அன்பர்கள் உள்ளத்தில் இறைப்பொருள் ஒளியாகத் தோன்றுமென்பதால்,

'மனன் நேர்பு எழுதரு வாணிறமுகன்' என்றார்.

புலவன், பௌராணிகன், பக்தன், யோகி, ஞானி, விஞ்ஞானி என்ற பலதிறப்பட்ட குற்றமற்ற கொள்கையாளரும் முடிவில் பார்ப்பதும் அனுபவிப்பதும் இவ் வாறு முகங்களே என்று கூறுகிறார் நல்லிசைப்புலவர் நக்கீரர்.

திருப்பரங்குன்றத்தில் முருகப்பெருமானின் சென்னியில் செங்காந்தள் மலரைச் சூட்டிய நக்கீரர், திருச்சீரலைவாயில் முருகனுக்கு மணிகள் அமைந்து மாண்புற விளங்கும் இரத்தின கிரீடத்தை வைத்துப் பார்க்கிறார். முன்னது இயற்கை அழகு; பின்னது செயற்கை அழகு. திருப்பரங்குன்றில் முருகப் பெருமானை ஞாயிற்றோடு ஒப்பிட்டார். திருச்சீரலைவாயில் முருகனைச் சந்திரனோடு ஒப்பிடுகிறார். கதிரவன் இருளை நீக்குபவன்; சந்திரன் தண்ணளி சுரப்பவன். அதுபோல், முருகப்பெருமான் அஞ்ஞான இருள் நீக்குபவன். தன் அடியார் மகிழத் தண்ணளி நிழல் தருபவன்.

அடுத்து, நக்கீரர் ஆறு திருமுகங்களின் செயலைத் தனித்தனியாக விளக்கி வியந்து ஓதுகிறார்.

' மாயிருள் ஞாலம் மறுஇன்றி விளங்கப்
பல்கதிர் விரிந்தன்று ஒருமுகம்; ஒருமுகம்;
ஆர்வலர் ஏத்த அமர்ந்துஇனிது ஒழுகிக்
காதலின் உவந்து வரம்கொடுத்தன்றே, ஒருமுகம்;
மந்திர விதியின் மரபுளி வழாஅ
அந்தணர் வேள்விஓர்க் கும்மே; ஒருமுகம்
எஞ்சிய பொருள்களை ஏம்உற நாடித்
திங்கள் போலத் திசைவிளக்கும்மே, ஒருமுகம்
செறுநர்த் தேய்த்துச் செல்சமம் முருக்கிக்

கறுவுகொள் நெஞ்சமொடு களம்வேட் டன்றே; ஒருமுகம்;
குறவர் மடமகள் கொடிபோல் நுசுப்பின்
மடவரல் வள்ளியொடு நகைஅமர்ந் தன்றே; ஆங்குஅம்
மூவிரு முகனும் முறைநவின்று ஒழுகலின்'

(91-103)

முதல்முகம், 'மாஇருள் ஞாலம் மறுஇன்றி விளங்கப்
பல்கதிர் விரிந்தன்று ஒருமுகம்'

**பேரிருளாலே மறைக்கப்பட்டது உலகம். அந்த இருட்குற்றமகன்று உலகம் விளங்கும் பொருட்டுப் பலவாகிய சுடர்களைத் தோற்றுவிக்கும் ஒருமுகம்.**

**இந்த உலகு எங்கும் இருளால் சூழ்ந்திருப்பது. நல்லிசைப்புலவராம் சான்றோர்கள்**

'இருள் தரும் மா ஞாலம்' **என்றும்**

**'மாயிருள் ஞாலம்' என்றும் கூறுகிறார்கள். இவ்வுலகு வீடு அடைவதற்குக் காரணமாயிருப்பதால் பெருமையும் கொண்டது. ஆனால் வினைவயத்தால் உழல்பவருக்கு மயக்கம் தருவது. அதனால் இருட்சியை உடைய உலகமாகும். திருமுறைகளில், இது**

'மையல் மானுடமாய் மயங்கும் வழி
ஐயனேதடுத்தாண்டு அருள் செய்க' **என்றும்**

'மறக்கு மாறிலா என்னை மையல் செய்து இம்மண்ணின் மேல்
பிறக்குமாறு காட்டினாய்'

**என்றும் கூறப்படுகிறது. 'வல்வினையேன் தன்னை மறைந்திட மூடிய மாய இருளை' என்று சிவபுராணம் கூறுகிறது. கீர்த்தித் திருஅகவலில் 'என்னுடைய இருளை ஏறத்துரத்தும்' என்று கூறப்படுகிறது. இவை உலகின் புறஇருளையன்றி உயிர்கள் பற்றியிருக்கும் ஆணவப் பேர்இருளைக் குறிப்பன. இந்த உலகைப் படைத்து, உயிர்களைப் படைத்து, அவற்றிற்கு உணர்வைத் தந்த இறைவன் அவற்றை இருளினின்றும் மீட்டு வந்து நல்வழிப்படுத்துகிறான். மணிவாசகப் பெருமான் 'இருள் கெட அருளும் இறைவா! போற்றி' என்று பாடுகிறார். இந்தப் பிரபஞ்சத்தின் இருள்**

கெடவும், உயிர்களிடத்து ஒளிந்திருக்கும் அஞ்ஞான இருள் கெடவும் அவன் அருளுகிறான். இறைவன் சோதி மயமானவன். நீள் ஒளி ஆகிய நிருத்தன்; சோதியாய், சுடராய், சூழொளி விளக்காய்த் திகழ்பவன். கந்தபுராணம், முருகனை,

'சுடராய், சூழொளி விளக்காய்த் திகழ்பவன்' என்றும்
'பிரமமாய் நின்ற சோதிப்பிழம்பு' என்றும் போற்றுகிறது.

இறைவன் சிருஷ்டியைச் செய்கிறான். மகாபிரளய காலத்தில் சகலமும் ஒடுங்கி எங்கும் இருள் சூழ்ந்து இருக்கும்.

இவ்வுலகில் சூரியன், சந்திரன், அக்கினியாகிய முச்சுடரின் துணைக்கொண்டே ஒளி விரிகிறது. சோதிமயமான இறைவனே. இவற்றிற்கு ஒளிதந்து விளங்கச் செய்கிறான். தீயிடைமூன்றாய்த் திகழ்பவனும் அவனே. முருகப் பெருமானின் ஆறுதிருமுகங்களில் முதலில் உலகம் ஒளிபெற அருளும் முகத்தைக் கூறுகிறார் ஆசிரியர்.

'மாயிருள்' என்பது புறஇருளையும், ஆணவமலமாகிய அகவிருளையும் குறிக்கும். ஆணவமலம், உயிரின் அறிவு, விழைவு, செயல்களை மறைத்தலான் இருள் ஆகிறது. புறஇருள் பொருள்களை மறைத்துத் தன்னைக் காட்டி நிற்கும்; இம்மலவிருள் பொருள்களை மறைத்துத் தன்னையும் காட்டாது நிற்கும் கொடிய இருளாகும். அதனால் 'மாயிருள்' ஆகிறது. சிவஞானசித்தியார் 'பிரிவிலன் மலத்தினோடும் 'வியாபி கேவலத்தில் ஆன்மா' என்கிறது. (சித்தியார்:228)

மாயையினின்றும் நாதமுதல் மண்ணிறுதியாய பல்வேறு தத்துவங்களை விரித்துப் படைத்தலால் 'பல்கதிர்' என்றார்.

இறைவன் உயிர்களின் மலமறுத்து இன்பவீடளித்தல் பொருட்டு, மாயையைக் கொண்டு உலகினைப் படைத்தருளும் செயலைத் தன்னொரு கூற்றிலே உடையவன். இறைவன் மும்மலங்களை அகற்றி அருளும் ஆற்றலை, திருமூலர்,

'ஆரியன் தோற்றமுன் அற்ற மலங்களே' எனக் கூறுகிறார்.

இந்த அரிய செயலைச் செய்யும் முதல் முகத்தைக் காட்டுகிறார் நக்கீரர். புறவிருள், அகவிருள் இரண்டையும் போக்கும் முகத்தை முதல் முகமாகக் கூறியது குறிப்பிடத்தக்கது.

இனி இரண்டாவது திருமுகம் தன்னை நினைப்பவர்களுக்கும், துதிப்பவர்களுக்கும், தன் அருளை யாசிக்கும் ஆர்வலர்களுக்கும் அருள் பாலிக்கிறது.

'............................ ஒருமுகம்
ஆர்வலர் ஏத்த அமர்ந்து இனிது ஒழுகிக்
காதலின் உவந்து வரம் கொடுத்தன்றே'

(92 - 94)

இத்திருமுகம் அன்பர்கள் துதிக்க அவர்க்கு இணங்கி, இனிதாகத் தோன்றி, அவர்பால் உள்ள காதலாலே மகிழ்ந்து அன்போடு வரங்கொடுக்கும். இந்த ஆர்வலர்கள் 'எல்லாம் அவன் செயல்' என்ற உறுதிப்பாட்டை உடையவர்கள். பரிபாடலில்

'ஆர்வலர் தொழுதேத்தி நின்புகழ் விரித்தனர்'

என்று இத்தகைய பக்தர்கள் கூறப்படுகின்றனர். பொதுவாக, இத்தகைய அடியவர்கள் அடிமைநெறி (தாச மார்க்கம்) மகநெறி (சற்புத்ர மார்க்கம்) தோழமை நெறி (சகா மார்க்கம்) ஞானநெறி (சன்மார்க்கம்) என்று நான்கு நிலையிலும் நெறியிலும் நின்று வழிபடுபவர்களாவார். இவர்கள் வேண்டியதை வேண்டியவாறு கொடுக்க விழைகின்றவன் இறைவன்.

திருமூலர்,

'கோணனில் லாத குணத்தடி யார்மனத்
தாணிய னாகி அமர்ந்து நின்றானே'

(பாடல் எண்.29)

என்று மனக்கோட்டம் சிறிதுமில்லாத அருட்பண்பு பெரிதும் செறிந்த செந்நெறிக் குணத்தடியார் நல்லுளத்தில் உயிர்க்குயிராய் நிற்கும் இறை அருட்செயலைக் கூறுகிறார்.

ஞானசம்பந்தர் பெருமான்,

'என் உளமே புகுந்த அதனால்' என்கிறார்.

**அப்பர்பெருமான்,**

'நினைப்பவர் மனங் கோயிலாக் கொண்டவன்' **என்று கூறுகிறார். மேலும் அவர்,**

'அருந்துணையை அடியார்கள் அல்லல் தீர்க்கும் அருமருந்தை' **என்றும்**

'துன்பக் கடலிடைத் தோணித் தொழில் பூண்ட தொண்டர் தம்மை,
இன்பக் கரை முகந்து ஏற்றும் திறத்தன்' **என்றும்**
'நெக்கு நெக்கு நினைபவர் நெஞ்சுளே
புக்கு நிற்கும் பொன்னார் சடைப் புண்ணியன்' **என்றும் பாடுகிறார்.**

**நக்கீரர் திருஈங்கோய் எழுபதில்**

'மனக் கவலை தீர்ப்பான் மலை' **எனப்பாடுகிறார்.**

**நம் மணிவாசகப்பெருமான்**

'வான் பழித்து இம்மண் புகுந்து மனிதரை ஆட்கொண்ட
வள்ளல்' **என்று பாடுவார்.**

**எனவே, உண்மை அடியார்கள் வேண்டியதை வேண்டியவாறு விரைந்து வந்து கொடுப்பவன் இறைவன். மறவாத இச்சிந்தையை உடைய அடியார்கள் உறும் அல்லல் நீக்க, ஓடோடி வந்து உதவுபவன் இறைவன். இத்தகைய இறைவன் அன்பர் நிலையை மணிவாசகப் பெருமான்,**

'பரந்து பல் ஆய்மலர் இட்டு
முட்டாது, அடியே இறைஞ்சி
இரந்த எல்லாம் எமக்கே பெறலாம்
என்னும் அன்பர் உள்ளம்
கரந்து நில்லாக் கள்வனே! நின்தன்
வார்கழற்கு அன்பு, எனக்கும்
நிரந்தரமாய் அருளாய் - நின்னை
ஏத்த முழுவதுமே' **எனப் பாடுகிறார்.**

அப்பர்பெருமான்,

'மந்திரமும் தந்திரமும் மருந்துமாகித் தீராநோய்
தீர்த்தருள வல்லான் தன்னை' எனப் பாடுகிறார்.

அருணகிரிநாதர்,

'வேண்டிய போதடியர் வேண்டிய போகமது
வேண்ட வெறாதுதவு பெருமாளே' என்று போற்றுவார்.

அவரவர்கள் நிலைக்கு ஏற்பத் தானும் அகத்தும் புறத்தும் நின்று வழிபடுபவர்களுக்கும் அந்தந்த நிலையில் அருளுபவன் முருகப் பெருமான். அவர்கள் தேவை உணர்ந்து அருளுபவன்; வேண்டுவது நல்குபவன்.

மேலும், 'ஆசித்தார் மனத்தில் புகும் உத்தம' என்று பாடுகிறார். இன்னும் திருச்செந்தூர் திருத்தலத்தில் வாழ்பவர்கள் பருகிய உள்ளத்தில் தித்தித்தறிந்து கொள்ளும் ஆனந்தத்தேனே என்ற பொருளில் 'வாழ்வோர் உண்ட நெஞ்சு அறி தேனே' என்றும் பாடுகிறார். கந்தர் அநுபூதியில்,

'நினைவார்க் கின்னங் களையுங்
க்ருபை சூழ் சுடரே' என்று பாடுகிறார்.

திருவகுப்பில், 'உருகு மடியா ரிருவினைத்தொகை யறுக்குமவன்' என்று பாடுகிறார்.

தாயுமானவர்,

'அன்பினால் மூர்ச்சித்த அன்பருக்கு அங்ஙனே
அமிர்த சஞ்சீவிபோல் வந்து
ஆனந்த மழை பொழிவை'

என்று இறைவனை அன்பினால் பரவும் அன்பர் நிலையைக் கூறுகிறார்.

இடைவிடாது நினைந்து நினைந்து உணர்ந்து உணர்ந்து நெகிழ்ந்து நெகிழ்ந்து உருகும் அன்பர்களின் பழவினையை அறுப்பவன் அறுமுகன்.

திருமந்திரத்தில்,

'அன்போடு உருகி அகங்குழைவார்க் கன்றி
என்பொன் மணியினை எய்த ஒண்ணாதே'

(பாடல் எண்.259)

என்று இறைவனை வணங்கும் பொழுது உயிர்கரைந்து ஊன் உருகும்நிலை கூறப்படுகிறது.

ஞானசம்பந்தப்பெருமான்,

'திருநெறிய தமிழ் வல்லவர் தொல்வினை
தீர்தல் எளிதாமே' என்று கூறுகிறார்.

'பக்தி நெறியறிவித்துப் பழவினைகள் பாறும் வண்ணம்'

என்கிறது திருவாசகம்.

முன்பே கூறியவாறு முருகன்,

'சேவடி படரும் செம்மல் உள்ளமொடு
வரும் ஆர்வலர்க்கு
'இன்னே பெறுதி நீ முன்னிய வினையே'

என்று வரங்கொடுக்கும் இயல்பினன்; இது அப்பெருமானின் அனுக்கிரக சக்தியைக் குறிக்கும். இங்கு ஆர்வலர் செயலை 'ஏத்த' என்ற ஒரே சொல்லால் கூறி, அப்பெருமான் அருள் செய்வதைப் பல அடைமொழிகளோடு கூறுவது நோக்கத்தக்கது.

இனி, அறவோராகிய அந்தணர்கள் இயற்றும் வேள்விக்கு இடையூறு ஏற்படாமல் காக்கும் தொழிலைக் கொண்ட மூன்றாவது முகத்தைக் கூறவருகிறார் நக்கீரர்.

' .......................... ஒரு முகம்
மந்திர விதியின் மரபுளி வழாஅ
அந்தணர் வேள்வி ஓர்க்கும்மே''

(94 - 96)

மற்றொரு முகம், மந்திரத்தையுடைய வேதமுறையினின்றும் வழுவாத அந்தணர்களுடைய யாகங்களில் இடையூறு நேராதபடி நினையாநிற்கும்.

உலகம் உய்ய, உள்ளம் ஒருமைப்பட, வான்முகில் வழாது பெய்ய, மலிவளம் சுரக்க, அந்தணர்கள் ஆகுதி செய்கிறார்கள். அதில் மந்திரதந்திரக் குறைபாடுகள் இல்லை. அப்படி மனமொன்றி அவர்கள் செய்யும் யாகத்தை அசுரர்கள் வந்து தடுக்கிறார்கள். அதனால் வேள்விக்குத் தீங்கு வாராமல் காக்கிறது இத் திருமுகம்.

வேதத்தை பிரமாணமாகக் கொள்ளும் சமயங்கள் யாவும் வைதிகச் சமயங்களாகும். இந்துமதத்தின் கூறுகளான வைணவம், சைவம், சாக்தம், கௌமாரம், காணாபத்யம், ஸௌரம் ஆகிய ஆறு சமயங்களும் வேதத்தையே பிரமாணநூலாகக் கொண்டவை. வேதத்தோடு ஒட்டிக் கூறப்படுவது வேள்வி. நம் மணிவாசகப் பெருமான் இறைவனைக் குறிப்பிடும்போது

'வேதமும் வேள்வியும் ஆயினார்க்கு
மெய்ம்மையும் பொய்ம்மையும் ஆயினார்க்கு'

என்று கூறுகிறார். வேதமுறைப்படி தீ வளர்க்கப்படுவதால் உலகம் துன்பம் நீங்கி இன்பம் எய்துகிறது. இந்த வேதத்தை ஓதக் கடமைப்பட்டவர்கள் அந்தணர்கள். அவர்கள் செய்யும் வேள்வி கன்மவேள்வி, தவவேள்வி, செபவேள்வி, தியானவேள்வி, ஞானவேள்வி என ஐவகைப்படும். இவ்வகை வேள்விகளை இயற்றுவோர் இயற்றுங்கால் அவற்றிற்கு அசுரர்களால் இடையூறு ஏற்படாதவாறு இறைவனே முன்னின்று காத்து உரிய பயனை அளிக்கிறான். இத்தகைய வேள்வி நடத்தும் அந்தணர்களை ஞானசம்பந்தப் பெருமான்,

'கற்றாங்கு எரிஓம்பிக் கலியை வாராமே
செற்றார் வாழ்தில்லைச் சிற்றம்பலம்'

என்று பாடுகிறார். வேள்வியில் தேவர்களை மந்திரங்களால் அழைத்து அவியுணவு வழங்குவது மரபு. இத்தகைய தேவர்களைத் திருவள்ளுவர் 'அவியுணவின் ஆன்றார்' என்று கூறுகிறார். அந்தணர் இயற்றும் வேள்வியினின்றும் தேவர்களுக்கு அவி உணவு கிடைக்கிறது. தேவர்களால் உலகிற்கு மழையும் பிறவளங்களும் நன்மைகளும் கிடைக்கின்றன. இங்குக் கூறப்படும் அந்தணர்கள் முருகப்பெருமானுக்குரிய ஆறெழுத்து மந்திரமான,

**'சரவண பவ'** அல்லது **'குமாராய நம'**

என்பதனை முறைப்படி ஓதுவார்கள். அம்மந்திரத்தை மெய்நூல்கள் கூறும் அறவழியே ஓதுமவர்கள் அந்தணர்கள். அருணகிரிநாதர் முருகப் பெருமானைத் திருப்புகழில், 'அந்தண் மறை வேள்விக் காவற்கார'என்று பாடுகிறார். இத்தகைய வேள்விகளில் மற்ற கடவுளர்களை ஒருமுறைதான் பெயர் சொல்லி அழைப்பார்கள்; ஆனால் முருகப் பெருமானை 'சுப்ரமண்யோம், சுப்ரமண்யோம், சுப்ரமண்யோம்' என்று மூன்று முறை அழைப்பார்கள்.

இப்பகுதிக்கு உரைகூறும் நச்சினார்க்கினியர் மந்திரவிதியின் என்பதற்கும் அந்தணர் என்பதற்கும் பொருளாக, ''மந்திரத்தை உடைய வேதம்' என்றும் 'அந்தத்தை அணவுவார் அந்தணர்' என்றும், அவர் ''வேதாந்தத்தையே நோக்குவார்'' என்றும் கூறுகிறார்.

இனி நான்காவது திருமுகத்தைக் காண்போம்.

' ஒரு முகம்
எஞ்சிய பொருள்களை ஏம்உற நாடித்
திங்கள் போலத் திசை விளக்கும்மே'

(96 - 98)

ஒருமுகம் மக்கள் அறிவினுக்கு எட்டாது எஞ்சி நின்ற பொருள்களை எல்லாம் உலகம் இன்புறும்படியாக உணர்த்திக் கலை நிரம்பிய சந்திரன் போலத் திசைகளை எல்லாம் விளக்கிக் கொண்டிருக்கும். வேத வேதாகமங்களை எல்லாம் விதிப்படி ஓதிய முனிவர்கள் பொருள் விளங்கக் கற்றவர்கள் தாம். ஆயினும் அவர்களுக்கு ஐயம் தீர்ந்தபாடில்லை; அமைதிகிட்டவில்லை; அவர்கள் முருகனிடம் ஐயத்தைப் போக்கிக் கொள்ள வருகிறார்கள்; குளிர்மதி போன்ற இந்த முகம், உள்ஞானத்தை உதவி உறுதியை விளைவிக்கிறது.

வள்ளுவர்,

'பிறப்பென்னும் பேதைமை நீங்கச் சிறப்பென்னும்
செம்பொருள் காண்பது அறிவு' என்று கூறுகிறார்.

நாலடியார், 'கல்வி கரையில' என்று கூறும். நம் ஔவைப் பிராட்டி, 'கற்றது கையளவு; கல்லாத துலகளவு' என்று கூறுகிறார். உலகில் கல்வியின் எல்லையை அளப்பதரிது. கற்கக் கற்கப் புதுப் பொருள், புதுச்சொற்கள், புதுச்சுவை வந்து

கொண்டேயிருக்கும். நூலறிவினால் விளக்கவியலாதவற்றை, ஆசிரியரை அடைந்து கற்றுக்கொள்ளவேண்டும். சிவபெருமான் தட்சிணாமூர்த்தியாகக் கல்லால மரத்தின்கீழ் இருந்து ஸனகாதி முனிவர்களுக்கு உபதேசித்து அருளினார். ஆனால் சிவபிரானுக்கே குருபீடத்தில் அமர்ந்திருந்து பிரணவப் பொருளை உபதேசித்தவர் முருகப் பெருமான். அருணகிரிநார் (புகழ்பெற்ற) 'முத்தைத் தரு' என்ற திருப்புகழில்,

'முத்திக்கொரு வித்துக் குருபர எனஓதும்
முக்கட்பர மற்குச் சுருதியின்
முற்பட்டது கற்பித் திருவரும்
முப்பத்து மூவர்க்கத் தமரரும் அடிபேண'

எனப் பாடுகிறார்; முருகப் பெருமானை, முக்கட் பரமர், 'குருபர' என ஓதி வணங்க அவருக்கு சுருதியின் முற்பட்ட பொருளைக் கற்பித்தான் முருகன் என்றார். 'போதகந் தரு கோவே' (போதகந்தரு - பழநி திருப்புகழ்) என்று கூறுவார். முருகவேள் பக்குவப்பட்ட ஆன்மாக்களுக்கு குருவாய் ஞான உபதேசம் தந்து அருளுபவர். இங்கு அவர்முக்கட்பரமற்குக் கற்பித்தார் எனக் கூறுகிறார். எனவே, குருவிற்குக் குருவாக விளங்கும் குமரன் மற்ற இடங்களில் தீராத ஐயங்களைத் தீர்த்து வைப்பான் எனக் குறிப்பால் உணர்த்துகிறார். இங்கு உயிரின் ஏகதேச அறிவகற்றித் தனது வியாபகம் முழுதும் உணர்ந்து இன்புறும்படி அருளும் என்கிறார் நக்கீரர். அதனால்

'திங்கள் போலத் திசை விளக்கும்மே' என்றார்.

தன் அடியார் தனது திருவடியின்பத்தை நுகரப் பண்ணும் இம்முகம்.

'எஞ்சிய பொருள்' என்பதற்கு,

ஈண்டு வழங்காத வேதங்களிலும் நூல்களிலும் உள்ள பொருள் என்பர் நச்சினார்க்கினியர்; ஆய்ந்தறியப் படாமல் ஒழிந்த ஆழ்பொருள்கள் என்பர் ஓர் உரையாசியர்; வேதங்களில் மறைந்த பொருள் என்பர் பரிமேலழகரும் கவிப்பெருமாளும். இவ்விடத்தில் மணிவாசகப்பெருமான்,

'தென்னன் பெருந்துறையான்
காட்டாதன வெல்லாங் காட்டிச் சிவங்காட்டித்
தாள்தாமரை காட்டித் தன்கருணைத் தேன்காட்டி'

எனக் கூறும் திருவம்மானை அடிகள் மீண்டும் நினைவு கூரத் தக்கவை.

அருணகிரிநாதர்,

'அறிவையறி வாலறிந்து நிறைவாகி நிற்கும்'

பேற்றை வேண்டுகிறார். (சுருளளக திருப்புகழ்).

நச்சினார்க்கினியர்,

'கலை நிறைதலின் திங்கள் உவமை' கூறப்படுவதாகக் கூறுகிறார்.

இனி ஐந்தாவது திருமுகத்தைக் காண்போம்.

' ஒருமுகம்
செறுநர்த் தேய்த்துச் செல்சமம் முருக்கிக்
கறுவு கொள் நெஞ்சமொடு களம் வேட்டன்றே'
(98 - 100)

இத்திருமுகம் பகைவர்களை அழித்து, அவர்கள் பிறர் மேற்செய்யும் போரைக் கெடுத்து, கறுவுதல் கொண்ட சினமிக்க உள்ளத்தோடு போர்க்கள வேள்வியை விரும்பிச் செய்யும் என்பது பொருள்.

அருணகிரிநாதர் திருச்செந்தூர்த் திருப்புகழில் (சத்தமிகு ஏழுகடல்) 'பத்திபுரி வோர்கள் பனுவல்கார' என்றும்

'துட்ட அசுரேசர் கலகக்கார
சிட்டர் பரி பாலலளி தக்கார'

என்றும் பாடுகிறார். முருகன் தீமைக்கு மூல காரணமான அசுரர்களை ஞானவேலால் அழிப்பவன்; நல்லவர்களைக் காப்பவன். நம் புராணங்களில் மூன்று போர்கள் சிறப்பாகப் பேசப்படுவன. ஒன்று முருகனே முன்னின்று நடத்திய தேவஅசுரப் போர். அடுத்தது இராமாயணப் போர்; மூன்றாவது போர் பாரதப் போர். கந்தபுராணத்தில், முருகப்பெருமானுக்கும் சூரனுக்கும் நடந்த மிகப் பெரிய போர் கூறப்படுகிறது. நம்

புராணங்கள் கூறும் மரபுப்படி, முருகனுக்கும் சூரபன்மனுக்கும் நடந்த போர் பத்துநாள்கள் நடந்ததாகவும், பாரதப் போர் பதினெட்டு நாள்கள் நடந்ததாகவும், இராமாயணப் போர் பதினெட்டு மாதங்கள் நடந்ததாகவும் கூறப்படுகின்றன. முருகப் பெருமானுக்கும் சூரனுக்கும் நடந்த போரின் வெம்மையைக் காட்டப் பதினெட்டு ஆண்டுகள் நடந்ததாகவும் கூறப்படுவதுண்டு.

சிலப்பதிகாரத்தில்,

'உயிர்த் தொகை உண்ட ஒன்பதிற் றிரட்டி யென்
றியாண்டும் மதியும் நாளும் கடிகையும்
ஈண்டு நீர் ஞாலம் கூட்டி எண்கொள'

(27 : 8 -10)

என்ற அடிகளுக்கு உரைகூறும் அரும்பதவுரையாசிரியர்

'தேவாசுர யுத்தம் பதினெட்டு ஆண்டிலும்
இராம இராவண யுத்தம் பதினெட்டு மாதத்திலும்
பாண்டவ துரியோதன யுத்தம் பதினெட்டு நாளிலும்
செங்குட்டுவனும் கனகவிசயரும் செய்த யுத்தம்
பதினெட்டு நாழிகையிலும் முடிந்தன என்று எண்ண'

என்று கூறுகிறார். முருகப் பெருமான் தேவசேனாதிபதி; வெட்சி புனையும் வேலவன்; கருணை வள்ளல். ஆனால் சூரர் குலத்தை வேரொடு சாய்க்கிறான். அதற்குக் காரணம், தீமை புரியும் அரக்கர்களை மறக்கருணையால் ஆட்கொள்கிறான். அருணகிரிநாதர் 'மாறுபடு சூரனை வதைத்த முகம் ஒன்று' என்று பாடுகிறார். உலக உயிர்கள் வினை வயப்பட்டன. கடவுள் வகுத்த நீதியை மறந்து தீவினையை மேற்கொண்டு கொடுந்தொழில் புரியும் அரக்கரானோர் பலர். அவர்களைத் தன் மறக்கருணையால் வென்றும் கொன்றும் உய்கதி பெறும்படி முருகன் செய்கிறான். வேண்டுதல் வேண்டாமை இலாத பரம்பொருள் அவரவர் வினைக்கேற்பத் தண்டிக்கிறது; இச்செயல் இறைவனுக்கு இன்றியமையாதது. அதனால் அதுவும் நடுவுநிலையை உடைய செயலாகும்.

இப்பகுதியில் கூறப்படும் 'செல் சமம் முருக்கி' என்ற தொடருக்கு உரைவகுத்த நச்சினார்க்கினியர் 'நடுவுநிலையைக் கெடுத்து தேவரையும் அசுரரையும் ஒப்பக்கருதாது

தேவரைக் காத்து அசுரரை அழித்தல்' எனக் கூறுகிறார். பெயர் தெரியாத உரையாசிரியரும் இக்கருத்தை ஒட்டியே பொருள் கூறுகிறார். அறம் செய்வாரைக் காத்தல் எத்துணை அறமோ, அத்துணை அறமே மறம் செய்வாரை அழிப்பதுமாகும். திருமுறையில்,

'நினைந்துருகும் அடியாரை நையவைத்தார்
நில்லாமே தீவினைகள் நீங்க வைத்தார்'

என்று, இறைவன் அடியாரையும் நையவைத்து தீவினைகள் நீங்க வைக்கும் சிறப்பு கூறப்படுகிறது. சிவஞானசித்தியாரில்,

'நிக்கிரகங்கள் தானும் நேசத்தால் ஈசன் செய்வது'

(சித்தியார் - சுபக் - 105)

என்று கூறப்படுகிறது. கவிப்பெருமாள் 'இம்முகமானது முன்புள்ள பகைவர்களை மாய்த்து, இப்போது உள்ள பூசலையும் கெடுத்து மேலும் பொருவாருண்டோ என்று கறுவின திருவுள்ளத்தோடு போர்க்களத்தை விரும்பி நிற்பது' என சிறப்பாக உரை கண்டிருக்கிறார். 'செல்சமம்' என்னும் தொடரை அவர் நிகழ்கால வினைத்தொகையாக உரைத்தார்.

பொதுவாக, போரில் வெற்றி பெறுபவர்கள் வெற்றி மகளாகிய கொற்றவையை வழிபட்டு, களவேள்வி செய்வது மரபு. பகைவர் ஊனைப் பேய்கட்கு விருந்தூட்டல் எனலாம்.

'அடுதிறல் அணங்கார விடுதிறலான் களம் வேட்டன்று'

என்கிறது புறப்பொருள் வெண்பாமாலை. இங்கு முருகன் சூரனை வென்றபின் களவேள்வியைச் செய்யும் செயலில் ஈடுபட்டிருக்கும் ஒரு முகம் கூறப்படுகிறது.

இனி, ஆறாவது திருமுகத்தைக் காண்போம்.

' ஒருமுகம்
குறவர் மடமகள் கொடிபோல் நுசுப்பின்
மடவரல் வள்ளியொடு நகை அமர்ந்தன்றே'

(100 - 102)

ஒருமுகம் கொடிபோன்ற இடையை உடைய, குறவர்தம் இளம்பெண்ணாய் உள்ள வள்ளியோடு மகிழ்ச்சியை நாடியிருக்கும்.

வள்ளியம்மை, ஆண்டவனின் இச்சாசக்தியாகும். சங்கற்ப மாத்திரத்தில் ஐந்தொழிலும் நடக்குமாதலால் இங்கு இச்சா சக்தி கூறப்பட்டது. திருப்பரங்குன்றத்தில் க்ரியா சக்தியான தெய்வானை கூறப்பட்டாள். வள்ளி ஜீவான்மா; முருகன் வள்ளியை ஆட்கொண்டது, அப்பெருமானின் தயையினால் ஏற்பட்டது. அருணகிரிநாதர்,

'ஒண்டொடி மோகா' என்றும்
'தணியா அதிமோக தயாபரனே' என்றும்
'பாளைக் குழல் வள்ளிபதம் பணியும்
வேளைச் சுரபூபதி மேருவையே' என்றும்
'மொய்தார் அணிகுழல் வள்ளியை வேட்டவன்'

என்றும் வள்ளியம்மையைக் குறித்துப் பாடுகிறார். உயிர்களுக்கு இச்சை விளையும் பொருட்டு, இறைவன் இச்சா சக்தியுடன் இணைந்திருக்கிறான். குமரகுருபரர் 'தேனூறு கிளவிக்கு வாயூறி நின்றவன்' என்று பாடுகிறார். முருகப்பெருமான் தேவலோக சுரமகளாம் தெய்வயானையை மணந்தான். நரமகளாம் வள்ளியம்மையாரையும் மணக்கிறான். வள்ளலார் 'நரர்களுக்கும் சுரர்களுக்கும் நலம் கொடுக்கும் நலமே' என்றார். வள்ளியம்மையார் முருகனுடைய அருளைப் பெற அரும்பெருந் தவம் செய்தார். ஆதலால் அவரை இரந்தும் பணிந்தும் ஆட்கொண்டு அருளினார் அப்பெருமான். அன்பு செய்யும் அடியார்க்கு ஆண்டவன் ஏவல் புரிவான். இது இறைவனின் கருணை வெளிப்பாடு.

பரிபாடலில்,

'நின் ஆர்வலர் தொழுதகை அமைதியின்
அமர்ந்தோயும் நீயே! அவரவர் ஏவலாளனும் நீயே'

எனக் கூறப்படுகிறது.

நம் அப்பர்பெருமான்,

'கூம்பித் தொழுவார் தம் குற்றேவலைக்
குறிக் கொண்டிருக்கும் குழகா போற்றி' என்று பாடுகிறார்.

திருவகுப்பில்,

'வனசரி பதயுக கஞ்சம் வணங்கும்
பாக்ய கதம்பம்' என்று கூறப்படுகிறது.

குமரகுருபரர் சற்று நகைச் சுவையுடன் கூறுகிறார்.

'தெய்வக் குறப்பெண்
குறிப்பறிந் தருகணைந்துன்
குற்றேவல் செய்யக் கடைக்கண் பணிக்கெனக்
குறையிரந்து ...... நின்றவன்' என்பது நோக்குக.

உலக உயிர்கள் அனைத்தும் ஆண்டவனுடைய நிழல்கள். நிழல்கள் அசைய வேண்டும். நமக்கு உலகத்தில் இச்சை வேண்டும். உலகப் பொருட்களை நுகர்ந்தால் தான் ஆணவம் தேயும்; ஆகையால் நாம் உலகப் பொருளை நுகரும் பொருட்டுத்தான் ஆண்டவன் இச்சா சக்தியைச் சேர்க்கின்றான்.

திருமூலர்,

'போகத்துள் ஆங்கே புகுந்த புனிதன்' என்றும்,

'உயிரிச்சை யூட்டி உழிதருஞ் சக்தி
உயிரிச்சை வாட்டி ஒழித்திடு ஞானம்
உயிரிச்சை யூட்டி உடனுற லாலே
உயிரிச்சை வாட்டி உயர்பதம் சேருமே' (பாடல் எண்.2297)

என்று இச்சா சக்தி இயைந்து ஒழுகுதல் நிலை கூறுகிறார்.

இங்கு முருகன் வலிந்து சென்று வள்ளியைத் தடுத்தாட்கொண்ட கருணையையே இது குறிக்கிறது. இப்பகுதிக்கு உரை வகுக்கும் நச்சினார்க்கினியர், காம நுகர்ச்சி இல்லாத இறைவன் இவ்வாறு நகையமர்ந்தான் என்பது உலகில் இல்வாழ்க்கை நடத்தற்கென்று உணர்க. அது

'தென்பா லுகந்தாடும் தில்லைச் சிற்றம்பலவன்
பெண்பால் உகந்தான் பெரும் பித்தன் காணேடி
பெண்பால் உகந்திலனேல் பேதாய் இருநிலத்தோர்
விண்பால் யோகெய்தி வீடுவர்காண் சாழலே'

என்பதனால் உணர்க என்றார். இது திருவாசகத்தின் திருச்சாழல் பகுதி.

இதே போன்று சிவஞான சித்தியாரில்,

''யோகியாய் இருந்து உயிர்க்குப் போகத்தைப் புரிதல் ஓரார்
யோகியாய் யோகமுத்தி உதவுதல் அதுவும் ஓரார்'' (சித்தி - 70)

என்று சிவபெருமான் திருமேனி கொள்ளும் போது போக வடிவத்தை மேற்கொண்டு உயிர்களுக்கு இன்ப வாழ்க்கை அருளும் நிலை கூறப்படுகிறது.

இந்த அறுமுகங்களின் சிறப்பை அருணகிரிநாதர்

''ஏறுமயில் ஏறி விளையாடு முகம் ஒன்றே
ஈசருடன் ஞானமொழி பேசும் முகம் ஒன்றே
கூறும் அடியார்கள் வினை தீர்க்கும் முகம் ஒன்றே
குன்றுருவ வேல்வாங்கி நின்றமுகம் ஒன்றே
மாறுபடு சூரரை வதைத்த முகம் ஒன்றே
வள்ளியை மணம்புணர வந்தமுகம் ஒன்றே''

என்று போற்றுகிறார்.

குமரகுருபரர் கந்தர்கலிவெண்பாவில்,

'வெவ்வசுரர் போற்றிசைக்கும்'

முதலாகத் தொடங்கும் அடிகளால் இந்த ஆறுமுகங்களில்,

ஒருமுகம் சூரனை அழிக்கிறதென்றும்,
ஒருமுகம் உயிர்களின் பழவினையை அழித்து
அந்தமில் பேரின்பவாழ்வை அளிக்கிறதென்றும்,
ஒருமுகம் மறைகளையும் ஆகமங்களையும்
வழங்குகிறது என்றும்
ஒருமுகம் உயிர்களை விட்டு நீங்காத பாச
இருளை அகற்றித் தாமரை மலர் போன்று
ஒளிவிடுவது என்றும்,
ஒருமுகம் வள்ளியம்மையுடனும், தெய்வானை
அம்மையுடனும் காதல் செய்கிறது என்றும்,
ஒருமுகம் தன் திருவடிகளை யடைந்த
அடியவர்களுக்கு வேண்டிய வரங்களை அளிக்கிறது

என்றும் போற்றுகிறார்.

இனி, நக்கீரர், முருகப் பெருமானின் திருத்தோள்களின் எழிலையும் வலிமையையும் கூறவருகிறார்.

'ஆரம் தாழ்ந்த அம்பகட்டு மார்பின்
செம்பொறி வாங்கிய மொய்ம்பின் சுடர்விடு
வண்புகழ் நிறைந்து வசிந்து வாங்கு நிமிர்தோள்'

(103 -106)

இவ்வாறு அவனுடைய ஆறுமுகங்களும் அவற்றிற்குரிய தொழில்களை முறைப்படச் செய்து வருகின்றன. மாலை தாழ்ந்து கிடக்கும் அழகிய பெருமை பொருந்தியது அவனது மார்பு. அதில் உத்தம இலட்சணமான சிவந்த வரிகள் காணப்படுகின்றன. அவ்வரிகள் தோளளவும் நீண்டுள்ளன. அச்செவ்வரிகளை ஏற்று அந்தத் தோள்கள் மிக்க வலிமை உடையனவாய் ஒளி பொருந்திப் புகழ் நிறைந்து வளைந்து நிமிர்ந்திருக்கும்.

முருகப் பெருமானுடைய தோள்கள் அழகானவை; வீரத்தை உடையவை; வெற்றியைக் குவிப்பவை. மொய்ம்பினை உடையவை; ஒளி உடையவை. தாழ்ந்தும் நிமிர்ந்தும் ஆண்மைக்குரிய நீண்ட நெடிய இலக்கணமுடையவை. மார்பிலே மூன்று வரிகள் வளைந்து இரண்டு பக்கங்களிலும் உள் தோள்களில் சென்று சேர்ந்திருக்கின்றன. இது உத்தம ஆடவர்க்குரிய இலக்கணத்தைக் காட்டுவது. இத்தகைய உத்தம இலக்கணத்திற்குரிய வரிகள் கொண்ட மார்பினைச் சீவக சிந்தாமணி ஆசிரியர்,

'வரையகன் மார்பிடை வரியும் மூன்றுள' என்று சீவகனுக்கு இருந்தனவாகக் குறிப்பிடுகிறார்.

அருணகிரிநாதர் முருகப் பெருமானைச் "செந்தில் நகர் வாழும் ஆண்மைக்கார" என்றும் 'கந்தா மைந்தாரந் தோள் மைந்தா' என்றும் 'மல்லேபுரி பன்னிரு வாகு' (கந்தர் அநுபூதி) என்றும்,

'முன்பு செய்த
பழிக்குத் துணையவன் பன்னிருதோளும்' (கந்தர் அலங்காரம்)

என்றும் பாடுகிறார். இறைவனின் இணையற்ற தோள் திறத்தை, ஞானசம்பந்தப்பெருமான், 'ஆனையுரிவை மற்புரி புயத்தினிது மேவுவார்' என்று பாடுகிறார். ஆண்மை உடையவன் தோள்கள் வலிமை உடையவை; அதே நேரத்தில் வண்மை உடையவை; சுடர்விடும் தன்மை உடையவை; புகழ் பெற்றவை; வீரமும் கொடையும் ஒருங்கே பெற்றதனால்,

'செம்பொறி வாங்கிய மொய்ம்பின், சுடர்விடு
வண்புகழ் நிறைந்து வசிந்து வாங்கு நிமிர்தோள்'

என்று நக்கீரர் கூறுகிறார். இப்பகுதிக்கு உரைகூறும் நச்சினார்க்கினியர்,

'தம்முடைய வலியினாலே பெரிய புகழ் நிறையச் சுடரையுடைய படைக்கலங்களை எறிந்து பகைவர் மார்பைப் பிளந்து அவற்றை வாங்கு தோள்' என்கிறார்.

மக்கள் படைக்கலன் போலல்லாது முருகனுடைய படையாகிய வேல் அப்பெருமானுடைய ஞானசக்தியாதலின், சுடர் என்றது ஆகுபெயரால் சுடற்படைக்கருவியைக் குறித்தது. தெய்வப்படைக்கலம் விடுத்துவர் கைக்கண் மீளும் ஆதலின் 'வாங்கு தோள்' என்றார்.

இனி முருகப் பெருமானின் பன்னிரு திருக்கரங்களின் செயல்களைக் கூற வருகிறார் நக்கீரர்:

'விண் செலல் மரபின் ஐயர்க்கு ஏந்தியது
ஒருகை; உக்கம் சேர்த்தியது ஒருகை
நலம்பெறு கலிங்கத்துக் குறங்கின் மிசை அசை இயது ஒருகை
அங்குசம் கடாவ ஒருகை; இருகை
ஐயிரு வட்டமொடு எஃகு வலம் திரிப்ப; ஒருகை
மார்பொடு விளங்க; ஒருகை
தாரொடு பொலிய; ஒருகை
கீழ்வீழ் தொடியொடு மீமிசைக் கொட்ப; ஒருகை
பாடுஇன் படுமணி இரட்ட ; ஒருகை
நீல்நிற விசும்பின் மலிதுளி பொழிய; ஒருகை
வான்அர மகளிர்க்கு வதுவை சூட்ட; ஆங்குஅப்
பன்னிரு கையும் பாற்பட இயற்றி' (107 - 118)

முதல் இரு திருக்கரங்கள் 'மாயிரு ஞாலம் மறுவின்றி விளங்கும்' முகத்திற்கும் பொருந்திய செயல் ஆற்றுபவை.

'விண் செலல் மரபின் ஐயர்க்கு ஏந்தியது
ஒருகை; உக்கம் சேர்த்தியது ஒருகை' (107 - 108)

இக்கரங்களில் ஒன்று ஆகாயத்திலே செல்லுகின்ற ஒழுக்கத்தினையுடைய தெய்வ இருடிகளுக்குப் பாதுகாவலாக ஏந்தியது. அதற்கு இணையான கை இடுப்பிலே வைத்தது.

கதிரவன் வானவெளியில் பயணம் செய்கிறான்; உலக இருளை ஓட்டும் பணியில் ஈடுபட்டிருக்கிறான். இவனது பணிக்கு இடையூறு ஏற்படுத்திட அசுரர்கள் முயல்கிறார்கள். இப்போது கதிரவனின் பணி கூடுதலாகிறது; அசுரருடன் போரிடுவதால் அவன் மேலும் வெம்மை அடைகிறான். அந்த வெம்மை உலகை வருத்தக் கூடியது. வள்ளுவப் பெருந்தகை,

'என்பிலதனை வெயில் போலக் காயுமே' என்பது குறிப்பிடத்தக்கது. கருணை உள்ளம் கொண்ட முனிவர்கள் கதிரவன் செலுத்தும் கதிர்களின் கடுமையைத் தாங்கி உலகைக் காப்பதாகக் கூறப்படுகிறது. அவர்களை 'வாலகில்லியர்' என்றும் 'தேவ இருடியர்' என்றும் கூறுவர். இவ்வாறு கதிரவனின் வெம்மையைத் தாங்கும் முனிவர்கள் தவச்சீலர்கள். அவர்களுக்கு ஆதரவாக அவர்களைப் பாதுகாக்கும் செயலில் ஈடுபட்டிருக்கிறது ஒரு திருக்கரம். இவ்வாறு கதிரவனின் வெம்மையைத் தாங்கும் முனிவர்கள் பற்றிப் புறநானூற்றிலும், சிலப்பதிகாரத்திலும் குறிப்புகள் காணப்படுகின்றன. புறநானூற்றில்,

'நிலமிசை வாழ் நரலமர நீரத்
தெறு கதிர்க் கனலி வெம்மை தாங்கிக்
காலுணவாகச் சுடரொடு கொட்டும் அவிர்சடை முனிவர்'

(புறம். 43 : 1) என்றும்

சிலப்பதிகாரத்தில்,

'சுடரொடு திரிதரு முனிவர்' என்றும் கூறப்படுகிறது. பின்னர் எழுந்த நூல்களிலும், இவ்விருடிகள் பேசப்படுகின்றனர். கந்தபுராணத்தில்,

'அங்கதனின் முப்பான் முக்கோடி தேவர்
அருக்கனுடன் வழிக் கொள்ள' என்று கூறப்படுகிறது.

சேக்கிழார் பெருமான்,

'அண்டம் உற நிமிர்ந்து ஆடும் கோலம்'

என்று மேலண்டத்தில் உள்ளவர்களுக்குச் சிவபெருமான் அருள் செய்யத் தூக்கியது போலக் கரம் உயர்த்தி ஆடும் திருக்கூத்தைக் கூறுகிறார்.

மணிவாசகப்பெருமான் திருவுந்தியாரில்,

'ஏகாசம் இட்ட இருடிகள் போகமே
ஆகாசம் காவல் என்று உந்தீபற' என்று பாடுகிறார்.

இவற்றால் விண்ணில் இருடிகள் இயங்குவதை அறியலாம். அவர்களுக்குப் பாதுகாவலாக இக்கரம் செயல்படுகிறது. அருணகிரிநாதர் புயவகுப்பில்,

'வசைதவிர் ககன சரசிவ கரண'

எனத் தொடங்கும் பாடலில் இக்கரங்களின் செயல்களைக் கூறுகிறார். அதாவது,

''வசை சிறிதும் இன்றி நீங்கினவர்களும், வானத்தில் சஞ்சரிப்பவர்களும், பசுகரணம் நீங்கிப் பதிகரணம் பெற்றவர்களும் மிக்க பெரிய விரதங்களை அநுட்டிப்பவர்களும், அருங்குணத் தொகையை உடையவர்களும், மேலான முனிவர்களுமாகிய சித்தர்களை 'நீங்கள் அஞ்சவேண்டா; அஞ்சவேண்டா' என்று குறிப்பிட்டு அவர்களை வாழவைப்பவை. மணிகளின் வடங்களோடு கூடிய இனிய ஒலியையுடைய உடைமணி என்னும் ஆபரணத்தையும் பொன் அரைஞாணையும் அழகாகத் தெரிந்து வகைவகையாகக் கட்டும் திருவிடையுடனே சேர்ந்து விளங்கும் அழகு முறைக்குப் பொருந்தி அமைபவை'' என்பது பாடற் பொருள்.

இறைவன் தன்பணியில் நிற்பாரைத் தானே ஏற்றுக் கொள்ளும் இயல்பினன்; அவ்வியல்பு இத்திருக்கையின் செயலாக வைத்து இங்குக் கூறப்படுகிறது.

'பவமகல உடனாகி நின்று கொள்வன் பரிவால்
பாதகத்தைச் செய்திடினும் பணியாக்கிவிடுமே'

(சித்தியார் - சுபக். 304)

என்ற சிவஞான சித்தியாரால் இது உணரலாம்.

இனி அடுத்த இணைத் திருக்கைகளின் செயல்களைக் கூறுகிறார் நக்கீரர். இவை ஆர்வலர்களுக்கு அருள்பாலிக்கும் திருமுகத்திற்கு இணையாகப் பணியாற்றுபவை.

'நலம்பெறு கலிங்கத்துக் குறங்கின் மிசை அசைஇயது ஒருகை
அங்குசம் கடாவ ஒருகை' (109 - 110)

ஒருகை அழகிய ஆடை அணிந்த தொடையின் மேலே கிடப்பது;
ஒருகை அங்குசத்தைப் பிடித்துச் செலுத்துவது.

முருகப்பெருமான் யானைமீது அமர்ந்து வருகிறான். அப்பெருமான் மேனி செந் நிறமுடையது; அவன் அணியும் ஆடையும் சிவப்பு நிறமுடையது. அவனது ஒருகரம் யானையைச் செலுத்தும் அங்குசத்தைக் கொண்டு விளங்குகிறது. யானை ஊர்ந்து வரும்போது தொடைமீது சேர்ந்திருக்கும் இயல்புடன் மற்றொரு கை உள்ளது. முருகன் இடர்ப்பட்ட தேவர்களைக் காப்பதும், இன்னலுறும் அடியார்களைக் காப்பதுமான பணியை மேற்கொண்டுள்ளான். 'சேனைத் தலைவர்களுள் நான் முருகனாக இருக்கிறேன்' என்று கண்ணன் கீதையில் கூறுகிறான். முருகன் சிறந்த 'பவரோக வயித்தியநாதப் பெருமான்' பிறவிப்பிணி அவன் அருளாலே மறைவது, அன்பர்கள் 'முருகா' என்று ஓது முன்பே விரைந்து சென்று அருள் புரிபவன்அவன்.
அருணகிரிநாதர்,

'நீலச் சிகண்டியில் ஏறும் பிரான் எந்த நேரத்திலும்
கோலக் குறத்தியுடன் வருவான்'

என்று பாடுகிறார். இங்கு யானை மீது வருகிறான். அவன் செந்நிறம் பெற்ற அழகுபொருந்திய ஆடையை அணிந்திருக்கிறான். 'கலிங்கம்' என்பது ஆடையைக்குறிக்கும். அது முருகப்பெருமானால் அணியப்பட்டதால் 'நலம்பெறு கலிங்கம்' என்றார். அருணகிரிநாதர் திருவகுப்பில், இந்த இரு கரங்களைப் பற்றிக் கூறுகிறார்.

'வருணித கிரண அருணித வெகுதரு' என்ற பாடலில், 'முருகப் பெருமான் அணிந்துள்ள ஆடை சிவந்த நிறம் உடையது; இளஞ் சூரியனின் சோதி வீசும் அழகு பொருந்தியது; அது திண்ணிய செழிப்பான தொடையின் மேல் அமைந்தது. அவனது கரத்தில் உள்ள அங்குசம், வளைந்த கடலை உடைய உலகத்தை வலமாக வரும் தோகை மயில் முகத்தைப் போல் சிறப்பாக உள்ளது என்று கூறப்படுகிறது. இங்குத் திருமுருகாற்றுப்படையில் வரும் கலிங்கம், குறங்கு, அங்குசம் ஆகிய சொற்கள் யாவும் வந்துள்ளன.

இனி மூன்றாம் இணைத் திருக்கரங்களின் செயல்களைக் கூற வருகிறார் நக்கீரர். இத்திருக்கரங்கள் 'ஒருமுகம் மந்திர விதியின் மரபுளி வழாஅ அந்தணர் வேள்வி யோர்க்கும்மே' என்ற திருமுகத்தின் செயற்குப் பொருந்துமாறு செயல்படுபவை.

'இரு கை
ஐயிரு வட்டமொடு எஃகு வலம் திரிப்ப' (110 - 111)

இணைந்த இரண்டு கைகள் அதிசயமான கரிய கேடகத்தையும், வேலாயுதத்தையும் சுழற்றிக் கொண்டிருப்பன.

படைக்கலங்களில் சிறந்தது வேல். முருகன் வேலை ஏந்தியதால் 'வேலன்' என்று அழைக்கப்படுகிறான். வேல் வலிமையானது. திருவள்ளுவப் பேராசான்,

'கைவேல் களிற்றொடு போக்கி' என்று கூறுகிறார். முருகப்பெருமானின் கைவேல் ஞானசக்தியைக் குறிப்பது. வேல் நீண்டு, இலைப்பகுதியில் அகன்று நுனியில் கூர்மையாக விளங்குவது. இதேபோல் அறிவும், நீண்ட நெடிய கல்வி கேள்விப் பயிற்சியினால் பலநூல்களில்த் தோய்ந்து, முடிவில் ஒன்றையே முடிந்த முடிவாகத் தெரிந்து கொள்வதால் கூரியதாக விளங்குவது. இங்கு நக்கீரர் எஃகு என்று வேலைக் குறிப்பிடுகிறார். அதன் கூர்மை கருதி இவ்வாறு கூறியிருப்பதாகக் கொள்ளலாம். நச்சினார்க்கினியர் 'ஐயிரு வட்டம்'என்பதற்கு 'வியப்பையும் கருமையையும் உடைய பரிசை' என உரை கூறுகிறார். அழகையும், பெருமையையும் உடைய பரிசை என்பர் பெயர்தெரியா உரையாசிரியரும் பரிதியாரும். பரிமேலழகர், பத்துத் திருமுகமுடைய கேடகம் என உரை காண்பர். அசுரர்கள் தாமதகுணமும் அஞ்ஞானமும் நிறைந்தவர்கள். அவர்களை வெல்ல ஞானவடிவான வேற்படையே ஏற்றது. இந்த இரு திருக்கரங்களைப் பற்றி அருணகிரிநாதர் புய வகுப்பில் பாடுகிறார்.

'வரைபக நிருதர் முடிபக மகர மகோததி' என்ற பாடலில், கிரவுஞ்சமலை பிளவு படவும், அசுரர்கள் தலைபிளக்கவும், மகரமீன் உலவும் பெருங்கடல் வேலிலிருந்து தோன்றிய தீயின் வாயிலே துன்புறவும் சுழற்றிக் கூர்மையும் வெற்றியும் தங்கிய தூய வேலாயுதத்தை அழகாகக் கொண்டது' என்பது இதன் பொருள். அடுத்துக் கேடயத்தின் இயல்பைக் கூறவருகிறார். சந்திரனைப் போலவும், இளஞாயிற்றைப் போலவும்

வளைந்துள்ள தோலும் விரிவும் நீலநிறமு மிக்க கேடயமாகிய ஆயுதத்தை ஏந்தி நின்று திரிதது, மேற்கொண்ட காரியத்தை நிறைவேற்ற முந்துகின்றது' இக்கேடயம் வட்டமானது, கரியது, தோலாலானது என்ற செய்திகளும் இதனால் அறிகிறோம்.

இனி நான்காம் இணைத் திருக்கரங்களின் செயலைக் கூறுகிறார் புலவர்பெருமான்; இத்திருக்கரங்கள்,

'எஞ்சிய பொருள்களை ஏம்உற நாடித்
திங்கள் போலத் திசைவிளக் கும்மே'

என்ற முகத்தின் செயலுக்கு ஏற்ற கரங்களாகும்.

'ஒரு கை
மார்பொடு விளங்க; ஒரு கை
தாரொடு பொலிய'

(111 - 113)

ஒரு கை மார்பிலே தங்கி விளங்குவது; ஒரு கை, மாலையோடு அழகு பெறத் தோன்றுவது.

சிவபெருமான் கல்லால மரத்தின் கீழ் அமர்ந்து ஸனகாதி முனிவர்களுக்குச் 'சிவஞானமானது, நூல்அறிவால் பெறுவதன்று; அநுபவ அறிவால்மட்டுமே கிட்டுவது' என்று சின்முத்திரை காட்டி அருளினார். அதைப்போல் இங்கு முருகன் ஞானகுருவாக எழுந்தருளியிருக்கும் போது, மோன குருவாகவுமிருக்கிறான். அந்நிலையில் அவன் திருக்கரம் ஒன்று சின்முத்திரையைக் காட்டியபடி, ஆணவம், கன்மம், மாயை என்னும் பாசங்களினின்றும் நீங்கிய ஆன்மா பரம்பொருளை நாடவல்லது என்னும் குறிப்புத் தோன்ற திருமார்போடு ஒட்டித் தோன்றுகிறது. இணைந்த மாலையைப் பற்றிக் கொண்டு இலங்குகிறது.

சிவபெருமான்,

'எல்லாமாய் அல்லதுமாய் இருந்ததனை இருந்தபடி இருந்து காட்டிச்
சொல்லாமல் சொன்னவராய் நின்ற குருமூர்த்தம் கொண்டவர்.'

என்றபடி உள்ளவர். அவருடைய திருக்குமாரனும் சின்முத்திரையைத் தரித்த கோலத்தில்

குருவாக வீற்றிருக்கிறான். ஒருகை முனிவர்களுக்கு எஞ்சிய பொருள்களை ஏமுற நாடி உணர்த்துங்கால் மார்போடு விளங்குகிறது; அதற்கு இணையான மற்றொரு கை, மாலை தாழ்ந்ததனோடு சேர்ந்து அழகுற விளங்குகிறது. ஒரு கை 'தாரொடு பொலிய' என்பதற்கு மாலை தாழ்ந்து நிற்கும் மார்பின் அம்மாலையொடு ஒரு கை சேர்த்து அழகு பெறும் எனப் பெயர் தெரியாத உரையாசிரியரும் நச்சினார்க்கினியரும் உரைகூற, பரிமேலழகரும், கவிப்பெருமாளும், பரிதியாரும் ஒரு கை திருமாலையைத் திருத்தி நிற்கும் எனக் கூறுவர். இறைவன், உயிர்களுக்கு உரையிறந்த பொருளைக் காட்டும்போது அமைதியின் அறிகுறியாகிய மோன முத்திரையைக் காட்டி அமர, மாணாக்கர்களுக்கு வீட்டின்பம் உண்டாகி உள்ளம் நிறையும் என்பதாகும்.

இப்பகுதிக்கு உரைகூறும் நச்சினார்க்கினியர்,

'முனிவர்க்குத் தத்துவங்களைக் கூறி உரையிறந்த பொருளை
உணர்த்தும் காலத்து ஒருகை மார்போடு விளங்கா நிற்க,
ஒருகை மார்பின் மாலை தாழ்ந்ததனோடே சேர்ந்து அழகுபெற'

என்று கூறுகிறார். மேலும், இதை விளக்கும்போது, "இறைவன் மோன முத்திரை யத்தனாய்த் தானேயாயிருந்து காட்ட, ஊமைத்தசும்புள் நீர் நிறைந்தாற்போல ஆனந்தமயமான ஒளி மாணாக்கர்க்கு நிறைதலின் அதற்குரிய மோன முத்திரை கூறிற்று" என்கிறார்.

கந்தபுராணத்தில்,

'கரதல மொன்று சேர்த்தி மோனமுத்திரையைக் காட்டும்'

நிலை கூறப்படுகிறது. இதேபோன்று தாயுமானவர் திருச்செய்யுளில் சிவபெருமான் ஸனகாதிமுனிவர்களுக்கு உண்மைப் பொருளைச் சொல்லாமல் சொல்லி உணர்த்துவது பேசப்படுகிறது. இப்பொருளைப் பரஞ்சோதி முனிவரது

'இருந்ததனை இருந்தபடி இருந்து காட்டிச்
சொல்லாமல் சொன்னவரை'

என்ற வாக்கினாலும் அறியலாம். இங்கு முருகப்பெருமான் தான் பேணி நிற்பான் என்பதனினும், தன்பால் வந்த உயிர்கட்குத் தன் குறிப்பால், அம்மந்திரத்தைப் பேணுமாறு செய்பவன் எனக் கொள்ளலாம். இந்த இரு திருக்கரங்களையும் அருணகிரிநாதர்

திருவகுப்பில்,

'மணகுண சலன மலினமில் துரிய'

என்ற பாடலில் கூறுகிறார். அதாவது, "மணமும் குணமும் சலனமும் ஆகிய அழுக்குகள் இல்லா துரியம் கடந்த துரியாதீத நிலையில் பெறும் ஆனந்த அநுபூதியைத் தருவதற்குக் காரணமான மவுனமான, அட்சரம் ஏதும் இல்லாத மந்திரமாகிய முத்திரையைப் பொருந்தித் திருமார்பில் வலக்கரம் திகழ்வது" என்பது இதன் பொருள். இதே போன்று, தாரொடு பொலியும் இடக்கையை 'இனம் இனமாகத் திரண்டு மொகு, மொகு, மொகு என்ற ஒலியோடு பலவாகிய சமூகத்தை உடைய பண்களைப் பாடும் வண்டுகள் விரும்பி வந்து விழச் சிறிய செண்பக மலர் நெருங்கித் தொடுக்கப் பெற்ற மாலையோடு விளங்குவது' என்ற பொருளில் குறிப்பிடுகிறார். நக்கீரர், 'தார்' என்று பொதுவாகக் குறிப்பிட, அருணகிரிநாதர் அதைச் செண்பக மாலை என்று கூறி அதில் வண்டுகள் விழுந்து இராகம் பாடுகின்றன என்கிறார். இவ்வலக்கரம் முருகனின் ஞானச் சிறப்பைக் கூறுவது.

இனி, ஐந்தாம் இணைத்திருக்கரங்கள்

'செறுநர்த் தேய்த்துச் செல்சமம் முருக்கிக்
கறுவுகொள் நெஞ்சமொடு
களம் வேட்கும்' திருமுகச் செயலுக்குப் பொருந்துமாறு செயல்படுவன.

'ஒருகை
கீழ்வீழ் தொடியொடு மீமிசைக் கொட்ப; ஒருகை
பாடுஇன் படுமணி இரட்ட'

(113 - 115)

இங்கு ஒரு கை உயர்த்தப்பட்டதாக நழுவித் தாழ்கின்ற தொடியோடு (அதாவது வளையோடு) மேலே சுழன்று கொண்டிருப்பது; அதற்கு இணையான மற்றொரு கை இனிய ஓசையையுடைய மணியை ஒலிப்பிக்கும். முருகப்பெருமான் வீரருள் வீரன்; தீமை பல இயற்றும் அசுரர் குலத்தை வேரோடு சாய்க்கிறான். போர்க் களத்தில் அசுரர்கள் வீழ்ந்ததினால் எங்கு நோக்கினும் பிணக் குவியல். பேய்களுக்கு நல்ல உணவு கிடைத்ததில் மகிழ்ச்சி. பிணங்களை உண்ணும் முன்பு கொற்றவைக்குப் பூசை செய்வது மரபு. பேய்கள் தம் தலைவியாகிய துர்க்கையை வாழ்த்துகின்றன. முருகனை நக்கீரர் இப்பாடலின் பிற்பகுதியில் 'வெற்றி வெல்போர்க் கொற்றவைச் சிறுவ' எனப் பாடுகிறார்.

முருகப்பெருமானின் ஒரு கரம் மேலே உயர்த்தப்பட்டுக் களவேள்விக்கு ஆணை பிறப்பிக்கிறது; இவ்வாறு உயர்த்தும் போது அதில் அணிந்துள்ள தொடி பாரத்தால் கீழே நழுவி முழங்கைக்கு முன் வந்து நிற்கிறது. நச்சினார்க்கினியர் இக்கரம் 'களவேள்விக்கு முத்திரை கொடுப்ப' என உரை கூறுகிறார். இக்கரத்திற்கு இணையான மற்றொரு கை மணியடிக்கிறது; இனிதாக ஒலிக்கும் மணியை மாறிமாறி அடிக்கிறது.

அருணகிரிநாதர் இக்கரங்களின் செயல்பாடுகளைத் திருவகுப்பில் கூறுவதைப் பார்ப்போம்.

'மிசை மிசை கறுவி' எனத் தொடங்கும் பாடலில், "அசுரர் சேனை வெளிமுகடளவு பரந்துள்ளது. அசுரர்களைத் தேடிப்பிடித்துப் பலியிடுகிறது தேவசேனை. பேய்கள் அசுரர்களின் பிணங்களை அடுக்குகின்றன; களவேள்விக்கு ஆயத்தம் செய்கின்றன. முருகப்பெருமானின் இத்திருக்கரங்களில் ஒன்று, தான் அணிந்த வளையல்கள் சுழல மேலே நின்று சுழல்கிறது; மற்றொரு கை, மக்களும் விலங்குகளும் அஞ்சும்படி நெருப்பைக் கக்குகின்ற விழிகள் கொண்ட பூதபிசாசங்களைப் போர்க்களத்திலே புகுந்து களவேள்வியில் கலந்துகொள்ளும்படி மணியை அடிக்கிறது" என்று பாடுகிறார்.

இனி ஆறாம் இணைத் திருக்கரங்களைக் கூறவருகிறார் நக்கீரர். இத்திருக்கரங்கள் 'ஒரு முகம் மடவரல் வள்ளியொடு நகை அமர்ந்தன்றே' முகத்திற்கேற்பத் தொழில் மேற்கொண்டுள்ளன.

' ஒருகை
நீல்நிற விசும்பின் மலிதுளி பொழிய; ஒருகை
வான் அர மகளிர்க்கு வதுவை சூட்ட; ஆங்குஅப்
பன்னிரு கையும் பாற்பட இயற்றி (115 - 118)

ஒரு கை நீல நிறத்தினையுடைய மேகத்திலிருந்து நிரம்பிய நீர்த்துளிகளைப் பொழியச் செய்கிறது; மற்றொரு கை தெய்வப் பெண்களுக்கு மணமாலையைச் சூட்டுகிறது. இறைவன் உலகைப் படைக்கிறான்; உயிர்களைப் படைக்கிறான்; அவற்றிற்கு உணர்வை ஊட்டுகிறான்; அவை வாழ, பல்வகை வளங்களைக் கூட்டுகிறான்; வளங்கள் நிலைக்கவும் பெருகவும் வான் மழை வழாது பெய்யவேண்டும்.

திருவள்ளுவர்,

'நீரின்று அமையாது உலகு' என்றார்.

அப்பெருமானார் கடவுள் வாழ்த்திற்குப் பின் 'வான்சிறப்பு' அதிகாரத்தை வைத்தார். இதற்கு உரை கூறும் பரிமேலழகர்

'அஃதாவது அக்கடவுளது ஆணையால் உலகமும், அதற்குறுதியாகிய அறம் பொருள் இன்பங்களும் நடத்தற்கேதுவாகிய மழையினது சிறப்புக் கூறல்; அதிகாரமுறைமையும் இதனானே விளங்கும்' என்று கூறுகிறார். உலகில் அறம் பொருள் இன்பங்கள் முறைப்படி நடைபெற மழை ஏதுவாகிறது. அதனால் ஒரு கை மழையைப் பெய்விக்கிறது. மற்றொரு கை, தெய்வமகளிர்க்கு மணமாலை சூட்டி நிற்கும். இந்திரனுக்கும் தேவர்களுக்கும் தேவஅரசை மீட்டுத் தந்தவன் முருகன். இந்திராணிக்கும் ஏனைய தேவமகளிருக்கும் அவர்களுடைய தாலிக்கு வேலியாக நின்று மங்கலத்தை அருளியவன் முருகன். இப்பகுதிக்கு உரை கூறும் நச்சினார்க்கினியர்

'என்றது வள்ளியோடு நகையமர்ந்த முகம், உலகிற்கு இல்வாழ்க்கை
நிகழ்த்துவித்ததாகலின், அவ்வில்வாழ்க்கை நிகழ்த்துதற்கு மழையைப்
பெய்வித்தது ஒருகை; ஒருகை, இல்வாழ்க்கை நிகழ்த்தற்
பொருட்டு மணமாலையைச் சூட்டிற்று'

என்று விளக்கிக்கூறுகிறார்.

'வானரமகளிர்' என்பதற்குத் தெய்வமகளிர் என்பர் நச்சினார்க்கினியரும் பரிமேலழகரும். தெய்வயானை அம்மையார் என உரைகாண்பர் பெயர் அறியப்படாத பழைய உரையாசியர். தெய்வ மகளிர் என்ற பொதுப்பொருளே சிறக்கும்.

இனி, அருணகிரி நாதர் புயவகுப்பில் இவ்விரு கரங்களைக் கூறும் எழிலைக் காண்போம்.

'விதமிகு பரத சுரவனி தையர்' என்று தொடங்கும் பாடலில், "முருகப்பெருமானுடைய ஒருகை வானில் உள்ள மேகத்தைத் திறந்து கொண்டு அந்தப் புனித நீரை விளையாட்டாக ஆடல் பயிலும் தேவமகளிர் மேல் வீசுகிறது; மற்றொரு கை தெய்வயானையின் சிவந்த கைகளோடு பொருந்தி இருந்தன" எனக் கூறுகிறார்.

குமரகுருபரர் இந்த ஆறு திருக்கரங்களின் செயல்பாடுகளைக் கந்தர்கலிவெண்பாவில்,

'கொந்தவிழ்ந்த
வேரிக் கடம்பும் விரைக்குரவும் பூத்தலர்ந்த
பாரப் புயசயிலம் பன்னிரண்டும்'

என்று தொடரும் பகுதியில் தெரிவிக்கிறார். அதாவது

தேவர்க்கும் உதவுகின்ற திருக்கரம் ஒன்று;
தேவமகளிரை அணைந்து அருள் செய்கின்ற திருக்கரம் ஒன்று;
மழையைப் பொழியும்படி செய்கின்ற அருட்கரம் ஒன்று;
மாலைகளை ஒருங்கே அணிந்த திருக்கரம் ஒன்று;
மார்பின்மீது வைத்துக் கொண்டிருக்கும் திருக்கரம் ஒன்று;
இடப்பக்க இடுப்பில் வைத்துக்கொண்டிருக்கும் திருக்கரம் ஒன்று;
மேல் தொடையைத் தொட்டுக்கொண்டிருக்கும் திருக்கரம் ஒன்று;
வீரவளையை அணிந்திருக்கும் திருக்கரம் ஒன்று;
மணி பொருந்திய விசாலமான திருக்கரம் ஒன்று;
அங்குசப்படையைத் தாங்கி நிற்கும் திருக்கரம் ஒன்று;
கேடகப்படையைச் சுழற்றுகின்ற திருக்கரம் ஒன்று;
ஒளிவீசுகின்ற வாட்படையினை அசைக்கும் திருக்கரம் ஒன்று.

இப்பகுதியின் தொகுப்பாக, முருகப்பெருமானின் ஒருமுகம் கதிர் விரிக்கும். ஒருமுகம் வரங்கொடுத்தன்று. ஒரு முகம் வேள்வி ஓர்க்கும்; ஒருமுகம் திசை விளக்கும்; ஒருமுகம் களம்வேட்டன்று; ஒருமுகம் நகையமர்ந்தன்று; ஆங்கு அம்மூவிரு முகனும் ஒழுகலின், நிமிர்ந்த தோள்களில் ஒரு கை ஏந்தியது;ஒரு கை சேர்த்தியது; ஒருகை அசை இயது; ஒரு கை கடாவ, இருகை திரிப்ப, ஒருகை விளங்க, ஒருகை பொலிய, ஒருகை கொட்ப, ஒருகை இரட்ட ; ஒரு கை மழைபொழிய, ஒருகை வதுவை சூட்ட இவ்வாறு ஆறு திருமுகங்களும் பன்னிரண்டு கரங்களும் செயல்படுபவை என்க.

இனி, முருகப்பெருமான் இந்த ஏற்றமிகு திருக்கோலத்துடன் திருச்சீரலைவாயில் எழுந்தருளும் சிறப்பை எடுத்து இயம்புகிறார் நக்கீரர்,

'அந்தரப் பல்லியம் கறங்கத் திண்காழ்
வயிர்எழுந்து இசைப்ப வால்வளை ஞரல
உரம்தலைக் கொண்ட உரும்இடி முரசமொடு
பல்பொறி மஞ்ஞை வெல்கொடி அகவ
விசும்பு ஆறாக விரைசெலல் முன்னி
உலகம் புகழ்ந்த ஓங்குயர் விழுச்சீர்
அலைவாய்ச் சேறலும் நிலைஇய பண்பே; அதாஅன்று'

(119 - 125)

முருகப்பெருமான் பிணிமுகம் என்னும் யானைமீது விரைந்து வருகிறான். ஆகாயத்தே துந்துபி முதலான பல இசைக்கருவிகள் முழங்குகின்றன. நல்ல வயிரம் பாய்ந்த கொம்புகள் ஒலிக்கின்றன. வெண்மையான சங்குகள் முழங்குகின்றன. வலிமையை உடைய இடிபோலும் முரசம் முழங்குகிறது. பல புள்ளிகளையுடைய தோகைமயிலாகிய வெற்றிக் கொடியும் அகவி ஒலிக்கிறது. இங்ஙனம் மங்கல ஓசையோடு முருகன் ஆகாய வழியாக விரைந்து செல்லுதலை மேற்கொண்டுள்ளான். உலகத்தார் அனைவராலும் புகழப்பெற்ற மிக உயர்ந்த சிறப்பினை உடைய திருச்சீரலைவாயிடத்துச் சென்று தங்கியுள்ளான். திருச்சீரலைவாயில் தங்குதல் அவனது நிலைபெற்ற பண்பாகும்.

முருகப்பெருமானுக்குக் கொடி, சேவற்கொடி, மயிற்கொடி, ஆண்டலைக் கொடி என மூன்று என்று நூல் கூறும். சேவற்கொடி சூரபன்மனின் பாதி உடலாகிய கொடியாகும். மயிற்கொடி இந்திரனாகிய மயிற்கொடியாகும். ஆண்டலைக் கொடி என்பது பேய் முதலியவை பலியை நுகராமல் இருக்க, தலைமட்டும் ஆண்மகன் தலையும் உடல் பறவையின் உடலுமாக அமைந்த உருவம் எழுதிய கொடி. அக்காலத்து மலைநாட்டு மக்கள் மட்டும் இக்கொடியை வைத்துப் பாராட்டினர். முருகப் பெருமானுக்கு ஆட்டுக்கடாவின் கொடியும் யானைக் கொடியும் உண்டு என்பர். முருகன் மயிலை ஊர்தியாகக் கொள்ளும் போது சேவல் கொடியாகவும், யானையை ஊர்தியாகக் கொள்ளும் போது சேவலும் மயிலும் கொடிகளாகவும் இருக்கும்.

இறைவன் அன்பர்களுக்கு அருளுவதில் பித்துப் பிடித்து அலைபவன்; சுந்தரர் 'பித்தா' எனச் சிவபெருமானை அழைக்கிறார். திருக்கச்சியில் வன்தொண்டராம் சுந்தரது பசிதீர்க்க, இரந்து வந்து இன்னடிசில் அளித்து உண்ணச்செய்கிறார், தாயான கருணைகொண்ட தயாபரர். திருவருட்பிரகாச வள்ளல்,

"ஏச்சுறுநல்
ஆறடுத்த வாகீசர்க் காம்பசியைக் கண்டு கட்டுச்
சோறெடுத்துப் பின்னே தொடர்தனையே - கூறுகின்ற
தொன்மை பெறுஞ் சுந்தரர்க்குத் தோழனென்று பெண்பரவை
நன்மனைக்குந் தூது நடந்தனையே"

என்று இறைவன் அப்பர்பெருமானுக்குக் கட்டுச் சோறு அளித்த வரலாற்றையும், சுந்தரர்க்காக பரவையாரிடம் தூது சென்ற வரலாற்றை நினைவு கூர்கிறார். இங்கு முருகப்பெருமான் திருச்சீரலைவாய்த் திருத்தலத்திற்கு அன்பர்களுக்கு அருள் பாலிக்கக் கடுநடை கொண்ட யானைமீது விரைந்து வருகிறார் எங்கும் நீக்கமற நிறைந்திருக்கும் இறைவன், ஓர் இடத்திலிருந்து மற்றோர் இடத்திற்கு வந்ததாகப் பொருள் கொள்ளக்கூடாது. திருப்பரங்குன்றத்தில் தங்கியிருப்பது போலவே முருகன் திருச்செந்தூர்ப் பதியிலும் தங்கியிருப்பான். பூமிக்கடியில் எங்கும் நிறைந்திருக்கும் நீர்போல் இறைவனது வியாபகத்தைக் கொள்ளவேண்டும். இறைவன் எங்கும் வியாபியாய் சர்வசீவ சாட்சியாய் சர்வலோகங்களையும் தனக்கு அங்கமாகக் கொண்ட நிலையை ஈசாவாஸ்ய உபநிடதம் குறிப்பிடுகிறது.

திருச்சீரலைவாய் முருகன் ஆரணம் கண்ட ஆகம முருகன். உயிர்கள் நிர்குணோபாசனை செய்வது கடினமாதலால் சகுணோபாசனையில் படிந்து படிப்படியாய் அதன் தத்துவம் உணர்ந்து நிர்குணோபாசனைக்கு ஏறவேண்டும் என்பது தத்துவம். இங்கு 'விசும்பு ஆறாக' என்பதில் ஆறுமுகத் தரிசனம் ஞானாகாசத்தில் தான் கிடைக்கும் என்பது காட்டப்படுகிறது.

அருணை வள்ளல் தமது அலங்காரப் பாடல் ஒன்றில்

"பத்தித் திருமுக மாறுடன் பன்னிரு தோள்களுமாய்த்
தித்தித் திருக்கு மமுதுகண் டேன்செயல் மாண்டடங்கப்
புத்திக் கமலத் துருகிப் பெருகிப் புவனமெற்றித்
தத்திக் கரை புரளும்பரமானந்த சாகரத்தே" என்றார்.

திருப்பரங்குன்றத்தில் அருவுருவமான இயற்கையே முருகன் என்ற விராட் சொருபஇலட்சணத்தையும், சீரலைவாய்ப்பகுதியில் ஆகமம் கண்ட தடத்த

இலட்சணத்தையும், அடுத்து ஆவினன்குடிப் பகுதியில் சொரூப இலட்சணத்தையும் கூறுகிறார். (அதாஅன்று - அதுவன்றியும்)

நம்மைத் திருவாவினன்குடிக்கு அழைத்துச் செல்கிறார் நக்கீரர். திருவாவினன்குடி மணிபூரகத்தலம்.

'சீரை தைஇய உடுக்கையர் சீரொடு
வலம்புரி புரையும் வால்நரை முடியினர்
மாசுஅற இமைக்கும் உருவினர் மானின்
உரிவை தைஇய ஊன்கெடு மார்பின்
என்புஎழுந்து இயங்கும் யாக்கையர் நன்பகல்
பலஉடன் கழிந்த உண்டியர் இகலொடு
செற்றம் நீங்கிய மனத்தினர் யாவதும்
கற்றோர் அறியா அறிவினர் கற்றோர்க்குத்
தாம்வரம்பு ஆகிய தலைமையர் காமமொடு
கடும்சினம் கடிந்த காட்சியர் இடும்பை
யாவதும் அறியா இயல்பினர் மேவரத்
துனிஇல் காட்சி முனிவர் முன்புக'

(125 - 137)

திருமால் உள்ளிட்ட பெருங்கூட்டம் முருகப்பெருமானைக் காணச் சென்றுகொண்டிருக்கிறது. முதலில் முனிவர்கள் செல்கிறார்கள். அன்னோர் மரவுரியை உடையாக அணிந்தவர்கள்; வலம்புரிச் சங்கை ஒத்ததாய், அழகாய் முடிக்கப்பட்ட வெண்மையான நரைமுடியை உடையவர்கள்; அழுக்கின்றி விளங்கும் மேனியை உடையவர்கள்; மான்தோலைப் போர்த்துக்கொண்டிருக்கிற தசையற்ற மார்பை உடையவர்கள்; எலும்புகள் மேலே எழுந்து இயங்கும் உடம்பை உடையவர்கள்; பலநாள்கள் ஒருங்கே உண்ணாதிருந்து, இடையே உண்ணும் உணவினை உடையவர்கள்; பகையும் கோபமும் நீங்கிய மனத்தினர்; முற்றும் அறிந்தவர்கள். அறியமுடியாதபடியுள்ள அறிவினை உடையவர்கள்; கற்றோர்க்குத் தாமே எல்லையாகிய தலைமையை உடையவர்கள்; காமமும் கடுஞ்சினமும் நீங்கிய அறிவினர்; மனத்தால் வருத்தம் சிறிதும் அறியாத இயல்பினர். ஒருவருடனும் வெறுப்பில்லாத நல்லறிவினை உடையவர் ஆகிய இம்முனிவர்கள் முன் செல்லவும்; வள்ளுவப் பேராசான் கூறும்

'யாதனின் யாதனின் நீங்கியான் நோதல்
அதனின் அதனின் இலன்'

**மற்றும்**

'அடல்வேண்டும் ஐந்தன் புலத்தை விடல்வேண்டும்
வேண்டிய எல்லாம் ஒருங்கு'

**என்ற குறள் கூறும் நெறி பற்றிய அருளாளர்கள். இந்த அருளீட்டத்தால் இவர்கள் மனத்தே சாந்தி நிலவுகிறது. இத்தகைய ஞானியர்களைக் கந்தபுராணம் 'வென்றோர்' எனக் கூறுகிறது. ஐம்புலனை அடக்கிய இஞ்ஞானியர் புகழும் குமரன் எனவரும்.**

**இவர்கள்,**

'செம்மையாகிய சிந்தையர்; சீரியோர்
வெம்மை என்பதை விட்டி விலக்கினோர்
தம்மையும் துறந்தே தலை நின்றவர்
இம்மை தன்னினும் இன்பத்தை மேவுவார்'

**நக்கீரர், இம்முனிவர்களுக்குப் பல சிறப்புகளைத் தருகிறார். இந்த முனிவர்கள் மரவுரி தரித்திருக்கிறார்கள்; இவர்கள் அழகாலும், வடிவாலும், நிறத்தாலும் வலம்புரிச் சங்கினை ஒத்த வெள்ளிய நரைமுடியினர். 'நத்துப்புரை முடியீர்' எனக் கச்சியப்பர் கூறுகிறார். நச்சினார்க்கினியரும் ' சீரொடு வலம்புரி புரையும் வால்நரை முடியினர்' என்பதற்கு 'அழகோடு வடிவாலும் நிறத்தாலும் வலம்புரிச் சங்கினை ஒக்கும் வெள்ளிய நரைமுடியினையுடையவர்' என்றே பொருள் கூறுகிறார். இவர்கள் கருமானின் தோலைப் போர்த்தியிருக்கிறார்கள். இதை வடநூலார் ' கிருட்டினாஜினம்' என்பர். இம்முனிவர்கள் வள்ளுவப்பேராசான் கூறும் 'உண்ணாது நோற்பார் பெரியர்' என்ற கொள்கைக்கு ஓர் எடுத்துக்காட்டாகத் திகழ்பவர்கள். தாயுமானவர்,**

'யோசிக்கும் வேளையில் பசிதீர உண்பதும்
உறங்குவதுமாக முடியும்' **என்று பாடுகிறார்.**

**இது உண்டி தேவை என்றாலும் அதில் மிகை கொள்ளும்போது அதுவே நம் முயற்சிகளுக்கும் செயல்பாடுகளுக்கும் பகையாக அமைகிறது.**

இராமலிங்க அடிகளார்,

'தனித்திரு; பசித்திரு; விழித்திரு'

என்று கூறுவார்.

நல்ல தவமியற்றுபவர்கள் கடுமையான விரதத்தை மேற்கொள்ளுகிறார்கள். பல பகல் கழித்துப் பின்னர் உண்பவர்கள் அவர்கள் . இதனை 'மாதோபவாசம்' என்பர். இவர்கள் உடல் இளைக்கிறது; ஆனால் மனத்திலே உறுதி ஏற்படுகிறது; முகத்திலே ஒளி ஏற்படுகிறது. சேக்கிழார்பெருமான் இத்தகைய தவச்சீலர்களை,

'ஐந்து மாறடக்கியுள்ளார், அரும்பெருஞ்
சோதியாலும்' எனக் குறிப்பிடுகிறார்.

மணிவாசகப் பெருமான்,

'ஊனினை உருக்கி, உள்ளொளி பெருக்கி உலப்பிலா ஆனந்த மாய
தேனினைச் சொரிந்து' என்று பாடுகிறார்.
'எல்லாமற என்னை இழந்த நலம்' என்றும்
'தவநெறி குன்றாப் பண்பில் துறவினர்'

என்றும் கூறுவார் அருணகிரிநாதர்.

திருவள்ளுவர்,

'மற்றும் தொடர்பாடு எவன்கொல் பிறப்பறுக்கல்
உற்றார்க்கு உடம்பும் மிகை' என்று கூறுகிறார்.

அதாவது பிறப்பறுக்க விரும்புவர்க்கு அதற்குத் துணையாகிய உணவு வேண்டும் உடலும் வேண்டாத பொருளாகும். அதனால் அவர்கள் உடம்பினால் அநுபவிக்கப்படும் பொருள்களின் தொடர்பைக் கைவிடத் துணிந்தவர்கள்; உடம்பை மிகை எனக் கருதுபவர்கள்; 'யான்' 'எனது' என்னும் அகப்பற்றையும் புறப்பற்றையும் விட்டொழிக்கும் முயற்சி இது. திருவாவினன்குடியில் நாம் காணும் முனிவர்களும் இத்தகைய தோற்றமும் இயல்பும் கொண்டவர்கள். இவர்களின் புறத்தோற்றம் இவ்வாறு இருக்க, இவர்களின் மனத்தின் இயல்பைக் காணலாம். இம்முனிவர்கள், கற்றறிவின் திண்மையும் வாலறிவின் பெருமையும் மிக்கவர்கள். இவர்கள் மாறுபாட்டோடே, நெடுங்காலம் நிற்கும் பகை நீங்கியவர்கள். இவர்கள் நூலறிவும் வாலறிவும் மிக்கவர்கள். அவற்றை முறையே அபரஞானம், பரஞானம் என்பர். வள்ளுவப் பெருந்தகை இறைப்பொருளை 'வாலறிவன்'என்று குறிப்பிடுகிறார். வாலறிவு அருள் அநுபவத்தால் வருவது.

அருணகிரிநாதர்

'அறிவை அறிவது பொருளென அருளிய
பெருமாளே' என்று பாடுகிறார்.

முதலில் சென்றுகொண்டிருக்கும் முனிவர்கள் வாலறிவில் வல்லவர்கள்; கற்க வேண்டுவனவாகிய நூல்கள் யாவையும் கற்று இறையறிவு கைவரப் பெற்றவர்கள். அதனால் 'யாவதும் கற்றோர் அறியா அறிவினர்'. உலகறிவு, உயிர்அறிவு, இறையறிவு என்ற மூன்றனுள் உலகறிவும் உயிர் அறிவும் கற்றோர் எய்திய அறிவாகும்; இறையறிவு இறை அருளாலே எய்தப்பெறுவது. இவற்றைப் பாசஞானம், பசுஞானம், பதிஞானம் என்பர். இப்பகுதிக்குப் பொருள் கூறும் பெயர் தெரியாத உரையாசிரியர், 'யாவையும் கற்றோர் அறியா அறிவினர்' எனப் பாடம்கொண்டு, கற்க வேண்டுவன நூல்கள் யாவையும் கற்றோர் என உரை கண்டார். இது சிறந்த பாடம் அன்று.

இறையறிவு கைவரப் பெற்ற இம்முனிவர்கள் இம்மையிலேயே வீட்டின்பம் பெறும் சீவன்முக்தர்கள். இவர்கள் கற்றவர்களுக்கு வரம்பாக நிற்கும் தலைமையும் தகவும் உடையவர்கள். அதனால்,

'கற்றோர்க்குத் தாம் வரம்பாகிய தலைமையர்' என்றார்.

திருவள்ளுவர்,

'காமம் வெகுளி மயக்கம் இவைமூன்றன்
நாமம் கெடக்கெடும் நோய்' (குறள் 360)

என்றார். இம்முனிவர்கள் காமம், வெகுளி, மயக்கம் என்னும் முக்குற்றங்களின் நாமமும் கெட்ட மெய்க்காட்சியாளர்கள். அதனால் நக்கீரர்

'காமமொடு கடுஞ்சினம் கடிந்த காட்சியர்' என்றார்.

வெகுளி முகத்துத் தோன்றினால் சினம். அது சொல்லாக வெளிப்பட்டால் சீற்றம். செயலானால் செற்றம். இங்கே நக்கீரர் காட்டும் முனிவர்கள் கடுஞ்சினம், சீற்றம் செற்றம்

ஆகியவை அற்றவர்கள். இவ்விடத்தில் மகாகவி காளிதாசனின் இரகுவம்ச காவியத்தில் சர்க்கம் 8 இல் 80 வது சுலோகத்தில் முனிவர்களின் சீற்றம் ஊழிக்கால அலைகள் போல் அனைத்தையும் அழிக்கவல்லது என்றும், ஆனால் இவர்கள் இந்த அலைகளைத் தாங்கும் கடல் போன்ற பொறுமைக் குணம் கொண்டவர்கள் என்றும் கூறப்பட்டுள்ளன. மேலும் இங்கு கூறப்படும் முனிவர்கள், காமத்தை வென்றவர்கள். காமத்தை வெல்வது எளியசெயலன்று. இராமலிங்கசுவாமிகள் 'அருட்பாவில்' 'காமாந்தகார மெனுங் கள்ளுண்டு கண்மூடி ஏமாந்ததேன் ஒற்றி எழுத்தறியும் பெருமானே' எனக்கூறுகிறார்.

கம்பர் கூறுகிறார்,

'தவஞ் செய்வோர்கள்
வெருவரச் சென்றடை காமவெகுளி' என்றும்.

அடுத்து,

'உலகினில் என் செயலெல்லாம் உன் விதியே நீயே
உள்நின்றும் செய்வித்தும் செய்கின்றாய் என்றும்
நிலவுவதோர் செயலெனக்கு இன்றுன் செயலே என்றும்'

இந்த நினைவில் திளைப்பவர்கள் இன்ப துன்ப எல்லைகளைத் தாண்டியவர்கள். மனத்துக்கு வேலை இல்லை; உயிர் சுக துக்கமற்ற ஆனந்த நிலையில் திளைக்கிறது; இதைச் சிவானந்தம் என்றும், பிரம்மானந்தம் என்றும், ஆத்மானந்தம் என்றும் பலபடியாகக் கூறுவர்.

இந்த அன்பர்கள் ஆசார பூசை செய்பவர்கள்; இடையறாத அன்பினர்; இவர்கள் கசடறக் கற்றதனால் மனத்தூய்மை உடையவர்கள்; மனத்தில் தீமையை அகற்றித் தூய்மையைப் பேணுபவர்கள்; மனம் மற்றும் காயம் தூய்மை உடையவர்கள்; மனத்திலே வெறுப்பேதும் இல்லாததால் ஞானத்தை உடையவர்கள்; துயரமில்லாத தோற்றத்தை உடையவர்கள்; எந்நாளும் இன்பமன்றித் துன்பத்தை அறியாதவர்கள்.

நம் நாவுக்கரசுபெருமான்,

'இன்பமே எந்நாளும் துன்பமில்லை' என்றார்.

நக்கீரர் இந்த முனிவர்களை,

'இடும்பை யாவதும் அறியா இயல்பினர்' என்றார்.

பரிதியார்,

'இடும்பை யாவது மறியா இயல்பினர்'

என்பதற்கு 'யாதோர் இடும்மையும் பொருந்தாமல் சிவானுபோகத்தை பொருந்தியவர்கள்' எனப்பொருள் காண்பார். 'மேவர' என்பதற்குத் திருவுள்ளத்திற்குப் பொருந்த வர என உரைகூறுகிறார் நச்சினார்க்கினியர். மேலே கூறப்படும் அறிவுநலனும் குணநலனும் இறைவன் திருவுள்ளம் விரும்புவன என இதனால் அறியலாம். இங்கு, இறைபணியில் ஈடுபட்டிருக்கும் முனிவர்களின் அக, புற அழகை எடுத்தோதி அம்முனிவர்கள் முன் செல்லும் காட்சியை நாம் அறியக் காட்டியிருப்பது போற்றற்குரியது. இவ்வாறு முனிவர்கள் முன்னே செல்ல, அவர்களைத் தொடர்ந்து யாழிசைக்கும் கந்தருவர், தம் மகளிரோடு செல்கின்றனர்.

'புகைமுகந் தன்ன மாசுஇல் தூஉடை
முகைவாய் அவிழ்ந்த தகைசூழ் ஆகத்துச்
செவிநேர்பு வைத்த செய்வுறு திவவின்
நல்யாழ் நவின்ற நயன்உடை நெஞ்சின்
மென்மொழி மேவலர் இன்நரம்பு உளர'

(138 - 142)

இந்தக் கந்தருவர்கள் அன்பு நிறைந்த நெஞ்சையும் மென்மையான இன்மொழியையுமுடையவர்கள்; இனிய யாழை மீட்டிச் செல்கிறார்கள்; இவர்கள் புகையை அள்ளி எடுத்தாற்போல மென்மையானதும் அழுக்கற்றதுமான ஆடையை அணிந்திருக்கிறார்கள்; மொட்டலர்ந்த மாலை அணிந்த மார்பினர். காதோடு பொருந்த வைத்து, இசை நேர்மை அறிந்து சுருதி கூட்டிய நரம்புகளையும் வார்க்கட்டினையும் உடையன இவர்கள் யாழ்கள். இந்தக் கந்தருவர்கள் இடையில், 'பாலாவி யன்ன பைந்துகில்' அணிந்திருக்கிறார்கள். 'மாசுஇல் தூஉடை' என்பதற்கு நச்சினார்க்கினியர், அவ்வுடை அவ்வாறிருக்கக் காரணம் தெய்வத் தன்மையால் என்று உரை கூறுகிறார். யாழை வாசிக்கும் இவர்கள் இசையின் நுட்பத்தை உணர்ந்தவர்கள்; யாழைக் காதிலேவைத்துப் பார்த்துச் சுருதி கூட்டுகிறார்கள். இவர்கள் செவி, இசையுணர்வை அறி யும் கூரிய செவி. இதை எஃகு செவி என்பர். இவர்கள் யாழின் இசையிலே பயின்று பயின்று நன்மை உடைத்தான நெஞ்சம் கொண்டதனால், எக்காலமும் இனிய மென்மொழியே பேசும் இயல்பினர்.

**அருணகிரிநாதர் திருச்செந்தூர் திருப்புகழில்,**

'செஞ்சொலடியார்கள் வாரக்கார' என்றும்
'அடிபோற்றி யல்லி முடிசூட்ட வல்ல
அடியார்க்கு நல்ல பெருமாளே' என்றும்
'அன்புற்று இயலிசை கொண்டேத் தென்றுட்டருவாயே'

**என்றும் பாடுகிறார்.**

**இத்தகைய வஞ்சமிலாச் சிந்தையினரை,**

'செந்தமிழா மலர் தூவிய வஞ்சமிலாத தபோதனர்
சிந்தையொ ராலய மாகிய சீமானே'

**என்று குறிப்பிடுகிறது திருவிரிஞ்சை முருகன்பிள்ளைத்தமிழ்.**

**இனி, இவர்களோடு சேர்ந்து பாடிவரும் கந்தருவ மகளிர் இயல்பைக் கூறுகிறார் நக்கீரர்.**

''நோய்இன்று இயன்ற யாக்கையர் மாவின்
அவிர் தளிர் புரையும் மேனியர் அவிர்தொறும்
பொன்உரை கடுக்கும் திதலையர் இன்நகைப்
பருமம் தாங்கிய பணிந்து ஏந்து அல்குல்
மாசுஇல் மகளிரொடு மறுஇன்றி விளங்க'' (143 - 147)

**இக்கந்தருவ மகளிர், நோய் இன்றி அமைந்த உடம்பினை உடையவர்கள்; மாந்தளிர் போன்ற நிறத்தை உடையவர்கள்; பொன்னை உரைத்தாற் போன்ற தேமல் படரப் பெற்றவர்கள். அவர்கள் கண்ணுக்கினிய ஒளியினை உடைய பதினெண் கோவையாகிய மேகலையணிந்த, தாழ்ந்து உயர்ந்த அரையை உடையவர்கள்; மாசற்ற இப்பெண்கள் உடன் பாடக் கந்தர்வர்களின் இசை, குற்றமற்று ஒலிக்கிறது.**

**இறைவனைப் பாடிப்பரவும் இம்மகளிர் மாசில்லாதவர்கள். இவ்வாறு புறஅழகும் அகஅழகும் கொண்டு விளங்கும் கந்தருவர், யாழை மீட்டிப்பாடும் இசையோடு இணைந்து மிடற்றொலியால் பாடிவருகிறார்கள். கந்தபுராணத்தில், முருகப் பெருமான்**

'.................. வினை தீர்ந்து
உள்தெளிந்தவர் போகத்தின் உணர்வுமாய் உறைவோன்'

என்று கூறப்படுகிறது. அதாவது துன்பங்களின்றும் நீங்கித் தூய உள்ளம் கொண்ட ஞானியரின் உணர்வினுள் உணர்வாய் உள்ளவன் முருகன் என்றவாறு. திரு ஆவினன்குடியில் வந்து கொண்டிருக்கும் முனிவர்கள் தூய உள்ளம் உடையவர்கள்.

இங்கு நக்கீரர், முனிவர் கந்தருவர் தோற்றங்களை மிக அழகாகக் கூறுகிறார். முனிவர்கள் மரவுரி தரித்திருக்கின்றனர். கந்தருவர் புகைமுகந்தாற் போன்ற வெண்மையான உடையை அணிந்திருக்கிறார்கள். முனிவர்கள் பலநாள் நோன்பிருந்து பட்டினியால் தசைவற்றிய மார்பில், எலும்பு கோவையாக இயங்கப் பெற்றவர்கள். கந்தருவர்கள் மொட்டலர்ந்த மாலை அணிந்த மார்பினை உடையவர்கள். முனிவர்கள் கடுஞ்சினம் கடிந்த காட்சியர். கந்தருவர் இனியமொழிபேசும் இயல்பினர். கந்தருவ மகளிர் வாளிப்பும் வனப்பும் கொண்டவர்கள்; மாசற்றவர்கள். இவ்வாறு தம்மிடைச் சற்றே முரண்பட்ட இருவேறு தோற்ற இயல்புகளை மிக மென்மையாகக் கூறுகிறார் நக்கீரர்.

இனி, இவர்களை முன்னிலைப்படுத்திவிட்டு இவர்களைத் தொடர்ந்து வரும் தேவர்கள் யார் யார் என்பதையும் அவர்களின் இயல்புகளையும் கூறவருகிறார் நக்கீரர்.

'கடுவொடு ஒடுங்கிய தூம்புடை வால்எயிற்று
அழல்என உயிர்க்கும் அஞ்சுவரு கடுந்திறல்
பாம்புபடப் புடைக்கும் பல்வரிக் கொடுஞ்சிறைப்
புள் அணி நீள்கொடிச் செல்வனும்'
(148 - 151)

விடத்தோடு நச்சுப்பைக்குள் கிடந்த உள்துளையையுடைய வெண்மையான பற்களையும் நெருப்பைப் போல மூச்சுவிடும் அச்சம் உண்டாக்கும் மிக்க வலிமையையும் உடைய பாம்புகள் இறக்குமாறு அடிக்கும் பலவரிகளையுடைய வளைந்த சிறகுகளைக் கொண்ட கருடனது உருவம் கொண்ட நீண்ட கொடியை உடைய திருமாலும்என்பது பொருள். முதலில் திருமால் வருகிறார். அவர் கருடக் கொடியுடன் வருகிறார். அக்கருடன் எப்படிப்பட்டது? நஞ்சுடைய நாகத்திற்கு இரண்டு இரண்டாக வாயில் நான்கு நச்சுப் பற்கள் உள்ளன. பாம்பின் நச்சுப் பல்லில் நுண் துளைகள் உள்ளன.

அப்பாம்பு, ஒன்றைக் கடிக்குங்கால், பற்கள் தம்அடியில் உள்ள நச்சுப்பையை அழுத்துவனவாம். அங்ஙனம் அழுத்தும் போது பையில் உள்ள நஞ்சு, பற்களின் துளை வழியே பீறிட்டுக் கடியுண்ட உடலின் குருதியொடு கலந்துவிடும் என்ப. நக்கீரர் பாம்பின் இந்த இயல்பினை இரண்டடிகளில் மிகத்தெளிவாகக் கூறியுள்ளார்.

சேக்கிழார் பெருமான் ஆனாய நாயனார் புராணத்தில், 'மலிவாய் வெள் ளெயிற்றரவம்' என்று பாம்பைக் கூறுகிறார். முன்பகுதிக்கு உரை கூறும் நச்சினார்க்கினியர் இந்த நச்சுப்பற்களை,

காளி, காளத்திரி, யமன், யமதூதி என நான்காம் எனக் கூறுவர். ஆனால், இத்தகைய நஞ்சின் வெம்மையோடு, நெருப்பைப் போல மூச்சுவிடுவனவும், கண்டார்க்கும் அச்சம் தோற்றுவிப்பனவுமாகிய கொடிய வலியை உடைய பாம்புகள், கருடனைக் கண்டால் நடுங்கும். கொடிய பாம்புகள் அழியும்படி சிறகை அடிக்கும் பறவை கருடன். இக்கருடன் பல கோடுகளை உடைய வளைந்த சிறகுகளை உடையது. இக்கருடனைக் கொடியிலே கொண்டவர் திருமால்.

அத்திருமால், நல்லோர்க்குத் தீங்கிழைக்கும் பாம்பு போன்ற அரக்கர்களை அழித்து உயிர்களைக் காப்பவர் என்பது குறிப்பாகும்.
திருமாலை அடுத்து உருத்திரன் வருகிறான்;

'வெள்ளேறு
வலவயின் உயரிய பலர்புகழ் திணிதோள்
உமைஅமர்ந்து விளங்கும் இமையா முக்கண்
மூஎயில் முருக்கிய முரண்மிகு செல்வனும்' (151 - 154)

உருத்திரன் வெண்மையான இடபத்தை வலப்பக்கத்தில் கொடியாக உயர்த்தியவன்; பலரும் புகழ்கின்ற திண்ணிய தோள்களைக் கொண்டவன்; உமாதேவி ஒரு பாகத்தே பொருந்தி விளங்கும் திருமேனியன்; இமைத்தல் இல்லாத முக்கண்களை உடையவன்; திரிபுரங்களை அழித்த மிகுந்த வலிமையன். இங்கு 'முரண்மிகு செல்வன்' உருத்திரனைக் குறிக்கும். கவிப்பெருமாள் எனும் உரையாசிரியர் 'மகா தேவனும்' என உரை காண்பர். சிவபெருமானின் ஏவலால் அவன் உருக்கொண்டு அழித்தல் தொழிலைச் செய்தலின் அப்பெருமானுக்குரிய அடைமொழிகள் சிவாம்சம் உடைய

இவனுக்கும் பொருத்தி கூறப்பட்டன எனலாம். இருக்கு வேதம், 'உருத்திரரே தேவர்க்கு மேலானவர்; புகழ் உடையவர்; வன்மை உடையவர்' என்கிறது.

ஏறுவலன் உயரிய செல்வன், தோளுடைய செல்வன் உமையமர்ந்து விளங்குஞ் செல்வன் முக்கட் செல்வன் எயில் முருக்கிய செல்வன். முரண்மிகு செல்வன் எனத் தனித்தனியே கூட்டிப் பொருள் கொள்ள வேண்டும். உருத்திரனுக்கு இடபம் ஊர்தியும் கொடியுமாகும்.

அசுரர்கள் வெள்ளி, பொன், இரும்பு ஆகியவற்றால் அமைந்த மதில்களையுடைய திரிபுரங்களால் மக்களுக்குத் தீங்கு, விண்ணில் பறந்து இழிந்து விளைவித்தனர்.

சிவபெருமான் தம் புன்னகையால் அவற்றை அழித்தார். இந்தப் புராணவரலாற்றை நக்கீரர் 'மூவெயில் முருக்கிய' என்ற சொற்களால் நினைவுபடுத்துகிறார். இறைவன் மூவெயிலும் அழித்தவன் என்பது மும்மலங்களையும் வெகுண்டு அழித்தவன் என்று தத்துவார்த்தமாகக் கொள்ளவேண்டும். திருமந்திரத்தில்,

'அப்பணி செஞ்சடை ஆதி புராதனன்
முப்புரம் செற்றனன் என்பர்கள் மூடர்கள்
முப்புர மாவன மும்மல காரியம்
அப்புரம் எய்ததை யார் அறிவாரே' (329)

என்று கூறப்படுகிறது.
புறநானூற்றில், 55வது பாடல் இப்புராணவரலாற்றைக் கூறுகிறது:-

'ஓங்கு மலைப் பெருவிற் பாம்புஞாண் கொளீஇ
ஒருகணை கொண்டு மூவெயிலுடற்றிப்
பெருவிற லமரர்க்கு வென்றி தந்த
கறைமிடற் றண்ணல் காமர் சென்னி'

இதேபோன்று பரிபாடல் 5 ஆம் பாடலில்

'ஆதி யந்தண னறிந்து பரி கொளுவ
வேத மாபூண் வையத்தே ரூர்ந்து
நாக நாணா மலைவில்லாக
மூவகை, ஆரெயி லோரழ லம்பின் முளிய'

இவ்வரலாறு கூறப்படுகிறது.

நக்கீரர் திருஈங்கோய்மலை எழுபதில்,

‘ மூவெயிலும்
வில்லே கொடுவெகுண்டான் வெற்பு’

என்றும் ,

‘திக்கு உடைக்கச் செற்றான்’ என்றும் பாடுகிறார்.

உமை அமர்ந்து விளங்கும்’ என்பதற்கு ‘ எத்திறம் நின்றானீசன் அத்திறம் அவளும் நிற்பள்’ எனப் பொருள் காண்க. புறநானூற்றில் பெருந்தேவனார் பாடிய கடவுள் வாழ்த்துப் பாடலில் சிவபெருமானின் ஏனைய சிறப்போடு,

‘பெண்ணுரு ஒருதிற னாகின் றவ்வுருத்
தன்னு ளடக்கிக் கரக்கினுங் கரக்கும்’

நிலை கூறப்படுகிறது. நக்கீரர் திருஈங்கோய்மலை எழுபதில்,

‘மாதைப்
புரிந்திடத்துக் கொண்டான் பொருப்பு’ என்றார்.

ஞானசம்பந்தர்

‘பெண்ணின் நல்லாளொடும் பெருந்தகை இருந்ததே’

என்றார். மணிவாசகர்,

‘தோலும் துகிலும் குழையும் சுருள்தோடும்
பால்வெள்ளை நீறும் பசுஞ்சாந்தும் பைங்கிளியும்
சூலமும் தொக்க வளையும் உடைத்தொன்மைக்
கோலமே நோக்கிக் குளிர்ந்தூதாய் கோத்தும்பீ’

என்றார். இங்கு அமர்தல் என்பது பொருந்துதல். இங்ஙனம், இறைவனும் இறைவியும் ஒருருவின் இயைந்து நிற்றல் சிலப்பதிகாரத்திலும், சிவஞான சித்தியாரிலும் கூறப்படுகிறன்றன. நச்சினார்க்கினியர், ‘இமையா முக்கண் செல்வன்’ எனக் கூறி ‘இதழ் குவியாத மூன்று கண்ணினை உடைய செல்வன்’ எனப் பொருள் காண்கிறார். மற்ற உரையாசிரியர்களும் இதை ஒட்டியே பொருள் உரைக்கின்றனர். இறைவன்

அழிவல்லாதவன். தேவரில் மூவரில் முதல்வன்; தேவர்கள், கணங்கள் இமைப்பதில்லை. எனவே இங்கு இமையா முக்கண் எனக்கூறப்பட்டது. 'முரண்மிகு செல்வன்' என்பதற்கு, இறைவன் ஐந்து பூதங்களிலும் உறைந்து ஒன்றோடொன்று மாறுபட்ட செயல்களை நிகழ்த்தும் செல்வன் எனலாம். நீரில் தண்மையும் தீயில் வெம்மையும் ஆக அவன் நிற்பவன்.

இனி, இவர்களோடு இந்திரன் வருவதைக் காட்டுகிறார் நக்கீரர்.

'நூற்றுப்பத்து அடுக்கிய நாட்டத்து நூறுபல்
வேள்வி முற்றிய வென்றுஅடு கொற்றத்து
ஈரிரண்டு ஏந்திய மருப்பின் எழில்நடைத்
தாழ்பெருந் தடக்கை உயர்த்த யானை
எருத்தம் ஏறிய திருக்கிளர் செல்வனும்'

(155 - 159)

நூற்றைப் பத்தால் பெருக்கி வரும் ஆயிரம் கண்களை உடையவன்; நூறு யாகங்களைச் செய்து முடித்தவன்; அதனால் பகைவர்களை வென்று கொல்கின்ற வெற்றியை உடையவன்; நான்கு உயர்ந்த தந்தங்களைக் கொண்டதும், அழகிய நடையையுடையதும், நிலத்தே தாழ்ந்த பெரிய பரந்த துதிக்கையை உடையதுமாகிய ஐராவதம் என்னும் யானையின் பிடரியிலே ஏறிச் செல்லும் தகுதி உடைய, செல்வச் சிறப்பு விளங்கும் செல்வனாகிய இந்திரன் வருகிறான்.

இங்கு, 'நூற்றுப் பத்தடுக்கிய' என்பதில் இந்திரன் கௌதம முனிவரிடம் பெற்ற சாபத்தைக் கூறுகிறார் நக்கீரர். திருவள்ளுவர்,

'ஐந்தவித்தான் ஆற்றல்அகல் விசும்புளார் கோமான்
இந்திரனே சாலுங் கரி'

என்று கூறுகிறார். இதற்குப் பொருள்காணும் பரிமேலழகர்,

'தான் ஐந்தவியாது சாபமெய்தி நின்று
அவித்தானதாற்றல் உணர்த்தினானா கலின்
இந்திரனே சாலுங்கரி என்றார்'

என்று விசேடவுரை கூறுகிறார். இந்திரன் மானுடப்பிறப்பில் நூறுபரிவேள்வி செய்த நல்வினையால் இந்திரபதவி அடைந்தவன். அவனுக்குச் 'சதமகன்' என்பதும் ஒரு பெயர்.

இப்பகுதியில் நக்கீரர் மூன்று செல்வர்களைக் காட்டுகிறார். திருமாலை 'நீள்கொடிச் செல்வன்' என்றும், சிவபெருமானை 'முரண்மிகு செல்வன்' என்றும், இந்திரனைத் 'திருக்கிளர் செல்வன்' என்றும் குறிப்பிடுகிறார். இங்கு நக்கீரர் ஒரு விலங்கியல் அறிஞர்போல பாம்பு, கருடன், ஐராவதம் ஆகியவற்றின் இயல்புகளை எடுத்துக் கூறியிருப்பது வியக்கத் தக்கது.

இனி, இந்த மூன்று செல்வர்களையும் முன்னிலைப் படுத்தி, இவர்கள் இயல்பைக் கூறிவிட்டு, இத்தேவர்கள் முருகப்பெருமானைக் காணவருதற்குரிய காரணம் கூறுகிறார் நக்கீரர்.

'நாற்பெருந் தெய்வத்து நன்நகர் நிலைஇய
உலகம் காக்கும் ஒன்றுபுரி கொள்கைப்
பலர்புகழ் மூவரும் தலைவர் ஆகு
ஏமுறும் ஞாலம் தன்னில் தோன்றித்
தாமரை பயந்த தாஇல் ஊழி
நான்முக ஒருவற் சுட்டி .... ' (160 - 165)

அயன், திருமால், உருத்திரன், இந்திரன் இவர்கள் நால்வரும் பெருந்தெய்வங்கள். நல்ல நகரங்கள் நிலைபெற்ற இவ்வுலகத்தை ஓம்புதல் தொழில் ஒன்றையே விரும்பும் கோட்பாட்டுடனே, பலரானும் புகழப்படுகின்ற அயனைத் தவிர்த்த இம் மூன்று தேவர்களும், தத்தம் தொழில்களை முன்பு போலச் செய்து தலைவராக விளங்குதல் பொருட்டு, திருமாலுடைய உந்தித்தாமரை பெற்ற குற்றமற்ற ஊழிகளை உடைய நான்முகனாகிய பிரமனைப் பழைய நிலையிலே நிறுத்துதலைக் கருதி வருகிறார்கள்.

இந்த நான்கு பெருந் தெய்வங்களும் நல்ல நகரங்கள் நிலைபெற்ற உலகத்தை ஓம்புதல் தொழில் ஒன்றையே விரும்புகிற கோட்பாடுடையவர்கள்; பலராலும் புகழப்படுபவர்கள். இவர்களில் பிரமன், திருமால், உருத்திரன் எனும் மும்மூர்த்திகளும் முறையே படைத்தல், காத்தல், அழித்தல் என்னும் மூன்று தொழில்களை இயற்றுபவர்கள். இவர்கள் இயற்றும் தொழில்கள் ஒன்றோடொன்று தொடர்புடையவை. பிரமன் படைப்புத் தொழில் இயற்றினால்தான் திருமால் காத்தல் தொழில்புரிய முடியும். உருத்திரன் அழித்தல் தொழிலைச் செய்யவியலும். இப்போது முருகப்பெருமான் பிரமனைச் சிறைப்படுத்தியுள்ளான். அதனால் படைத்தல் தொழில் நின்றுவிட்டது. ஆதலின் காத்தல், அழித்தல் தொழில்களைத் தொடரவியலாது. பலரும் புகழும் மும்மூர்த்திகளும்

பழையபடியே தத்தம் தொழில்களை இயற்றித் தலைவர்கள் ஆகக்கருதித் திருமாலின் திருவுந்தித் தாமரையால் பெறப்பட்டவனும், அளவில்லாத ஊழியை உடையவனும், நான்கு திருமுகங்களை உடையவனுமாகிய பிரமனைச் சிறைவீடு செய்யக் கருதி எல்லாரும் வருகிறார்கள்.

இங்கு உலகினைப் படைத்தல், காத்தல், அழித்தல், துறக்க நாட்டைக் காத்தல் என்னும் சிறந்த தொழில் தலைவர்களாகலின் 'பெருந்தெய்வம்' என்றார். தொழில் வேறுபட்டாலும், உலகம் காத்தலே இத்தெய்வங்களின் மேற்கோளாதலின் 'உலகம் காக்கும் ஒன்றுபுரி கொள்கை' எனப்பட்டது. நக்கீரர் பெருமான், நான்முகன் சிறைப்பட்ட வரலாற்றை விரித்துக் கூறவில்லை. நான்முகன் சிறைப்பட்ட வரலாறு இரண்டுவிதமாகக் கூறப்படுகிறது.

கந்தபுராணத்தில் கூறப்படும் வரலாறு:-

கயிலைக்கு வந்த பிரமன் முருகப் பெருமானைக் கண்டும் காணாதது போல்,

'இவன் ஒரு பாலன்தானே; இவனை நாம் வணங்க வேண்டுமா' என எண்ணி இறுமாந்து சென்றான். பிரமனின் அகந்தையை அகற்றி நல்லருள் பாலிக்கவும்,

'சிவன் வேறு, தான்வேறு இல்லை; மணியும் ஒளியும் போல் சிவனும் தானும் ஒன்றே' என்பதையும், 'தன்னை ஒழித்துச் சிவபெருமானை வழிபடுவோர்க்குத் திருவருள் உண்டாகாது என்பதையும் பிரமன் வாயிலாக உலகுக்கு உணர்த்தத் திருவுளம் கொண்டான் முருகப் பெருமான். தருக்கிச் சென்ற பிரமனை அழைத்தான் . பிரமனை நோக்கி, " நீ என்ன தொழில் செய்கின்றாய்?" என வினவினான். பிரமன் சற்று நடுக்கமுடன்

"சிவபெருமான் ஆணையால் படைப்புத்தொழில் செய்கிறேன்" என்றான்.

'படைப்புத் தொழில் இயற்றும் உனக்கு வேதம் வருமோ?'

என்றான் முருகவேள். அதற்குப் பிரமன், "சிவபெருமான் அளவற்ற வேதசிவாகமங்களை அருளிச் செய்திருக்கிறார்; அவற்றுள் சிலவற்றை யான் உய்யும்பொருட்டு எனக்கு உபதேசித்தார், அவற்றை நான் உணர்வேன்" என்று கூறினான்.

நான்முகன் பிரணவத்தின் பொருள் உணராதது அவனது முனைப்பேயாம் எனக் கந்தபுராணம் கூறுகிறது. பிரமன் வேதத்தை அறிந்திருந்தானேயன்றி உணர்ந்திருக்கவில்லை என்பதை உணர்ந்தான் முருகப்பெருமான். முதல் வேதமாகிய இருக்குவேதத்தினைக் கூறுமாறு கேட்டான் முருகன். பிரமன் வேதங்களுக்கெல்லாம்

முன் சொல்லப்படும் 'ஓம்' என்ற குடிலை மந்திரத்தைக் கூறி இருக்குவேதத்தைக் கூற ஆரம்பித்தான். முருகப்பெருமானுடைய ஆறுமுகங்களில் ஒன்று பிரணவ மந்திரமாகிய வேதஸ்வரூபம். முருகன் பிரமனை, 'ஓம்' எனும் பிரணவத்தின் பொருளை உரைக்குமாறு பணிப்பவே, பிரமன் பொருளறியாது நின்றான். இப்பிரணவப் பொருள், தானே என்று பிரமன் கூறியதாக ஸ்ரீகாந்த மகாபுராணம் கூறுகிறது (அத்தியாயம் 33). முருகப்பெருமான் 'பிரவணத்தின் பொருளை அறியாத நீ படைத்தல் தொழிலை எவ்வாறு புரிவாய்?' எனச்சினந்து பிரமதேவனின் நான்கு தலைகளும் குலுங்கும் வண்ணம் குட்டினான்; பிரமனின் எட்டு நாசித்துவாரங்களினின்றும் உதிரம் வந்தது; அவனது சிகை விபூதி போல் துகள் பட்டு உதிர்ந்தது. கந்தபுராணத்தில்,

'தாமரைத்தலை யிருந்தவன் குடிலை முன்சாற்றி
மாமறைத் தலை எடுத்தனன் பகர்தலும் வரம்பில்
காமர் பெற்றுடைக் குமரவேள் நிற்றி முன் கழறும்
ஓம் எனப்படு மொழிப் பொருள் இயம்பு கென்றுரைத்தான்'

(அயனைச் சிறைபுரி படலம்)

என வருகிறது.

மேலும் கந்தபுராணம்,

'எட்டொணாதவக் குடிலையின் பயன் இனைத்தென்றே
கட்டுரைத்திலன் மயங்கலும் இதன் பொருள் கருதாய்
சிட்டி செய்வதித் தன்மை யதோவெனாச் செவ்வேள்
குட்டினான் அயன் நான்கு மாமுடிகளும்குலுங்க'

(அயனைச் சிறைபுரி படலம்)

என்று கூறுகிறது.

இதனை அருணகிரிநாதர் கூறுகிறார்:-

'நாலுமுக னாதி யரி யோ மென அதாரமுரை
யாதபிர மாவை விழ மோதிபொரு ளோதுகென
நாலுசிர மோடு சிகை தூளிபடத் தாளமிடு மிளையோனே'

எனவும்

'அயனைக் குட்டிய பெருமாளே' எனவும்
'வேதநான்முக மறையோ னொடும்
விளையாடிய குடுமியிலே
கரமொடு, வீரமோதின மறவா'

எனவும் பாடுகிறார்.

இதே வரலாறு கந்தர்கலி வெண்பாவில் பின்வருமாறு கூறப்படுகிறது.

'உகந்த பிரணவத்தின் உண்மை - புகன்றிலையால்
சிட்டித் தொழிலதனைச் செய்வதெங்ஙன் என்று முனங்
குட்டிச் சிறையிருத்துங் கோமானே'

பிரமன் சிறையில் வைக்கப்பட்டான். முருகப் பெருமானே படைப்புத் தொழிலை ஏற்று நடத்தினான். முருகப்பெருமானை 'சத்ய சங்கல்பன்' என்று சுருதிகள் முறையிடுகின்றன. காத்தும் படைத்தும் கரந்தும் விளையாடுங் காலாதீதனாகிய கந்தப்பெருமானுக்கு அஃதோர் திருவிளையாடலாக இருந்தது. ஒருகரத்தில் உருத்திராக்க மாலையும் ஒரு கரத்தில் கமண்டலமும் கொள்ள, மற்ற இருகரங்கள் அபயவரதமாக நான்கு திருக்கரங்களோடும், ஒருமுகமோடும் எழுந்தருளிப் படைப்புத் தொழிலை எம்பெருந் தலைவன் புரிந்தனன்.

'ஒரு கரத்தினில் கண்டிகை வடம்பரித்(து) ஒருதன்
கரதலந்தனில் குண்டிகை தரித்திரு கரங்கள்
வரதமோ டபயந்தரப் பரம்பொருள் மகனோர்
திருமுகங் கொடு சதுர் முகன் போல் விதி செய்தான்'

(அயனைச் சிறைபுரிபடலம்)

என்கிறது கந்தபுராணம்.

திருப்புகழில் அருணகிரியார்,

'மலரயனை நீடச் சிறை செய்தவன் வேலை
வளமை பெற வேசெய் முருகோனே'

எனக் கூறுகிறார். மேலும் முருகனே முத்தொழில் இயற்றும் ஆற்றலைத் திருப்பரங்குன்றம் திருப்புகழில்,

'படைக்கப் பங்கயன் துடைக்கச் சங்கரன் புரக்கக்
கஞ்சைமன் பணியாகப் பணித்துத் தம்பயம் தனித்துச்
சந்ததம் பரத்தைக் கொண்டிடும் தனிவேலா'

(தடக்கைப் பங்கியம் - திருப்பரங்குன்றம் திருப்புகழ்)

எனக் குறிப்பிடுகிறார்.

மேலும் அருணகிரிநாதர், இருக்கு வேத முதன்மொழியாம் தனி மந்திரத்தின் பொருளை அகத்தியர் முதலிய ஏழு முனிவர்களுக்கும் உபதேசித்தருளிய மகிழ்ச்சி உடையவன் முருகன் என்பதை,

'இருக்கு மந்திரம் எழுவகை முனிபெற
உரைத்த சம்ப்ரம சரவண பவகுக'

(அருக்கு மங்கையர் - திருப்பரங்குன்றம் திருப்புகழ்)

திருந்தி தவமியற்றி பிரணவப் பொருளைக் கேட்டு உணர்ந்தான் என்பதைத் 'தாலமுன்பு படைத்தப்ரபுச் சந்தேகமின்றி மதிக்க' (கோலகுங்கும திருப்பகழ்) என்று பாடுகிறார். முருகப்பெருமான் படைப்புத்தொழிலை இயற்றிய தற்கேற்ப, திருமால் காத்தல் தொழிலும் உருத்திரன் அழித்தல் தொழிலும் மேற்கொள்ள இயலவில்லை. முருகப் பெருமான் படைப்பில் வந்த அனைவரும் புண்ணிய வடிவாக விளங்கினர். ஆகவே, முன் போலவே தத்தம் தொழில் மேற்கொள்ள, திருமாலும், உருத்திரனும் இந்திரன் முதலான தேவர்களுடன் வந்துகொண்டிருக்கின்றனர். கந்தபுராணத்திலும் திருப்புகழிலும் விரிவாகப் பேசப்படும் இந்தப் புராணவரலாறு,

1. சிவன் வேறு, முருகன் வேறு அல்லர் என்றும்,
2. குருவிடம் மாணவன் நடக்கவேண்டிய தர்மம் இன்னது என்றும் அறியலாம்.

'ப்ர' என்றால் விசேஷமானது; 'நவம்' என்றால் புதுமையானது. அநுபவிக்க அநுபவிக்கப் புத்தம்புது விசேட உண்மைகளை உணர்த்துவது 'ப்ரணவம்' ஆம்.

உலகை 'மாயா' என்கிறோம்; 'மா' என்பதற்கு 'ஒடுக்கம்' 'யா' என்பதற்குத் 'தோற்றம்' என்பது பொருள். அதாவது தோற்றமும் ஒடுக்கமும் உடையது உலகம்; இந்த உலகு எதில் தோன்றியதோ அதில் ஒடுங்குகிறது; மாயையில் தோன்றி மாயையில் முடிகின்றது. உலகின் தோற்றத்திற்கும் ஒடுக்கத்திற்கும் 'பரப்பிரம்மம்' தான் காரணம் என்று வேதம் விளம்புகிறது. நச்சினார்க்கினியர், இங்கு வேறு புராண வரலாற்றைக் கூறுகிறார். அதாவது, பிள்ளையார் (இங்கு பிள்ளையார் என்பது முருகனைக் குறிக்கும்) அயனைச் சபிக்கிறார். படைத்தல் தொழில் தடைப்படவே, மற்ற இரு தலைவர்களும் தத்தமக்குரிய காத்தல், அழித்தல் தொழிலை மேற்கொள்ள முடியவில்லை. நச்சினார்க்கினியர் "சாபமென்றது: பிள்ளையார் அசுரரை அழித்துத் தேவரைக்காத்ததற்கு, இந்திரன் மகள் தெய்வயானையாரை அவர்க்குக் கொடுத்த விடத்தே, பிள்ளையார் தம் கையில் வேலை நோக்கி: 'நமக்கு எல்லாந் தந்தது இவ்வேல்' என்ன, அருகிருந்த அயன் 'இவ்வேலிற்கு இந்நிலை என்னால் வந்ததன்றோ' என்றாராக "நங்கையில் வேலுக்கு நீ கொடுப்பதொரு சக்தியுண்டோ" என்று கோபித்து, இங்ஙனம் கூறிய நீ மண்ணிடைச் செல்வாய்' என்றிட்ட சாபத்தைக் குறிப்பதாகும்." என்று எழுதுகிறார். இதற்கேற்ப 'ஞாலந் தன்னில் தோன்றி' என்றதற்குப் 'பிள்ளையார் சபித்தலாலே மண்ணிடத்தே தோன்றி' என்று உரை கூறுகிறார்.

அறுமுகன், அயனின் அகந்தையை அகற்றி, அவன் புனிதனாகும்படி, தமது திருவடியால் எற்றித் தள்ளிப் பாததீட்சை தந்தருளினார் என்று பொருள்.

இனி, திருமால், உருத்திரன், இந்திரன் ஆகியோருடன் வரும் ஏனைத் தேவர்களைப் பற்றிக் கூறவருகிறார் நக்கீரர்.

‘ காண்வரப்
பகலில் தோன்றும் இகல்இல் காட்சி
நால்வேறு இயற்கைப் பதினொரு மூவரோடு
ஒன்பதிற்று இரட்டி உயர்நிலை பெறீஇயர்
மீன்பூத்து தன்ன தோன்றலர் மீன்சேர்பு
வளிகிளர்ந்து அன்ன செலவினர் வளிஇடைத்
தீஎழுந்து அன்ன திறலினர் தீப்பட
உரும்இடித்து அன்ன குரலினர் விழுமிய
உறுகுறை மருங்கில்தம் பெறுமுறை கொண்மார்
அந்தரக் கொட்பினர் வந்துஉடன் காண’

(165 - 174)

பகுத்துக் காணும்போது, வேறுவேறாய்த் தோன்றினாலும் தம்முள் மாறுபாடில்லாதவராகிய நான்கு வேறுபட்ட இயல்புடைய தேவர் முப்பத்து மூவர்; உயர்ந்த நிலையைப் பெற்றவர்கள் பதினெண் கணத்தவர். இவர்கள் விண்மீன்கள் மலர்ந்து காணப்படுதல் போன்ற தோற்றத்தை உடையவர்கள்; காற்றிடத்தே நெருப்புத் தோன்றினால் போன்ற வலியினை உடையவராய் தமக்குற்ற பெருங்குறை ஒன்றை முருகனிடத்தில் முறையிட்டுத் தாம் பெறவேண்டிய முறைமையினை முடித்துக் கொள்வதற்காக அந்தரத்தே சுழற்சிஉடையவராய், முத்தேவர்களுடன் வந்து காணவும் என்பது பொருள்.

ஆதித்தர், உருத்திரர், வசு, மருத்துவர் என முப்பத்து மூவர் தேவர்கள். ஆதித்தர்கள் பன்னிரண்டு பேர்கள்; உருத்தரர்கள் பதினொருவர். வசுக்கள் எட்டுப் பேர்கள். அசுவனி தேவர் இருவர். இவர்கள் நால்வேறியற்கையையுடைய முப்பத்து மூன்று தேவர்கள். இப்பகுதிக்கு உரைகூறும் நச்சினார்க்கினியர் ‘பகலில் தோன்றும் இகல் இல் காட்சி’ என்பதற்கு, ‘ஒரு பொருள் பலவாமாறு பகுத்துக் காண்டற்கண் வேறுபடத்தோன்றும் தம்முள் மாறுபாடில்லாத அறிவினை உடைய நான்காகிய வேறுபட்ட இயல்பினை

உடைய முப்பத்து மூவரும்' என்று கூறுகிறார். அவர்களைத் தொடர்ந்து வருபவர், பதினெண் கணங்களாகிய உயர்ந்த நிலையைப் பெற்றவர்கள். இவர்கள் தேவர், அசுரர், தைத்தியர், கருடர், கின்னரர், கிம்புருடர், இயக்கர், விஞ்சையர், இராக்கதர், கந்தருவர், சித்தர், சாரணர், பூதர், பைசாசர், தாராகணம், நாகர், ஆகாசவாசிகள், போகபூமியோர் என்பர். முருகன் 'உம்பர்கள் சுவாமி' என்பது அருணகிரிநாதர் வாக்கு.

'தேவ தேவ தேவாதி தேவப் பெருமாளே' என்று திருப்புகழ் கூறுகிறது. அருணகிரிநாதர், முருகனுடைய திருவடியை மூவர்களும், தேவர்களும், முனிவர்களும், முத்தர்களும் , சித்தர்களும் தொழுது இன்புறுகிறார் என்பதை 'உம்பர் தொழும் பதம்' என்று (துன்பங்கொண்டங்க) திருப்புகழில் கூறுகிறார். மேலும், 'ஆலமுண்டகோன் அகண்ட லோகமுண்ட மால் விரிஞ்சன் ஆரணங்கள் ஆகமங்கள் புகழ்ந் தாலும்' (தோலெலும்புந்) திருப்புகழில் பாடுகிறார். இன்னும் 'தேவாதி தேவர் சேவை செயுமுக மலராறும்' என்றும் திருப்புகழில் கூறப்படுகிறது. அருணகிரிநாதர் கந்தர் அநுபூதியில், 'வேதாமுதல் விண்ணவர் சூடு மலர்ப்பாதா' என்று பாடுகிறார். 'உம்பர்கள் ஸ்வாமி' எனவும் முருகப்பெருமான் மொழியப்பெறுகிறான். இராமலிங்க அடிகளார், 'மூவர் நாயகனென மறைவாழ்த்திடு, முத்தியின் வித்தே' என்று பாடுகிறார். இவர்கள் அனைவருக்கும் முருகக் கடவுளிடம் இரந்து, அயனைச் சிறையினின்றும் விடுவிக்கும் நோக்கமும் தத்தம் தொழில்களைப் பண்டுபோலப் பெற்றுத் தலைமையைக் கொள்ளும் நோக்கமும் பொதுவாக உள்ளன. அதனால் அனைவரும் ஆகாயத்தில் சுழன்று வருகின்றனர். அடுத்து,

'தாஇல் கொள்கை மடந்தையொடு சில்நாள்
ஆவினன்குடி அசைதலும் உரியன்; அதாஅன்று'

(175 - 176)

என்று கூறி இப்பகுதியை நிறைவிக்கிறார் நக்கீரர். அதாவது, குற்றமற்ற அறக்கற்பினை உடைய தெய்வயானையாருடன் சிலநாள் திருவாவினன்குடி என்னும் ஊரிலே இருத்தலும் உரியன் என்பதாகும். தெய்வயானை அம்மையார் கிரியா சக்தி. அருணகிரிநாதர்

'சிந்துவின் மேவு போகக் கார'

(முந்து தமிழ்மாலை - திருச்செந்தூர் திருப்பகழ்)

என்று முருகப்பெருமான் கிரியா சக்தியாகிய தெய்வயானையுடன் போக மூர்த்தியாக விளங்குவதைக் குறிப்பிடுகிறார். தேவயானை அம்மையார் குற்றமற்ற அறக் கற்பினை



'ஆவினன்குடி அசைதலும் உரியன்'

உடையவர். முன்பு 'மறுவில் கற்பின் வாணுதல் கணவன்' என்றவர், இங்கு 'தா இல் கொள்கை மடந்தையொடு' என்கிறார். 'தா' என்பது குற்றம்; கற்பு என்பது மேற்கோளான கொள்கை என்று கூறப்படுகிறது. ஏறத்தாழ எல்லா உரையாசிரியர்களும் இங்குக் குறிப்பிடுவது தெய்வயானை அம்மையாரை யாகும். திருச்சீரலைவாயில் வள்ளியம்மையார் கூறப்படுகிறார். மகளிர் மாண்புகள் எல்லாவற்றிலும் தலைசிறந்தது கற்பே. ஆதலின் அதனை நக்கீரர் பன்முறை வியந்தோதுகிறார். திருவாவினன்குடியில் முருகப்பெருமான் தெய்வயானை அம்மையாருடன் அமர்ந்திருப்பதால், இல்லறத்தினது இயல்பில் வந்த விருந்தினரைப் போற்றும் இயல்பில் உள்ளனர் என்பதும், குறையுடைய மூவர் தேவரும் குறைநீங்கப் பெறுவர் என்பதும் குறிப்பிடப்படுகின்றன.

திருவாவினன்குடியில் முருகனுடைய ஸ்வரூப லட்சணம் கூறப்படுகிறது. அப்பெருமானின் அங்க அடையாளங்கள், ஆபரணங்கள், வாகனம், கொடி முதலியன கூறப்படவில்லை. மூவர்க்கும் முதல்வனான ஆதிமூர்த்தியாய் முருகன் சித்திரிக்கப்படுகிறான். மூவர்களும் தேவர்களும் தத்தம் தொழில்களை, அவன் ஏவலால் செய்கின்றனர். இதனால் இறைவனின் பரத்துவம் கூறப்படுகிறது. இதுவே பதியின் இலட்சணம். ஒன்றாய், பரிபூரணமாய், அறிவுக்கறிவாய், குறியும் குணமுமில்லாததாய், அகண்டமாய், ஆனந்தமாய் விளங்குவது. அருணகிரிநாதர் பழமுதிர்சோலைத் திருப்புகழில், முருகப்பெருமான்,

'அகரமும் ஆகி, அதிபனும் ஆகி அதிகமும் ஆகி அகம் ஆகி
அயன் என ஆகி, அரிஎன ஆகி, அரன் என ஆகி அவர்மேலாய்
இகரமும் ஆகி எவைகளும் ஆகி இனிமையும் ஆகி வருவோனே'
(அகரமுமாகி - பழமுதிர்சோலை திருப்புகழ்)

எனப்பாடுகிறார். அதாவது

முருகன் முதல்வனாகவும், தலைவனாகவும், மும்மூர்த்தியாகவும், மேம்பட்டவனாகவும், முத்தி தருபவனாகவும் அண்மையில் உள்ளவனாகவும், எல்லாமாய் ஆனவனாகவும் இனிமையாய் விளங்குபவனாகவும் இருக்கிறான்

என்பது பொருள்.

இங்கு, முருகனைக் காண வரும் குழுவில், முதலில் மரவுரி தரித்த ஜீவன்முக்தர்கள் முன்செல்கின்றனர். இறைவன் தொண்டரில் அடக்கம். இக்குழு நிறைவேற்ற எண்ணும் கருத்திற்கு இயைய, முதலில் முருகப்பெருமானுக்குப் பிடித்தமான அடியார்கள் செல்கின்றனர். இவர்களை யடுத்து இசைவாணர்கள்

செல்கின்றனர். இறைவனைப் 'பண்ணிடைத் தமிழொப்பாய்' என்று சுந்தரர் கூறுகிறார். செந்தமிழ்த் தெய்வம் முருகன்; அதனால் இசைவாணர்களை அடுத்து முன்நிறுத்துகின்றனர். அவர்களையடுத்துத் திருமால் செல்கிறார். முருகனுக்கு மாமன் மால், பெற்றோரிடத்துச் சலுகையும் மாமனாரிடத்து மரியாதையும் காட்டுவது. உலகவழக்கு. மேலும் இங்குப் பிரமனைச் சிறையினின்றும் விடுவிக்க வேண்டிச் செல்கின்றனர். திருமால் பிரமனைப் பெற்றவன். அதனால் செல்கிறான். முக்கட் பரமர் உமையோடு உரிமையோடும் பற்றோடும் செல்கிறார். அடுத்து, இந்திரன் வருகிறான்; இவனும் முருகனுக்கு ஒரு முறையில் மாமனார்தான். அருணகிரிநாதர், 'அமரேசனை முழுதுங் காத்த பெருமாளே' என்று பாடுகிறார். ('முகிலா மெனு' எனும் திருப்பகழ்). மேலும் பிரமனின் சாபம் தீராவிட்டால் யாகங்கள் நடைபெறாது. அதனால் தேவர்களுக்கு அவியுணவு கிடைக்காது. அதனால் தேவேந்திரன் வருகிறான். இவர்களைத் தொடர்ந்து முப்பத்து மூவர் தேவர்களும் பதினெண் கணங்களும் செல்கின்றனர். 'ஆர்கணும் நலனே யருள்' குமரனிடம் தம்குறை தீர்த்துக்கொள்ள வருகிறார்கள். முருகப்பெருமான் தேவர்கள் வணங்கும் தம்பிரான். பிரணவ வடிவினன். அருணகிரிநாதர் கந்தர்அநுபூதியில் 'இமையோர் புரிதாரக' எனக் குறிப்பிடுகிறார். மேலும் கந்தரலங்காரத்தில், 'ஓங்காரத்துஉள் ஒளிக்குள்ளே முருகன் உருவம் கண்டு தூங்கார்' என்று கூறப்படுகிறது. கந்தபுராணம் 'தாரகத்து உருவமாம் தலைமை யெய்திய ஏரகத் தறுமுகன்' என்று கூறுகிறது. அருணகிரிநாதர், முருகப்பெருமான் தேவர்களுக்கு அருளும் திறத்தைக் கீழ்க்கண்ட பாடல்களில் நினைவுகூர்கிறார்:-

அ. 'தேவர் வரதா முருக தம்பிரானே' (ஆறுமுகம் - திருப்புகழ்)

ஆ. வேதா முதல் விண்ணவர் சூடு மலர்ப்பாதா

இ. வீடுஞ் சுரர் மாமுடி வேதமும் வெங்
காடும் புனமும் கமழுங் கழலே (கந்தர் அநுபூதி)

ஈ. இமையவர் முடித்தொகையும் வனசரர் பொருப்புமென
திதையமு மணக்குமிரு பாதச் சரோருகனும் (திருவகுப்பு)

'திருவாவினன்குடி' என்பது இன்றைய 'பழனி' என்கிற புகழ்பெற்ற தலம். மலையில் உள்ள திருக்கோயில் பழனி என்றும், அடிவாரத்தில் உள்ள திருக்கோயில் **'திருவாவினன்குடி'** என்றும் அழைக்கப்படுகின்றன. இந் நாளில், இதுவும் 'பழனி' என்றே அழைக்கப்படும். ஆவியர்குடி என்பது, குறுநில மன்னர்களின் குடிகளில் ஒன்று. அவர்கள் அரசாண்டு வந்த இடம் இது. கடையேழு வள்ளல்களில் ஒருவனாகிய பேகன்

இக்குடியில் பிறந்தவன். ஆவி, வையாவி என அக்குடிக்கு இரு பெயர்கள். அதனால் அவர்கள் வாழ்ந்த இடம் ஆவினன்குடி என்றும், வையாவியூர் என்றும் அழைக்கப்பட்டது. அருணகிரிநாதர் திருப்புகழில் 'வைகாவூர் நனாடதில் ஆவினன்குடி வாழ்வான தேவர்கள் பெருமாளே' என்று இந்த ஊரையும் நாட்டையும் குறிப்பிட்டுப் பாடுகிறார். 'பொதினி' என்பது 'பழனி' என மருவியது. பேகனின் குலதெய்வம் முருகன். சங்கநூல்களில் மலையின் மீது கோயில் இருந்ததாகக் குறிப்புகள் வருகின்றன. பிற்காலத்தில் பழனிக்குப் புராணம் எழுந்தது. திருவாகிய இலக்குமியும், ஆவாகிய காமதேனுவும், இனனாகிய கதிரவனும் பூசித்தமையால் 'திருவாவினன்குடி' எனப் பெயர் வந்ததென்றும், புகழ்பெற்ற ஞானமாங்கனி கிடைக்காததால் சினந்த முருகன் இம்மலைக்கு வர, அவனை அமைதிப்படுத்த வந்த சிவபிரான் 'பழம் நீயே' என்று கூற, அதுவே காரணமாக மலைக்குப் 'பழ நீ' என்று பெயர் வந்ததென்றும், அதுவே பழனியாயிற்று என்றும் புராணம் கூறும்.

அருணகிரிநாதர் பழனித் திருப்புகழில் திருவாவினன்குடிக்கு 12 பாடல்கள் கிடைத்துள்ளன. அதில் ஆறாவது பாடலில்,

'ஆடகம் புனை பொற்குடம் வைக்கும்
கோபுரங்களின் உச்சி உடு தங்கு
ஆவினன்குடி வெற்பினில் நிற்கும் பெருமாளே'

எனப்பாடுகிறார். அதாவது, பொன்னால் அலங்கரித்த அழகிய கலசங்கள் அமைந்த கோபுரங்களின் உச்சியில் விண்மீன்கள் தங்குகின்ற திருவாவினன்குடி மலையினில் விளங்கும் பெருமிதம் உடையவரே என்பது பொருள்.

'நாதவிந்துக லாதீ நமோ நம
வேத மந்த்ர சொ ரூபா நமோநம'

என்ற நாமணக்கும், திருப்புகழ் இங்குப் பாடப்பட்டது. இத்தலத்தில் அருணகிரிநாதருக்கு ஜெபமாலை தந்தருளினான் முருகப்பெருமான். இதை அருணகிரிநாதர் குறிப்பிடுகிறார்.

'ஜெபமாலைதந்த சற்குரு நாதா'

மேலும், அவர், சிவபெருமான் விநாயகருக்குப் பழம்தந்ததனால் சினமுற்று சிவகிரியில் நின்ற வரலாற்றை,

'பரன் வெட்கிடவுள மிகவும் வெகுண்டக்
கனியைத் தரவிலையென அருள் செந்திற்
பழநிச்சிவகிரி தனிலுறை கந்தப் பெருமாளே'

(புடவிக் கணி திருப்புகழில்) குறிப்பிடுகிறார்.

இத்தலத்தை, நக்கீரர், அருணகிரிநாதர், பாலசுப்பிரமணியக் கவிராயர், மாம்பழக் கவிச்சிங்க நாவலர் முதலியோர் பாடிப் பரவியுள்ளனர். பாலசுப்பரமணிக் கவிராயரின் பழநித் தலபுராணம், வண்ணச் சரபம் தண்டபாணி சுவாமிகளின் பழனிப்பிள்ளைத்தமிழ், விசயகிரி வேலச்சின்னோவையன் பழனிப் பிள்ளைத்தமிழ், மாம்பழக் கவிச்சிங்க நாவலரின் பழனாபுரிமாலை, அண்ணாமலைக் கவிராயரின் பழனிப் பதிற்றுப்பத்தந்தாதி, பழனிமலை வடிவேலர் சந்நிதிமுறை, முதலிய நூல்கள் இத்தலப் பெருமைகளைச் சாற்றுகின்றன.

இப்பகுதியின் நிறைவாக வண்ணச்சரபம் தண்டபாணி சுவாமிகள் பாடல் ஒன்று நினைக்கத்தகும். 'ஒழுக்கம், கருணை, தவம் முதலியவற்றை விடாமல் பெற்றிருக்கும் அன்பர்களைத் தன்பக்கம் இழுத்தருள்பவன் பழனியப்பன்' என்ற கருத்துப்பட வரும் ஒழுக்கம், கருணை, தவம் உள்ளவரை எல்லாம் இழுக்கும் பழனியப்பனே என்ற பாடலை ஈண்டு நினைவு கூறலாம். அதா – அதுவன்றியும்



'உச்சிக் கூப்பிய கையினர்......'

('ஏரகத் துறைதலும் உரியன்.')

# திருவேரகம்

**அடுத்து, திருஏரகம் என்னும் திருத்தலத்திற்கு அழைத்துச் செல்கிறார் நக்கீரர்.இது அநாகதத் தலம். இங்கு, இரு பிறப்பாளர்களாகிய அந்தணர் முருகனை வழிபடும் மாண்பைக் கூறுகிறார்:-**

'இருமூன்று எய்திய இயல்பினின் வழாஅது
இருவர்ச் சுட்டிய பல்வேறு தொல்குடி
அறுநான்கு இரட்டி இளமைநல் யாண்டு
ஆறினின் கழிப்பிய அறன்நவில் கொள்கை
மூன்றுவகைக் குறித்த முத்தீச் செல்வத்து
இருபிறப்பாளர் பொழுது அறிந்து நுவல
ஒன்பது கொண்ட மூன்றுபுரி நுண்ஞாண்
புலராக் காழகம் புலர உடீஇ
உச்சிக் கூப்பிய கையினர் தற்புகழ்ந்து
ஆறெழுத்து அடக்கிய அருமறைக் கேள்வி
நாஇயல் மருங்கில் நவிலப் பாடி
விரையுறு நறுமலர் ஏந்திப் பெரிது உவந்து
ஏரகத்து உறைதலும் உரியன்; அதா அன்று.

**(177 - 189)**

**இங்கு, முருகப்பெருமானை வழிபடும் அந்தணர்கள், ஓதல், ஓதுவித்தல், வேட்டல், வேட்பித்தல்,ஈதல், ஏற்றல் என்னும் ஆறு தொழில்களையும் கடமையாகக் கொண்டு, அத்தொழில்களைச் செய்தலிலே சிறிதும் வழுவாதவர்கள்; இவர்கள் தாய்வழியிலும், தந்தை வழியிலும் நன்கு மதிக்கப்பட்ட பல பழைய குடிகளிலே தோன்றியவர்கள்; நாற்பத்தெட்டு ஆண்டாகிய நல்ல இளமைக்காலம் முழுதும் பிரமசரியங் காத்த பேராண்மையாளர்கள்; எப்போதும் அறத்தையே கூறும் கொள்கை உடையவர்கள். மூன்றுவடிவமாக அமைத்து வளர்க்கும் முத்தீயாகிய செல்வத்தை உடையவர்கள்; ஒன்பது இழைகள் கொண்ட முப்புரிகளாக அமைந்த நுண்ணிய**

பூணூலை அணிந்தவர்கள்; இவர்கள் வழிபடும் காலமறிந்து, நீராடும்போது நீரில் தோய்க்கப்பட்ட ஆடை, உடலில் உலருமாறு உடுத்திக் கொண்டும் கைகளைத் தலைமேலே குவித்தும் முருகனைப் புகழ்ந்து ஆறு எழுத்துக்களை அடக்கிய கேட்டற்கரிய மறையாகிய மந்திரத்தை நாப்புடை பெயருமளவானே ஓதியும், மணமிக்க சிறந்த மலர்களைத் தூவியும், வணங்கி வாழ்த்துகின்றனர். அதற்கு முருகன், பெரிதும் மகிழ்ந்து திருவேரகம் என்னும் ஊரிலே இருத்தலும் உரியன் என்பது இவ்வடிகளின் பொருள். அந்தணர் என்போர் அறவோர் என்பதையும், அறுதொழில் இயற்றுபவர் என்பதையும், செந்தழல் ஓம்பும் செம்மையர் என்பதையும் திருமூலர்,

'அந்தண ராவோர் அறுதொழில் பூண்டுளோர்
செந்தழல் ஓம்பிமுப் போதும் நியமஞ்செய்து'
(பாடல் எண்.75)

என்ற அடிகளால் கூறுகிறார்.

நூல்கள், அந்தணர்க்குரிய இயல்பு ஆறாகக் கூறுகின்றன. அவை ஓதல், ஓதுவித்தல், வேட்டல், வேட்பித்தல், ஈதல், ஏற்றல் என்பனவாகும்.

'அறுவகைப் பட்ட பார்ப்பனப் பக்கமும்'

என்கிறது தொல்காப்பியம். ஓதல் என்பது மறைகளையும் அறநூல்களையும் ஆறங்கங்களையும் பயிலுதலாகும். ஓதுவித்தலாவது மாணவன் இயல்பறிந்து அவன் கொள்ளக் கொடுப்பதைக் குறிக்கும். வேட்டலாவது வேள்வி இயற்றுதல். அது மங்கல மரபினால் கொடைச் சிறப்புத் தோன்ற, மந்திர விதியால் தேவர்க்கு வேள்வித்தீயில் அவியுணவைக் கொடுக்கும் செய்தியாகும். வேட்பித்தலாவது வேள்விக்குரிய இலக்கணமனைத்தும் கற்ற ஆசிரியன் மாணாக்கனுக்கு, அவன் இயற்றிய வேள்வியால் கிடைக்கும் பெரும்பயனை அடையச் செய்தல். ஈதலாவது வேள்வியில் வந்திருப்போர் மகிழத் தானம் செய்தல். ஏற்றலாவது கொள்ளத்தகும் பொருள்களை அறிந்து கொள்ளுதலாகும்.

பதிற்றுப்பத்தில்,

'ஓதல் வேட்டல் அவை பிறர்ச் செய்தல்
ஈதல் ஏற்றல்என்றாறு புரிந்தொழுகும்
அறம்புரி அந்தணர்' (பதிற்றுப்பத்து - 24)

எனக் கூறப்பட்டுள்ளது.

இங்கு, நக்கீரர் அந்தணர்க்கு ஓதிய தொழில் ஆறையம் உடைய அந்தணர் என்பார்

'இரு மூன்று எய்திய இயல்பு' என்றார்.

இந்த அந்தணர்கள், தாயும் தந்தையுமாகிய இருவர்குடியும் உயர்குடி என்று உலகத்தாரால் சுட்டிப் புகழப்பட்ட நற்குடியில் பிறந்தவர்கள். அதாவது தாய் ஒரு கோத்திரத்தைச் சார்ந்தவள்; தந்தை வேறு ஒரு கோத்திரத்தைச் சார்ந்தவன். பழமையான குடியைச் சார்ந்தவர்கள் இவர்கள்

'தாய்தந்தை வழி இருமரபுந் தூயராகச்
சுட்டத்தக்க நியதியில் வருதலும் அதற்குத்
தக்க ஒழுக்கமுடைமையும் உடையவர்கள்' என்றார்.

வள்ளுவர் கூறும்,

'ஒழுக்கமும் வாய்மையும் நாணும் இம்மூன்றும்
இழுக்கார் குடிப்பிறந்தார்'

என்ற கொள்கையைப் போற்றி நடப்பவர்கள் இவர்கள்.

சேக்கிழார் பெருமான்

'மெய்ம்மைநிலை வழுவாத மேன்மைநெறி விழுக்குடிமைச்
செம்மையினர்' என்றும்,
'முந்தை மரபினுக்கு ஏற்கும் முறைமை' என்றும் கூறுகிறார்.

இந்த அந்தணர்கள், நாற்பத்தெட்டு ஆண்டுகளை நன்னெறியில் கழித்து, அறத்தை விரும்பி நின்று பிரம்மச்சரிய விரதம் காத்தவர்கள். உலக மக்களுக்கு காமம் முதலிய இன்ப நுகர்ச்சிக்கு உரிய காலம் பதினாறாண்டு முதல் நாற்பத்தெட்டாண்டு வரை உள்ள பருவம். இவ்வாறு காம உணர்வு மேலிடும் காலத்திலும் இவர்கள் தம் உள்ளத்தைப் போக்காது அடக்கிய அருமையானவர்கள். சிலப்பதிகாரத்தில்,

'மடங்கெழு நோக்கின் மதமுகந் திறப்புண்டு
இடங்கழி நெஞ்சத் திளமை யானை
கல்விப் பாகன் கையகப் படாஅது
ஒல்கா உள்ளத் தோடும்'

(சிலப் - கட்டுரைக்காதை 4-36)

என்று கூறப்படுகிறது.

இறையனார் அகப்பொருளுரையிலும், தொல்காப்பியம் களவியல் உரையிலும் நாற்பத்தெட்டு ஆண்டுகள் பிரமசரியம் காப்பது கூறப்படுகிறது. நாரத பரிவ்ராஜக உபநிடத்தில் பிரம்மச்சரியம் நான்கு வகை எனவும், அவற்றை முறையே அநுஷ்டித்த பின் மனையறம் புகவேண்டும் என்றும் கூறப்படுகிறது.

இங்கு, 'ஆறினில் கழிப்பிய அறன்நவில் கொள்கை' என்பதற்கு வேதநெறியிலே பிரம்மசரியத்தைக் கழித்து, அதன்பின் மனையறத்தைப் பயின்ற கொள்கையராகி என்று கூறலாம்.

இனி, இந்த அந்தணர்கள், ஆகவனீயம், தட்சிணாக்கினி, காருகபத்தியம் எனும் மூன்று அக்கினிகளையும் ஓம்பும் இயல்புடையவர்கள்; அந்தத் தீயையே செல்வமாகப் போற்றுபவர்கள். இப்பகுதிக்கு உரைகூறும் நச்சினார்க்கினியர்,

'மூன்று வகை குறித்த முத்தீச் செல்வத்து' என்பதற்கு, 'நாற்சதுரமும் முக்கோணமும் வில்வடிவமுமாகிய மூன்று வகையைக் கருதின ஆகவனீயம், தக்கிணாக்கினி, காருகபத்தியம் என்னும் மூன்று தீயானுண்டாகிய செல்வத்தினையுமுடைய' என்று கூறுகிறார். பரிமேலழகர் முத்தீ என்பதற்கு, ஒன்று வேதத்தை வழங்கவும், ஒன்று தேவர்கட்குத் தட்சிணை கொடுக்கவும், ஒன்று பூலோகத்தை இரட்சை பண்ணவும் ஆய மூவகைத் தீ' என விளக்கங் காண்பர். புறநானூறு இத்தகைய முத்தீ பற்றிக் கூறும்போது:

'அந்தணர் அருங்கடன் இறுக்கும் முத்தீ' என்றும், 'ஒன்று புரிகொள்கை இரு பிறப்பாளர் முத்தீ' என்றும் கூறுகிறது. அருணகிரிநாதர் இவ்வாறு அந்தணர்கள் ஓமத்தீ இயற்றும் நிலையை 'ஓமத் தீ வழுவார்கட்கூர் சிவ லோகத்தே தரு மங்கை' (சேமக்கோமள பாதத்தாமரை) 'அந்தண் மறை வேள்வி காவற்கார' (முந்து தமிழ்) என்ற பாட்டடிகளில் கூறுகிறார். இந்த அந்தணர்கள் பூணூல் அணிவதற்கு முன் ஒரு பிறப்பும், அதன் பின் வேறு ஒரு பிறப்பும் உடையவர்கள் எனக்கொள்ளப்படும். இவர்கள் முருகப்பெருமானை வழிபடும் காலமறிந்து துதிகளைக் கூறுகிறார்கள். நுவல என்பதற்கு வாழ்த்துக்கூற என்பது பொருள். பொழுது அறிந்து நுவல என்பதற்கு 'உதயகாலத்தும் மத்தியான்ன காலத்தும் அத்தமன காலத்தும் தாபனம், அநுட்டானம், பூசையாகிய மூன்று தொழிலையும் முயன்று செய்ய' என்றும் கூறுவர். இவர்கள் அணிந்துள்ள பூணூல் ஒவ்வொருபுரியிலும் மூன்று நூலாக முப்புரியாகிய ஒன்பது நூலை உடையது.

நச்சினார்க்கினியர்,

'முந்நூல் கொண்டு முப்புரியாக்குதலின் ஒன்பதாகிய நூலைத் தன்னிடத்தே கொண்ட ஒருபுரி மூன்றாகிய நுண்ணிய பூணூல்' என்று பொருள் கூறுகிறார்.

'ஒன்பது போலவர் மார்பினில் நூலிழை'

என்பது அப்பர் பெருமான் திருவாக்கு.

சேக்கிழார் பெருமான்

'அருமறை முந்நூல் மார்பின் அந்தணர் கலயர் என்பார்' எனக் கலயர் புராணத்தில் குறிப்பிடுகிறார். நீராடிவிட்டு உடுத்திவரும் ஆடை புலராத படியிருந்து வழிபடுபவர்கள் இவர்கள். அவை, தம் உடம்பிலேயே கிடந்து புலருமாறு உடுத்தியிருக்கிறார்கள். கவிப்பெருமான்,

'புலரஉடுத்தி' என்பதற்கு 'வேள்வித்தீயிலே உலரும்படி உடுத்து'

என்று பொருள் காண்கிறார். தம்முடைய கைகளைத் தலையின் மேலே குவித்து முருகப்பெருமானைப் புகழ்ந்து ஆறெழுத்து மறைமொழியை நாப்புடைபெயரும் அளவிலே பலமுறை கூறி, மணம் மிக்க நறுமலர்களை ஏந்தி வழிபடுகிறார்கள். இறைவனை வணங்கும்போது கரங்களைச் சிரசுக்கு மேல் உயர்த்திக் கூப்பி வணங்க வேண்டும்.

திருவள்ளுவர்,

'கோளில் பொறியில் குணமிலவே எண்குணத்தான்
தாளை வணங்காத் தலை' என்கிறார்.

மணிவாசகப்பெருமான்,

'சென்னியில் அஞ்சலி கூப்பின ரொருபால்
திருப்பெருந் துறையுறை சிவபெருமானே' என்று பாடுகிறார்.

அருணகிரிநாதர் முருகப்பெருமான் அடியவர்களுக்குப் பல பண்பு நலன்களைத் தந்தருள்பவர் என்பதை,

'சிரப்பண்புங் கரப்பண்புங்
கடப்பந் தொங்கலிற்பண்புஞ்
சிவப்பண்புந் தவப்பண்புந் தருவோனே'
**(கரிக்கொம்ப - திருச்செந்தூர் திருப்புகழ்)**

**என்று திருப்புகழில் குறிப்பிடுகிறார்.**

**மேலும், முருகப்பெருமானை**

'முடிமேலே அஞ்சலி செய்வோர்கள் நேயக்கார' **என்றும்**

'தொழுது வழிபடுமடியர் காவற்காரப் பெருமாளே' **என்றும் பாடுகிறார். நக்கீரர் பெருமான்**

'ஆறெழுத்தடக்கிய அருமறைக் கேள்வி' **என்றது ஆறெழுத்து மறைமொழியை. அது 'சரவணபவ' என்பது; 'குமாராய நம' என்பதுமாம்.**

**தமிழில் 'முருகா' என்பது சிறந்த மந்திரமாகும். அருணகிரிநாதர்**

**'ஒரெழுத்தில் ஆறெழுத்தை ஓதுவித்த பெருமாளே' என்று பாடுகிறார். தொல்காப்பியம்,**

'நிறைமொழி மாந்தர் ஆணையிற் கிளந்த
மறைமொழி தானே மந்திரம் என்ப'

**என்று கூறுகிறது. நல்லாசிரியன் ஆணையால் மறைவாக மாணாக்கனுக்கு அறிவுறுத்தலின் மறைமொழியாகும்.**

**மந்திரத்தை உச்சரிக்கும் முறை மூன்று. அவை மானசம், மந்தம், வாசிகம் என்பன. மனத்திற்குள் மந்திரத்தை எண்ணி ஜெபிப்பது மானசமுறை. திருஞானசம்பந்தர் திருவாக்கில்,**

'துஞ்சலும் துஞ்சல் இலாத போழ்திலும்
நெஞ்சகம் நைந்து நினைமின், நாள்தொறும்
வஞ்சகம் அற்றடி வாழ்த்த, வந்த கூற்று
அஞ்ச உதைத்தன அஞ்செழுத்துமே'

**என இம்முறை இடம்பெற்றுளது.**

'சிந்தனை நின் தனக்காக்கி' என்பது திருவாசகம். 'நினைக்க மடநெஞ்சம்' என்கிறது தேவாரம். இவ்வடிகளில் நெஞ்சு நைந்து நினைக்கும் 'மானச முறை' குறிக்கப் படுகிறது. அருணகிரிநாதர் 'நெஞ்சக் கனகல்லும் நெகிழ்ந்துருக' என்று பாடுகிறார். மெல்ல, பிறர் காதில் கேளாதபடி நாவைப் புரட்டி உச்சரித்தல் 'மந்தம்'; வெளிப்படையாக வாய்விட்டுச் சொல்லுதல் 'வாசிகம்'. இங்குச் 'சடாட்சர' மந்திரத்தை உச்சரித்துக் கையில் மலர்கள் ஏந்தி வழிபடுகிறார்கள். அபிஷேக ஆராதனைகள் முடித்துப் பிறகு கையில் மலர்களை ஏந்தி வேத மந்திரங்களைச் சொல்லி இறைவன் திருவடியில் சமர்ப்பிப்பது மரபு. இதை மந்திர புஷ்பம் என்பர். பூசையின் இறுதியில் நறுமலர் ஏந்தி வழுத்துதல் வழக்கம். இந்த மரபை இங்குத் தெளிவாகக் கூறுகிறார் நக்கீரர். திருமந்திரம் 'புண்ணியஞ் செய்வார்க்குப் பூவுண்டு நீருண்டு' என்று கூறுகிறது. சிவஞான சித்தியாரில் 'மந்திரங்கள் வடிவு என மறைகள் எல்லாம்' (சிவஞான சித்தி 78) என்று கூறுகிறது. மந்திரங்கள் தூயமாலையில் தோன்றின. அவை சிவசக்தியால் செம்மையாகச் செலுத்தப்படுவன. மந்திரங்களைக் கணித்தவர்களுக்கு அதன் பயனை அளிக்க அவற்றையே வாயிலாகக் கொண்டு உயிர்களுக்கு இன்பமும் வீடு பேறும் அளித்தலாகிய பயனைத் தருவன. அப்பர் சுவாமிகள், 'தொழுது தூமலர் தூவித் துதித்து நின்று' என்றும் 'பூமாலை புனைந்தேத்திப் புகழ்ந்து பாடி' எனப்பாடுகிறார். மேலும் அவர் திருப்புள்ளிருக்கு வேளூர்ப் பதிகத்தில் இறைவனை 'மந்திரமும் தந்திரமும் மருந்தும் ஆகித் தீரா நோய் தீர்த்து அருளவல்லான்' என்று போற்றுகிறார்.

அருணகிரிநாதர், திருப்புகழில் 'மருவு மலர்புனை தொத்திர சொற்கொடு' (நினது திருவடி . திருப்பகழ்) என்று பாடுகிறார். இறைவனைப் பூமாலை கொண்டும் பிறவாறும் வழிபடும் பக்தியைவிட அந்தரங்க பக்தியே சிறந்தது. இதற்கு பூசலார் வரலாறே தக்க சான்றாகும். 'அருள் மாறா உளத்துள் அன்பினர் உறைவிடம்' என்கிறார் அருணகிரியார். இதனைத் தாயுமானவரின்,

'நாவழுத்தும் சொன்மலரோ நாளுதிர்க்கும் பொன்மலரோ
தேவையுனக் கின்னதென்று செப்பாய் பராபரமே' அடிகளாலும் உணரலாம்.

இவ்வாறு அந்தணர்கள் வழிபடும் முறையைத் தன் திருவுள்ளத்தில் ஏற்று, உவந்து முருகன் திருவேரகத்தில் எழுந்தருளியிருப்பதற்கு உரியன்.

இத் திருஏரகம் தொடர்பாக ஆய்வாளர்களிடையே வேறுபட்ட கருத்து நிலவுகிறது. நச்சினார்க்கினியர் 'மலை நாட்டகத்து ஒரு திருப்பதி' என்று கூறுகிறார். சிலப்பதிகார அரும்பத உரையாசியர் வெண்குன்றத்தைச் சுவாமிமலை எனலால், ஏரகம் மற்றொரு திருப்பதி என்று கருதியிருக்கக் கூடும். சிலர், நாஞ்சில் நாட்டில் உள்ள 'குமரக்கோயில்' என்ற தலமே ஏரகம் என்று கூறுவர். அதற்குக் காரணமாக அவர்கள் கூறுவது ' நாஞ்சில்' என்பது ஏரைக் குறிக்கும். அதனால், நாஞ்சில் நாட்டில் உள்ளதால் 'ஏர்அகம்' என்று பெயர் பெற்றதென்றும், இன்றும் ஈர உடையுடன் வழிபடும் முறை அங்கே உள்ளதென்றும் கூறுவர். கந்தபுராணம் கடவுள் வாழ்த்தில்,

'பிறவி நீத்திடும் தாரகத் துருவ மாந் தலைமை
யெய்திய ஏரகத் தறுமுகன்' என்று கூறுகிறது.

அருணகிரிநாதர் திருப்புகழில் திருஏரகம் என்பது தஞ்சாவூர் மாவட்டத்தில் உள்ள 'சுவாமிமலை' எனக் குறிப்பிட்டுக் கூறுகிறார்.

அருணகிரிநாதர், சிவனுக்குக் குகப்பெருமான் குருவாக எழுந்தருளிப் பிரணவ உபதேசஞ் செய்த இடமாதலால் சுவாமி மலையைக் 'குருமலை எனப் பாடுகிறார். மேலும், தாத்ரீகிரி, சுந்தராசலம் எனவும் பல பெயர்கள் உள்ளன. அருணகிரிநாதருக்கு முருகப்பெருமான் திருவடி காட்டிய திருத்தலம் சுவாமிமலை. சுவாமிமலை தந்தைக்கு உபதேசித்த தலம். இங்கு இறைவன் யோக நிலையில் இருந்து அருளுகிறான். அருணகிரிநாதர் திருஏரகம் திருப்புகழில், வண்டுகள் நிறைந்து கூடி வாசனையுள்ள தேனைக்குடித்து, பாக்கு மரத்தின் பூவின் வளப்பமுள்ள பாளை மலர்களின் இடையே சாமவேத கானம் போல் வகை வகையான ஒலியை எழுப்ப, சந்திரனைப் போல் குளிர்ந்துள்ள சுவாமிமலையில் முருகப்பெருமான் எழுந்தருளியிருப்பதாக இயற்கையோடு இணைத்துப் பாடுகிறார். மேலும் அவர்

1. 'ஏரக வெற்பெனும் அற்புத மிக்கசு
வாமி மலைப் பதி மெச்சிய சித்த'

(கோமள வெற்பினை - திருவேரகம் திருப்புகழ்)

என்றும்

2. 'ஏரக வெற்பெனும் அற்புத மிக்கசு
வாமிமலைப் பதி நிற்கும் இலக்ஷண'

(வார்குழலை - திருவேரகம் திருப்பகழ்)

என்றும்

3. 'தனி ஏரகத்தின் - முருகோனே
தருகா விரிக்கு வடபாரிசத்தில்
சமர்வேல் எடுத்த - பெருமானே'

**(செகமாயை - திருவேரகம் திருப்புகழ்)**

**என்றும்**

4. 'குளிர்கா மிகுந்த வளர்பூக மெத்து
குடகா விரிக்கு வடபாலார்
திருவேரகத்தில் உறைவாய்

**('மருவே செறிந்த குழலார்' - திருவேரகம் திருப்புகழ்)**

**என்றும்**

5. 'யாவும் அலை கொண்டுகைத்த காவிரிபுறம்பு சுற்றும்
ஏரகம்அ மர்ந்தபச்சை மயில்வீரா'

**('சேலுமயிலுந் தரித்த' திருவேரகம் திருப்புகழ்)**

**என்றும் பாடுகிறார். இன்றும் வருவாய்த்துறைக் கிராமம் 'ஏரகரம்' என்று குறிக்கப்படுகிறது. 'ஏரகரம்' என்பது ஏரகத்தினின்றும் மருவியதாகக் கொள்ளலாம். இது இன்றைய சுவாமிமலைக்கு வடகிழக்கில் உள்ளது. திருமுருக கிருபானந்தவாரியார் சுவாமிகள் அருணகிரிநாதர் 'காவிரிக்கு வடபாலர் திருவேரகம்' என்றுபாடுவதை எடுத்துக்காட்டி, அருணகிரிநாதர் முருகவேள் அருள்பெற்ற ஞானமூர்த்தி, அவருடைய திருவாக்கு பரம பிரமாணமாகும் என்பதால் 'திருவேரகம்' என்பது தஞ்சாவூர் மாவட்டத்தில் உள்ள 'சுவாமிமலை' யே ஆகும் என்று கூறுகிறார்கள். இக்கருத்தே உடன்பாடான கருத்தாகக் கொள்ளலாம். இச்சுவாமிமலையில் முருகப்பெருமான் தன் தந்தைக்குப் பிரணவப் பொருளை உபதேசித்த வரலாற்றை, அருணகிரிநாதர், ஆதிகுருவாகிய சிவபிரான் அகமகிழந்து முருகனை தனக்குக் குருநாதராகக் கொண்டதை வேதங்கள் உவந்து உருகுகின்றன என்ற பொருளில்**

'சங்கரனுகந்த பரிவின் குருவெனுஞ் சுருதி
தங்களின் மகிழ்ந்துருகும்'

**(கொங்கைகள் குலுங்கவளை - திருப்புகழ் - திருச்செந்தூர்) என்று பாடுகிறார். அதாஅன்று - அதுவன்றியும்,**

## குன்றுதோறாடல்

இனி, நம்மைக் குமரன் மகிழும் குன்றுதோறாடலுக்கு அழைத்துச் செல்கிறார் நக்கீரர். குன்றுதோறாடல் விசுத்தித் தலமாகும். முருகப் பெருமான் பல மலைகளில் குன்றுகளில் கோவில்கொண்டு எழுந்தருளியிருக்கிறான். அங்குள்ள எளிய மக்கள் அவனைப் பாடிப் பரவிக் கூத்தாடுகிறார்கள். குன்றுகள் பலவற்றையும் கூறல் எளிய காரியமன்று என்பதால் அவற்றை ஒரே தொகுதியாக்கிக் 'குன்றுதொறாடலும் நின்றதன் பண்பே' என்று கூறுகிறார்.

'பைங்கொடி நறைக்காய் இடையிடுபு வேலன்
அம்பொதிப் புட்டில் விரைஇக் குளவியொடு
வெண்கூ தாளம் தொடுத்த கண்ணியன்
நறுஞ்சாந்து அணிந்த கேழ்கிளர் மார்பின்
கொடுந்தொழில் வல்வில் கொலைஇய கானவர்
நீடமை விளைந்த தேக்கள் தேறல்
குன்றகச் சிறுகுடிக் கிளையுடன் மகிழ்ந்து
தொண்டகச் சிறுபறைக் குரவை அயர'

(189 - 197)

இங்கு முருகனைப் போன்று தன்னை அலங்கரித்துக் கொண்ட வெறியாடும் வேலனாகிய படிமத்தான், பச்சிலைக் கொடியினால் நறுமணமுள்ள சாதிக்காயை நடுவே இட்டு, அழகிய தக்கோலக் காயைக் கலந்து, காட்டுமல்லிகையுடன் வெண்டாளியையும் சேர்த்துக் கட்டிய கண்ணியை உடையவன். மணம் மிக்க சந்தனத்தைப் பூசிய நிறம் விளங்கும் மார்பினை உடையவரும், கொடிய தொழிலை உடைய வலிய வில்லால் கொலைத் தொழில் புரிபவரும் ஆகிய குறவர்கள், நெடுங்காலமாக மூங்கிலிலே

விளைந்த இனிய கள்ளின் தெளிவை, அங்கே சிற்றூர்களில் உள்ள தங்கள் சுற்றத்தாருடன் கூடி, உண்டு மகிழ்ந்து, தொண்டகம் என்னும் பறையைக் கொட்டிக் குரவைக் கூத்தாட என்பது பொருள்.

இங்கு வரும் வேலன், படிமத்தான் என அழைக்கப்படுகிறான். படிமம் விக்கிரகத்தைக் குறிக்கும் சொல். ஆவேசித்து முருகனுடைய திருவுருவத்தைப் பாதுகாத்துப் பூசை செய்வதால் பூசாரிக்கு அப்பெயர் போலும். இவன் ஆட்டைப் பலி கொடுத்து ஆடுபவன். இவன் ஆட்டத்திற்கு 'வெறியாட்டு' என்று பெயர். இந்தப் பூசாரி வெறியாடி அழைத்தால் முருகன்அவன்மீது ஆவேசித்து வந்து தங்களுக்கு நன்மை செய்வான் என்பது குறிஞ்சி நில மக்களின் அசைக்க முடியாத நம்பிக்கை.

இங்கு, 'பைங்கொடி' என்பது பச்சிலைக் கொடியைக் குறிக்கும். இதற்கு உரைகூறும் நச்சினார்க்கினியர் 'எல்லாவற்றிலும் பசுத்திருத்தலிற் பச்சிலை என்று பெயர் பெற்றது' என்று கூறுகிறார். இன்று மாசிப்பச்சை என வழங்குகிறது. இங்குக் கூறப்படும் 'கானவர்' கொடிய தொழிலை உடைய வலிய வில்லாலே கொலை செய்யும் வேட்டுவர் ஆவர். இவர்கள் குறிஞ்சி நிலத்தில் வாழ்பவர்கள். அருணகிரிநாதர் கந்தர் அநுபூதியில் 'கொலையேபுரி வேடர்' என்கிறார்.

அடுத்து,

'நீடு அமை விளைந்த தேக்கள் தேறல்' என்பதற்கு 'நெடுங்காலமாக மூங்கிலிலே விளைந்த இனிய கள்ளின் தெளிவு' என்றும்,

'மூங்கில் குழாயிலே இருந்து முற்றின தேனால் செய்த கள்தெளிவு' என்றும் உரையாசிரியர்கள் பொருள் கொள்வர்.

மூங்கில் குழாயிலே தேனைப் பெய்து, முதிர்வித்துக் கள் சமைத்தலை மலைபடுகடாம், பதிற்றுப்பத்து, அகநானூறு ஆகிய நூல்களில் வரும் குறிப்பால் உணரலாம்.

மலைபடுகடாத்தில், 'திருந்தமை விளைந்த தேக்கட் டேறல்' என வருகிறது.

இந்நூலின் இப்பகுதிக்கு உரைகூறும் பரிமேலழகர், 'நெடிய

மூங்கிலரிசியிலுண்டாகச் சமைத்திட்டு இனிமைக்கிடமாகிய மது' என உரை காண்கிறார்.

'குன்றகச் சிறுகுடி' என்பது மலையகத்தே உள்ள சிறிய ஊரிலுள்ள குடியாகும்.

'சிறுகுடியீரே! சிறுகுடியீரே!' என்று சிலப்பதிகாரத்தில் (குன்றக் குரவை) வருகிறது. முருகப்பெருமானுக்குக் குறிஞ்சி நில மக்கள் விழா எடுக்கும் போது அயலூரில் வாழும் தம் உறவினர்களை அழைத்து அவரோடு கள்ளுண்டு மகிழ்ந்து குரவை ஆடுதல் வழக்கமாம். இதை மலைபடுகடாத்துள்,

'அருங்குறும் பெறிந்த கானவ ருவகை
திருந்துவேல் அண்ணற்கு விருந்திறைசான்மென
நறவுநாட் செய்த குறவர்தம் பெண்டிரொடு
மான்றோல் சிறுபறை கறங்கக் கல்லென
வான்றோய் மீமிசை யயருங் குரவை'

(மலைபடு - 318 -22)

என்ற அடிகளால் அறியலாம்.

'குரவை' என்பது ஒரு வகைக் கூத்து. இது எழுவர் அல்லது எண்மர் அல்லது ஒன்பதின்மர் எனக் கைகோத்தாடும் கூத்தாகும். குறவர்கள் குரவையாடி முருகவேளைப் பரவுதலைச் சிலப்பதிகாரத்தின் குன்றக் குரவையால் அறியலாம். உரையுள்,

'எழுவர் மங்கையர் செந்நிலை மண்டலக் கைகோத்து
அந்நிலை கொட்ப நின்றாடலாகும் என்பதனாலும்

'குரவை என்பது கூறுங் காலைச்
செய்தேன் செய்த காமமும் விறலும்
எய்த உரைக்கும் இயல்பிற் றென்ப'

என்பதனாலும் அறியலாம்.

இப்பகுதியில், முருகனைப் போன்று தன்னை அலங்கரித்துச் கொண்டுள்ள வெறியாடும் வேலன், குறிஞ்சி நிலத்தில் உள்ள மக்களிடம் தெய்வாவேசம் வந்து ஆடிக் குறி சொல்பவன். அவன், சாதிக்காய், தக்கோலக்காய், காட்டுமல்லிகை, வெண்டாளி ஆகியவற்றைக் கலந்து பசுமையான கொடியாலே தொடுக்கப்பட்ட மாலையை அணிந்தவன். இக்குறிஞ்சிநிலக் குறவர்கள் மணமிக்க சந்தனம் பூசிய நிறம் விளங்கும்

மார்பினர்; வலிய வில்லால் கொலைத் தொழில் புரிபவர். மூங்கிலில் இனிய கள்ளின் தெளிவைத் தம் சுற்றத்தாரோடு உண்டு மகிழ்ந்து, தொண்டகம் என்னும் சிறிய பறையை முழக்கிக் குரவைக் கூத்தாடுவர்.

இனி, இந்தக் குறவர்களுடன் ஆடும் மலைநிலத்து மகளிர் மாண்பைக் கூறவருகிறார் நக்கீரர்.

''விரல்உ ளர்ப்ப அவிழ்ந்த வேறுபடு நறுங்கால்
குண்டுசுனைப் பூத்த வண்டுபடு கண்ணி
இணைத்த கோதை அணைத்த கூந்தல்
முடித்த குல்லை இலையுடை நறும்பூச்
செங்கால் மராஅத்த வால்இணர் இடைஇடுபு
சுரும்புஉணத் தொடுத்த பெருந்தண் மாத்தழை
திருந்துகாழ் அல்குல் திளைப்ப உடீஇ
மயில்கண் டன்ன மடநடை மகளிரொடு''

(198 - 205)

இந்தக் குறவர்களுடன் சேர்ந்து மகிழ்ந்து வரும் மலைவாழ் மகளிர், விரலால் வலிந்து மலரச் செய்தனவாயும், ஆழமான சுனையிலே மலர்ந்தனவாயும், வண்டுகள் நெருங்கி மொய்த்ததாயுமுள்ள பூக்களால் தொடுக்கப்பட்ட கண்ணியைச் சூடியவர்கள்; பிணைக்கப்பட்ட பிற பூ மாலையையும் அணிந்தவர்கள்; சேர்த்துக் கட்டின கூந்தலை உடையவர்கள்; இலைகள் செறிந்ததாயும், சிவந்த தண்டினை உடையதாயுமுள்ள மராமரத்தின் வாசனைமிக்க பல வெண்மையான பூங்கொத்துக்களையும், கஞ்சங்குல்லையையும், நடுநடுவே அமைத்து, வண்டுகள் தேன் உண்ணுமாறு தொடுத்த பெரிய குளிர்ச்சியான அழகிய தழை என்னும் ஆடையைத் திருந்திய மணிவடங்களை அணிந்த அரையிலே அசைய உடுத்தியவர்கள்; மடநடையை உடையவர்கள். மயிலைப் போன்ற சாயலை உடைய இம்மகளிரோடு என்பது பொருள்.

அலரும் பருவமுடைய அரும்பைப் பறித்து, இயல்பாக அவை மலர்வதற்கு முன்பாக விரலால் வலிந்து மலர்த்தப்பட்டவற்றைத் தொடுத்தது இக்கண்ணியாகும். இப்பூக்கள் இயற்கையாக மலராமல் செயற்கையாக மலரச் செய்தமையால் மணம் சிறிது வேறுபட்டவாம்.

'இணைத்த கோதை' என்பதற்கு 'வேறு வேறு பூக்களை இணைத்த மாலை' என்பது பொருள்.

தழை என்பது குறிஞ்சிநில மகளிர் அணியும் ஆடை. அது தழைகளாலும், பூக்களாலும் புனையப்படுவது.

பண்டைக் காலத்தில் மகளிர், தழையாடையை இயற்றி உடுத்தும் வழக்கமுடையவர். இத்தகைய தழை ஆடையை உடுத்தும் வழக்கம் கலித்தொகை, புறநானூறு, மதுரைக் காஞ்சி போன்ற நூல்களில் கூறப்படுகிறது. நச்சினார்க்கினியர் இங்குக் குறிப்பிடப்பட்ட மகளிரை 'முருகனைச் சேவிக்கும் மகளிர்' என்று கூறுகிறார்.

இப்பகுதியில், வேலன் குறிஞ்சி நிலத்தில், முருகனைப் போல வேடமணிந்து, ஆவேசம் வந்தவனாய் ஆடிக் குறிசொல்லும் இயல்பும், அவன் அணிந்திருக்கும் மாலை இயல்பும், கொலைத் தொழில் புரியும் குறவர்கள் தம் சுற்றத்தாரோடு பக்குவப்பட்ட கள்ளின் தெளிவை உண்டு சிறுபறை கொட்டிக் குரவைக்கூத்தாடும் இயல்பும், அவர்களோடு மலைவாழ் மகளிர் பலவித மலர்களைத் தலையில் சூடி, தழை ஆடை உடுத்திக் கொண்டு பாடி ஆடும் இயல்பும் கூறப்படுகின்றன.

இனி, முருகப் பெருமானின் இயல்புகளைக் கூறவருகிறார் நக்கீரர்.

'செய்யன் சிவந்த ஆடையன் செவ்வரைச்
செயலைத் தண்தளிர் துயல்வரும் காதினன்
கச்சினன் கழலினன் செச்சைக் கண்ணியன்
குழலன் கோட்டன் குறும்பல் இயத்தன்
தகரன் மஞ்ஞையன் புகர்இல் சேவல்அம்
கொடியன் நெடியன் தொடிஅணி தோளன்
நரம்பு ஆர்த்து அன்ன இன்குரல் தொகுதியொடு
குறும்பொறிக் கொண்ட நறுந்தண் சாயல்
மருங்கில் கட்டிய நிலன்நேர்பு துகிலினன்
முழவுஉறழ் தடக்கையின் இயல ஏந்தி
மென்தோள் பல்பிணை தழீஇத் தலைத்தந்து
குன்றுதோ றாடலும் நின்றதன் பண்பே' (206 - 217)

அதா அன்று.



‘மென்றோள் பல்பிணை தழீஇத் தலைத்தந்து
குன்றுதொ றாடலு நின்றதன் பண்பே.’

செம்மேனியை உடையவன். சிவந்த ஆடை அணிந்தவன். சிவந்த அடிப்புறத்தை உடைய அசோகமரத்தின் குளிர்ந்த தளிரானது அசைகின்ற காதை உடையவன். கச்சை கட்டியவன். கழலணிந்து வெட்சி மாலை சூடியவன். குழலையும் கொம்பையும் ஊதுபவன். சிறிய இசைக்கருவிகளை இசைப்பவன். ஆட்டுக்கடாவை உடையவன்; மயிலை உடையவன். குற்றமற்ற கோழிக்கொடியை உடையவன். உயரமான வடிவினன்; தோள்களிலே தொடியை அணிந்தவன். யாழ் நரம்பு இசைப்பது போன்ற இனிய குரலை உடைய மகளிர் பாட, அவன் உதரபந்தனத்தைக் கொண்ட குளிர்ச்சியும் மென்மையும் வாய்ந்த, இடையிலே கட்டப்பட்ட, நிலத்தைத் தொடுமாறு தொங்குகின்ற ஆடையை அணிந்தவனாய், முழவு போன்ற பெரிய கைகளால் பொருந்தத் தாங்கி, மெல்லிய தோள்களை உடைய பெண்மான் போன்ற பல மகளிரைத் தழுவிக் கொண்டு, அவர்கட்கு இடந் தந்து மலைகள்தோறும் சென்று விளையாடுதலை உடையவன் என்பது பொருள்.

முருகப்பெருமான் சிவந்தமேனியன். நக்கீரர் திருஈங்கோய்மலை எழுபதில், இறைவனின் பொன்னிறமேனியை,

'............ஏந்தலின்
பொன்னேர் அனையான் பொருப்பு'

என்று கூறுகிறார். முருகன் கண்ணனைப் போன்று குழலையும் ஊதுகிறான். அவன் அணிந்திருக்கும் கழல் வீரக்கழல். அருணகிரிநாதர் கந்தர் அநுபூதியில், 'கதிகாண மலர்க் கழல் என்றருள்வாய்' என வேண்டுகிறார். இறைவனின் இணையற்ற செம்மேனியைத் திருமுறையின், 'பொன் ஒளி கொள்மேனி' , 'பொன் நேர் தருமேனியன்' , 'பொன்னார் மேனியன்' , 'செம்பொன் மேனி' என்ற தொடர்களால் உணரலாம்.

இப்பகுதிக்கு விளக்கம் கூறும் உரையாசிரியர்களிடையே கருத்து வேறுபாடு காணப்படுகிறது. இங்குக் கூறப்படும் செய்யன் முதலியவற்றையும், பிற அடைமொழிகள் அனைத்தையும் முருகனுக்கு உரியன ஆக்கி, பல மகளிரைத் தழுவிக் கொண்டு, அவர்களுக்கு ஏற்ற இடமளித்து மலைகள்தோறும் சென்று விளையாடும் பண்பினை உடையவன் முருகப் பெருமான் என்று நச்சினார்க்கினியர் போன்ற சில உரையாசிரியர்கள் பொருள் கூறுகின்றனர். வேறு சில உரையாசிரியர்கள், 'குறிஞ்சி நிலத்தின்கண் வேலன், முருகக் கடவுளுக்குரிய ஆடை, ஊர்தி, கொடி முதலியவற்றை

உடையவனாய்க் குரவைக் கூத்தாடும் கானவரொடும், மகளிரொடும், பாடும் மகளிரொடும் குன்றுகளிலே முருகனுக்கு விழவெடுத்து ஆடுகிறான். என்று உரைகாண்பர். (அவ்வாடலினும் முருகன் அவ்வேல்மகன் மேல் தோன்றி நிற்கும் ஆதலின்) அவ்வாடலும் அக்கடவுள், ஆண்டு விழவினை ஏற்று வெளிப்பட்டு நின்ற குணத்தாலேயாகும். ஆதலால், ஆண்டும் முருகனைக் காணுதல் கூடும். அதாவது வேலன் முருகனைப் போல அலங்கரித்துக் கொண்டு ஆடுதலின் முருகனுக்குரிய ஆடை, அணிகலன், மாலை, கொடி, ஊர்தி முதலியன அவனுக்கு உரியனவாகக் கூறப்பட்டன. முருகனைத் துதித்துக் கானவர் குரவை ஆடுவதால், முருகன் வேலன்மேல் ஆவேசம் கொண்டு அவர்களோடு சேர்ந்து ஆடினன் என்பதாகும்.

வேலன் மலைதொறும் ஆவேசங் கொண்டு, முருகனைப் போல ஆடுதலும், முருகன் அவன்மேல் நின்றதன் பயனேயாகும். ஆதலால், அவ்விடங்களில் எல்லாம் முருகன் உள்ளான் எனப்பொருள் கொள்ளலாம். இதுவே ஏற்ற கருத்தாகிறது.

அச்சாலினியைக் கொற்றவையாகக் கொண்டு, வழிபடுதலும் அங்ஙனம் வழிபடும் அவர்க்கு அக்கொற்றவை தானும் அருள் கூர்ந்து, அச்சாலினியின் மேல் எழுந்தருளி, அவள் நாவைத் தன்னாவாகக் கொண்டு, அவர்க்கு அருள் வழங்குவது பெறப்படும். அங்கு நின்ற கண்ணகியாரைத் தன் அருள் வாக்கால்,

‘இவளோ, கொங்கச் செல்வி குடமலை யாட்டி
தென் தமிழ்ப் பாவை செய்த தவக்கொழுந்து
ஒருமா மணியா உலகிற் கோங்கிய
திருமாமணி’

என்று அப்பத்தினித் தெய்வத்தின் எதிர்கால நிலைமையினையும், மாண்பினையும், வாய்மையாக எடுத்தோதிப் புகழ்தலும் ஆன நிகழ்ச்சிகளால் அறியலாம். இதே போன்று, நக்கீரரும் முருகக் கடவுள், குன்றுதொறும் ஆடும் வேலன் மேனின்ற பண்பினை உரைக்கிறார் எனலாம். பலமகளிர் கைகோத்துக் கொண்டு ஆடுவதைக் ‘குரவைக் கூத்து’ என்பர். குறிஞ்சி நிலத்து மகளிர் ஆடும் கூத்து ‘குன்றக் குரவை’ என்றும், முல்லை நிலத்து மகளிர் ஆடும் கூத்து ‘ஆய்ச்சியர் குரவை’ என்றும் கூறப்படும். ஆடலும் பாடலும், கந்தனுக்கும் கண்ணனுக்கும் ஏற்றவை.

'குரவைக் கூத்தே கைகோத்தாடல்' என்று பழைய சூத்திரம் கூறும். முருகப் பெருமான் பல மலைகளிலும் குன்றுகளிலும் ஆடும் இயல்பை உடையவன். குன்றுதோறாடல், ஒரு தலமன்று. மலைகளெல்லாம் சேர்ந்த ஒரு தொகுதி.

திருப்புகழில் கயிலைமலை, ஸ்ரீசைலம், திருவேங்கடம், திருத்தணிகை, வள்ளிமலை, திருக்கழுக்குன்றம், பேரைநகர், மயிலம், திருச்சிராப்பள்ளி, திருக்கற்குடி, இரத்தினகிரி முதலிய 32 குன்றுகள் குன்றுதோறாடலில் தொகுக்கப்பட்டுள்ளன. 'குன்றுதோறாடல்' என்பதற்கு ஒவ்வொரு குன்றிலும் விளையாடுதல் என்று பொருள் கூறலாம். அருணகிரிநாதர்,

'குன்று தொறாடல் மேவிய பெருமாளே' என்றும்
'குன்று தொறாடல் மேவு பெருமாளே' என்றும் பாடுகிறார்.

கச்சியப்பர்,

'குன்று தோறாடிய குமரற் போற்றுவோம்' என்று பாடுகிறார்.

மேலும் அருணகிரிநாதர்,

'பல குன்றிலும் அமர்ந்த பெருமாளே' என்றும் 'பல மலையுடைய பெருமாளே' என்றும் குமரன் குன்றுகள்தோறும் எழுந்தருளியுள்ள மேன்மையைக் கூறுகிறார். குன்றுதோறாடல் பகுதியில், அருணகிரிநாதர் பல இயற்கை எழில் நலக் காட்சிகளை இழைத்து, கண்ணிற்கும் கருத்திற்கும் விருந்து படைக்கிறார். ஒரு சான்று: விராலிமலைத் திருப்புகழில்,

விராலிமலையின் குகைகளில் முனிவர்கள் சமாதி நிலையில் உறைகின்றனர். அவர்கள் வெண்ணீறு அணிந்திருக்கிறார்கள். சடாமகுடம் தரித்திருக்கிறார்கள். பந்தபாசம் வென்ற சிந்தையர். மலையின் மேல் மயில்கள் ஆடுகின்றன. இனிய தேன் உண்டு வண்டுகள் பாடுகின்றன. இவ்வாடல் பாடல்களைக் கேட்டு உவந்து கொன்றை மரங்கள் தம் மலர்களாம் பொற்கட்டிகளை மிகுதியாகப் பரிசாக வழங்குகிற நலங் கூடிய விராலிமலை என்கிறார் :-

''வெந்த நீறு அணி வேண் இருடிகள்
பந்த பாச விகார பரவச

வென்றி ஆன சமாதி முறுகு கல் முழைகூடும்
விண்டுமேல் மயில்ஆட இனிய
கள்ளுண்டு கார் அளிபாட இதழி பொன்
விஞ்ச வீச விராலிமலை உறை பெருமாளே!''

**திருவாவினன்குடியில், முனிவரும் மூவரும் தேவரும் முருகனை வணங்குகிறார்கள். ஏரகத்தில், முருகனை, அந்தணர்கள் ஏத்துகிறார்கள் இங்கு, எளிய குறவர்களும், அவர் பெண்டிரும் வணங்குகின்றனர். ஆன்மாக்களின் பரிபக்குவ நிலைக்கு ஏற்றதாயிருக்கும் பக்திநிலை இங்குக் கூறப்படுகிறது. கல்லாத எளிய குறமக்களுக்கும் அருள் பாலிக்கிறார் முருகப்பெருமான். அப்பர்பெருமான் கூறுகிறார் :**

'தொடுத்த மலரொடு தூபமும் சாந்துங் கொண் டெப்பொழுதும்
அடுத்து வணங்கும் அயனொடு மாலுக்குங் காண்பரியான்
பொடிக்கொண்டணிந்து பொன்னாகிய தில்லைச் சிற்றம்பலவன்
உடுத்த துகில் கொண்ட கன்கொண்டு மற்றினிக் காண்பதென்னே !'

**அருணகிரிநாதர்,**

'அரிக்குஞ் சதுர்மறைக்கும் பிரமனுக்குந் தெரிவ ரிதான'

**என்று பாடுகிறார். இத்தகைய இறைவன் எளியவருக்கும் அவர் காட்டும் அன்பில் மகிழ்ந்து இன்பத்தைத் தருகிறான்.**

'இன்புற் றன்புற் றருள் வாயே' **என்பது அருணகிரிநாதர் திருவாக்கு.**

**அதாஅன்று - அதுவன்றியும்**

## பழமுதிர்சோலை

நிறைவாக பழமுதிர்ச்சோலை. இது ஆக்ஜைத் தலமாகும். முருகப்பெருமான், ஊர் தொறும் எடுக்கும் விழாக்களிலும், ஆர்வலர்கள் உள்ளத் திருக்கோயிலிலும், வெறியயர் களத்திலும், பிற இடங்களிலும் எழுந்தருளுகிறான் என்பதைக் கூறவருகிறார் நக்கீரர்,

'சிறுதினை மலரொடு விரைஇ மறிஅறுத்து
வாரணக் கொடியொடு வயிற்பட நிறீஇ
ஊர் ஊர் கொண்ட சீர்கெழு விழவினும்'

(218 - 220)

சிறிய தினைஅரிசியைப் பூக்களொடு கலந்து பிரப்பரிசியாக வைத்து, ஆட்டை அறுத்து, கோழிக் கொடியை நிறுத்தி, ஊர்கள்தோறும் எடுக்கும் தலைமை பொருந்தின விழாவிடத்தும் முருகன் இருப்பான்.

நக்கீரர், இதுவரை முருகனைத் திருப்பரங்குன்றத்தில் காணலாம்; திருச்சீரலைவாயில், அவன் அருள் பெறலாம்; திருவாவினன்குடியில் அவன் தங்கியிருப்பவன்; ஏரகத்தில் உறைபவன்; குன்றுகள் பலவற்றிலும் ஆடுபவன் என்று, இவ்வாறு அடுக்கிக் கொண்டே வந்தவர், இந்த ஆற்றுப்படைக்கு ஒரு நிறைவைத் தருவதுபோல் பழமுதிர்சோலையைக் கூறவருகிறார். நக்கீரர், மற்ற தலங்களில் உறைபவன், சேர்பவன், அசைபவன், உரியன், ஆடுபவன் என்று கூறிவந்தவர், இங்கு 'பழமுதிர்சோலை மலைகிழவோன்' அதாவது 'பழமுதிர் சோலைக்கு உரிமை உடையவன்' என்கிறார். ஆற்றுப்படுத்தப்படும் அன்பனுக்குப் 'பெறலரும் பரிசாகிய நிரதிசய வீட்டுலக இன்பத்தைத் தருபவன்' என்று நூலை நிறைவிக்கிறார்.

குன்றுதோறாடலில்- குன்றுகள் அவனுக்கு உரிமையானவை; அவன் குறிஞ்சிக் கடவுள் என்று கூறியவர், இப்பகுதியில் முருகப் பெருமான் உறையும் வேறு பல இடங்களையும் கூறுகிறார். சிறுசிறு ஊர்களில் அப்பெருமானுக்கு விழா எடுக்கிறார்கள். மலை நாட்டினர், தினை அரிசியையும் பூவையும் விரவி வழிபடுகிறார்கள். அந்நில மக்கள் வழக்கப்படி, ஆட்டுக்கடாவை வெட்டிப் பூசை போடுகிறார்கள். விழா ஆரம்பிப்பதைக் காட்டும் கொடி ஏற்றம் நடைபெறுகிறது. விழா நடைபெறும் இடத்தில், கோழிக் கொடியை நட்டு விழாவுக்குரிய அமைப்பை ஏற்படுத்துகிறார்கள் இம்மக்கள். இங்கு, சிறு தினை அரிசியைப் பூக்களோடே கலந்து பிரப்பரிசியாக வைப்பது கூறப்படுகிறது. தெய்வத்தின் முன்பு குறுணி வீதம் கொள்கலன்களில் நிவேதனமாகப் பரப்பி வைக்கும் தானியம் 'பிரப்பு' என்பதாகும். குறுந்தொகை, அகநானூறு போன்றவற்றில் இம்முறை கூறப்படுகிறது. குறிஞ்சிநிலக்கடவுள் ஆகிய முருகன் விழா, ஏனைய விழாக்களிலும் சிறந்தது. ஆதலின் 'சீர்கெழு விழவினும்' என்றார்.

இனி, அவன் உறையுமிடமாகிய ஆர்வலர் உள்ளத் திருக்கோயில் பற்றிக் கூறுகிறார் நக்கீரர்

''ஆர்வலர் ஏத்த மேவரு நிலையினும்'' (221)

தன்பால் அன்புகொண்டோர் வழிபட்டு ஏத்துதலாலே தன் மனம் பொருந்துதலை உடைய அவ்விடத்திலும் தோன்றுபவன்.

முருகப்பெருமானுக்கு அடிமையாம் பக்தர்கள், அவனையே நினைந்து 'வைத்தனன் தனக்கே தலையும் என்நாவும்' என வழுத்திடும் அன்பர்கள். அவர்களது உள்ளத்தில் உறைபவன் முருகன். அன்பு மட்டுமே வேண்டுபவன் அப்பெருமான்; அதனால் அன்பின் முதிர்ச்சியிலே உள்ள ஆர்வலர், எவ்விடத்தே நின்று தன்னை ஏத்தினரோ அவ்விடத்தேயும் அம்முருகப்பெருமான் தோன்றி அருள் செய்பவன். இது கருதியே, திருமுருகாற்றுப்படை வெண்பாவில்,

'அஞ்சு முகந்தோன்றின் ஆறு முகந்தோன்றும்
வெஞ்சமரில் அஞ்சலென வேல்தோன்றும் - நெஞ்சில்
ஒருகால் நினைக்கின் இருகாலுந் தோன்றும்
முருகாஎன் றோதுவார் முன்'

என்று புலவர் பாடியிருக்கிறார்.

**அருணகிரிநாதர், கந்தர் அலங்காரத்தில்,**

'செங்கேழ் அடுத்த சினவடி வேலும் திருமுகமும்
பங்கே நிரைத்தநற் பன்னிரு தோளும் பதுமமலர்க்
கொங்கே தரளம் சொரியும்செங் கோடைக் குமரனென
எங்கே நினைக்கினும் அங்கேவந் தென்முன்எதிர் நிற்பவனே'

(கேழ் - நிறம்)

**என்று பாடுகிறார்.**

**ஆர்வலர் நெஞ்சாகிய தாமரையில் எழுந்தருளுதல் அவ்விறைவனுக்குப் பெரிதும் விருப்பம் என்பதால்**

'மேவரு நிலை' **என்றார்.**

**திருவள்ளுவர்:**

'மலர்மிசை ஏகினான்' **என்றார்.**

**இனி, படிமத்தான் இழைத்த வெறியாடு களத்தினும் பிற இடங்களிலும் முருகன் எழுந்தருளுவதைக் கூறவருகிறார்.**

'வேலன் தைஇய வெறிஅயர் களனும்
காடும் காவும் கவின்பெறு துருத்தியும்
யாறுங் குளனும் வேறுபல் வைப்பும்
சதுக்கமும் சந்தியும் புதுப்பூங் கடம்பும்
மன்றமும் பொதியிலும் கந்துஉடை நிலையினும்'

**(222 - 226)**

**வேலன் அலங்கரித்த வெறியாடும் இடங்களிலும், காடுகளிலும், சோலைகளிலும், அழகுமிக்க ஆற்றிடைக்குறைகளிலும், ஆறுகளிலும், குளங்களிலும் மற்றும் வேறுபல ஊர்களிலும், நாற்சந்தியிலும், முச்சந்தியிலும், புதிய மலர்களையுடைய கடம்பமரத்தின் அடியிலும், ஊருக்கு நடுவில் பொதுவான மரத்தடியிலும், பொதுவான அம்பலத்திலும், அருட்குறியாக நடப்பட்ட தறியிடங்களினும் முருகன் வீற்றிருப்பான்.**

இங்கு, 'வெறி அயர்களன்' என்பது, வேன்மகன் முருகப் பெருமானுக்குக் களனிழைத்து வெறியாட்டயரும் இடம் என்பதாகும். பழங்காலத்தில் உடற்குறையோ, மனக்குறையோ உற்றவர்கள், அக்குறை நீங்க வெறியாடும் வேலனைக் கொண்டு வெறியாட்டு நிகழ்த்துவர். 'இக்குறை தெய்வத்தானே நேர்ந்தது' என்று எண்ணி, தெய்வத்திற்கு வெறியாட்டயர்ந்தால் தாம் உற்ற துயர் நீங்கும் என்ற கருத்தினர் அம்மக்கள். எதிர்காலத்தே நிகழப்போவதை முன்னரே அறிந்து கொள்ள விரும்புதலும் அன்னோர் மனநிலை, அவர்கள் அவ்வழி முருகப்பெருமானுக்கு வேலனைக் கொண்டு களன் இழைத்து மறியறுத்து மலர்சிதறி, நறுமணப்புகை சாந்தம் முதலியன கொடுத்து வழிபாடு செய்வர். அங்ஙனம் செய்யும்போது அக்கடவுள், அவ்வேலன்மேல் ஆவேசித்து ஆவனகூறி, அவர் குறையைப் போக்குதல் வழக்கமாம். ஆகவே, அகம், புறம் இரண்டிற்கும் பொதுவான நிகழ்ச்சியாகும் இவ்வெறியாட்டு அயர்தல். சிலப்பதிகாரத்தில்

'வெறியாடல் தான் விரும்பி வேலன் வருகென்றான்'

என்னும் நிலை கூறப்படுகிறது. அகப்பொருள் நூல்களில் வரும் வெறியாடல் குறிசொல்லுதல் போலாம்.

முன்பே கூறியவாறு, முருகென்னும் சொல் அழகு, இனிமை, இளமை, கடவுள் தன்மை ஆகிய பல பண்புகளை உணர்த்தும். எங்கெல்லாம் அழகுணர்ச்சி மிகுந்து புலனாகுமோ, அங்கெல்லாம் கடவுள் காட்சியே ஆன்றோர் மனத்திற்குப் புலனாகிறது. இதுவே பண்டைத் தமிழர்கள் கொண்டிருந்த கொள்கையாகும். இயற்கை அழகு செறிந்த இடங்கள் எல்லாம் முருகன் உறையும் இடங்களாகும்.

இப்பகுதியில் நக்கீரர் 'கவின் பெறு துருத்தி' என்ற இனிய சொல்லாட்சியைப் பயன்படுத்தி உள்ளார். துருத்தி என்பது ஆற்றிடைக்குறையைக் குறிக்கும். ஆற்றிடைக்குறை, நீர்வளனும், நிலவளனும் ஒருங்கே அமையப் பெற்று, மரஞ்செடிகொடிகள் மாண்புற்றோங்கி, கண்டோர் உள்ளத்தைக் கவரும் அழகு என்பதால் 'கவின் பெறுதுருத்தி' என்றார்.

அடுத்து, திருப்பரங்குன்றம் முதலிய ஊர்களிலன்றி வேறுபல ஊர்களிலும் முருகனைக் காணலாம் என்பதால் 'வேறுபல் வைப்பும்' என்று கூறுகிறார். 'வைப்பு'

என்பது 'ஊர்' என்பதாகும். அடுத்து, 'சதுக்கம்' என்பது 'நாற்சந்தியைக்' குறிக்கும்; சந்தி என்று மேலும் கூறியது முச்சந்தி, ஐஞ்சந்திகளைக் குறிக்கும். இச்சந்திகளிடத்தே முருகவேளுக்குத் திருக்கோயிலெடுத்து வழிபடுதல் வழக்கம். மன்றம் என்பது ஊர்மக்கள் கூடியிருக்கும் மரத்தடியைக் குறிக்கும். முருகப் பெருமானுக்கு உகந்த மலர் 'கடப்ப மலர்'. அம்மரக்கிளைப் 'புதுப்பூங் கடம்பு' என்றார். அப்பெருமான், கடம்ப மரத்தில் உறையும் தன்மையைப் பெரும்பாணாற்றுப் படையில் வரும்

'கடம்பமலர் நெடுவேள்' என்ற தொடராலும், பரிபாடலில் வரும்
'கடம்பமர்ந்து'
'கடம்பமர் அணிநிலை' என்ற ஆட்சியாலும் அறியலாம்.

தேவாரத்திலும் கந்தபுராணத்திலும் 'கடம்பமர் காளை' என்று முருகன் கூறப்படுகிறான். அடுத்து, கந்துடை நிலை என்பது பண்டைக் காலத்தே, ஊர்களில் இறைவணக்கம் செய்தல் பொருட்டு, கல்தறி, நட்டு அதன்மீது தெய்வத்தை ஏற்றி வணங்கி வந்தனர். இதுவே, பின்னாளில் இறைவனது உருவ வழிபாடாக ஏற்கப்பட்டது எனவும் கூறலாம். இத்தகைய கடவுள் தறியைப் பொது இடத்து நட்டனர். அக்கந்துருவினை மலர் முதலியவற்றால் ஒப்பனை செய்து, அங்கு மெழுகி, விளக்கு ஏற்றி ஊர் மக்கள் வணங்கினர். இதனைப் பட்டினப்பாலையில் வரும்

'கொண்டி மகளிர் உண்டுறை மூழ்கி
அந்தி மாட்டிய நந்தா விளக்கின்
மலரணி மெழுக்க மேறிப் பலர்தொழ
வம்பலர் சேக்கும் கந்துடைப் பொதியில்'

(பட்டினப். 249 - 9)

என்ற அடிகளால் அறியலாம்.

நச்சினார்க்கினியர், கந்துடை நிலை என்பதற்கு 'ஆதீண்டு குற்றியை உடைய இடத்தினும்' என்று உரை கூறுகிறார். யானைத் தறி என்றும் கூறுவர். தெய்வம்பல கோயில்கொள்ளும் திருமேனி ஆ, ஆதலின், ஆதீண்டு தறி, முருகன் உறையும் இடனாயிற்று என்பது நச்சினார்க்கினியர் திருவுள்ளம்.

இனி, குறமகள் செய்யும் வழிபாட்டு முறையைக் காண்போம்.

'மாண்தலைக் கொடியொடு மண்ணி அமைவர
நெய்யோடு ஐயவி அப்பி ஐதுஉரைத்துக்
குடந்தம் பட்டுக் கொழுமலர் சிதறி' (227 - 229)

இங்குக் குறமகள் முருகனை வழிபடுகிறாள். அவளோடு குறிஞ்சிநில மக்களும் உடன் கூடியிருக்கின்றனர். அக்குறமகள், அங்கு, மாட்சிமையுடைய தலைமை சான்ற கோழிக் கொடியை அமைக்கிறாள். நெய்யோடு வெண்சிறுகடுகை அப்புவள். வெளியே கேளாதபடி மந்திரத்தை உச்சரிப்பள். வணங்கி, அழகிய மலர்களைத் தூவுவள்.

வேலனைப் போன்றே, குறமகள் முருகனை வணங்குபவள். இவளைத் 'தேவராட்டி' என்பர். தெய்வம் ஆவேசித்து, அவள் மேல் வந்து அருள் செய்யும். முருகனுக்கு நடைபெறும் திருவிழாக்களில், குறமகள் இந்த வழிபாட்டையும் செய்கிறாள். இதற்கு 'வெறியாட்டு' என்பது பெயர். திருவிழா தொடங்குவதற்கு அடையாளமாகக் கொடிஏற்றுவது இன்றும் நம் திருக்கோயில்களில் நடைபெறும் நிகழ்ச்சி. இங்கு, மாட்சிமையும் தலைமையுமுடைய கோழிக்கொடி, மற்ற அலங்காரங்களுடன் நிறுத்தப்படுகிறது. 'ஆண்டலைக்கொடி' என்பதற்கு மயில்கொடி என்றும் கூறுவர். நச்சினார்க்கினியர், ஆண்தலைக்கொடி என்பதற்குப் 'பேய் முதலியன பலியை நுகராமல், தலை ஆண்மகன் தலையும், உடல் புள்ளின் வடிவுமாகவும் எழுதின கொடி என்க' என்று கூறுகிறார். அடுத்து, நெய்யையும் வெண்சிறு கடுகையும் அப்பி, ஓதும் மந்திரத்தை மறைவாக ஓதி வழிபட்டுக் கொழுவிய மலர்களைத் தூவி எனக் கூறப்படுகிறது. இங்கு, 'ஐயவி' என்பது வெண்சிறு கடுகைக் குறிக்கிறது. நெய்பூசி, வெண்சிறு கடுகு அப்புதலை 'ஐயவி யப்பிய நெய்யணி நெடுநிலை' என்று நெடுநல் வாடை கூறுகிறது. குடந்தம்படுதல் என்பது வணங்குதல் அதாவது, அஞ்சலி செய்தலாகும்.

'நால்விரல் முடக்கிப் பெருவிரல் நிறுத்தி
நெஞ்சிடை வைப்பது குடந்தமாகும்'

என்று ஒரு பழைய சூத்திரம் கூறுகிறது. சக்திவழிபாட்டில் (ஸ்ரீவித்யா) நான்கு விரலை மடக்கி கட்டை விரலை உயர்த்தி மார்பிலே வைத்து வழிபடுதல் முத்திரையுடன் வழிபடுதலாகும். பொதுவாக, 'குடந்தம்படுதல்' என்பது வழிபடுதலாகும். நமக்குக் கரங்களைத் தந்த இறைவனைக் கடிமா மலர் தூவி அர்ச்சித்து கைகூப்பித் தொழவேண்டும்.

இராமலிங்க அடிகள்,

'தோன்றலுன் திருமுன் குவித்த பெரியோர் கைகள்
சுவர்ண மிடுகின்ற கைகள்'

என்கிறார்.

இனி, குறமகள் தோற்றத்தையும் செயலையும் விளக்க வருகிறார் நக்கீரர்.

'முரண்கொள் உருவின் இரண்டுஉடன் உடீஇச்
செந்நூல் யாத்து வெண்பொரி சிதறி
மதவலி நிலைஇய மாத்தாள் கொழுவிடைக்
குருதியொடு விரைஇ தூவெள் அரிசி
சில்பலிச் செய்து பல்பிரப்பு இரீஇ'

(230 - 234)

மாறுபட்ட வடிவினை உடைய இருவேறு ஆடைகளை, உள்ளொன்றும் புறம் ஒன்றுமாக உடுத்தியிருக்கிறாள். அவள், தன் கையில் சிவந்த நூலைக் காப்பாகக் கட்டியிருக்கிறாள். வெண்பொரியைத் தூவி, வலிமிக்கதும் பெரிய காலை உடையதுமான கொழுத்த ஆட்டுக்கிடாயினது குருதியோடே பிசைந்த தூய வெள்ளரிசியைச் சிறுபலியாக இடுகிறாள். பல பிரப்பங் கூடைகளில் நிவேதனம் (திருவமுது) வைக்கப்படுகிறது. 'பிரப்பு' என்பதற்கு முன் கூறிய பொருளும் ஏற்புடையது.

இங்கு 'முரண்' என்பது, ஒன்றோடு ஒன்று நிறத்தானும் வடிவானும் மாறுபடுதலைக் குறிக்கும். இவ்வாறு மாறுபட்ட இரண்டு உடையை உள்ளொன்றும் புறம் ஒன்றுமாக உடுத்தியிருக்கிறாள் குறமகள்.

''சிறுபசு மஞ்சளொடு நறுவிரை தெளித்துப்
பெரும்தண் கணவீர நறுந்தண் மாலை
துணைஅற அறுத்துத் தூங்க நாற்றி
நளிமலைச் சிலம்பின் நல்நகர் வாழ்த்தி
நறும்புகை எடுத்துக் குறிஞ்சி பாடி''

(235 - 239)

சிறிய பசுமையான மஞ்சளோடு மணமிக்க நீரையும் தெளித்து, பெரிய குளிர்ந்த செவ்வலரி மாலைகளையும் ஏனைய பிற நறுமண மாலைகளையும் தம்மில் இணையொக்க அறுத்துத் தொங்க விடுவர். செறிந்த மலைப் பக்கத்துள்ள நல்ல ஊர்களைப் ''பசியும் பிணியும் பகையும் நீங்குக'' என்று வாழ்த்தி, நறுமணம் மிக்க தூபம் காட்டி, குறிஞ்சிப் பண்ணைப் பாடுகின்றாள் குறமகள். 'துணைஅற அறுத்து'என்பதற்கு எல்லா உரையாசிரியர்களும் 'தம்மில் ஒக்க அறும் வண்ணம் அறுத்து' எனப்பொருள் காண்பர். நச்சினார்க்கினியர் இக்கருத்தோடு 'தமக்கு ஒப்பில்லாதபடி அசையத் தூக்கி' எனவும் பொருள் காண்பர். 'நளிமலைச் சிலம்பின் நன்னகர் வாழ்த்தி' என்பதற்கு மலையின்கண் அமைந்த முருகப்பெருமானுடைய நன்றாகிய கோயிலை வாழ்த்தி என்றும் பொருள் கூறுவர். (துணை - தம்மில் ஒத்திருக்கும்படியாக ; அற - அறும்வண்ணம்; துணைஉற - தம்மில் ஒத்திருக்கும்படி - என்ற நச்சினார்க்கினியர் உரைக்கு இப்பாகமே பொருந்தும் எனத் தோன்றுகிறது.)

சிலப்பதிகாரத்தில்,

'பசியும் பிணியும் பகையும் நீங்கி
வசியும் வளனும் சுரக்கென வாழ்த்தி'

என்று கூறப்படுகிறது. அடுத்து நிகழ்வது கூறுகிறார் ஆசிரியர் :-

'இமிழ் இசை அருவியொடு இன்இயம் கறங்க
உருவப் பல்பூத் தூஉய் வெருவரக்
குருதிச் செந்தினை பரப்பிக் குறமகள்
முருகுஇயம் நிறுத்து முரணினர் உட்க
முருகுஆற்றுப் படுத்த உருகெழு வியன்நகர்'

(240 - 244)

முழங்குகின்ற ஓசையை உடைய அருவியோடு, இனிய இசைக்கருவிகளும் சேர்ந்து முழங்க, செந்நிற மலர்களைத் தூவி, இரத்தம் கலந்த சிவந்த தினையரிசியைப் பரப்பிவைத்து, முருகப்பெருமான் உவக்கும் இசைக்கருவிகளை ஒலிக்கச் செய்து 'இறைவன் இலன்' என்ற மாறுபட்ட கருத்துடையவர்களும் அஞ்சும்படியாக, தான் வந்து தோன்றுமாறு வழிப்படுத்தின. அச்சத்தைத் தருகின்ற மலைக்கோயில்களிலும் முருகன் உறைவான்.



'குருதிச் செந்தினை பரப்பிக் குறமகள்
முருகிய நிறுத்து முரணின ருட்க
முருகாற்றுப் படுத்த உருகெழு வியன்நகர்'

இங்கு, குறிஞ்சி நிலத்தில் வீழும் அருவி இனிய இசையை முழக்குகிறது; 'ஓம்' எனும் பிரணவ ஓசை என நாம் கூறலாம். இவ்வாறு அருவி எழுப்பும் இசைக்கு இயைந்தாற் போல் குறிஞ்சியாழ், தொண்டகம், சிறுபறை போன்ற வேறு பல இசைக் கருவிகளும் இசை எழுப்புகின்றன. இங்கு, இயற்றப்படும் திருவிழா ஏற்பாடு, கண்ணிற்கு விருந்தாக அமைகிறது. இசை, செவிக்கு உணவளிக்கிறது. வாசனைப் பொருள்களும் தூபமும் சேர்ந்து தெய்வ மணம் கமழச் செய்கின்றன. குறமகள் பல வண்ணமலர்களை இட்டுப் பரவுகிறாள். இரத்தத்தோடு கலந்த சிவந்த தினையரிசியைப் பரப்பியிருக்கிறாள். இரத்தம் பரவியிருப்பதால் சிலர் மனத்தில் ஓர் அச்ச உணர்வு ஏற்டுகிறது. இப்போது குறமகள்மேல், முருகன் ஆவேசிக்கிறான். அவள், மெய்மறந்து ஆடுகிறாள். பாடுகிறாள். எதிர்கால நிகழ்ச்சிகளைக் கூறுகிறாள். இச்சூழலில், கடவுள் கொள்கையினின்றும் மாறுபட்டோர் அஞ்சுகின்றனர். குறமகள் அப்பியும், வழிபட்டும், உடுத்தியும், காப்புக் கட்டியும், வெண்பொரி சிதறியும், சிறுபலியைக் கூடைகளில் பரப்பியும், தெளித்தும் மாலைகளில் தொங்கக் கட்டியும் குறிஞ்சிப் பண்ணைப் பாடியும், இசைத்தும், மலர்தூவியும் முருகப்பெருமானைப் பரவுகிறாள்.

இங்கு, குருதியைத் தினையரிசியோடு அளைந்தகாலை அதனைக் கண்டோர் அஞ்சுவர் என்பதால் 'வெருவரக் குருதிச் செந்தினை பரப்பி' என்று கூறப்படுகிறது. 'முரணினர்' , இறைப்பொருள் உண்டென்பாரோடு மாறுபட்டு, அஃதில்லை என்போர் ஆவர். ஆகவே, கடவுள் இல்லை என்போர் எக்காலத்தும் உண்டு என்பது அறியலாம். 'முருகாற்றுப் படுத்தலாவது' முருகன் தன் மேல் ஏறி ஆடப்பெறுதல். மக்கள்மேல் தெய்வம் ஏறியாடுதலைச் சிலப்பதிகாரத்தில் வரும் 'தெய்வ முற்றெழுந்த தேவந்திகைதான்' எனும் அடியால் அறியலாம்.

இனி, மக்கள் முருகப்பெருமானை வணங்கும் முறையைக் கூறவருகிறார் நக்கீரர்.

'ஆடுகளம் சிலம்பப் பாடிப் பலஉடன்
கோடுவாய் வைத்துக் கொடுமணி இயக்கி
ஓடாப் பூட்கைப் பிணிமுகம் வாழ்த்தி
வேண்டுநர் வேண்டியாங்கு எய்தினர் வழிபட
ஆண்டுஆண்டு உறைதலும் அறிந்த ஆறே'

(245 - 249)

இவ்வாறு வெறியாடும் இடம் எதிரொலிக்குமாறு பாடி, பலவகை ஊது கொம்புகளை ஒரு சேர ஊதி, வளைவுடைய மணிகளை ஒலிக்கச் செய்து, கெடாத வலிமை உடைய பிணிமுகம் என்னும் பட்டத்தினையுடைய யானையை வாழ்த்தி குறைவேண்டினோர் தாம் வேண்டியவற்றைப் பெற்றாற் போன்று நின்று வழிபாடு செய்ய, அவ்விடங்களில் தங்குதலும் உரியன். அப்பெருமானைக் காண்பதற்கு உரிய இடங்களை யான் அறிந்தபடியே கூறினேன் என்பதாகும்.

இங்கு ஓர் உயர்ந்த சொல்லாட்சியைப் பயன்படுத்துகிறார் நக்கீரர்.

'வேண்டினர் வேண்டியாங்கு எய்தினர் வழிபட' என்கிறார். முருகப்பெருமானை வழிபடுவோர் இவ்வுலக வாழ்வுக்குரிய இன்பங்களை விரும்புபவரும், அழிவற்ற வீடுபேற்றை விரும்புபவரும் எனப் பலதிறப்பட்ட அன்பர்கள். வேண்டத் தக்கது அறிவோனும், வேண்ட முழுதும் தருவோனும் இறைவன்.

'எண்ணிய எண்ணியாங்கு எவர்க்கும் நல்குவோன்' என்கிறது கந்தபுராணம். எனவே, வழிபட்டோர் வேண்டியது கைகூடப் பெறுவது உறுதி. எனவே, 'எய்துவர்' என்பதை 'எய்தினர்' என்று இறந்த காலத்தில் விரைவுப்பொருட்டதாகக் கூறினார். வேண்டியவற்றை எய்தி வழிபட என்றும் கூறலாம்.

'பிணிமுகம்' என்பதற்குப் பட்டத்து யானை என்பார் நச்சினார்க்கினியர். பிணிமுகம் என்பதற்கு 'மயில்' என்றே பிற உரையாசிரியர்கள் பொருள் கூறுவர். 'பிணிமுகம்' என்பது முருகன் ஏறும் யானை ஒன்றையே குறிக்கும் என்று நச்சினார்க்கினியர் கூறுகிறார். 'ஓடாப் பூட்கை' என்பதற்குக் கெடாத வலிமை என்பர் நச்சினார்க்கினியரும், பரிமேலழகரும்.

இனி ஆற்றுப்படுத்தும் நல்லாசிரியர், ஆற்றுப்படுத்தப்படும் புலவனை நோக்கி மேலே கூறப்பட்ட படை வீடுகளிலோ, பிற இடங்களிலோ அப்பெருமானை வாழ்த்தி உன் எண்ணத்தைக் கூறுவாயாயின், ஆங்குள்ள பணியாளர்கள் நின் வருகையை முருகக் கடவுளிடம் சென்று கூறுவர். அங்ஙனம் அறிவித்தவழி, அக்கடவுள் நின்முன் தோன்றி, முகமன் மொழிந்து, நீ வேண்டியதைத் தந்தருள்வன் என்று அறிவுறுத்துகிறார்.

முருகப்பெருமானைக் கண்டபொழுது செய்யவேண்டியது:-

''ஆண்டுஆண்டு ஆயினும் ஆக காண்தக
முந்துநீ கண்டுழி முகன்அமர்ந்து ஏத்திக்
கைதொழூஉப் பரவிக் கால் உற வணங்கி''

(250 - 252)

யான், முன் கூறிய இடங்களிலாயினும் பிற இடங்களிலாயினும், நீ அப்பெருமானை முற்படக் கண்டபொழுது, முகத்தால் விரும்பி நோக்கி, வாயால் வாழ்த்தி, கைகளைத் தலைமேல் குவித்துத் துதித்து, தலை அவன் திருவடிகளில் பட வீழ்ந்து வணங்குவாயாக என்பதாகும். இதுவரை முருகனைக் காணப் புறப்பட்ட ஆர்வலனை நக்கீரர் முதலில் உற்சாகப்படுத்துகிறார். 'எம்பெருமானைக் காணவேண்டும்' என்ற உன் செயல் இனியது; ஏற்றமானது. நீ நினைத்த இக்காரியத்தில் இப்போதே வெற்றியடைவாய் என்று கூறிவிட்டு, அவன் திருப்பரங்குன்றம், திருச்சீரலைவாய், திருவாவினன்குடி, திருவேரகம் என்னும் இடங்களிலும் மற்றும் குன்றுகள்தோறும் இருந்து அருள்புரிபவன்; கோவில் உள்ள இடங்களிலும் இல்லாத வேறு இடங்களிலும், அவன் கோழிக் கொடி பறக்கும். அவன் கொற்றம் சிறக்கும்; காடு, சோலை, ஆறு, குளம் என்று இயற்கையில் அவன் இயைந்து காணப்படுவான். அப்பெருமான் வெறியாடும் படிமத்தான் மீதும், குறமகள் மீதும், ஆவேசித்து எளியவர்களுக்கு இன்சொல்கூறி நம்பிக்கை ஊட்டுவான்; உருவாகத் தெரிவான்; அருவாகத் திரிவான்; உளதாக இருப்பான்; இலதாகவும் இருப்பான்; ஆர்வலர் உள்ளத்தில் உறைவான். பக்தி முற்றிய நிலையாகிய பக்குவம் எய்தியவர்களுக்கு எப்போதும் இறை உணர்வே மேலிடும்:-

'எத்தொழிலைச் செய்தாலும் ஏதவத்தைப் பட்டாலும்
முத்தர் மனமிருக்கும் மோனத்தே' என்பர்.

அவன் எங்கும் நீக்கமற நிறைந்தவன்; ஆதலால், நான் முன் கூறிய இடங்களிலும் பிற இடங்களிலும் அப்பெருமானைக் காணலாம்.

அப்பெருமானை முற்படக் கண்டபொழுது, முகத்தால் விரும்பிநோக்கி, வாயாலே புகழ்ந்து வாழ்த்தி, கையைத் தலைக்குமேலே குவித்துத் தொழுது, திருவடிகளிலே வீழ்ந்து

வணங்கவேண்டும் என்று அறிவுறுத்துகிறார் நக்கீரர். சேக்கிழார்பெருமான் திருநாவுக்கரசுசுவாமிகள் தில்லைக் கூத்தனை வழிபட்டமுறையைக் கூறுகிறார்:-

'கையுந் தலைமிசை புனை அஞ்சலியன
கண்ணும் பொழி மழை ஒழியாதே
பெய்யுந் தகையன கரணங்களும் உடன்
உருகும் பரிவின பேறெய்தும்
மெய்யுந் தரைமிசை விழுமுன்பு எழுதரும்
மின்தாழ் சடையொடு நின்றாடும்
ஐயன் திருநடம் எதிர் கும்பிடு -மவர்
ஆர்வம் பெருகுதல் அளவின்றால்

(பெரியபுராணம் - திருநாவு - 267)

இப்பாடலின் பொருளாவது:-

அவருடைய கைகளும் தலையின்மீது புனைந்த அஞ்சலியாகக் குவிந்தன; கண்களும் இடைவிடாமல் பொழியும் மழைபோல் நீரைப் பெய்யும் இயல்புடையன ஆயின; உட்கரணங்களும் உருகும் அன்பை உடையன ஆயின; பேறு அடையும் திருமேனியும் நிலத்தின் மீது விழுமுன்னரே எழுகின்றதாகும். மின்போல் தாழ்ந்து விளங்கும் சடையுடன் நின்று ஆடுகின்ற இறைவரின் திருக்கூத்தைக் கும்பிடும் ஆர்வம் பெருகும் நிலை அளவில் கூடாததாக விளங்கியது.

நக்கீரர், 'ஆண்டாண்டாயினுமாக' என்றார். இறைவன் இவ்விடத்துளன், இவ்விடத்து இலன் என்று வரையறுத்துக் கூறப்படாதவன்; அவன் எங்கும் நீக்கமற நிறைந்துள்ளான்; அன்பர் விழைந்த பொழுது விழைந்த இடத்தே வெளிப்பட்டு அருளுபவன். ஆதலால் 'ஆண்டாண்டு ஆயினுமாக' என்று கூறுகிறார். உள்ளத்தில் உள்ள ஆர்வம் முகத்திலே வெளிப்பட்டுத் தோன்றும்படி 'முகனமர்ந்து' என்று கூறுகிறார்.

இனி முருகப்பெருமானைத் துதிக்கும் சொன்மலர்களைத் தொடுத்துக் கூறிப் புலவரை ஆற்றுப் படுத்துகிறார் நக்கீரர்.

''நெடும்பெருஞ் சிமையத்து நீலப் பைஞ்சுனை
ஐவருள் ஒருவன் அங்கை ஏற்ப
அறுவர் பயந்த ஆறுஅமர் செல்வ!
ஆல்கெழு கடவுள் புதல்வ! மால்வரை

மலைமகள் மகனே ! மாற்றோர் கூற்றே!
வெற்றி வெல்போர்க் கொற்றவை சிறுவ!
இழைஅணி சிறப்பின் பழையோள் குழவி''

(253 - 259)

நெடிய பெரிய இமயத்தின் சரவணப் பொய்கையில் விசும்பும் வளியும் தீயும் நீரும் நிலனுமாகிய ஐவருள் ஒருவனாகிய தீ தன் அங்கையால் ஏற்ப, கார்த்திகைப் பெண்கள் அறுவரும் பெற்றுத் தாங்கிய ஆறு வடிவு பொருந்திய செல்வனே! கல்லாலின் கீழிருந்த கடவுளின் புதல்வனே! பெருமை உடைய மலையரசன் மகளுடைய மகனே! பகைவர்க்குக் கூற்றம் போன்றவனே! வெற்றியைத் தரும் போரைச் செய்யவல்ல துர்க்கையின் புதல்வனே!

நக்கீரர், இங்கு ஒவ்வோர்அடியிலும் ஒரு புராண வரலாற்றையே அடக்கிக் கூறுகிறார் போல் தோன்றுகிறது. இப்பகுதி, முதலில் முருகப்பெருமான் சரவணப் பொய்கையில் தோன்றிய வரலாற்றை நினைவு கூருகிறது. முன்பே கூறியவாறு வான்மீகம், பாரதம், பரிபாடல் போன்ற நூல்களும், வடமொழிஸ்காந்தம், தமிழில் கந்தபுராணம் ஆகிய வைகளும் முருகப்பெருமானின் திருவவதார வரலாற்றைக் கூறுகின்றன. ஆனால் இவை கூறும் புராண வரலாற்றில் பல வேறுபாடுகள் உள்ளன. உலக நலங்கருதி கடவுள் பஞ்சபூதங்களில் பரவெளியினின்று வெளிப்பட்டுக் காற்று, கனல், புனல், மண் இவற்றின் வழியாகத் தோற்றம் பெறுகிறான் என்பது முருகப்பெருமானின் திரு அவதாரத் தத்துவமாகும்.

மலைகளில் பெரியதும் உயர்ந்ததுமானது இமயமலை. ஆதலின் 'நெடும் பெருஞ்சிமையம்' என்றார். 'சிமையம்' என்பது உச்சியைக் குறிக்கும். நீலப்பைஞ்சுனை என்றது நீலநிறமான தருப்பை வளர்ந்த பசிய சுனை. தருப்பை சரவணமாகும். சுனை என்பது சரவணப் பொய்கையைக் குறிக்கும். அதனிடத்தில் தோன்றியதால் சரவணபவன் என்பது முருகக் கடவுளின் பெயராயிற்று. 'ஐவர்' என்றது நிலனும் நீரும் தீயும் காற்றும் வெளியுமான ஐந்து பூதமாகிய தெய்வங்களைக் குறிக்கும். இப்பூதங்களுக்கு அதிதெய்வமானவர் முறையே அயனும், அரியும், உருத்திரனும், மயேச்சுரனும், சதாசிவனும் ஆவர். ஐவருள் ஒருவன் உருத்திரனைத் தெய்வமாகக் கொண்ட தீ என்று கூறலாம். அக்னி முதலில் சிவபிரான் கண்களிலிருந்து வெளிப்பட்ட தீப்பொறிகளாக ஏற்று வந்தான். அதனால் முருகன் 'அக்னிகுமாரன்' என்றும் 'அக்னிபூ' என்றும் அழைக்கப்படுகிறான். இறைவனிடமிருந்து உண்டான ஆறு தீப்பொறிகளை

அக்கினிதேவன் சுமந்து சென்று கங்கையில்விடுக்க, அவை சரவணப்பொய்கையை அடைந்து, ஆறு குழந்தைகளாகக் கார்த்திகைப் பெண்கள் வளர்க்க வளர்ந்தன என்று கூறப்படுகிறது. கார்த்திகைப் பெண்கள் அறுவரும் முருகப்பெருமானைப் பாலூட்டி வளர்த்தவர்கள்.

இதுவே வேறுவிதமாகப் பரிபாடலில் கூறப்படுகிறது. இதனை நச்சினார்க்கினியர் குறிப்பிடுவர். இறைவனிடத்தினின்றும் இந்திரன் வாங்கிய கருவினைச் சப்தரிஷிகள் தாங்கமுடியாது, முத்தீக் குண்டத்திலிட்டுத்தரவே, பிறகு அருந்ததி நீங்கலாக மற்ற ஆறு ரிஷிபத்தினிகளும், அதனை விழுங்கிக் கருவுற்றுச் சரவணப்பொய்கையில் பதுமப் பாயலிலே ஆறு வடிவாக முருகனை ஈன்றனர் என்பது அது. ஆறு தீப்பொறிகளிலிருந்து பிறந்த முருகனை அறுவரான கார்த்திகை மாதர் பாலூட்டி வளர்த்தமையை உபசார வழக்காகக் கொள்ளலாம்.

கண்ணனைப் பெற்றவள் தேவகி. ஆனால் வளர்த்தவள் யசோதை. பெரியாழ்வார் பாசுரத்தில் யசோதை கண்ணனை நோக்கிப் 'பெற்ற எனக்கருளி' எனக் கூறும் உபசார வழக்குப் போன்றதே இங்கும் கூறப்படுவதாகக் கொள்ளலாம். எப்படி இருப்பினும் கார்த்திகைப் பெண்கள் பாலூட்டிய சிறப்பினால் அவர்களுக்குச் சிறப்பிடம் அளிக்கப்படுகிறது. 'அறுவர் பயந்த ஆறமர் செல்வ' என்றார். முருகன் அன்பர்கள், கார்த்திகை விரதம் மேற்கொள்கிறார்கள்; கார்த்திகை மாதரால் வளர்க்கப்பட்டதால் முருகன் 'கார்த்திகேயன்' என்று அழைக்கப்படுகிறான். கந்தபுராணத்தில் முருகன் 'கார்த்திகைக் காதலன்' என்று போற்றப்படுகிறான். இங்கு 'ஐவர்' என்றும் 'அறுவர்' என்றும் தொகைக்குறிப்பு மொழிகளை வைத்துப் பாடலை இயற்றியிருக்கும் நக்கீரர் புலமை நலன் பாராட்டிற்குரியது. மகாகவி காளிதாசன் இரகு வம்ச காவியத்தில் சர்க்கம் 14இல் 22 ஆம் சுலோகத்தில், இராமன் தன் தாய்மார்களிடம் மிகவும் அன்பாக இருந்த உயர்வை விளக்கும் கவிஞன் கார்த்திகை மாதர் அறுவரிடம் அன்பு கொண்டிருந்த முருகன் போல் இராமன் கொண்டிருந்த அன்பைக் கூறுகிறான்.

அடுத்து, இறைவன் கல்லால மரத்தடியில் தட்சிணாமூர்த்தியாய் அமர்ந்து சனகாதி முனிவர் நால்வருக்கும் அறம் உரைத்தமையால் 'ஆல்கெழு கடவுள்' என்றார்.

மணிவாசகப் பெருமான் திருச்சாழல் பகுதியில்,

'நன்றாக நால்வர்க்கும் நான்மறையின் உட்பொருளை
அன்று ஆலின்கீழ் இருந்தங் கறமுரைத்தான் காணேடி
அன்றாலின் கீழிருந்தங் கறமுரைத்தான் ஆயிடினுங்
கொன்றான்காண் புரமூன்றுங் கூட்டோடே சாழலோ!''

என்று பாடுகிறார்.

இறைவன் தட்சிணாமூர்த்தியாய், குருமூர்த்தமாய் அமர்ந்ததால் உலகம் காம உணர்வின்றி இருந்தது. தேவர்களுக்குச் சிவகுமாரன் மூலம் அசுரர் பகை வெல்ல வேண்டிய அவசியமும் அவசரமும் ஏற்பட்டன. சிவபெருமான்மீது மாரனை மலரம்புகளை ஏவிடப் பணிக்கிறார்கள்; சிவபெருமான் நெற்றிக் கண்ணால் காமனை எரித்தார்; பின் பார்வதி திருமணம் நடைபெறுகிறது. இறைவன் திருக்கண்களினின்றும் தோன்றிய நெருப்புப்பொறிகளினின்றும் கந்தப்பெருமான் திருவவதாரம் நடைபெறுகிறது. இப்புராண வரலாற்றை 'ஆல்கெழு கடவுட் புதல்வ' என்று சுட்டுகிறார். முருகன் சரவணத்தில் ஆறு திருவுருவங் கொண்டு திருவிளையாடல் புரிந்தான். சிவபெருமான் சக்தியை அழைத்துக் கொண்டு சரவணத்திற்குச் செல்கிறார். சக்தி வடிவான அன்னை பார்வதி, ஆறுகுழந்தைகளையும் ஒரு சேர அணைத்தாள். அப்போது முருகப் பெருமான், ஓராறுமுகம் ஈராறு கரங்களுடன் விளங்கினான். இதைக் கந்தபுராணம் மிக அழகாகக் கூறுகிறது:-

'எந்தை சத்திகள் உயிரெலாம் ஒடுங்குறும் எல்லை
முந்து போல ஒன்றாகியே கூடிய முறைபோல்
அந்த மில்லதோர் மூவிரு வடிவும் ஒன்றாகிக்
கந்தன் என்றுபேர் பெற்றனன் கவுரிதன் குமரன்'

(சரவணப் படலம்)

அதாவது, உயிர்கள் எல்லாம் சர்வசங்கார காலத்தில் ஒடுங்கும்போது, இறைவனுடைய சக்திகள் ஒன்றுபடுவது போல், அம்பிகை ஆறுகுழந்தைகளையும் அணைத்தபோது ஆறு திருவுருவங்களும் ஒன்று கூடின. அதனால் முருகன், கந்தன் என்று பெயர் பெற்றான். அதனால் 'மால்வரை மலைமகள் மகனே' என்றார் நக்கீரர்.

பின் சிவனார் முருகனை எடுத்துச் சக்தியுடன் தம் பக்கத்தில் இருத்தியருள, சிவபிரான் சோமாஸ்கந்த மூர்த்தியாக ஆனார். மால்வரை என்பதற்குப் பெருமையை உடைய மலை என்று பொருள் கூறுகிறார் நச்சினார்க்கினியர்.

இதுவரை முருகப்பெருமானின் திருவவதாரத்துடன் தொடர்புடைய மூன்று திருநாமங்களைக் கூறினார் ; இனி அப்பெருமானின் வீரத்தை விளக்கும் திருநாமங்களைக் கூறுகிறார். முருகப்பெருமான் வீரருள் வீரன். அருணகிரிநாதர் 'முத்தைத் தரு' திருப்புகழில்

'கொட்புற்றெழ நட்பற்றவுணரை
வெட்டிப் பலியிட்டுக் குலகிரி
குத்துப்பட வொத்துப் பொரவல பெருமாளே'

என்ற தொடர்களிலிருந்தும், பின்னர் வரும் திருப்புகழ் பலவற்றாலும் முருகனின் வீரச் சிறப்பை உணரலாம்.

இங்கு நக்கீரர் 'பகைவர்க்கு எமன் போன்றவனே' என்ற பொருளில் 'மாற்றோர் கூற்றே' என்றார். சக்தியின் வேறுவேறு வடிவங்களாகத் துர்க்கையையும், காடுகிழாளையும் கூறுவர். கொற்றவை, வெற்றியின் அதிதெய்வம்; மகிடாசுரனை வென்றவள்; 'வெற்றிக் கொற்றவை' என்றும் 'வெல்போர்க் கொற்றவை' என்றும் அழைக்கப்படுபவள். நச்சினார்க்கினியர் கொற்றவை என்பதற்கு 'வனதுர்க்கை' என்று பொருள் கூறுகிறார். வீரர்கள் போரில் வெற்றிபெறக் கொற்றவையை வழிபடுவது மரபு. அதனால் வெற்றித் திருமகளான கொற்றவை பெற்ற சிறுவன் முருகன். அவனும் வெற்றியைத் தருபவன். அடுத்து, அன்னை பராசக்தியின் திருமகன் அவன். பராசக்தி மேலான சக்தி. இராசேசுவரி, திரிபுரசுந்தரி என்று கூறப்படுபவள். அவள் அணிகலன்களுடன் ஒளிர்கிறாள். அம்பிகையின் திருநாமங்களில் 'புராதநா' என்பதும் ஒன்று; அதற்குப் பழையோள் என்பது பொருள். அணிகலன்களை அணிந்த சிறப்புடைய ஆதியில்லாத பழையவளாகிய பராசக்தியின் குழந்தையே என்று, 'இழையணி சிறப்பிற் பழையோள் குழவி' என்றார். நக்கீரர் திருஈங்கோய்மலை எழுபதில் 'முது தாதையார்' என்று கூறுகிறார். இறைவன் ஆதி அந்தம் அற்றவன். போக்கும் வரவும் இல்லாப் புண்ணியன். புறநானூறு, இறைவன் 'நிமிர்சடை முதுமுதல்வன்' என்று கூறுகிறது. 'முளைத்தானை எல்லார்க்கும் முன்னே தோன்றி' என்பது அப்பர் திருவாக்கு. எனவே இறைவன் போன்று இறைவியும் ஆதியந்தமில்லாதவள். மணிவாசகப்பெருமான் 'முன்னைப் பழம் பொருட்கும் முன்னைப் பழம் பொருளே' என்றும் 'பழையன் காண்க, பரமன் காண்க' என்றும் கூறுகிறார்.



'பலர்புகழ் நன்மொழிப் புலவ ரேறே!'

இவ்விடத்தில் கந்தபுராணத்தில் தாரகன் கந்தக் கடவுளை 'கற்பனை கடந்த ஆதிக் கடவுளே இவன்கொல்' என்று வியப்பது நோக்கற்பாலது.

அடுத்து, முருகனின் சிறப்புகளை மேலும் அடுக்கிக் கூறுகிறார் நக்கீரர்.

''வானோர் வணங்குவில் தானைத் தலைவ!
மாலை மார்ப! நூல்அறி புலவ!
செருவில் ஒருவ! பொருவிறல் மள்ள!
அந்தணர் வெறுக்கை அறிந்தோர் சொல்மலை!
மங்கையர் கணவ! மைந்தர் ஏறே!
வேல்கெழு தடக்கைச் சால்பெருஞ் செல்வ!
குன்றம் கொன்ற குன்றாக் கொற்றத்து
விண்பொரு நெடுவரைக் குறிஞ்சிக் கிழவ!
பலர்புகழ் நன்மொழிப் புலவர் ஏறே!
அரும்பெறல் மரபிற் பெரும்பெயர் முருக!''

(260 - 269)

வளைந்த வில்லை உடைய வானவர் படைக்குத் தலைவனே!
கடப்பமாலையை அணிந்த மார்பினை உடையோனே!
எல்லா நூல்களையும் அறிந்த புலவனே!
போரில் ஒப்பற்றவனே!
பொருது வெல்லும் ஆற்றலை உடைய வீரனே!
அந்தணர்களுக்குச் செல்வமாயிருப்பவனே!
அறிவாளர்கள் புகழ்ச்சிச் சொற்களெல்லாம்
ஒன்றாகக் குவிந்த மலையே!
தெய்வயானையும், வள்ளியுமான
மகளிர்க்குக் கணவனே!
மறவர்களுள் அரியேறு போன்றவனே!
வேல் தரித்த நீண்ட கையினையுடைய பெருஞ் செல்வனே!
கிரவுஞ்சம் என்னும் மலையை அழித்த குறையாத ஆற்றலை உடையவனே!
ஆகாயத்தை அளாவும் பெரிய மலைகள் கொண்ட
குறிஞ்சிநிலத் தலைவனே! பலரும் புகழ்ந்து போற்றும்

நன்மொழிகளை உடைய புலவர்கட்கு ஆண் சிங்கம் போன்றவனே!
பிறரால் பெறுவதற்கு அரிய இலக்கணங்களை உடைய
பெரிய பெயரையுடைய முருகனே!

முருகப்பெருமான் தேவர்கள் படைத்தலைவன் என்பதால் 'தேவசேனாபதி' என்று அழைக்கப்படுகிறான். வேலாயுதத்தோடு வேறு பல ஆயுதங்களையும் ஏந்துபவன். அவன் வில்லும் ஏந்தும் வீரன். தேவர்கள் வணங்குகின்ற விற்படைத் தலைவன் முருகன். அதனால் 'வானோர் வணங்குவில் தானைத்தலைவ!' என்றார் நக்கீரர். முருகனுடைய திருக்கரத்தில் வில்லும் உண்டு என்பதை, அருணகிரிநாதர், திருப்புகழில், 'சூலம்வாள் தண்டு செஞ் சேவல் கோதண்டமும் சூடு தோளும்' என்று பாடுகிறார். சாய்க்காடு , திருவையாறு முதலிய தலங்களில் வில்லேந்திய சுப்பிரமணியரைக் காணலாம். அப்பெருமான் போகத்துக்குரிய கடம்பமாலை அணிந்திருப்பதால் 'மாலை மார்ப' என்றார்.

முருகன் ஞான பண்டிதன்; முற்றும் உணர்ந்தவன். எல்லா மொழிகளும் அவன் அருளால் தோன்றியவை; முருகனிடம் பாடம் கேட்ட மூவரில் அகத்தியரும் ஒருவர்; அகத்தியருக்குத் தமிழ் இலக்கணஇலக்கியங்களை அறிவுறுத்தியவன் முருகன். முருகன் 'அருங்கலா விநோதன்'. அருணகிரிநாதர் திருப்புகழில்,

''சிவனை நிகர் பொதியவரை முனிவனக மகிழஇரு
செவிகுளிர இனிய தமிழ் பகர்வோனே''

என்று பாடுகிறார். அருணகிரிநாதர் 'சம்புவின் குமரன் புலவன்' என்றும் (மஞ்செனுங் குழலும் திருப்புகழ்) 'அருமறை தமிழ்நூல் அடைவே தெரிந்துரைக்கும் புலவோனே' எனவும் பாடுகிறார். மேலும் 'தமிழ் சோதித்து' என்றும் பாடுகிறார். 'முருகப்பெருமான் 'முத்தமிழால் வைதாரையும் வாழவைப்போன்'. எல்லா மொழிகளிலும் உள்ள நூல்களையும் அறியும் ஞானச் செல்வன் என்பதால், 'நூலறி புலவ' என்றார். அதாவது முருகப் பெருமான் தன் அன்பர்கள், மெய்நூலுணர்ந்து கட்டறுத்து வீடுபெறும் பொருட்டு அவர் உயிரோடு ஒன்றி நின்று அவர் உணருமாறு தானும் அம்மெய்நூல்களை உணர்வோன் என்பதாகும். பாண்டியன் வேண்டுகோளுக்கிணங்கி 'இறையனார் அகப்பொருளை இயற்றி அருளினார் சிவபெருமான். அதற்குச், சங்கப் புலவர்கள் 49 பேர்கள் உரை வகுத்தனர்.

அவ்வுரைகளுள் நக்கீரர் உரையே சிறந்தது என்று முருகன் அம்சமான உருத்திரசன்மன் தேர்ந்தெடுத்தான். ''இந்த உரைதான் சிறந்தது' என்று தேர்ந்தெடுத்து உதவியதை எண்ணியும் 'நூலறி புலவ' என்றார் எனக் கொள்ளலாம்.

கந்தபுராணத்தில்,

'சங்கத்தவர்க்குள் தலையாந் தமிழ்ப் புலவன்' என்று கூறப்படுகிறது.

முருகப்பெருமான் உவமிக்கவியலாத தனி வீரன். கந்தபுராணம்,

'மேவலர் மடங்கல் வந்தான்
வேற்படை வீரன் வந்தான்'
(சிங்கமுகாசுரன் வதைப்படலம்)

என்று கூறுகிறது. அதாவது பகைவர்கள் என்னும் யானைகளுக்கு ஆண் சிங்கமாய் வந்தான்; வேற்படை வீரன் வந்தான் என்பது பொருள். நக்கீரர் உவமிக்கவியலா ஒரு தனி வீரனாய் முருகன் இருப்பதைச் 'செருவில் ஒருவ' என்றார். அடுத்து, முருகனின் வீரத்தையும் இளமையையும் கூறுகிறார் நக்கீரர். 'பொருவிறல் மள்ள' என்கிறார் நக்கீரர். அதாவது 'பொருகின்ற வெற்றியை உடைய வீரனே' என்பது பொருள். சிவஞான சித்தியாரில், கடவுள் வாழ்த்துப் பகுதியில் முருகப்பெருமான்,

'பொருமறையார் கழல்வீரர் வீரன்' என்று போற்றப்படுகிறான். அடுத்து முருகப் பெருமான், அந்தணர்களுக்குச் செல்வமாகும் பேற்றைக் கூறுகிறார் நக்கீரர்.

இந்துமதம் வேதத்தை அடிப்படை நூலாகக் கொண்டது சைவம். வைணவம், சாக்தம், கௌமாரம், காணாபத்தியம், ஸௌரம் என்ற வழிபாடுகளும் அத்வைதம், துவைதம், விசிஷ்டாத்வைதம், சைவசித்தாந்தம் முதலிய சமய நெறிகளும், வேறு வேறாக இருந்தாலும் எல்லாவற்றிற்கும் பொதுவான நூலாக நிலவுவது வேதம். சமய நெறிகள் நிலவ, வேதம் காப்பாற்றப்பட வேண்டும். வேள்வியினால் உலகம் நன்மை பெறுகிறது. மதுரையில் நின்றசீர் நெடுமாற பாண்டியனைச் சமணத்தினின்றும் மீட்டுச் சைவம் தழைக்கப் பாடுபட்டவர் திருஞானசம்பந்தர். அவர் திருமறைக்காட்டினின்றும்

மதுரை சென்று சமணர்களுடன் வாது செய்யுமுன், ஆலவாய் அண்ணலை எண்ணுகிறார்:-

'வேத வேள்வியை நிந்தனை செய்துழல்
ஆதமில்லி அமணொடு தேரரை
வாது செய்தழிக்கத் திருவுள்ளமே
பாதி மாதுடன் ஆய பரமனே' என்று பாடுகிறார்.

அந்தணர்கள், முருகப்பெருமான் அருளீட்டத்தால் வேதத்தையும் வேள்வியையும் காக்கிறார்கள். அதனால் முருகப்பெருமான் அவர்களுக்குச் செல்வமாக இருக்கிறான். இங்கு, 'அந்தணர்' என்றது இறைபணி நின்ற மெய்க் காட்சியாளர்களைக் குறிக்கும். இத்தகைய மெய்க்காட்சியர்களுக்கு, இறைப்பொருள் ஒன்றே மெய்ப்பொருள். அதனால், அவ்விறைவனே 'செல்வம்' என்று கூறப்படுகிறான். இனி, முருகப்பெருமானைப் பரம்பொருளாகப் பற்றும் ஞானியர் போற்றுகிறார்கள்; புகழ்கிறார்கள். மெய்ப்பொருள் உணர்ந்தோர் கூறும் நூல்களின் தொகுதி அவன். மெய்நூல்களும் அவனே. அதனால் 'அறிந்தோர் சொன்மலை' என்று போற்றப்படுகிறான் அப்பெருமான். இப்பகுதிக்கு உரைகூறும் நச்சினார்க்கினியர் 'சான்றோர் புகழ்ந்து சொல்லப்படும் சொற்களின் ஈட்டமாயிருப்பாய்' என்று கூறுகிறார். அடுத்து, முருகப்பெருமானின் வலிமையைக் கூறவருகிறார் நக்கீரர். வலியவருள் மிக்க வலியவன் முருகன். 'மங்கையர் கணவ! மைந்தர் ஏறே! 'என்று கூறுகிறார். இங்கு மங்கையர் என்பது வள்ளியம்மையாரையும், தெய்வானை அம்மையாரையும் குறிக்கும். அதாவது இச்சா சக்தியும் கிரியா சக்தியும் உடையவன்; இந்த இரு மங்கையர்க்கும் கணவனாக இருக்கும் சிறப்பினால் ஏனைய மைந்தர்களைவிடச் சிறப்பானவன். அவன் கையில் இருக்கும் வேல், ஞானசக்தியைக் குறிப்பது அது. ஞானமே வேல். அறிவு கூர்மையானது. சிவபுராணம் 'கூர்த்த மெய்ஞ் ஞானத்தால்' என்கிறது. வேல்படைக்கலங்களில் சிறந்தது. பல வெற்றிகளை ஈட்டித் தந்தது. இச்சை, கிரியை, ஞானமென்னும் மூன்று சக்தியையும் உடையவன் முருகன். ஞான சக்தியைச் செல்வமாக உடையவன் என்பதால் 'வேல்கெழு தடக்கைச் சால்பெருஞ் செல்வ' என்றார். அடுத்து, முருகன் கிரவுஞ்ச மலையை அழித்த வரலாற்றைக் கூற வருகிறார் நக்கீரர்.

'குன்றம் கொன்ற குன்றாக் கொற்றத்து
விண்பொரு நெடுவரைக் குறிஞ்சிக்கிழவ'

என்று பாடுகிறார். இங்கு குன்றம் என்பது கிரவுஞ்ச மலையைக் குறிக்கும். சிலப்பதிகாரத்தில் 'குருகு பெயர்க் குன்றம் கொன்ற நெடுவேலே' என்று இளங்கோ அடிகள் பாடுகிறார். கிரவுஞ்சாசுரன் என்ற அசுரன் அன்றில் வடிவினன். அவன் மலையாக இருந்து உலகிற்குத் துன்பத்தைத் தந்துவந்தான்; சிவபெருமான் முப்புரங்களை எரித்தது போல், முருகப்பெருமான் கிரவுஞ்ச மலையை அழித்தான். இதற்கு வேறு ஒரு வரலாறும் கூறப்படுகிறது. சூரன் இக்கிரவுஞ்ச மலையில் புகுந்துகொண்டு துன்பம் செய்ததாகவும், அம்மலையையும் சூரனையும் ஒரே சமயத்தில் ஊடுருவிச் செல்லும்படி, முருகன் தன் வேலை ஏவினான் என்றும் கூறப்படுகிறது. ஒட்டக்கூத்தரின் தக்கயாகப்பரணியில், இவ்வரலாறு கூறப்படுகிறது. 'எழுமலை பொடித்த கதிரிலை நெடுவேல்' என்கிறது கல்லாடம். அருணகிரிநாதர் கந்தர் அநுபூதிப் பாடலில்,

'கிளைபட் டெழுசூ ருரமும் கிரியும்
தொளைபட் டுருவத் தொடு வேலவனே' என்று பாடுகிறார்.

முருகன் கிரவுஞ்சமலையை அழித்த குறையாத வெற்றிச் சிறப்பை உடையவன். வானைத் தொடும் உயர்ந்த மலைகளை உடைய குறிஞ்சி நிலத்துக்கு உரியவன். தொல்காப்பியம்,

'சேயோன் மேய மைவரை உலகமும்'

என்று கூறுகிறது. எல்லாச் சமயத்தினரும், குறிஞ்சிக் கடவுள் முருகன் என்பதைக் கூறுவர். பண்டைக்காலத்தில் 'கிழவன்' என்ற சொல் 'உரிமை உடையவன்' என்ற பொருளில் வழங்கி வந்திருக்கிறது. ஆனால், பிற்காலத்தில் 'கிழவன்' என்பது வயது மூத்தவனைக் குறிப்பதாக வழக்கிற்கு வந்துவிட்டது. அருணகிரிநாதர், திருப்புகழில், 'கிழவனாய்ப்புக்கு நின்று' 'தொண்டு கிழவனின் ஆர்' என்று 'முதியவன்' என்று ஆண்டு மூத்தவன் என்ற பொருளில் அச் சொல்லை ஆளுகிறார். முருகப்பெருமான் உலகங்களுக்கெல்லாம் உரிமையனாயிருந்தும், குறிஞ்சிக்கு மட்டும் உரிமை உடையவன் போன்றிருப்பவன்.

மேலும் தொடர்கிறார் நக்கீரர்:-

'பலர் புகழ் நன்மொழிப் புலவர் ஏறே!' என்று போற்றுகிறார். முருகப்பெருமான் சாதி, சமயம், இனம், நாடு, மொழி ஆகியவற்றால் பலவகையினராயிருக்கும் பலரும்

புகழ்கின்ற நன்மொழிப் புலவர்களுக்கு ஆண்சிங்கம் போன்றவன். இப் பகுதிக்கு உரைகூறும் நச்சினார்க்கினியர்:

'கல்வி மதத்தை உடைய, யானை போல் வார்க்குச்
சிங்க ஏறு போல்வாய் என்றதாம்'

என்று கூறுகிறார். புறச்சமயவாதிகளைக் கல்வி மதமுடையவராகக் குறித்தார் நச்சினார்க்கினியர் என்க. திருஞானசம்பந்தர் மதுரையம்பதியில் சமணர்களை வென்றார். அவர் முருகப்பெருமானின் அவதாரம் என்று கூறுவர். 'புலவர் ஏறே' என்பதற்கு 'புறச் சமயப் புலவர்களாகிய யானைகட்கு அரிமாப்போல் வானே' என்றும் பொருள் கூறுவர். உரையாசிரியர் ஒருவர். மற்றொருவர்

'பலராலும் புகழப்பட்ட நல்ல சொற்களை உடைய கவிப்
புலவோர்க்குச் சிங்கத்தின் முதன்மை உடையாய்'

எனப் பொருள் கூறுகிறார். முருகன், ஞான பண்டிதன்; ஞானியர்களுக்குத் தலைவன். அருணகிரிநாதர், கந்தர்அநுபூதியில் 'சுரலோக சிகாமணியே' என்றும் 'ஞான பண்டித நாதா' (போதகந்தரு கோவே - திருப்புகழ்) என்றும் அழைப்பார்.

இனி 'அரும்பெறல் மரபிற் பெரும் பெயர்முருக!' என்ற அடி.

'பிறரால் பெறுவதற்கு அரிய இலக்கணங்களையுடைய முருகனே!' என்பது பொருள். முருகன் என்னும் திருநாமம் உடையவன் எம்பெருமான். அப் பெயரால் பல இலக்கணங்கள் குறிக்கப்பெறுகின்றன. அவ்விலக்கணங்கள் அனைத்தும் ஒருங்கே உடையவன் வடிவேலன். பிறரிடம் அவை அனைத்தும் ஒருங்கே அமையவில்லை. எனவே, அத்திருப்பெயர் பிறரால் பெறுவதற்கு அரிதாயிற்று. அத்திருப்பெயர் பொருளாலும், சுவையாலும், பயனாலும் பெரியது. அதனால், 'பெரும் பெயர்' எனலாம். இப்பகுதிக்கு உரை கூறும் நச்சினார்க்கினியர் 'பிறருக்கும் பெறலரிய முறைமையினையுடைய பெரும் பொருளை உடைய முருக' என்று பொருள் கொண்டு, 'பெரும் பொருள் என்றது வீட்டினை' என்று விளக்குவார். 'அரும் பெறன் மரபிற் பெரும்பெயர்' என்றது 'வீட்டின்பத்தை' என்றும், 'வீட்டின்பத்தை உடைய முருகப்பெருமானே' என்றும் பொருள் கூறுவர். எனவே,

'முருகா' என்று ஓதும் அடியார்க்கு அவ்வீட்டின்பத்தை அவன் அளிப்போன் எனக் கூறலாம். அருணகிரிநாதர் 'மொழிக்குத்துணை முருகா எனும் நாமங்கள்' என்று பாடுகிறார்.

சேக்கிழார் பெருமான், கண்ணப்பநாயனார் புராணத்தில் 'அரும்பெறல் தம்பிரானார்க்கு அமுது கொண்டணைய வேண்டி' என்று பாடுகிறார். மணிவாசகப் பெருமான்,

'அருமையில் எளிய அழகே போற்றி' என்கிறார். திருமுருகாற்றுப்படை வெண்பா 6ஆவது பாடலில்,

'நெஞ்சில், ஒருகால் நினைக்கின் இருகாலுந்
தோன்றும், முருகா என்று ஓதுவார்முன்'

என்று கூறப்பட்டுள்ளது. இங்கு 'இருகால் ' என்பதற்கு இரண்டு திருவடியாகிய வீட்டின்பம் என்ற பொருளும் கொள்ளலாம். மேலும், முருகனின் பெருமைகளைக் கூறுகிறார் நக்கீரர்:-

'நசையுநர்க்கு ஆர்த்தும் இசைபேர் ஆள
அலந்தோர்க்கு அளிக்கும் பொலம்பூண் சேஎய்
மண்டுஅமர் கடந்தநின் வென்றுஆடு அகலத்துப்
பரிசிலர்த் தாங்கும் உருகெழு நெடுவேஎள்
பெரியோர் ஏத்தும் பெரும்பெயர் இயவுள்'

(270 - 274)

வீட்டின்பத்தை அடைய விரும்பி வந்தவர்க்கு, அதனை அளித்து அநுபவிக்கச் செய்யும் பெரும்புகழை உடையவனே! துன்புற்று வந்தவர்க்கு அருள்செய்யும் பொன் அணிகளை அணிந்த சேயோனே! நெருங்கிய போர்களிலே வெற்றி கொண்ட தனது திருமார்பினாலே பரிசிலரைத் தாங்கித் தழுவி அவர் வேண்டுவன வேண்டியாங்கு நல்கிப் பாதுகாககும் அச்சம் தோற்றுவிக்கும் நெடியவனே! தேவரும் முனிவரும் அந்தணரும் ஆகிய பெரியவர்களும் துதித்துப் போற்றும் பெரிய திருப்பெயரை உடையவனே!

உலக மக்கள் பல்வேறு நிலைகளில் துன்பப்படுகின்றனர். முருகன் வள்ளல். வள்ளியின் கணவன் வள்ளல். இவ்வள்ளலிடம் பொருள் வேண்டி வருவோரும் அருள் வேண்டிவருவோரும் கணக்கிலர். வள்ளன்மை உடையவர் யாசிப்பவனின் தகுதியறிந்து

தரல் வேண்டும். யாசிப்பவன் விரும்பியதைத் தரவேண்டும். அதுமட்டுமல்லாமல் தாம் அளித்த பொருளைப் பெற்றவன் அதன் பயனை நுகர்தல் செய்யவேண்டும். இங்கு முருகப்பெருமான் இக்குணங்கள் அனைத்தும் ஒருங்கே பெற்றவன் என்பதால் 'நசையுநர்க்கு ஆர்த்தும் இசைபேராளர்!' என்றார்.

அதாவது,

'தன்பால் விரும்பி வந்தவர்களுக்கு அவர் விரும்பியதைத் தந்து நிரம்ப நுகரச் செய்யும் பெரிய புகழை உடையவன்' என்பதாகும்.

வீட்டின்பத்தைப் பெறவேண்டுமென்று நச்சி வந்தோர்க்கு, அதனை அளித்து நுகர்விக்கும் பெரிய புகழை ஆளுதல் உடையவன் என்று நச்சினார்க்கினியர் போன்ற உரையாசிரியர்கள் பொருள் கூறுவர். இம்மை, மறுமை இன்பங்களை அளிப்பதோடு அவை பெற்றோர் நுகரவும் செய்யும் அருளைத் தரவேண்டும். அப்பர் சுவாமிகள், 'பொன்னானாய், மணியானாய், போகம் ஆனாய்' என்று பாடுகிறார்.

இறைவனே போகமாகவும் இருந்து அருள்பாலிக்கிறான். எனவே, அழியாத வீட்டின்பம் வேண்டுவோருக்கு அவ்வின்பத்தை நல்கி நுகர்வித்தலும், இம்மையிலே துயருற்று, அத்துயர் தீர்ந்து இன்புற எண்ணித் தன்பால் அடைந்தவர்க்கு, அவர்துயரை நீக்கி இம்மை வாழ்க்கை இன்பத்தை அளித்தலும் உடையவன் முருகப்பெருமான் என்பதாகும். அதனால் நசையுநர் - விரும்பி வந்தவர் என்றார்.

உலகில் துன்புற்று, அத்துன்பம் தீரத் தன்பால் வந்து குறையிரப்போர்க்கு அருள் செய்து அவர் துயர் தீர்ப்பவன் முருகன். அதனால் 'அலந்தோர்க் களிக்கும் சேய்' என்றார். அவன், பொன் அணிகலன்களை அணிந்த, செவ்வண்ண மேனிப் பெருமான்.

இனி அப்பெருமானின் மார்பின் மாண்பைக் கூறவருகிறார் நக்கீரர்:

'மண்டு அமர் கடந்த நின் வென்று ஆடு அகலத்துப்
பரிசிலர்த் தாங்கும் உருகெழு நெடுவேஎள்'

முருகப்பெருமான், நெருங்கும் பகையை வஞ்சியாது எதிர் நின்று கொல்லும் திருமார்பினன். இங்கு 'அகலம்' என்பது மார்பைக் குறிக்கும். இதே மார்பு வேறுவகை

மாண்பினையும் கொண்டது. இரந்து வந்தோரைத் தாங்கித் தழுவி வேண்டுவன கொடுக்கும்; இரவலரைப் பாதுகாக்கும் நெடியவனே! இங்கு 'நெடுவேள்' இறைத்தன்மையைக் குறிக்கும். பின்னால்,

'மணங்கமழ் தெய்வத்து இளநலம் காட்டி
அஞ்சல் ஓம்புமதி அறிவல்நின் வரவுஎன'

என்று கூறுகிறார் நக்கீரர்.

அதாவது அச்சம் தரவல்ல தனது பெருநிலையை உள்ளடக்கி மணங்கமழும் தெய்வத் தன்மை உடைய பழமையான தனது இளமை நலம் காட்டி என்பதால், போரில் முருகன்அச்சமூட்ட வல்லவன். ஆனால், தன்னை அடைந்த அன்பர்களுக்கும் மணங்கமழும் தெய்வத் தன்மையைக் காட்டி அருள்பவன் என்பதாகும்.

மேலும் அவனது திருநாமத்தைத் தேவரும், மூவரும், அந்தணரும் பிறரும் ஓதித் துதிக்கின்றனர். அருணகிரிநாதர் முருகக்கடவுளே மூவர்க்கும் தேவருக்கும் யாவருக்கும் பெரியவர் என்பதைத் திருப்புகழில்

'கன பெரியோனே' எனக் குறிப்பிடுகிறார்.

ஆதிசங்கரர், தமது வாயானது, எப்பொழுதும் முருகனது புனிதமுறு வரலாற்றைப் புகழ்ந்து கூறிக் கொண்டிருக்க வேண்டும் என்ற கருத்தில்,

*'முகே மே பவித்ரம் சதா தச் சரித்ரம்'*

என்று கூறுகிறார். அருணகிரிநாதர், 'நின் பொற் புளகமலர் பூண்டு வந்தித் திடுவேனோ' (தகரநறை திருப்புகழ்) என்றும் ' பாடும் பணியே பணியாய் அருள்வாய்' (கந்தர் அநுபூதி) என்றும் பாடுகிறார். பெரிய மறைமொழியாம் திருப்பெயர் அது. ஆறெழுத்து அருமறை அப்பெயர். இங்கு 'ஏத்துதல்' என்பதற்கு 'இடையறாது நாவாலே பயிலுதல்' என்பது பொருள். இறைபணி நின்றார்க்கு இன்றியமையாத செயல் இது. ' ஆன்மாக்கள் ஞானமிருந்தும், அஞ்ஞானத்தை நோக்கிப் பற்றுகின்றன என்றும், அது நீங்க வேண்டுமாயின் இறைத் திருமந்திரத்தை விதிப்படி ஓதுதல் வேண்டும்' என்றும்

சிவஞானசித்தியார் கூறுகிறது. இறைவன் திருப்பெயராகிய மந்திரத்தை ஓதுதலால் அளவிறந்த இன்பம் ஆன்மா எய்தும் என்பதால் 'பெரியோர் ஏத்தும் பெரும் பெயர்இயவுள்' என்றார் நக்கீரர். (இயவுள் - கடவுள்)

மீண்டும் சூரனை வென்ற வீரத்தை நினைவு கூர்கிறார் நக்கீரர்,

'சூர்மருங்கு அறுத்த மொய்ம்பின் மதவலி
போர்மிகு பொருந! குரிசில்! எனப்பல
யான்அறி அளவையின் ஏத்தி ஆனாது
நின்அளந்து அறிதல் மன்உயிர்க்கு அருமையின்
நின்அடி உள்ளி வந்தனென் நின்னொடு
புரையுநர் இல்லாப் புலமை யோய் எனக்
குறித்தது மொழியா அளவையின்'

(275 - 281)

சூரபன்மனின் குலத்தை அழித்த பெருவலியாலே மதவலி எனும் பெயருடையோனே ! போர்த்தொழில் மிக்கு விளங்கும் வீரனே ! தலைவனே ! என்று பலவாறாக நான் கூறிய முறைமையிலே விடாது அவனைப் புகழ்ந்து, 'உனது பெருமையை அளந்தறிதல் உயிர்கட்கு அரிதான செயல். உனது புகழ் அனைத்தும் கூறுதல் என்பது என்னால் இயலாதது; உன் திருவடி நினைந்து இங்கு வந்தேன், ஒப்பற்ற புலமை உடையவனே! ' என்றுகூறி நீ கருதிய வீடுபேற்றை விண்ணப்பம் செய்வதற்கு முன்னரே, என்பதாகும்.

'சூர்மருங்கு அறுத்த மொய்ம்பின் மதவலி' என்பதற்கு உரைகூறும் நச்சினார்க்கினியர்,

'போர்த்தொழிலிலே மிகுகின்ற (போர்மிகு)மொய்ம்பாலே சூரபன்மாவின் குலத்தை இல்லையாக்கின மதவலி என்னும் பெயரையுடையாய்' என்று கூறுகிறார். கவிப்பெருமாள் என்ற உரையாசிரியர் 'மிக்க வலிமை உடையவனே' எனப்பொருள் கொள்வார்.

அடுத்து, நக்கீரர், 'போர்மிகு பொருந! குரிசில்' என்று ஏத்துகிறார். அதாவது போரிலே சிறந்து விளங்கும் வீரனே! தலைவனே என்பது பொருள். இப்பகுதிக்கு உரைகூறும் நச்சினார்க்கினியர்,(போர்மிகு என்பதனை முன்னடியில் 'மொய்ம்பின்' என்பதனோடு கூட்டியுரைத்தார்.)

'பொருந' என்பதற்கு 'உவமிக்கப்படுவாய்' என்று கூறுகிறார். அதாவது தனக்குப் பிறர் ஒருவர் உவமையாகாது, தான் பிறருக்கு உவமையாகும் பெருமை உடையவன் என்பதாகும். சேக்கிழார் பெருமான்,

'முன்னே வந்தெதிர் தோன்றும் முருகனோ' என்று சுந்தரரின் அழகினைப் பரவையார் வியந்தோதுவதாகப் பாடுவார். கம்பன் அயோத்தியில் கலைபயில் இளைஞர்களைப் பற்றிக் குறிப்பிடும்போது,

'கந்தனை அனையவர் கலைதெரி கழகம்' என்று இளமைக்கும் அழகிற்கும் முருகனை உவமையாகக் கூறுவார். கந்தபுராணம்,

'வாகைசேர் குமர வள்ளல்' எனப் போற்றுகிறது.

இப்பகுதியில் நக்கீரர் முருகப்பெருமானை 26 திருநாமங்களால் புகழ்ந்து விளிக்குகிறார்:- அவை

1. சரவணத்தில் கார்த்திகை மாதர் அறுவர் பயந்த அறுமுகச் செல்வ!

2. சிவகுமர! 3. பார்வதிமகனே! 4. பகைவர் கூற்றுவனே! 5. கொற்றவைகுமர 6. காடுகிழாள் குழந்தையே ! 7. தேவசேனாபதியே! 8. கடம்பா! 9. புலவ! 10. போரில் ஒப்பற்றவனே! 11. ஆற்றல் வீரனே! 12. அந்தணர்க்குச் செல்வமே ! 13. சான்றோர் புகழும் சொற் கூட்டமாய் உள்ளவனே! 14. வள்ளி தெய்வானை கணவனே! 15. வீரரில் ஆண்சிங்கமே! 16. வேலேந்திய கைகளினால் பெறும் வெற்றிச் செல்வ! 17. கிரவுஞ்சம் அழித்த ஆற்றல! 18. குறிஞ்சித் தெய்வமே! 19. புலவரில் ஆண்சிங்கம் போன்றவனே! 20. வீடு பேறளிக்கும் வேலவ! 21. வீடு பேற்றை அளித்து அதனை நுகர்விக்கச் செய்யும் பெரும் புகழை உடையவனே! 22. துன்புற்றோர்க்கு அருள் செய்யும் பொன் அணி சேயே! 23. வீரம் நிறை வெற்றிமார்பில் பரிசிலர்க்கு ஈரம் தந்து தாங்கும் நெடுவேளே! 24. தேவரும் மூவரும் முனிவரும் போற்றும் திருநாமத்து இறைவனே ! 25. சூரன்குலத்தைத் வேரொடு சாய்த்த வலியவனே! 26. போரில் ஒப்பற்ற தலைவ ! என்பனவாம்.

அருணகிரிநாதர் கந்தர்அநுபூதியில்,

'முருகன் குமரன் குகன் என்று மொழிந்து
உருகும் செயல் தந்து உணர்வு என்(று) அருள்வாய்'

என்று முருகன் திருநாமங்களை நாவாரச் சொல்லித் துதித்து நாள் தோறும் உருகும் உணர்வை வேண்டுகிறார். காரணம், முருகப்பெருமான் உருகுவாருடைய இருவினை இருளை அகற்றி அருளும் கந்தமேரு. திருப்புகழில்,

'உருகுமடியவர் இருவினை இருள்பொரும்
உதய தினகர இமகரன் வலம்வரும்
உலக முழுதொரு நொடியினில் வலம்வரு பெருமாளே'

என்று பாடுகிறர். மேலும் அவர் அடியவர்கள் இறைவன் திருப்புகழை ஓதி உணரும் பண்பைப் 'புகழோது பண்புடைய சிந்தையன்பர்' என்பார். அவர் 'நாளும் உன் புகழே பாடி' உய்யும் உயர்வையும் வேண்டுகிறார். 'இனிய புகழ்தனை விளம்ப அருள் தாராய்' எனவும் இறைஞ்சுகிறார்.

இராமலிங்க அடிகளார்,

'பெருமை பெறு நினது புகழ் பேசவேண்டும்'

என்று பாடுகிறார். செல்வன்பால் செல்லும்போது, அச்செல்வனைப் பலவாறு புகழ்ந்து பேசுதல், பொருள் விரும்பும் புலவர் மரபு. இங்கு, அருட்செல்வனிடம் செல்கிறான் இரவலன். ஆகவே, அவனது புகழைத் தனக்குத் தெரிந்தவரை அடுக்கிக் கூறுவதாக இப்பகுதி அழகாகக் கூறப்படுகிறது. இத்திருநாமங்கள் அனைத்தும் முருகப்பெருமானின் வீரத்தையும், புலமையையும், அருளும் திறத்தினையும், ஆண்மையையும், அழகையும், இளமையையும், ஏற்றமிகு செயல்களையும் குறிக்கின்றன. நக்கீரர், இத்திருநாமங்களை முருகப்பெருமான் மீது அர்ச்சனை மலர்களாகத் தூவுகிறார். முருகப்பெருமானின் திருநாமங்களைக் கூறிப் பின் தான் வந்த காரியத்தைச் சொல்லி விண்ணப்பித்துக்கொள்ள அறிவுறுத்துகிறார் நக்கீரர்,

'நின்அளந்து அறிதல் மன்னுயிர்க்கு அருமையின்
நின்அடி உள்ளி வந்தனென' எனக் கூறுகிறார்.

உலக உயிர்கள் உன்னை அறிதல் அருமையிலும் அருமை. நீ நினக்கு உவமை இல்லாதவன்; வாலறிவன்; நீயே ஞானம்; ஞானமே நீ. 'நீயான ஞான வினோத' என்று அருணகிரிநாதர் பாடுகிறார். கந்தபுராணம், 'ஞானந்தான் உருவாகிய நாயகன்' என்று கூறும். இருப்பினும் அத்தயாபரன் திருவடி உள்ளுதல் வாயிலாகவே, அவன் திருவருள் பெறக்கூடும். உலக உயிர்களை இயக்கி அருள்பாலிக்கும் இறைவன் இயல்பு மக்களின் சிந்தைக்கும் செயலுக்கும் எட்டாதது. இப்பகுதியில் முடிவாக, 'எவ்விடத்தேனுமாக நீ கண்டுழி ஏத்திப் பரவி, வணங்கி, செல்வ, புதல்வ, மகனே, கூற்றே, சிறுவ, குழவி,



குறும்பல் கூளியர்: 'வ்ந்தோன் பெருமநின் வண்புகழ் நயந்து'

தலைவ, மார்ப, புலவ, ஒருவ, மள்ள, வெறுக்கை, சொன்மலை, கணவ, மைந்தரேறே, பெரும, கிழவ, ஏறே, முருக, இசைபேராள, சேய், நெடுவேள், இயவுள், மதவலி, பொருந, குரிசில் எனவிளித்து, நீ எண்ணியவை அனைத்தையும் சொல்லாமல் இருக்கும்போதே, அவன் கருணைபுரிய விரைந்து வருவான். இங்கு மூன்று வகையான அடியார்களைக் கூறுகிறார் நக்கீரர்.

அவர்கள் 'நசையுநர்' 'அலந்தோர்' 'பரிசிலர்' என்பவர். நசையுநர் பற்றற்ற ஞானியர்; வீடு பெறும் வேட்கை மிகுந்தவர். 'அலந்தோர்' துன்பமுறுகிறவர்கள்' தாம் துன்பமெய்திய காலத்தில், தம் துன்பம் நீங்க, இறைவனைப் பிரார்த்திப்பவர். அடுத்தவர் 'பரிசிலர்'. பரிசை விரும்பி முருகனை வழிபடுபவர்கள். அருணகிரிநாதர், திருப்புகழில்,

'நினைத்த காரியம் அநுகூலமே புரிபெருமாளே'

என்று பாடுகிறார். இம்மூன்று வகைப் பக்தர்களும் முருகனிடம் வேண்டியது வேண்டியவாறு பெற வணங்குகின்றனர்; முருகன் வீடு கொடுப்பதில் இசைப்பேராளனாகவும், இடர்களைவதில் 'பொலம் பூட்சேய்' ஆகவும், பரிசில் வழங்குதலில் 'நெடுவேளாகவும்' இருக்கிறான்.

இனி, கூளியர் செயலைக் கூறவருகிறார் நக்கீரர்;

'குறித்தது மொழியா அளவை குறித்துஉடன்
வேறுபல் உருவிற் குறும்பல் கூளியர்
சாறுஅயர் களத்து வீறுபெறத் தோன்றி
அளியன் தானே முதுவாய் இரவலன்
வந்தோன் பெரும நின்வண்புகழ் நயந்து என
இனியவும் நல்லவும் நனிபல ஏத்தி'

(281 - 286)

நீ, இங்ஙனம் குறித்துக் கூறிய உடனே, பல வேறுபட்ட வடிவினை உடைய குறிய பூத கணத்தராகிய பணியாளர்கள், விழா நிகழும் இடத்தே தோன்றுவது போலப் பொலிவுடன் தோன்றிப் 'பெருமானே! இவன் தேவரீர் அருள் பெறத்தக்கவன்; அறிவு வாய்க்கப் பெற்றவன்; நினது பெருமையையுடைய நீண்ட புகழை விரும்பி இனியவும் உறுதி பயப்பனவுமாகிய பலவற்றையும் கூறிப் புகழ்ந்து வந்தனன்' என்று அப்பெருமானிடம் விண்ணப்பிப்பர். முருகப்பெருமானுடன் ஏவலர்களாகிய

தொண்டர்கள் இருக்கிறார்கள். இவர்கள் 'யாம் பெற்ற இன்பம் பெறுக இவ்வையம்' என்ற பரந்து விரிந்த மனப்பான்மை உடையவர்கள். ஒருவரை ஒருவர் ஒவ்வாத பல்வேறு வடிவினை உடையவர்கள்; பூத கணத்தவராகிய பணியாளர்கள் என்றும் கொள்ளலாம். 'கூளியர்' என்பதற்கு வழிபட்டு நிற்போர் எனப் பொருள் கொள்வார் நச்சினார்க்கினியர். 'பூதங்கள்' என்பார் பரிமேலழகர். ஞானசம்பந்தப் பெருமான் பட்டீச்சரத்துக்கு எழுந்தருளுங்கால், இறைவன் ஆணைவழி முத்துப்பந்தர் வழங்கியவையும், திருவாவடுதுறையில், பொருள் வேண்டி விண்ணப்பித்துக் கொண்டபோது, இறைவன் ஆணைவழிப் பொற்காசுகள் வழங்கியவையும் பூதகணங்களாதலின், இறைவனிடத்து இரவலனை அறிமுகப்படுத்தும் தகவும் தகுதியும் அவற்றிற்கு உண்டென்பது பெறப்படும். இரவலன், மெய்யறிவு வாய்க்கப் பெற்றவன் என்று அறிமுகப்படுத்தப்படுகிறான். அதனால், 'முதுவாய் இரவலன்' என்றார். மெய்யறிவு வாய்த்தலாவது திருவடிப்பேறொன்றே மெய்ப்பொருள்; அல்லாதனவெல்லாம் பொய்யானவை என்று உணரும் அறிவு வாய்க்கப்பெறுதல். இவன், அப்பெருமானின் அருள் பெறும் தகுதி உடையவன் என்று கூறுவர். அருணகிரிநாதர் திருச்செந்தூர் திருப்புகழில்

'புகழ் ஓதும் பண்புடைய சிந்தை
அன்பர் தங்களின் உடன் கலந்து பண்புபெற
அஞ்சல் அஞ்சல் என வாராய்
கண்டு மொழி கொம்பு' எனப்பாடுகிறார்.

இனி முருகப்பெருமான் பரிசில் நல்கும் மாண்பைக் கூறுகிறார் நக்கீரர்:-

'தெய்வம் சான்ற திறல்விளங்கு உருவின்
வான்தோய் நிவப்பின் தான் வந்துஎய்தி
அணங்குசால் உயர்நிலை தழீஇப் பண்டைத்தன்
மணங்கமழ் தெய்வத்து இளநலம் காட்டி
அஞ்சல் ஓம்புமதி அறிவல்நின் வரவு என
அன்புஉடை நன்மொழி அளைஇ விளிவுஇன்று
இருள்நிற முந்நீர் வளைஇய உலகத்து
ஒருநீ ஆகித் தோன்ற விழுமிய
பெறல் அரும் பரிசில் நல்கும்மதி' (287 - 295)

முருகப்பெருமானை இனிய பல நல்ல சொற்களால் பலவாறாக ஏத்துகிறான் இரவலன். அப்போது தெய்வத்தன்மை நிரம்பியதாகவும், வலிமை மிக்கதாகவும், ஆகாயத்தை அளாவுகின்றதகவுமுள்ள உயர்ந்த வடிவோடு முருகன் தோன்றுவான். அச்சம் தரவல்ல தனது பெருவடிவான தெய்வத்தன்மையை உள்ளடக்கிக் கொண்டு, மணங்கமழும் தெய்வத் தன்மையையுடைய பழமையான தனது இனிய இளைய வடிவைக்காட்டி 'உனது வரவை நான் அறிவேன்; பயத்தை விட்டுவிடு' என்று அன்புடைய மொழிகளைப் பலகாலும் கூறி, கடல் சூழ்ந்த இப்பேருலகத்தே, உனக்கு ஒப்பாக ஒருவரும் இல்லை என்று கூறும்படி பெறுதற்கரிய சிறந்த பரிசிலைத் தந்தருளுவான்.

'தெய்வம் சான்ற திறல் விளங்கு உருவின்
வான்தோய் நிவப்பின் தான் வந்து எய்தி
அணங்குசால் உயர்நிலை தழீஇ'

என்று கூறுகிறார். இங்கு, 'தெய்வம் சான்ற திறல் விளங்கு உருவின்' என்பதற்குப் பொருள் தெய்வத்தன்மை அமைந்த வலிவிளங்கும் வடிவு என்பதாகும். முருகப்பெருமான் தனது திருவருளை யாசிக்கும் புலவன், அஞ்சாமல் இருக்க வேண்டுமென்பதால், வருத்தமமைந்த தனது தோற்றத்தைக் காட்டாமல், அருள் கொஞ்சும் இளநலத் திருவுருவம் காட்டி, வந்தவன் மகிழக் காட்சி தருகிறான். அழியா இயல்பும் மாசின்மையும் பேராற்றலும் பெற்றவன் முருகன் என்பதால்,

'....................... பண்டைத் தன்
மணங்கமழ் தெய்வத்து இளநலம் காட்டி'

என்று கூறுகிறார். முருகன் ஆதியந்தமில்லாத நாயகன்.

அருணகிரிநாதர்,

'ஆதியொடும் அந்தம் ஆகிய நலங்கள்
ஆறுமுகம் என்று தெரியேனே'

என்று பாடுகிறார். அந்த அநாதிக்கோலமான, பழைய வடிவோடு முருகன் வருகிறான். முன்பே கூறியவாறு, முருகப்பெருமான் அடியார்களுக்கு அருள்பாலிக்கப் பலப்பல வடிவு கொள்வான் என்று கந்தபுராணம் கூறுகிறது:-

'இருமூவகை வதனத்தொடும் இளையோனெனத் திரியும்
ஒருமாமுக னொடுசென்றிடும் உயர்காளையினுமவும்
பெருமாமறை யவரேயென முனிவோரெனப் பெயரும்
தெரிவார்கணை மறவீரில் திரிதந்திடும் செவ்வேள்'

(திருவிளையாட்டுப் படலம்)

இறைவனின் வேறுபாட்டுத் தோற்றத்தை 'விகிர்தங்களா நடப்பர்'என்கிறது தேவாரம்.

'முருகு' என்பதற்குச் சிறப்பாக 'மணம், தெய்வத்தன்மை, இளமை, அழகு' என்பன பொருள். அருணகிரிநாதர், 'அழகிய மணவாளா' என்று (பஞ்ச பாதக) திருப்புகழில் பாடுகிறார். இப்பகுதிக்கு, முன்வரும் பகுதிகளில், குறிஞ்சியில் பூத்த நன்மலர்களையும், முருகன் அணியும் கடம்பு வகையையும், காந்தள் மலர்களையும் பரப்பிக் குறமகள், பூசை செய்வதைக் காட்டுகிறார். பல இடங்களில் வெறியாட்டாளன், மலர்தூவி வெறியாட்டுச் செய்வதையும் கூறுகிறார்; திருப்பரங்குன்றத்தில் தாமரை மலர்களையும் குவளை நெய்தல் மலர்களையும் காட்டுகிறார். அதனால், முருகன் உறையுமிடம் மலர்மணம் பரவுமிடம். அவன் அன்பரின் இதயத் தாமரையில் உறைபவன். இயற்கையான தெய்வ மணம் உடையவன்.

அருட்பிரகாச வள்ளலார்,

'கந்தமுறு நின்மேனி காணாத கயவர்கண்
கலநீர் சொரிந்த அழுகண்'

என்று பாடுகிறார். அவன் திருமேனி ஞான மணம் வீசுவது.

'ஒரு ஞான வாசம் வீசி' என்கிறது திருப்புகழ். எனவே மலர் மணமும், தெய்வமணமும், ஞானமணமும் வீசும் எழில் கோலம் என்பதால் 'மணம்கமழ்' என்று கூறினார். அடுத்து அப்பெருமானின் தெய்வத்தன்மையைக் கூறுகிறார். அன்பர்கள் கொண்ட அன்பு என்னும் அமுதைப் பருகுபவன் இறைவன். எல்லா உயிர்களும் தனு கரண புவன போகங்களைப் பெற்று இன்புற எண்ணுவது அவன் திருவருள். அன்பர் நிலை உணர்ந்து அருளும் அப்பெருமான் வேண்டுதல் வேண்டாமை அற்றவன். அனைத்து உயிர்களும் அவனருளால் இயங்குபவை. அசுரர்களும், பிற பகைவர்களும் அவன் படைப்பே. அதனால் தவறு செய்பவர்களைத் தண்டித்துத் திருத்துவது அவன்

கடமை. சூரனை வென்றவன், அவன் உயிரைப் போக்கவில்லை. மாறாக, தேவர்க்கும் மூவர்க்கும் முனிவர்களுக்கும் கிட்டாத பேற்றை அவனுக்குத் தருகிறான். சூரனைத் தன்னைச் சுமக்கும் மயிலாகவும், தன் வெற்றியை ஒலிக்கும் சேவலாகவும் மாற்றி அருள் புரிகிறான். அச்சூரனுக்கு விசுவரூப தரிசனத்தைக் காட்டி அருளுகிறான்.

கந்தபுராணத்தில், சூரபன்மன் குமரக்கடவுளின் அழகினை வியக்கிறான்:

'ஆயிர கோடிக் காமர் அழகெலாம் திரண்டொன் றாகி
மேயின எனினும் செவ்வேள் விமலமாம் சரணம் தன்னில்
தூயநல் லெழிலுக்கு ஆற்றா தென்றிடின் இனைய தொல்லோன்
மாயிரு வடிவிற் கெல்லாம் உவமையார் வகுக்க வல்லார்'

(சூரபன்மன் வதைப்படலம்)

பின்,

'அண்ணலார் குமரன் மேனி
அடிமுதல் முடியின் காறும்
எண்ணிலா ஊழிக்காலம்
எத்திறம் நோக்கி னாலும்
கண்ணினா லடங்கா துன்னிற்
கருத்தினா லடங்கா தென்பால்
நண்ணினான் அமருக் கென்கை
அருளென நாட்ட லாமே'

(சூரபன்மன் வதைப்படலம்)

என்று முருகன் அருள்திறத்தைச் சூரன் வியக்கிறான்.

மேலும் கந்தபுராணம்,

'கருணைகூர் முகங்கள் ஆறும்
கரங்கள் பன்னிரண்டும்'

(திருவவதாரப் படலம்)

என்று கூறுகிறது. அடுத்து, முருகன் என்றும் இளமை உடையவன் என்பதும், 'என்றும் அகலாத இளமைக்காரன்' என்பதும் அருணகிரியார் வாக்கு.

முருகப்பெருமான், இணையற்ற தெய்வமணமும், ஈடற்ற அருளும், ஒப்பற்ற இளமையும், உவமையற்ற எழிலும் உடையவன். அதனால் நக்கீரர், முன்பே, 'அரும்பெறல் மரபின் பெரும் பெயர்முருக' என்று கூறினார். இதற்கு வேறு வகையிலும் பொருள் கூறலாம். அதாவது தனது 'என்றும் இளமையாய் அழகனாய்' இருக்கும் தோற்றம் காட்டுகிறான் முருகன். அதனால், உயிரின் இளநலமும் உணர்த்தப்படுகிறது. இதன்மூலம் உயிரின் ஏகதேச உணர்வை மாற்றித் தனது வியாபக முழுதினும் வியாபிக்குமாறு செய்தால், பின்னர் உயிர் அஞ்ச வேண்டுவதில்லை யாதலின், 'அச்சம் போக்கி, பின் அஞ்சல் ஓம்புமதி' என்று அபயம் அளித்தான் என்று கூறலாம். இவ்விடத்தில் மாணிக்கவாசகர் :

''தந்தது உன்தன்னை ; கொண்டது என்தன்னைச்
சங்கரா ஆர் கொலோ சதுரர்?''

என்று அருளிய அடி நினைவு கூரத்தக்கது. இறைவன், தான் நீ என்ற வேறுபாடின்றி, தானே ஒரு நீயாகிய உண்மை தோன்றுமாறு அருளுபவன் எனலாம். இவ்வுண்மை, மாயாசக்தியால் உயிர்க்குத் தோன்றாமல் மறைத்துக்கொண்டு நின்றதால் 'இருள்நிற முந்நீர் வளைஇய உலகத்து' என்றார். இவ்வுலகத்தில் இம்மையிலேயே வீடுபேறடைவாய் என்பதால் 'உலகத்து ஒருநீயாகித் தோன்ற' என்றார். இம்மையின்பமும் வீடுபேற்றின்பமும் முறையே இவ்வுரையில் காண்க.

அன்று, இந்திரன், முருகப்பெருமானின் திருவிளையாடலை உணராமல், பாலன் வடிவில் பவனிவந்த முருகன், அசுரரினும் கொடியவன்; இவனைக் கொல்ல வேண்டும் என்று போர்தொடுத்தான். முருகப்பெருமானின் பேராற்றல் முன் நிற்கவியலாமல், இந்திரன் முதலிய தேவர்கள் இறந்தனர். ஆறுமுகவள்ளல் போர்க்களத்தில் சர்வசங்கார காலாக்கினி உருத்திரரைப் போலத் தனித்து நின்று உலவினான். பின், நடந்தவற்றை அறிந்த தேவகுருவாகிய வியாழபகவான், முருகப்பெருமானிடம் அனைவரையும் உயிர்ப்பித்து அருள வேண்டும் என்று வேண்டினார். முருகப்பெருமான் 'நம்மைச் சிறுவன் என்று நினைத்துப் போர் புரிந்தீர்கள். நமது வன்மையையும் பெருமையையும் இன்னும் நீங்கள் உணரும் வண்ணம் காட்டுவோம்' என்று கூறி விசுவரூபமெடுத்தார். பேரொளி வாய்ந்த அப்பேருருவத்தைத் தரிசித்த தேவர்களின் விழிகள் பார்வையற்றுப் போய்விட்டன. தேவர்கள் வேண்டக் கருணைக் கடலாகிய குமாரக்கடவுள் திருவுளம் இரங்கி அவர்களுக்குத் திவ்ய நேத்திரங்களைக் கொடுத்தார்.

கண்ணபிரான், கலியுகத் தொடக்கத்தின் சற்றுமுற்பட்ட காலம் அர்ச்சுனனுக்கு விசுவரூப தரிசனம் தந்தபோது அதனைக் காண அர்ச்சுனனுக்குத் திவ்விய நேத்திரம் வழங்கினார். அதேபோல், சூரனுக்கு விசுவரூப தரிசனம் காட்டுகிறான் முருகப்பெருமான். முருகப்பெருமானின் ஒரு வடிவு பெருந்திருவடிவு; மற்றொன்று எழில் திருவுருவம். ஒன்றில் ஆற்றல் தோன்றும்; மற்றொன்றில் அழகு தோன்றும் ஒன்றில் அச்சம் தோன்றும். மற்றொன்றில் அன்பு தோன்றும்; ஒன்று மறத்தை அழிப்பது, மற்றொன்று அன்பை வளர்ப்பது. ஒன்று மறக்கருணையைக் காட்டுவது; மற்றொன்று அறக்கருணையின் விளைவு. ஒன்று துட்ட நிக்கிரகத்தின் வெளிப்பாடு; மற்றொன்று சிஷ்ட பரிபாலனத்துக்கு அமைந்தது. ஒன்று உக்கிரமூர்த்தி; மற்றொன்று சாந்தமூர்த்தி; ஒன்று வீரம்காட்டுவது; மற்றொன்று ஈரம் காட்டுவது. ஒன்று பகைவரை அச்சுறுத்துவது; மற்றொன்று அன்பருக்கு இன்பமூட்டுவது.

கந்தபுராணத்தில்,

‘நம்பெரு வடிவம் கொள்வம்
நன்று கண்டிடுதி என்றான்’

என்று கூறப்படுகிறது. இவ்வாறு, முருகன் தன் தெய்வத்தன்மை வாய்ந்த பேருருவினை அடக்கிக் காண்பதற்கு இனிய இளைய வடிவைக் காட்டி அருள்புரிவான்; இது அப்பெருமான் உயிர்களிடத்தில் கொண்டுள்ள கருணை வெளிப்பாடாகும். இனிப் பெறலரும் பரிசைத் தரப் போகிறான் முருகன். ‘அஞ்சல் ஓம்புமதி; அறிவல் நின் வரவு’ என்று முருகன் கூறுவதாக இத்தொடரை அமைக்கிறார் நக்கீரர். அதாவது முருகன் உயிர்க்கு அருள்செய்யும் நிலையை எடுத்துக் கூறுகிறார். ‘அறிவல் நின் வரவு’ என்ற சொல்லால் முருகனது முற்றறிவுடைமையையும் ‘உலகத்து ஒரு நீயாகத் தோன்ற அருள் செய்வன்’ என்பதால் உயிர்கள் பெறும் நல்வாழ்வையும் விளக்கினார்.

அருணகிரிநாதர் கந்தன் கருணைக்கடல் ஆதலால் அடியார்களை அழைத்துப்பேசி அவ்வடியவர் வேண்டியதை வேண்டியாங்கு விரும்பித் தருபவன் என்பதை,

1. ‘அடியார்தமை மகிழ்வோடே அழைத்தும் சேதிகள் பேசிய’
   (உருக்கம் பேசிய நீலியர் - திச்செந்தூர் திருப்புகழ்)
2. ‘அடியவ ரிச்சையில் எவைஎவை யுற்றன
   அவைதரு வித்தருள் பெருமாளே’
   (கலகலெனச்சிவ) திருப்புகழ் கூறுகிறது.

இங்கு முருகப்பெருமான் அருளியிருப்பது 'பெறலரும் பரிசில்' அது பொன்னன்று, ஆடையன்று, அணிகலன்கள் அன்று. நிலமன்று, பிற செல்வங்களன்று. இறைவன், 'தனக்குவமை இல்லாதவன்' அவன் தாள்சேர்ந்தவர்க்கு இந்த அழியும் பொருள்களைத் தந்தால் அக்கொடை 'விழுமிய பெறலரும் பரிசில்' ஆகாது. உயிர்களுக்கு, வீடு பேற்றினும் சிறந்த பேறு வேறு இல்லை. அதனைப் பெறுதல் அரிது. இந்தப் பரிசு எத்தகையது? முத்தியில் இருவகை உண்டு; ஒன்று சீவன் முத்திநிலை. மற்றொன்று விதேக முத்திநிலை; முன்னது இந்த உடம்பு உள்ளபோதே முத்தியின்பத்தை நுகர்வது. பின்னது இந்த உடம்பை விட்ட பிறகு பெறுவது. ஈடு இணையற்ற சீவன் முத்தியைத் தருவான் முருகன். இந்த உலகு இருள் நிறமுடைய கடல் சூழ்ந்து புறஇருள் மண்டிக்கிடக்கிறது. உயிர்களை அகஇருள் பற்றியிருக்கிறது. இங்கே வந்த புலவன் வரவு நல்வரவாகிறது. அவனை முருகப்பெருமான் இன்மொழி கூறி ஏற்றுக் கொண்டான். அகம், புறம் எனும் இரண்டிடங்களிலும் இருள் நிரம்பிய இந்த உலகத்தில் வாழும்போதே ஒளி பெற அருள் செய்பவன் முருகன். மாணிக்கவாசகர்,

'என்னையும் ஒருவனாக்கி இருங்கழல்
சென்னியில் வைத்த சேவகபோற்றி' என்கிறார்.

அருணகிரிநாதர், தன்னுடைய உண்மையடியார்களை இப்புவியில் அப்பெருமான் 'புவியில் ஒருத்தனாம் வகை' உயர்த்திடும் பேற்றை யாசிப்பார்.

இப்பகுதிக்கு உரைகூறும் நச்சினார்க்கினியர் ''இருண்ட நிறத்தை உடைய கடல்சூழ்ந்த உலகத்திடத்தே நீ ஒருவனுமே பிறர்க்கு வீடளித்தற் குரியையாய்க் கேடின்றித் தோன்றும்படி, சீரிய பிறரால் பெறுதற்கரிய வீடு பேற்றினைத் தருபவன்'' என்று கூறுகிறார். அத்வைதியாகிய நச்சினார்க்கினியர் கண்ட சீரிய உரை இது.

இங்கே கூறப்படும் சீவன்முத்திநிலை, மதுரைக்காஞ்சி போன்ற சங்க நூல்களிலும் கூறப்படுகிறது. இத்தகைய பேற்றை அளிப்பவன், பழமுதிர்சோலைக்கு உரிமை உடைய முருகவேள் எனக்கூறி ஆறாவது படைவீட்டைக் கூறுகிறார் நக்கீரர்.

' பலவுடன்
வேறுபல் துகிலின் நுடங்கி அகில்சுமந்து
ஆரம் முழுமுதல் உருட்டி வேரல்

பூஉடை அலங்குசினை புலம்பவேர் கீண்டு
விண்பொரு நெடுவரைப் பரிதியின் தொடுத்த
தண்கமழ் அலர் இறால் சிதைய நன்பல
ஆசினி முதுசுளை கலாவ மீமிசை
நாகநறுமலர் உதிர யூகமொடு
மாமுக முசுக்கலை பனிப்பப் பூநுதல்
இரும்பிடி குளிர்ப்ப வீசி'

(295 - 304)

பழமுதிர் சோலையில் மலையினின்று அருவி விழுகிறது. அந்த அருவி, பல்வேறு வெள்ளைத் துகில்கொடிகள்ஒருசேர நுடங்குவன போல ஒடுங்கி அசைந்து வருகிறது; சந்தனத்தின் முழுமரத்தை உருட்டுகிறது. பூக்களை உடைய மூங்கில் கிளைகள் தனிமையுறுமாறு அவற்றின் வேரைப் பறித்துவருகிறது. விண்ணை அளாவிய உயர்ந்த மலையில் சூரியனைப் போல வட்டமாய் அமைந்த குளிர்ந்த மணம் வீசும் தேனடைகளைச் சிதைக்கிறது; ஆசினிப் பலாவின் நல்ல பல சுளைகள், தன்னிடத்தே கலக்க, மலை உச்சியிலே உள்ள சுரபுன்னை மரங்களின் பூக்கள் உதிர, கருங்குரங்குகளோடு, கரிய முகத்தை உடைய ஆண் குரங்குகள் நடுங்க, அழகிய நெற்றியையுடைய பெண்யானைகள் குளிரும்படி அலைவீசி வருகிறது இந்த அருவி.

நற்றமிழ்ப் புலமை நக்கீரர், நம்மை ஓர் அழகு கொஞ்சும் இயற்கையின் உச்சத்திற்கே அழைத்துச் செல்லும் பகுதி இது. திருப்பரங்குன்றத்தில் வண்டுகள் தேனருந்தி, தாமரை மலரில் துயில் கொண்டு, காலை எழுந்து, தேன் மணம் வீசும் நெய்தல் பூவில் தேன் உண்டு கதிரவன் உதித்த பிறகு, கண்களைப் போல மலர்ந்த விரும்பத்தக்க சுனைப்பூக்களிலே அமர்ந்து மேல்நோக்கிப் பறந்து ஒலிக்கின்றன. இங்கு அருவி மேலிருந்து கீழே இழிகிறது. முதலில் வண்டுகள் மேல் நோக்கிச் செல்லும் ஏற்றத்தை வைத்து இயற்கையை வருணிக்கும் நக்கீரர், இங்கு, இறங்கும் அருவியை வைத்து மலையின் எழிலைப் பாடுகிறார். இது ஓர் அழகிய கவிதை உத்தி. அருவி, பலவான ஆடைக்கொடிகளைப் போல வளைந்து அசைந்து விரைந்து, பெருக்கெடுத்து வருகிறது. அது, பல மரங்களை அசைத்து நிலை குலையச் செய்கிறது. அதில் விழும் பொருள்களை எல்லாம் அடித்துக் கொண்டு வருகிறது. அகில்களைச் சுமந்து கொண்டு, சந்தன மரங்களை அடியோடு உருட்டிக் கொண்டு வருகிறது. பூக்களை உடைய மூங்கில்கள்

நெடியவாக வளர்ந்துள்ளன. அருவி பாயும் வேகத்தால் அவற்றின் கொம்புகள் தாழ்ந்து புலம்ப, நீர் வேரைப் பிளக்கிறது; விண்முட்டும் சிகரம். அங்கே, தேனடைகள் ஞாயிறு மண்டிலம் போல் காட்சியளிக்கின்றன; இழிந்து வரும் அருவி, இந்தக் குளிர்ந்த மணம் பொருந்திய தேனடைகளைச் சிதற அடிக்கிறது. அருவியின் வேகம் தொடர்கிறது; நல்ல ஆசினிப் பலாமரத்தின்மீது மோதவே, அதன் முதிர்ந்த சுளை முற்றிவெடித்துச் சிதறும் வகையில் அருவியில் விழுகின்றன. மற்றொரு பக்கம் சுரபுன்னை மரங்களின் மலர்கள் அருவியின் அயரா வேகத்தால் உதிர்ந்து அதிலே கலக்கின்றன. இங்கு, மணந்தரும் பொருள்களும், சுவை தரும் பொருள்களும் சங்கமித்து, இந்த நீர்ப் பெருக்கில் கலந்து செல்கின்றன. அருவியின் ஆற்றல் தொடர்கிறது. அடுத்து, நக்கீரர், இந்த அருவியின் அச்சமூட்டும் வேகத்தாலும் ஒலியாலும் அஞ்சுகின்ற விலங்குகளின் செயல்பாடுகளைக் கூறவருகிறார். கருங்குரங்குகளும், முகம் கறுப்பாக இருக்கும் பிற வகைக் குரங்குகளும் நடுங்குகின்றன. புள்ளிகளைக் கொண்ட நெற்றியினை உடைய பெண் யானைகள் மீது வேகமாக அருவியின் நீர்த்துளிகள் சிதறி வீசுகின்றன. மேலும் அருவியின் ஆற்றல் தொடர்கிறது:-

'பெருங்களிற்று
முத்துஉடை வான்கோடு தழீஇத் தத்துற்று
நன்பொன் மணிநிறம் கிளரப் பொன்கொழியா
வாழை முழுமுதல் துமியத் தாழை
இளநீர் விழுக்குலை உதிரத் தாக்கிக்
கறிக்கொடிக் கருந்துணர் சாயப் பொறிப்புற
மடநடை மஞ்ஞை பலவுடன் வெரீஇக்
கோழி வயப்பெடை இரியக் கேழலொடு
இரும்பனை வெளிற்றின் புன்சாய் அன்ன
குரூஉமயிர் யாக்கைக் குடாஅடி உளியம்
பெருங்கல் விடர்அளைச் செறியக் கருங்கோட்டு
ஆமா நல்ஏறு சிலைப்ப'

(304 - 315)

இந்த அருவி, பெரிய ஆண் யானையினது முத்துக்களையுடைய வெள்ளிய கொம்புகளை வாரி எடுத்து உள்ளடக்கிக் கொண்டு செல்கிறது. அருவி குதித்துக் கொண்டு நல்ல பொன்னும் மணியும் நிறம் விளங்கும்படி செய்து பொடியாகிய

பொன்னைக் கொழித்துக் கொண்டு செல்கிறது. வாழையின் அடிப்பகுதிகள் முறிந்தன. தென்னையின் இளநீர்க் குலைகள் உதிர்ந்தன. மிளகுக் கொடிகளின் கரிய காய்களைக் கொண்ட கொத்துக்கள் சாய்ந்தன. புள்ளிகளையுடைய பீலியும் மடநடையுமுடைய பல மயில்களை மருட்டியும், பெட்டைக் கோழிகளை வெருட்டியும், ஆண்பன்றியுடன், பனையின் செறும்பு போன்ற கரிய மயிரடர்ந்த உடலினையும் வளைந்த கால்களையும் உடைய கரடி மலைக் குகையிலே ஓடி ஒளியவும், கரிய கொம்புகளையுடைய காட்டெருதுகள் முழங்கவும் அருவி வருகிறது. அருவி மேலிருந்து இழியும் நிலையை, நக்கீரர் திருஈங்கோய்மலை எழுபதின்,

'..............................கண்குளிர - மேனின்
றருவிகள் தாம் வந்திழியும் ஈங்கோயே'

என்ற தொடரால் அறியலாம். இதேபோன்று குறுந்தொகையில், 'மால்வரை இழிதரும் தூவெள் அருவி' பேசப்படுகிறது.

சீவகசிந்தாமணியில்,

''இழியும் வெள்ளரு வித்திரள் யாவையும்
குழுவின் மாடத் துகில் கொடி போன்றவே''

என்று இழியும் அருவி குறிப்பிடப்படுகிறது. இங்கு இனிய ஒரு சோலை எழில்நலத்தையும் வளத்தையும் எடுத்துக் கூறுகிறார், நக்கீரர். யானைக் கொம்பில் முத்துக்கள் தோன்றும் என்பதால் 'முத்துடைக் கோடு' என்றார். 'வான்கோடு' என்பதற்கு 'வெள்ளிய கொம்பு' என்பது பொருள். யானைத் தந்தங்களில் முத்து இருப்பது மலைபடு கடாத்தில்,

'குரூஉப்புலி பொருத புண்கூர் யானை முத்துடை மருப்பின்'

என்று கூறப்படுகிறது. காளிதாசன் குமாரசம்பவத்தில் இமயத்தில் வாழும் யானைகளிடம் இத்தகைய முத்துக்கள் இருந்ததாகக் குறிப்பிடப்படுகிறது. அருவி, செங்குத்தான இடத்திலிருந்து குதிக்கிறது; பொன்னையும் மணியையும் உராய்ந்து கொழித்தவண்ணம் ஓடுகிறது. அதனால் அவற்றின் நிறம் நன்கு விளங்குகிறது. அருவி, பொடியான பொன்னை தெள்ளிக் கொழிக்கிறது. வாழை, முறியும் இயல்பு கொண்டது. துமியல் என்பது முறிதலாகும். தென்னையின் அடியிலே மோதிய அதிர்ச்சியிலே, அதன் இளநீர்க்குலை உதிர்ந்தது என்பதால் அருவியின் ஆற்றல் கூறப்படுகிறது.

இவ்வாறு ஆற்றல் மிக்க அருவி, மரங்களைச் சாய்த்து, மலர்களைக் கூட்டி, தேன்இறாலைச் சிதைத்து, கனிகளையும் இழுத்துக் கொண்டு, முத்தும் மணியும் பொன்னும் பளபளக்குமாறு அவற்றை அரித்துச் சென்று, அங்குள்ள பறவைகளையும் விலங்குகளையும் நடுங்கும்படிச் செய்து, இடைவிடாமல் தொடர்ந்து இழைந்து ஒலித்துக் கொண்டு ஒடுகிறது.

இனி,

'..............சேண்நின்று
இழுமென இழிதரும் அருவிப்
பழம்முதிர் சோலை மலைகிழ வோனே'

(315 - 317)

இவ்வாறு, மலை உச்சியிலிருந்து இழும் என்ற ஓசையோடு இடையீடில்லாமல் இறங்கி வரும் அருவியையுடைய பழமுதிர் சோலைமலைக்கு உரியவனாகிய முருகன்.

முதல் ஐந்து படைவீடுகளில் முருகப்பெருமான் இருப்பதை, அவ்விடங்களில் இருத்தலும் 'உரியன்' என்று கூறினார். ஆனால் ஆறாம்படைவீடாகிய இப்பழமுதிர் சோலையில் அவன் இருக்கிறான் என்ற முறையில் கூறாது, பழமுதிர்சோலை மலைகிழவோன், பெறலரும் பரிசிலைத் தருவான் என்ற முறையில் சொல்லி முடிக்கிறார். அப்படிக் கூறினாலும், முருகன் பழமுதிர் சோலையிலும் எழுந்தருளியிருக்கிறான் என்று கொள்ளவேண்டும். இதை உடம்பொடுபுணர்த்தல் என்று கூறுவர்; அதாவது ஒரு செய்தியைத் தனியே எடுத்துச் சொல்லாவிட்டாலும் சொல்லுகின்ற முறையில் அச்செய்தி புலப்படும்படி சொல்வது.

இப் 'பழமுதிர்சோலை' எது என்பதில் அறிஞர்களிடையே கருத்து வேறுபாடு உள்ளது. முருகப்பெருமான் குறிஞ்சி நிலக்கடவுள். இவ்வாறு அருவி பாய்கின்ற வளமுடைய மலைகட்கு உரிமையுடைய முருகக் கடவுள் என்பதால் 'பழமுதிர்சோலை மலைகிழவோன்' என்பார். நச்சினார்க்கினியர் 'பழமுதிர்சோலையை மலைக்குரிய அடையாகவே' கருதினார் என்பது விளங்குகிறது. மதுரைக்கு வடக்கில் உள்ள அழகர்மலையை, 'பழமுதிர்சோலை' என்றும், திருமாலிருஞ்சோலை என்றும் வழங்குவர். அருணகிரிநாதர் பழமுதிர்சோலைத் திருப்புகழில்,

'பிட்டுக்கு மண் சுமந்து, பிரம்படி பட்ட ஆலவாய் அண்ணல் உறையும் மதுரைக்கு அருகில், சந்தனமரம், அகில் மரம் முதலிய மரக் கூட்டங்களும் மேகத்துடன் ஒன்றுபட்டு செறிந்துள்ள, பழமைமிகு பழமுதிர்சோலைமலையில் விளங்கும் பெருமிதமுடையவரே' என்று, இம்மலை வளத்தைக் கூறுகிறார்.

'கூடற்கே வைகையில் கரை கட்டிட
ஆள் ஒப்பாய் உதிர்பிட்டு அமுதுக்கு அடிபடுவோனோடு
ஆரத்தோடு அகில் உற்ற தருக் குலம்
மேகத்தோடு ஒருமித்து நெருங்கிய
ஆதி சோலை மலைப்பதியில் திகழ் பெருமானே!'

பண்டைக் காலத்தில் இங்கு திருமாலுக்கும் திருமுருகனுக்கும் திருக்கோயில் ஒருங்கே இருந்திருக்க வேண்டும். சிலப்பதிகாரத்தில் 'புண்ணிய சரவணம்' என்ற குறிப்புக் காணப்படுகிறது. முருகன், சரவணப் பொய்கையில் அவதரித்தவன். இன்றும் பழனிமலையில் சரவணதீர்த்தம் இருப்பதைக் காணலாம். அழகர்மலை பற்றிய மான்மியத்தில், முருகன் திருமாலைப் பூசித்ததாக ஒரு வரலாறு கூறப்படுகிறது. இதனால் இத்தலத்தில், முருகன் எழுந்தருளியிருப்பதாகக் கூறப்படும் கருத்து வலிமை பெறுகிறது.

இனி, தொகுத்துக் காணலாம். திருப்பரங்குன்றில் முருகன்திருமேனிச் செம்மை உடையவன். ஒளி உருவினன். இருளினை ஒளியால் ஓட்டும் இரவிப் போன்றவன். தன்னை அடைந்தவர்களைத் தாங்கும் தாள்களை உடையவன்; பகைவரை அழிக்கும் கைகளை உடையவன்; குற்றமற்ற கற்பினை உடைய தெய்வயானை கணவன்; கடம்ப மலர் மாலை புரளும் மார்பினை உடையவன்; வண்டுகள் மொய்க்காத செங்காந்தள் அணிந்த திருமுடியை உடையவன்; சூரனை வென்றவன். அவன் வெற்றியைக் கூறும் கோழிக்கொடியைத் தெய்வமகளிர் வாழ்த்துகின்றனர். பேய்மகளிர் அப்பெருமான் வெற்றியால், தமக்கு உணவு கிடைத்தமை எண்ணி வாழ்த்தித் துணங்கைக் கூத்தாடுகின்றனர். செல்வச்சிறப்பும், மாடமாளிகைகளும் நிறைந்த மதுரை மாநகருக்கு மேற்குத் திசையில் உள்ள திருப்பரங்குன்றத்தில் அவன் எழுந்தருளியிருக்கிறான்.

இங்கு முருகப்பெருமானின் எழில்வளர் ஏற்றமிகு தோற்றமும், அன்பர் உள்ளம் விளங்கச்செய்யும் இயற்கை ஒளியும், தாள்களின் மாண்பும், கரங்களின் வலிமையும், மாலை அசையும் மார்பின் சிறப்பும், செங்காந்தள் கண்ணி சூடிய சிரமும், வெற்றி தந்த வேலை ஏந்திய சிறப்பும், வீடுபேற்றை உடன் தரும் உயர்வும் கூறப்படுகின்றன.

அடுத்து, *திருச்சீரலைவாய்க்கு* வலிமைமிக்க பிணிமுகம் எனும் யானை மீது ஏறி வருகிறான் முருகன். மணிகள் பொருந்திய முடியை அணிந்தவனாய், மதியைச் சூழ்ந்த விண்மீன்களெனக் காதுகளில் பொற்குழைகள் ஒளிவீச அழகனாய்த் தோன்றுகிறான். அவனுடைய ஆறு திருமுகங்களில் ஒன்று, உலகிற்கு ஒளியைத் தருகிறது. மற்றொன்று, அன்பர்களுக்கு வரங்களை அள்ளிக் கொடுக்கிறது. இன்னொருமுகம், அந்தணர் வேள்வியைக் காக்கிறது. வேறொரு முகம், சான்றோர்களுக்கு மெய்ப்பொருள் உணர்த்தித் திங்கள் போலத் திசைகளை விளக்குகிறது. மற்றொரு முகம், மாறுபட்ட பகையை அழித்துக் களவேள்வி புரிகிறது; மற்றொரு முகம், வள்ளியம்மையோடு மகிழ்ந்திருக்கிறது. அடுத்து, அப்பெருமானின் முதலிரண்டு திருக்கைகளில் ஒன்று விண்ணில் செல்லும் தேவ இருடிகளைக் காக்க உயர்த்தி நிற்பது. மற்றொன்றாகிய இடத்திருக்கை இடுப்பிலே சேர்வது. இரண்டாம் இணைத்திருக்கைகளில் ஒன்று அங்குசத்தைச் செலுத்தவும், மற்றொன்று அழகிய ஆடையை அணிந்த தொடையிலே கிடப்பது. இடவலமாகிய மூன்றாம் இணைக்கைகள் முறையே அழகிய பெரிய கேடகத்தோடு வேற்படையினை வலமாகச் சுழற்றி நிற்கும். அடுத்து நான்காம் இணைத் திருக்கைகளில் ஒன்று ஞானமுத்திரையோடு மார்பிலே பொருத்தி விளங்குவது. மற்றொன்று தொங்கும் மாலையுடன் சேர்ந்து எழிலுடன் தோன்றுவது. இனி, ஐந்தாம் இணைத் திருக்கைகளில் ஒன்று 'தொடி' எனும் ஆபரணத்தோடு களவேள்விக்கு முத்திரை கொடுக்கவும் மற்றொரு கரம் மணியை மாறிமாறி ஒலிக்கச் செய்யும். ஆறாம் இணைத் திருக்கரங்களில் ஒன்று மழையைப் பொழிவிப்பது. மற்றொன்று தெய்வ மகளிர்க்கு மாலை சூட்டுவது. இவ்வாறு ஓராறு முகமும் ஈராறு கரங்களும் கொண்டு துந்துபி ஒலிக்க, கொம்புகள் சப்திக்க, சங்குகள் முழங்க, வெற்றிக் கொடியிலே மயில் இருந்து ஒலிக்க, விண்வழி விரைந்து வநது, முருகன் திருச்செந்தூரிலே தங்குபவன். இங்கு, முருகப்பெருமானின் ஆறு திருமுகங்களின் அழகும், அவற்றிற்கு ஏற்பச் செயற்படும் ஆற்றல்மிகு பன்னிரு கரங்களின் பண்பும் கூறப்பட்டுள்ளன.

*திருவாவினன்குடியில்*, முனிவர்கள் முன் செல்கிறார்கள். அவர்கள் மரவுரியை இணைத்து ஆடையாய் அணிந்திருக்கிறார்கள்; நரைமுடியினர்; தூய மேனியர்; மான்தோல் போர்த்தியிருக்கும் தசையற்ற மார்பினர்; விரதநோன்பினர்; பகையும் கோபமும் நீங்கிய மனத்தினர்; சிறந்த அறிவினர்; கற்றவர்க்கு ஒரு வரம்பாய் அமைந்த தலைமை உடையவர்; காமம், கடுஞ்சினம் விட்ட அறிவினர்; மனவருத்தம் சிறிதும் அறியா மாண்பினர். அவர்களை அடுத்து, இனிய யாழ் இசை எழுப்பிக்கொண்டு

இன்மொழி உடைய கந்தருவர்கள் செல்கின்றனர். இவர்கள் தூய உடையினை அணிந்தவர்கள். மாலையைத் தரித்தவர்கள். இவர்களோடு கந்தர்வமகளிரும் செல்கின்றனர். அவர்கள் நோயில்லா உடம்பினர்; மாந்தளிர் நிறத்தினர்; மாசற்றவர்கள். திருமாலும், உருத்திரனும், இந்திரனும், தாம் முன்பு போலத் தத்தம் தொழிலில் தலைவராக விளங்குதல் பொருட்டு, பிரணவப் பொருளறியாமல் முருகனால் சிறைவைக்கப்பட்ட பிரமனை விடுவிக்கச் செல்கின்றனர். முப்பத்து மூன்று தேவர்களும், பதினெண் கணத்தவரும் புடை சூழ நிலவுலகில் தன்னை வந்து காணுமாறு முருகன் அறக் கற்பினளாம் தெய்வயானையுடன் திருவாவினன்குடியில் எழுந்தருளியிருக்கிறான்.

அடுத்து,

### திருவேரகத்தில்

முருகனை ஏத்தும் அந்தணர்கள் நிறம் பேசப்படுகிறது. அவர்கள் நாற்பத்தெட்டு ஆண்டுகள் அறவழியில் பிரம்மச்சரியம் காத்த, முத்தீ ஓம்பும் இருபிறப்பாளர்கள்; நீராடி, ஈரம்புலராத ஆடையுடன் தலைமேல் குவித்த கைகளை உடையவராய், அவர்கள் ஆறெழுத்து மந்திரம் ஓதி, நறுமலர் தூவித் தன்னைப் புகழ்ந்து வாழ்த்துமாறு திருவேரகத்தில் மகிழ்ந்து உறைகிறான் முருகன்.

அடுத்து,

### குன்றுதோறாடல்

குறிஞ்சிநிலக் குறவர்கள், மது உண்டு மகிழ்ந்து, தம் மகளிரொடு சேர்ந்து குரவையாடுகிறார்கள். வேலன், முருகனைப் போலத் தன்னை அலங்கரித்துக் கொண்டு வெறியாடுகிறான். யாழிசை போன்ற குரலினை உடைய மகளிரோடு, மான்பிணை போன்ற சிறுமியரைத் தழீஇக்கொண்டு, குன்றுதோறும் ஆடுவதும் முருகன் அவன்மேல் ஆவேசித்து நின்றதன் பயனாகும். இவ்வாறு குன்றுகள் தோறும் குமரன் எழுந்தருளியிருப்பான்.

நிறைவாக,

## பழமுதிர்சோலை

முருகப்பெருமான், ஊர்கள்தோறும் கோழிக் கொடியை நிறுத்தி, தினையரிசியை மலரோடு கலந்து தூவி மறி அறுத்து விழாக்கொண்டாடும் இடங்களிலும், வேலன் வெறியாடும் இடங்களிலும், காடு, சோலை, ஆற்றிடைக்குறை, ஆறு, குளம், நாற்சந்தி, முச்சந்தி, கடம்பு, மன்றம், ஊரம்பலம் ஆகிய இடங்களிலும், அருட்குறியாக நடப்பட்டதறியிடங்களிலும், மக்கள் வேண்டிய வேண்டியாங்கு அடைந்தவராய் வழிபடுமாறு முருகன் எழுந்தருளியிருப்பான்.

நான் கூறிய அவ்விடங்களிலாவது அல்லது வேறு இடங்களிலாவது நீ அப்பெருமானைக் கண்டபோது முகமலர்ந்து, வாயாரவாழ்த்தி, கைகளைத் தலைமேல் குவித்து அவன் திருவடிகளில் முடிபட வணங்கி,

'அறுவர் பயந்த ஆறமர் செல்வ! ஆலமர் கடவுள் புதல்வ!
மலைமகள் மகனே! மாற்றோர் கூற்றே!' முதலாகப் பலவாறு புகழ்ந்து போற்றுவாயாக. பின்னர் 'பெருமானே! நின் அளவிடற்கரிய பெருமையைக் கூறுதல் என்போன்றோர்க்கு இயலாது; அதனால் யான் அறிந்த அளவில் நின் திருப்புகழைக் கூறி வந்தேன்' என்று பணிந்து கூறுக.

இவ்வாறு நீ குறித்து வந்த செய்தியைக் கூறுமுன்பே, அப்பெருமானுக்கு அருகிருக்கும் பல்வேறு வடிவு கொண்ட பூதங்கள் 'இவன் தேவரீர் அருளுக்கு உரியவன்; அறிவுசான்ற இப்புலவன், பெருமானின் பெரும் புகழை நாடி, இங்கே வந்திருக்கிறான்' என்று கூறி விண்ணப்பம் செய்வர்.

அது கேட்டு, ஆற்றல்மிகு அருவி, பல மலைபடு பொருட்களை அடித்துக்கொண்டு, பறவைகளும் விலங்குகளும் அஞ்சியோட 'இழும்' எனும் ஓசையுடன் வீழும், பழமுதிர்ந்த சோலைகளையுடைய மலைகிழவோனாகிய முருகப்பெருமான், தெய்வத்தன்மை வாய்ந்த அச்சம் தரும் தன்பேருருவினை உள்ளடக்கி மணம் கமழும் அழகிய இளமைக் கோலத்துடன் நின்முன் காட்சி தருவான். அப்பெருமான், 'அஞ்சாதே! நின் வரவை யான் அறிவேன்' என அன்பு மொழி கூறி அருளுவான்; ஒப்பற்ற வீடு பேற்றினை இவ்வுலகிலே எய்தி இன்புமாறு பெறற்கரிய பரிசிலை உனக்கு அளித்து அருள் புரிவான்.

இப்பகுதியில் இருபத்தாறு புகழ்மொழிகளை முருகனுக்குச் சூட்டி மகிழ்கிறார் நக்கீரர். தன்பேருருவினை உள்ளடக்கி மணம் கமழும் அழகிய இளமைக் கோலத்துடன் நின்முன் காட்சி தருவான். அப்பெருமான், 'அஞ்சாதே! நின் வரவை யான் அறிவேன்' என அன்புமொழி கூறி அருளுவான். ஒப்பற்ற வீடு பேற்றினை இவ்வுலகிலே எய்தி இன்புறுமாறு பெறற்கரிய பரிசிலை உனக்கு அளித்து அருள்புரிவான். இவ்வாறு, 'உலகம் உவப்ப' என்று ஞாயிற்றில் தொடங்கி மலையில் முடித்துள்ளார் நக்கீரர். அல்லது கடலில் தொடங்கி அருவியில் முடித்துள்ளார் என்றும் ஆம். அதாவது, சமஷ்டியில் ஆரம்பித்து வியஷ்டியில் முடித்தார் எனலாம்.

இத்திருமுருகாற்றுப்படைக்குச் சில அறிஞர்கள் தத்துவார்த்தமான விளக்கங்களையும் தருகின்றனர். நக்கீரர் முருகப்பெருமானை ஆன்மாக்களின் பரிபக்குவ நிலைக்கேற்ப அருளுபவனாகச் சித்தரிக்கிறார்; கவியில் கனிந்த முருகனாகவும், ஆரணம்கண்ட ஆகமப்பொருளாகவும், மூவர்க்கும் தேவர்க்கும் முதல்வனான சுத்த சைதன்யமாயும், அந்தணர் கண்ட மந்திர முருகனாகவும், கானவர் கண்ட வேடுவ முருகனாகவும், ஆர்வலர் எவரும் எங்ஙனும் காணும் எளியவனாக அதாவது சௌலப்ய சீலனாகவும் சித்தரிக்கிறார். திருப்பரங்குன்றம் பகுதியில் சூரர மகளிர் கோழிக்கொடியை வாழ்த்தி, மலை எங்கும் எதிரொலிக்குமாறு பாடி ஆடுகின்றனர். பேய்மகள் உணவு கிடைத்த போர்க்களத்தைப் புகழ்ந்து பாடுகிறாள். திருச்சீரலைவாயில் அப்பெருமானிடம் அன்பு கொண்டவர்கள் வாழ்த்துகின்றனர். திருவாவினன்குடிப் பகுதியில், முனிவரும், இசைவாணரும் மூவரும், தேவரும், வருகின்றனர். மூவரும் தேவரும் தத்தம் தொழில்களை முன்போலச் செய்து தலைவராக விளங்குதல் பொருட்டு அயனை விடுவித்து அவனைப் பழைய நிலையில் நிறுத்த வருகிறார்கள். திருஏரகத்தில் தவச்சீலர்களான அந்தணர்கள் முருகப்பெருமானை

ஆறெழுத்து அருமறை ஓதி, மலர்தூவிப் பரவுகின்றனர். இதே போன்று குன்றுதோறாடலில் வேலன் வெறியாடுகிறான்; குறவர் கூத்தாடுகின்றனர். மலைநிலத்து மகளிர் வணங்குகின்றனர். வேலன்மேல், முருகப்பெருமான் நின்று ஆடுகிறான். மூவருக்கும், தேவருக்கும் காண அரிய முருகன் வேலனிடம் ஆவேசித்து எளியன் ஆகிறான். அதனால் எளியவன், இறைவன், இக்குகன்.

முதலில் சாங்கியயோகமும், இரண்டாவதில் யோக மார்க்கமும், மூன்றாவதில் ஞானமார்க்கமும், நான்காவதில் உபாசனா மார்க்கமும், ஐந்தாவதில் சரியா மார்க்கமும், ஆறாவதில் கிரியா மார்க்கமும், காட்டப்பட்டனவாகவும் கூறுவர். மேலும், நக்கீரர் கூறும் திருப்பரங்குன்றம், திருச்சீரலைவாய், திருவாவினன்குடி, திருஏரகம், குன்றுதோறாடல், பழமுதிர்சோலை என்பவை நமது உடம்பிலே அமைந்திருக்கும் மூலாதாரம், ஸ்வாதிட்டானம், மணிபூரகம், அனாகதம், விசுத்தி, ஆக்ஞை என்ற ஆதாரஸ்தானங்களாகும் எனவும், குண்டலினி என்னும் சக்தி, இவ்வாறு ஆதாரங்களைப் பேதித்துக் கொண்டு, சுஷும்ணா நாடி வழியாகச் செல்லுங்கால் ஒவ்வோர் ஆதாரத்திலும் ஏற்படும் அனுபவங்களே ஆங்காங்கு முருகனாகக் கூறப்படுகின்றன என்றும் கூறுவர். அருணகிரிநாதர் பழமுதிர்சோலைத் திருப்புகழில், 'ஆசை நாலு சதுரக் கமலம்' என்ற பாடலில், இச்சிவயோகக் கருத்தைத் தெளிவாகத் தெரிவிக்கிறார். இடை, பிங்கலை என்ற இரு நாடிகளின் வழியே ஓடிக்கழியும் பிராணவாயுவை அங்ஙனம் செல்லவிடாது முதுகுத் தண்டின் நடுவே தாமரைநூல் போல் நுணுகியுற்ற சுழுமுனை நாடி வழியே செலுத்துதல் வேண்டும். இவ்வாறு சுழுமுனை வழிச் செல்லும் பிராணவாயுவை முறைப்படி சுவாதிட்டானம், மணிபூரகம், அநாதகம், விசுத்தி, ஆக்கினை எனும் ஐந்து ஆதார கமலங்களில் நிறுத்தி பிரமரந்திரத்திற் செலுத்தி அதற்குமேல் சகஸ்ராரக் கமலமாகிய துவாத சாந்தத்தில் செலுத்துதல் வேண்டும் என்பது குறிப்பு. இது நிற்க.

இத் திருமுருகாற்றுப்படை, சங்ககால நக்கீரரால் இயற்றப்பட்டது எனவும், இதைப் புலவராற்றுப்படை எனக் கொள்ளலாம் எனவும், பத்துப்பாட்டுத் தொகுப்பில் முதலாவதாக வைத்த முறைமையால் அத்தொகுப்பிற்கு இது கடவுள் வாழ்த்து எனக்கொள்ளவேண்டும் எனவும் பல அறிஞர் கூறுவர். சில அறிஞர்கள் இக்கருத்தை மறுத்துத் திருமுருகாற்றுப்படையைப் பாடிய நக்கீரர் சங்ககால நக்கீரரினும் வேறானவர் எனவும், காலத்தால் பிற்பட்டவர் எனவும், அவர் நக்கீரதேவ நாயனார் எனவும்

கருதுகின்றனர். மேலும் இத் திருமுருகாற்றுப்படை, புலவராற்றுப்படையைச் சார்ந்தது அன்று எனவும், புலவரை ஆற்றுப்படுத்துதல் தொல்காப்பியருக்கு முன்பும், அவர்காலத்திலும் வழக்கில் இல்லை எனவும் கூறுகின்றனர். முன்பே கூறியவாறு பிற ஆற்றுப்படைகள் ஆற்றுப்படுத்தப்படுபவர்களோடு சார்த்தி வழங்கப்படும் எனவும், பிறவற்றில் காணப்படுவது போன்று ஆற்றுப்படுத்தப்படுவானை விளித்தலும்தன் முன்னை நிலையும் கூறலும் பரிசில் பெற்ற பின்னை நிலையும் இதில் விளக்கப்படாமல் உய்த்துணர வேண்டிய அளவில் பாடப்பட்டுள்ளன எனவும் கூறுவர். ஒரு கருத்தை நோக்கலாம். அதாவது, ஆற்றுப்படுத்துபவன் பெற்ற பெருவளத்தை உடையவன். அவனை 'யானறியளவையின் ஏத்தி' என்னும் இடத்தில் உள்ள 'யான்' என்ற சொல் புலப்படுத்துகின்றது. ஆற்றுப்படுத்தப்பட்டவன் 'முந்து நீ கண்டுழி' என்றும், 'முதுவாய் இரவலன்' என்றும் சுட்டப்படும் இடத்தில் புலப்படுத்தப்படுகிறான். ஆற்றுப்படைக் கூறுகள் ஒருவாறு ஈண்டு அமைவதைக் காணலாம்.

திருமுருகாற்றுப்படை, முருகனைப் பற்றிப் பாடும் முதல் நூல். பரிபாடல், கலித்தொகை போன்ற சங்கநூல்களிலும், இதர நூல்களிலும் முருகனின் அவதாரம், வீரம், மாண்பு போன்றவை கூறப்பட்டாலும், திருமுருகாற்றுப்படையே முழுநூலும் முருகனைப் பற்றிக் கூறுவது. இது முருக பக்தர்களால் அன்றாடம் பாராயணம் செய்யப்படும் தெய்வ நூல்; காவல் தெய்வமாகப் போற்றப்படும் நூல். அழியா இயல்பும், மாசின்மையும் பேராற்றலும் உடையவன் முருகன் என்பதைப் 'பண்டைத் தன் மணங்கமழ் தெய்வத்து இளநலங்காட்டி' எனக் கூறினார் நக்கீரர். இறைவன் உயிர்களுக்கு அப்பாற்பட்டு நின்றால் பயனேதும் இல்லை. ஏனைய ஆற்றுப்படையில் புலவர் உலகியல் இன்பங்களை எடுத்தோதுவர். நக்கீரர் முருகன் அருள்பெற்றோர் பெறும் பின்னிலை கூறாது மாறாக 'இன்னே பெறுதி நீ முன்னிய வினையே' என முருகன் அருள் பெற விரும்பும் உயிரைத் தூண்டி 'அஞ்சல் ஓம்புமதி அறிவல் நின் வரவு' என முருகன் உயிர்க்கு அருள் செய்யும் நிலையை எடுத்துரைத்துள்ளார். 'அறிவல் நின் வரவு' என்பதால் முருகனின் முற்றறிவுடைமையும், 'உலகத்து ஒரு நீயாகத் தோன்ற அருள் செய்வன்' என்பதனால் உயிர்கள் பெறும் நல் வாழ்வும் அறியலாம். மற்ற ஆற்றுப்படைகள் சொற்சுவை, பொருட்சுவை கொண்டு விளங்கினாலும் இரவலர் தம்மைத் தாழ்த்திக் கூறலைக் காண்கிறோம், நக்கீரர் இதை உணர்ந்து ஆற்றுப்படையின் நோக்கத்தையே முழுதும் வேறுகொண்டு இவ்வகை ஆற்றுப்படை இலக்கியங்களுக்கு ஒரு புது கௌரவத்தையும் உயர்வையும் தந்துள்ளார். தமிழில் தெய்விகம் திளைக்கிறது.

மேலும் ஓர் அரிய கருத்து:

அன்று ஸனகாதி முனிவர்களும், மாணிக்கவாசகரும் முத்திநிலை பெறவிரும்பியபோது அவர்க்குத் தேசிகனாய்ப் பரமசிவன், தானே விரும்பியமர்ந்து அவர்களை ஆட்கொண்டான். உபதேச மொழிகளை அனுபவமுடைய தேசிகர் பாற்கேட்டு அதனால் மெய்ப்பொருள் உணர்தல் வேண்டும் என்பதால் நக்கீரரும் இவ்வுலகவுயிர்கள் பால் கொண்ட காதலால் - கருணையால் தாமே வலிந்து சென்று அவர்களை நல்வழிபடுத்துகிறார். அவரே தேசிகராகவமர்ந்து அவர்களுக்கு முருகனின் செம்மேனிச் சிறப்பு, குணவியல்பு, வீரம், ஆற்றல், அன்பு, அறிவு ஆகியவற்றை எடுத்துரைத்து அவன் உறையுமிடங்களைக் கூறி அவர்களை முருகனிடத்து சென்றடைந்து பெறலரும் பரிசாகிய ஜீவன் முக்த நிலை பெற ஆற்றுப்படுத்துகிறார். மேலும் இவ்வாற்றுப்படையியல் முதலில் சிவபிரான் தலமும் இறுதியில் திருமாலின் தலமும் கூறி, இடையில் அயனுக்கு அருள் செய்தமையை நினைவு கூர்கிறார். மேலும், அறங்களில் தலையாய அறமாம் இல்லறத்தையும் துறவறத்தையும் கூறியுள்ளார். மூவர்களும் தேவர்களம் தம்மைக் காண ஆவினன்குடியில் அசைதலுமுரியன் என்பதால் பொருளும், மயில் கண்டன்ன மகளிரொடு குன்றுதோறாடல் பண்பால் இன்பமும், 'புலம்புரிந்துறையுஞ் சேவடி' என்று கந்தழி கூறியதனால் வீடுபேறும் கூறப்படுகின்றன. பிரம்மசரிய ஒழுக்கமும், மனையற மாட்சியும் துறவறக் கொள்கையும் இடம்பெறுகின்றன.

முன்பே மொழிந்தவாறு முருகு எனும் சொல்லுக்கு அழகு, இளமை, தெய்வத்தன்மை, ஞானமணம், மகிழ்ச்சி, இனிமை என்பன பொருள். 'முருகு கள் இளமை நாற்றம் முருகவேள் விழா அன்பாம் என்கிறது நிகண்டு. இத்திருமுருகாற்றுப்படை முருகனின் தொன்மை, அழகு, மணம், இளமை, கடவுள் தன்மை ஆகியவற்றைச் சுமந்து வந்து பொருள் கொட்டும் தமிழ் அருவி; பாடலில் பலபகுதிகள் இயற்கையில் தோய்ந்தவை. முருகன் இயற்கையோடு இணைந்தவன். அழகன். இளமைக்காரன். மலைகளின் அணியும், காடுகளின் செறிவும், கொடிகளின் நிரையும், கருங்கடலும், செஞ்ஞாயிறும், நிலவும், மலரும், பறவைகளின் செயலும், விலங்குகளின் ஈட்டமும், அவன் அருள் பெற முனையும் ஆர்வலரும், முனிவரும், மூவரும், தேவரும், குறவரும், வேலனும், அப்பெருமான் எழுந்தருளியிருக்கும் கோயில்களும் பிறஇடங்களும், வழிபடு முறையும், இசையும், அவன் திருமேனிச்சிறப்பும், ஆடைகளும், அணிகலன்களும், அணியும் தாரும், சூடும் கண்ணியும், பகை பொறாமை இகல் நீங்கி உறுதிகொண்ட உள்ளத்தினராய் வழிபடுவோர் வேண்டியவை வேண்டியவாறு பெறும் பேறும், இந்நூல் முழுதும் பரவியும் விரவியும் வருகின்றன.

'கடவுள் இல்லை' என்னும் 'முரணியல் கொள்கை' உடையவரும் படித்து இன்புறத்தக்க இயற்கைக் காட்சிகள் இதில் மிகுந்துள்ளன. பாடலைத் தொடங்கும் போதே ஓர் அழகிய இயற்கைக் காட்சியோடு முருகனின் தோற்றத்தை இணைத்து; உவமை கூறுகிறான் கவிஞன். காலைக் கதிரவன் கடலிடத்தே தோன்றுமாப்போல, நீல மயில்மீது கோலக்காட்சி தருகிறான் செவ்வேள் முருகன்.

பாடல் முழுதும் இயற்கை இழைந்தோடுகிறது. மேரு மலையும், பலர்புகழ் ஞாயிறும், கடலும், கதிரவனின் பேரொளியும், சூரிய சந்திரனின் ஒளியால் விளக்கம் பெறும் விண்ணும், விண்மீன்களும், கார்காலத்து முதல் மழையும், மணம் வீசும் காடும், காவும், கவின் பெறு துருத்தியும், செங்கடம்பும், சந்தனம் போன்ற மரங்களின் உயரமும், செழிப்பும், விலங்குகளும், பறவைகளும், பாம்பும், செடிகொடிகளும், ஆரமும், அருவியும், பைஞ்சுனையும் என நிலமகள் உடுத்த எழில் வண்ண ஆடையாய் இயற்கையைப் புனைந்து, இயற்கையின் ஒவ்வோர் அசைவினையும் அழகையும் அதனால் பெறும் முருகியல் உணர்வையும் காட்டுகிறார் நக்கீரர்.

முருகப்பெருமானின் ஆறு திருமுகங்களும், பன்னிரு கரங்களும் அவற்றின் செயல்பாடுகளும், அப்பெருமான் அன்பரைத் தாங்கும் தாளின் தகவும், தோளின் வீரமும், அறக்கருணையும், மறக்கருணையும், தெய்வயானை வள்ளியம்மையாரின் கணவன் என்ற மாண்பும், அணியும் கடம்பமலர் மாலையும், சூடும் செங்காந்தள் கண்ணியும், சூரர் குலம் வேரறுத்த வீரமும், அப்பெருமானின் தோற்றமும் ஏற்றமும், தெய்வ வடிவும், அருள் பாலிக்கும் கருணையும் பாடல்முழுதும் பரவி நிற்கின்றன.

திருப்பரங்குன்றம், திருச்சீரலைவாய், திருவாவினன்குடி, திருஏரகம் என்னும் இத்தலங்களிலன்றி குன்றுகள் தோறும் உறைபவன் குமரன். மேலும், பழமுதிர்சோலைக்கும் உரியவன். இந்தப் பழமுதிர்சோலை அழகர் மலையைக் குறிக்கும் என்றும், பொதுவாக வளமிகுந்த மலையையே குறிக்கும் என்றும் அறிஞர்களிடையே கருத்து வேறுபாடு உள்ளது.

மேலும், முருகன் தன்னை வழிபடும் இடங்களிலும், வேலன் வெறியாடுமிடத்திலும், காடுகளிலும், சோலைகளிலும், ஆற்றிடைக் குறைகளிலும், ஆறுகளிலும், குளங்களிலும், பல்வேறு ஊர்களிலும், நாற்சந்தியிலும், முச்சந்தியிலும்,

கடம்ப மரத்தின் அடியிலும், ஊர்ப்பொது மரத்தடியிலும், அம்பலத்திலும், தன் அடையாளமாக நிறுத்தப்பட்ட தறி நிற்கும் இடத்திலும் என எங்கும் நீக்கமற நிறைந்த பரிபூரணன்.

முருகப்பெருமான் சிவந்த மேனியன்; அவன் அணியும் ஆடையும் சிவந்த நிறமானது. அப்பெருமான் தலையில் ஐவகைப்பட்ட வடிவினை உடைய வேலைப்பாடு நிறைந்த முடிசூடியிருக்கிறான். அதில், அழகிய மணிகள் ஒளிர்கின்றன. அவன், ஒளிவீசும் மகரக்குழைகளைக் காதுகளில் அணிந்துள்ளான்; கையில் தொடி அணிந்திருக்கிறான்; பொன் அணிகளை அணிந்த சேய் அவன். களவேள்விக்கு முத்திரை காட்டும் ஒரு கரத்திற்கு இணையான மற்றொரு கரம், மணியைப் பிடித்து இனிய ஓசையை எழுப்புகிறது. போரில் ஐயிருவட்டமும் வேலும் அங்குசமும் அவன் எடுத்த கருவிகள். அடியார்க்கு அவன் அணியும் அணிகள்.

முருகப்பெருமான் கடப்பமலர் மாலையை அணிந்திருக்கிறான்; செங்காந்தள் கண்ணியைச் சூடியிருக்கிறான்; தாரோடும், மாலையோடும் காட்சி தருகிறான்.

முருகப்பெருமான் எழுந்தருளும்போது, துந்துபி முழங்குகிறது; திண்ணிய கொம்பு ஒலிக்கிறது; வெள்ளிய சங்கு முழங்குகிறது; இடியோசை ஒத்த முரசு ஒலிக்கிறது; மயில், வெற்றிக் கொடியிலே இருந்து அகவுகிறது.

அப்பெருமானுக்கு மயில், பிணிமுகம் என்னும் யானை, ஆட்டுக்கடா ஆகியவை வாகனங்களாகும். கோழிக் கொடியும், மயிற்கொடியும் கொடிகளாகும்.

குறிஞ்சி நிலத்தின் கண் வேலன் விழாவெடுக்கிறான். முருகனுக்குரிய ஆடை, ஊர்தி, கொடி முதலியவற்றை உடையவனாய்க் குரவைக் கூத்தாடும் கானவரோடும் மகளிரோடும் பாடும் மகளிரோடும் குன்றுகளிலே ஆவேசம் கொண்டு ஆடிப்பாடுகிறான். முருகனைப் போன்று அலங்கரித்த அவனது தோற்றம் எவ்வாறு உள்ளது?

அவன் சிவந்த மேனியை உடையவன்; சிவந்த ஆடையை அணிந்தவன்; அசோகத் தளிர் அசையும் காதினன்; கச்சையைக் கட்டியிருக்கிறான்; கழலை அணிந்திருக்கிறான்; வெட்சி மாலையைச் சூடியிருக்கிறான்; குழலையும் கொம்பையும் ஊதுகிறான்; வேறு பல

இசைக்கருவிகளையும் இசைக்கிறான்; ஆட்டுக்கடாவையும் மயிலையும் உடையவன்; குற்றமற்ற சேவல் கொடியை ஏந்தியவன்; நெடிய உருவத்தினன்; தொடி அணிந்த தோளினன்; நிலத்தைத் தொடுமாறு ஆடையை அணிந்திருக்கிறான். இவையாவும் முருகனுடைய அடையாளங்களாகக் கூறுவாருமுண்டு.

முருகப்பெருமான் திருச்சீரலைவாய்க்கு ஏறிவரும் பிணிமுகயானையின் அங்குச வடுபதிந்த நெற்றியிலே பொன்னரிமாலை நெற்றிப்பட்டத்தோடு அசைந்தாடுகிறது. இருமருங்கிலும் தாழக்கட்டிய மணிகள் மாறிமாறி ஒலிக்கின்றன; அந்த யானை விரைவான நடையை உடையது; கூற்றுவனை ஒத்த வலியை உடையது; காற்றைப் போல விரைந்து வரும் நடை அது.

திருமுருகாற்றுப்படையில், முருகப்பெருமானின் அருள் பெற விழைபவர்கள் பலர் காட்டப்படுகின்றனர். இவர்களுள் பொறிபுலன் வென்ற அன்பர்கள், தெய்வமகளிர், இருடிகள், அந்தணர், சான்றோர், முனிவர், கந்தருவர், கந்தருவ மகளிர், வேலன், மலைநில மகளிர், குறவர், ஏனைமக்கள், எனப் பலரும் அடங்குவர். மேலும், திருமால், உருத்திரன், இந்திரன், பிற தேவர்கள், முருகனிடம் பிரமனைச் சிறையினின்றும் விடுவிக்க வேண்டி விண்ணப்பிக்க வருகின்றனர். பேய்களும் தங்களுக்குப் போரில் உணவு கிடைக்குமாறு செய்த முருகனை வாழ்த்தித் துணங்கைக் கூத்தாடுகின்றன.

மேலும், சிவனோடு உமைஅம்மையும், கார்த்திகை மாதர்களும், கொற்றவையும், காடுகிழாளும், திருமகளும் நினைவுகூரப்படுகின்றனர்.

இங்குக் குறிப்பிடப்படும் தேவமகளிர் அழகிற்கு அழகூட்டுபவர்கள்; அவர்கள் அணியும் ஆடை சிவந்த எழில் உடைய ஆடை. அவர்கள் சாம்பூநதம் என்ற பொன்னால் செய்த அணிகலன்களையும், கிண்கிணி, மேகலை சீதேவி எனும் தலையாபரணம், சுறாமீன் வாய்போன்ற நெற்றியாபரணம் இவற்றை அணிந்திருக்கின்றனர். வெட்சிப்பூ, குவளைப்பூ, செண்பகப்பூ, மருதப்பூ, செவ்வரும்புகள், வேங்கையின் மகரந்தப்பொடி எனப் பல மலர்களைச் சூடியும் தூவியும், அசோகத் தளிர், விளவின் தளிர் ஆகியவற்றை அணிந்தும் தங்களை ஒப்பனை செய்துகொள்கிறார்கள். பாடி ஆடுகிறார்கள்; கோழிக் கொடியை வாழ்த்துகிறார்கள். இவர்கள் கை புனைந்து இயற்றாக் கவின் பெறும் அழகினர்.

இவர்களுக்கு எதிரான தோற்றத்தை உடைய பேய்களும் காட்டப்படுகின்றன. இங்குப் பேய்மகள் ஒள்ளிய வளை அணியுடன் காணப்படுகிறாள். முருகனை வாழ்த்தித் துணங்கைக் கூத்தாடுகிறாள். அழகன் முருகனைத் தேவமகளிர் வாழ்த்தி வணங்குகின்றனர். அதே போன்று, வீரன் முருகனைப் பேய்கள் வாழ்த்தித் துணங்கைக் கூத்தாடுகின்றன.

அடுத்து, முருகப்பெருமானைப் பரவும் முனிவர்கள் இயல்புகளை நோக்கும்போது, முனிவர்கள் கொள்ள வேண்டிய தவச்சீல ஒழுக்கம் கூறப்படுவது போல் உள்ளது. முனிவர்கள் நீராடிப் புறத்தூய்மை உடையவர்களாக இருக்கவேண்டும். விரதம் மேற்கொள்ள வேண்டும். அதனால் உடம்பு மெலிந்து, இந்த உடம்பும் ஒரு சுமை எனக் கருதும் மனப்பக்குவம் எய்தல் வேண்டும்; நூல் பல கற்க வேண்டும். அறிவின் உச்சமுடையவர்களாகவும் பகையையும் ஆசையையும் விட்டொழித்தவர்களாகவும், சினத்தை விட்டவர்களாகவும் விளங்கி, அகத்தூய்மை பெற்றவர்களாக விளங்க வேண்டும். புற, அகத் தூய்மை இரண்டும் தவம் இயற்றுபவர் மேற்கொள்ளவேண்டும் என்னுமிவை இங்கு வலியுறுத்தப்படுகின்றன.

கந்தருவர்கள் அழுக்கிலாத் தூய உடை அணிந்தவர்கள்; நல்ல மணமுடையவர்கள்; இன் சொல்லினர்; இவர்கள் காதுகளில் வைத்து, இசையை அளந்து, நரம்பைக் கட்டிப் பொருந்திய வார்க்கட்டுடன் கூடிய யாழை இசைக்கும் விற்பன்னர்கள். இவர்கள் மகளிர் நோயில்லாத உடம்பினர்; மாந்தளிர் நிறத்தினர்; மேகலை அணிந்தவர்கள்.

அடுத்து முருகனை வழிபடும் அந்தணர்கள் கொள்ள வேண்டிய இயல்புகள் கூறப்படுகின்றன. அறுவகைத் தொழிலும் நல்லகுடிப்பிறப்பும், பிரம்மச்சரிய விரதமும், அறக்கொள்கையும், முத்தீ இயற்றி வழிபடும் செல்வமும் உடையவர்களாக அவர்கள் இருத்தல் நலம்.

இந்நூல் முழுதும் பன்னிற மலர்களைக் கூறி முருகனின் தெய்வமணத்திற்கு மலர் மணம் கூட்டுகிறான் கவிஞன். கடம்பமலர், வெட்சி, குவளை, செண்பகம், மருது, செவ்வரும்பு, கோங்கு, வேங்கை, செங்காந்தள், தாமரைப்பூ,நெய்தல், சுனைமலர், காட்டுமல்லி, வெண்தாளி, செவ்வலரி ஆகிய மலர்களும், அசோகின் தளிர், விளவின்

தளிர் போன்றவைகளும், கஞ்சங்குல்லை போன்ற தழைகளும், பச்சிலைக் கொடிகளும், சாதிக்காய், தக்கோலக்காய் போன்ற நறுமணக்காய்களும் கூறப்படுகின்றன. மேலும் பொதுவாகப் பல மலர்களும் மாலைகளும் கூறப்படுகின்றன.

பல மரங்களின் மாட்சியும் காட்டப்படுகிறது. பருத்த அடியினை உடைய செங்கடப்ப மரமும், செண்பக மரமும், மருத மரமும், அசோகமரமும், கோங்கும், வேங்கையும், விளா மரமும், மாமரமும், வெட்சிமரமும், மராமரமும், அகிலும், ஆரமும், மூங்கிலும், ஆசினிப் பலாவும், சுரபுன்னை மரமும், வாழை, தென்னை, பனை, மூங்கில் என்பனவும் கூறப்படுகின்றன.

கூகை, கருடன், மயில், காட்டுக்கோழி போன்ற பறவைகள் கூறப்படுகின்றன. மந்தி, முசுக்கலை, கருங்குரங்கு, கிடாய், யானை, பன்றி, கரடி, ஆமா நல்ஏறு எனப் பல விலங்குகள் வருகின்றன.

கடும்பாம்பு கூறப்படுகிறது. அது நஞ்சு பொருந்திய வளைந்த பற்களை உடையது; நெருப்புப் போல மூச்சுவிட்டு அச்சம் விளைவிப்பது, வலிமை உடையது. ஆனால் அதையும் அடித்து ஒடுக்கும் பல்வரிகொண்ட சிறகுடையது கருடன். இவற்றின் இயல்புகளை நோக்குகிறார் நக்கீரர்.

வண்டுகளும் ரீங்காரமிட்டு மொய்க்கின்றன; பாடுகின்றன. ப ல் வே று இசைக்கருவிகள் இசையை எழுப்புகின்றன. துந்துபி, கொம்பு, சங்கு, முரசு, யாழ், குழல், கொம்பு, சிறிய பல இசைக்கருவிகள், தொண்டகச் சிறுபறை, மணி மற்றும் பல்வகை இசைக்கருவிகளின் இன்னிசை எழுகிறது.

கார்காலத்து முதல்மழை கூறப்படுகிறது. வைகறைப் பொழுது ஆகிய விடியல் பேசப்படுகிறது. இவ்வாறு பெரும் பொழுதும், சிறு பொழுதும் கூறப்படுகின்றன.

நக்கீரர் பல அழகிய உவமைகளைக் கையாளுகிறார்:-

உலக உயிர்கள் மகிழ மேருவை வலம் வரும் ஞாயிறு கடலிடத்தே உதித்தது போல முருகன் நீல மயில்மீது எழுந்தருளும் தோற்றம் உள்ளது என்பது,

'பலர் புகழ் ஞாயிறு கடற் கண்டாஅங்கு' (1-2) எனவும்,

தேர் உருள் போன்ற வடிவமைந்த குளிர்மாலை என்பதை, 'உருள் பூந் தண்தார்' (வரி.11) எனவும்,

இந்திர கோபத்தை ஒத்து நிறம்பிடியாது இயல்பாகவே சிவந்த பூத்தொழிலை உடையது ஆடை என்பதை,

'கோபத்தன்ன தோயாப் பூந்துகில்' (15) எனவும் பாடுகிறார்.

மருதப் பூவைப்போன்ற சந்தனத் தேய்வை திண்காழ் நறுங்குறடு உரிஞ்சிய

பூங்கேழ்த் தேய்வை தேம் கமழ் மருதிணர் கடுப்ப (34) எனவும்,

கோங்கினது குவிந்த அரும்பை ஒத்த

இளைய தனங்கள்

'கோங்கின் குவிமுகிழ் இளமுலை' எனவும்,

கண்போல் மலர்ந்த விரும்பத்தக்க சுனைப்பூ

காமரு சுனை மலர் (75) எனவும்,

கூற்றுவனது வலியை ஒத்துப் பிறரால் தடுத்தற்கரிய வலிமை

கூற்றத் தன்ன மாற்றரு மொய்ம்பின் (82) எனவும்,

ஓடும்போது காற்று எழுந்தாலொத்த களிறு

'கால் கிளர்ந்தன்ன வேழம்' (82) எனவும்

மின்னலோடே மாறுபடுகின்ற விளக்கத்தோடு பொலிவு உடைய திருமணிகள் 'மின் உறழ் இமைப்பின் சென்னி பொற்ப' எனவும் (84, 85)

மகரக்குழைகள் மதியைச் சூழ்ந்த அகலாத மீன்கள் போல் ஒளிர்வன

'சேண் விளங்கு இயற்கை வான்மதி கவைஇ

அகலா மீனின் அவிர்வன இமைப்ப' (86, 87) எனவும்

ஒருமுகம் திங்கள் போலத் திசை விளக்கும் (98) எனவும்

கொடிபோன்ற இடையை உடைய குறவர் மடமகள்

'குறவர் மடமகள் கொடி போல் நுசுப்பின்' (101) எனவும்

வலிமையைத் தன்னிடத்தில் கொண்ட இடியேற்றினைப் போன்ற முரசமொடு

'உரம் தலைக் கொண்ட உரும்இடி முரசமொடு' (121) எனவும்

அழகோடு வடிவாலும் நிறத்தாலும் வலம்புரிச் சங்கினை ஒத்தது வெள்ளிய நரைமுடி. என்பதை

'வலம்புரி புரையும் வால்நரை முடியினர்' (126) எனவும்

புகையைப் போல நுண்ணியதாய், ஆயின் மாசற்றதாயுள்ள தூய உடை,

புகை முகந்தன்ன மாசில் தூவுடை (138) எனவும்

விளங்குகின்ற மாந்தளிர் போன்ற நிறத்தையும் பொன்னுரை விளங்கினாற் போன்ற தேமலையும் உடையவர்,

'அவிர் தளிர் புரையும் மேனியர்'

பொன் உரை கடுக்கும் திதலையர் (144-145) எனவும்

விண்மீன்கள் வானிலே மலர்ந்தது போன்ற தோற்றத்தை உடையவராகவும், அவை உலாவுகின்ற விண்ணிடத்தே சேர்ந்து காற்று எழுந்தால் ஒத்த வேகத்தை உடையவராகவும், காற்றிலே நெருப்பு எழுந்தால் ஒத்த வலிமையை உடையவராகவும், நெருப்புப் பிறக்கும்படி இடியேறு இடித்தாற் போன்ற குரலையும் உடையவராகவும் உள்ள விண்ணவர்,

மீன்பூத் தன்ன தோன்றலர் மீன்சேர்பு
வளிகிளர்ந் தன்ன செலவினர் வளியிடைத்
தீ எழுந்த அன்ன திறலினர் தீப்பட
உரும்இடித்து அன்ன குரலினர்

(169 - 172) எனவும்

மயில் போன்ற மகளிர் (205)

முழவு உறழ் தடக்கை (215)

மாண்பிணை போன்ற மகளிர் (216)

பலவாகிய வெள்ளிய ஆடைகளைப் போல ஒடுங்கி அசைந்து வரும் அருவி

பலவுடன் வேறு பல் துகிலின் நுடங்கி (296) எனவும்

பாடல் முழுதும் பல உவமைகளை அடுக்கி அழகூட்டுகிறார் நக்கீரர்.

பல சிறந்த சொல்லாட்சிகளையும் பயன்படுத்தியுள்ளார்:-

1. பலர் புகழ் ஞாயிறு (அடி 2)
2. கைபுனைந்தியற்றாக் கவின்பெறு வனப்பு (17)
3. எய்யா நல்லிசைச் செவ்வேள் சேஎய் (61)
4. சேவடி படரும் செம்மல் உள்ளம் (62)
5. உலகம் காக்கும் ஒன்று புரி கொள்கை (161)
6. வேண்டினர் வேண்டியாங்கு எய்தினர் வழிபட (248)

போன்ற சொற்றொடர்கள் குறிப்பிடத்தக்கவை.

சாம்பூநதம் என்ற பொன் பெயரை நேரிடையாகக் கூறாது

' நாவலொடு பெயரிய பொலம்' என்று கூறுகிறார். (18)

சில எண்ணிக்கைகளைக் கூறும்போது

கணக்கியலார் காட்டும் நக்கீரர் சொல்லாட்சி போற்றுதற்குரியது:-

1. நூற்றுப்பத்து அடுக்கிய நாட்டம் (155) (அதாவது ஆயிரம் கண்களை உடையவன்)
2. நூறு பல் வேள்வி (155) (நூறுவேள்வி)
3. ஈர் இரண்டேந்திய மருப்பு (157) (நான்கு கொம்புகள்)
4. நால்வேறு இயற்கைப் பதினொரு மூவரொடு (167) (முப்பத்து மூவர்)
5. ஒன்பதிற் றிரட்டி உயர்நிலைப் பெறீஇயர் (168)
   (பதினெண் வகையான உயர்ந்த நிலைபெற்றவர்)
6. இருமூன்றெய்திய இயல்பினின் வழாஅது (177) (ஆறாகிய இயல்பு)

7. அறுநான்கிரட்டி இளமை நல்லியாண்டு (179) (நாற்பத்தெட்டாண்டுகள்)

8. ஒன்பது கொண்ட மூன்றுபுரி நுண்ஞாண் (183) (மூன்று மூன்றாகத் திரித்த ஒன்பது புரிகள்)

மேலும் நக்கீரர் ஓரடியில் அன்றிச் சிலஅடிகள், ஒரு புராண வரலாற்றையே நினைவுபடுத்தும் அரிய சொற்களைப் பயன்படுத்தியுள்ளார்:-

1. மக்கள் வடிவமும் விலங்கின் வடிவுமாகிய இரண்டு பெரிய வடிவினை உடைய ஒன்றாகிய பேருடல் உடையவன் சூரன் என்பதை 'இருபேர் உருவின் ஒருபேர் யாக்கை' என்ற அடியில் கூறுகிறார். (57)

2. முருகனின் பிறப்பையும், இந்திரன் முருகக் குழந்தை மீது வஜ்ஜிராயுதத்தை ஏவியதையும், சூரனைக் கொல்ல அவ்வடிவம் ஆறாகிய வேறுபட்ட கூற்றையும் நினைவு கூரும் வகையில், 'அறுவேறு வகையில் அஞ்சுவர மண்டி' என்று கூறுகிறார். (58)

3. முதிர்ந்த பாறைகளை உடைய கடல் நடுவில் சூரபன்மன் கீழ்நோக்கிய பூக்களுடன் மாமரமாய் நின்ற வரலாற்றை

'அவுணர் நல்வலம் அடங்கக் கவிழ் இணர்
மாமுதல் தடிந்த' (59 - 60) என்ற அடிகளில் நினைவூட்டுகிறார்.

4. தாமரையில் பிறந்தவனாகவும், கேடில்லாத காலத்தை உடையவனாகவும் உள்ள நான்முகன், முருகனால் சிறைப்பட்ட வரலாறு

'தாமரை பயந்த தாஇல் ஊழி
நான்முக ஒருவற் சுட்டி காண்வர'

(164 - 165)

என்ற அடிகளால் நினைவூட்டப்படுகிறது.

5. முருகப்பெருமான், சரவணப் பொய்கையில், அக்கினி தேவன் தன் கையில் ஏற்ப, கார்த்திகைப் பெண்கள் அறுவரால் பெறப்பட்ட ஆறு வடிவங்களையுடைய செல்வன் என்பது,

'நெடும்பெருஞ் சிமையத்து நீலப் பைஞ்சுனை
ஐவருள் ஒருவன் அங்கை ஏற்ப
அறுவர் பயந்த ஆறமர் செல்வ'

(253 - 255)

என்ற அடிகளில் கூறப்படுகிறது.

6. சிவபெருமான், கல்லால மரத்தின்கீழ் தட்சிணாமூர்த்தியாய் அமர்ந்து, சனகாதி முனிவர்களுக்கு உபதேசித்த வரலாறு,

'ஆல்கெழு கடவுள் புதல்வ' (256) என்ற அடியில் கூறப்படுகிறது.

7. முருகன் கிரவுஞ்ச மலையைப் பிளந்த வரலாறு

'குன்றம் கொன்ற குன்றாக் கொற்றத்து' (266)
என்ற அடியில் நினைவூட்டப்படுகிறது.

இம்முருகாற்றுப்படையில் மதுரைத் திருநகரின் வரலாற்று மாண்பை, நக்கீரர் கூறுகிறார்:-

திருப்பரங்குன்றத்தைக் கூறவந்த நக்கீரர், மதுரையை நினைவு கூர்கிறார்; மதுரை, அவர் பிறந்த ஊர். தமிழ்ச் சங்கத்தில் புலவரேறாய்த் திகழ்ந்தவர். இந்த மதுரை நகர் எப்படி இருக்கிறது? போரை விரும்பிக்கட்டின வானளாவ உயர்ந்த பெரிய கொடி அங்குப் பறக்கிறது; அதன் அருகில் வரிந்து கட்டின பந்தும் பாவையும் அறுப்பாரின்றித் தூங்கிக் கிடக்கின்றன. போரின்மையால் போர்த்தொழில் அரிதாகிய வாயிலையும், திருமகள் நிலைத்துத் தங்கிய குற்றமற்ற கடைவீதிகளையும், மாடங்கள் மிகுந்த ஏனைய தெருக்களையும் உடையது மதுரை. அந்த மதுரைக்கு மேற்கே திருப்பரங்குன்றம் உள்ளது.

பண்டை மன்னர்கள் பகைவரொடு பொருதல் பொருட்டுத் தம் அரண்மனை வாயிலில் கொடியை உயர்த்தி, அதன் அருகில் பந்தையும் நூல்பாவையையும் தூங்க விட்டிருப்பர் என்பதும், இவ்வாறு செய்யும் கருத்து யாதெனில், 'எம்மை வெல்லும் ஆற்றல் மிக்கவர் எவருமிலர், எம் பகைவரை யாம் பெண்டிர் போலக் கருதுகிறோம்; அப்பெண்பாலர் இவற்றை அறுமின்' கொண்டு விளையாடுமின் என்பது அதன் குறிப்பாகும்.

அழகுக் காட்சிகளின் அணிவகுப்பாகச் சொல்அமைப்புக் கொண்ட தேர்ந்த அடைமொழிகள் பலவற்றைக் கையாளுகிறார் நக்கீரர்:-

1. சீர்திகழ் சிலம்பகம் (41)
2. சுரும்பு மூசாச் சுடர்ப்பூங் காந்தள் (43)

3. பார்முதிர் பனிக்கடல் (45)
4. கவிழிணர்மா (59)
5. அகல்வயல் (72)
6. முட்டாள் தாமரை (73)
7. கட்கமழ் நெய்தல் (74)
8. அஞ்சிறை வண்டு (76)
9. விரையுறு நறுமலர் (185)
10. பைங்கொடி நறைக்காய் (190)
11. வெண் கூதாளம் (191)
12. நறுஞ்சாறு (192)
13. குண்டு சுனை (199)
14. இலையுடை நறும்பூ (201)
15. செங்கால் மராஅத்த (202)
16. பெருந்தண் மாத்தழை (203)
17. செவ்வரைச் செயலைத் தண் தளிர் (206)
18. சிறு தினை (218)
19. கொழுமலர் (229)
20. மாத்தாட் கொழுவிடை (232)
21. சிறுபசுமஞ்சள் (235)
22. பெருந்தண் கணவீரம் (236)
23. நளிமலைச் சிலம்பு (238)
24. இமிழிசை அருவி (240)
25. உருவப்பல்பூ (241)
26. ஓடாப்பூட்கைப் பிணிமுகம் (247)
27. நெடும் பெருஞ் சிமையம் (253)
28. நீலப் பைஞ்சுனை (253)
29. மால்வரை மலைமகள் (256-7)
30. விண்பொரு நெடுவரைக் குறிஞ்சிக் கிழவ (299)

மேலும் இன்ன பல.

இவ்வாறு, இயற்கைத் தன்மையை, இறைத் தன்மையாகக் கண்டு, இயற்கையைக் கடந்து நிற்பவன் இறைவன் என்பதும் நக்கீரர் கூறும் தத்துவங்களாகும். பொருளியல்

போற்றும் ஆற்றுப்படையை இறைமை இணையும் பண்புகளோடு கூடிய ஆன்மீக ஆற்றுப்படையாக நக்கீரர் மாற்றுகிறார்.

இங்கு ஓர் அரிய கருத்தை நோக்கவேண்டும். இவ்வுலகு கடல் சூழ்ந்தது; எங்கும் இருள் வியாபித்திருக்கிறது. ஆண்டவன் கருணையால் கதிரவன், சந்திரன், தீ ஆகியவை தோன்றவே, ஒளி ஊட்டப்படுகிறது. முருகப்பெருமானின் கருணையால் 'மாயிருள் ஞாலம் மறுஇன்றி விளங்கப் பல்கதிர் விரிந்தன்று ஒரு முகம். இருளும் ஒளியும் மாறி மாறி, துன்பமும் இன்பமும் போல் தொடர்வன. ஆண்டவன் அருளினால், புற, அக இருள் விரட்டப்பட்டு உயிர்கள் வெளிச்சத்தில் இருந்து இன்பத்தை எய்துகின்றன. இவ்வாறு இருள், ஒளி தத்துவத்தைப் பல இடங்களில் நினைவூட்டுகிறார் நக்கீரர். பாடலின் ஆரம்பமே முருகனின் திருவருளால், புறஉலகும் அகஉலகும் இருள் நீங்கி ஒளி பெறும் மாண்பு கூறுதல். முருகப் பெருமான் நீக்கமின்றி எப்போதும் நெடுந்தூரம் சென்று விளங்கும் ஒளியை உடையவன்; அவன் அணிந்திருக்கும் அணிகலன்கள் ஒளியைத் தருவன; அப்பெருமானின் முகங்களில் ஒன்று, பல கிரணங்களைத் தோற்றுவிக்கும்; ஒரு முகம் இன்புற அருளும் கலை நிரம்பிய சந்திரன் போன்றது; அவன் தோள்கள் ஒளி வீசும் வெற்றித் தோள்கள்.

இருளைக் குறிப்பிடும் நக்கீரர், சூரிய சந்திரர்கள் இருளைப் போக்கும் விண் என்பதை 'வாள்போழ் விசும்பு' என்றும், இருள் படரத் தழைத்து வளர்ந்த 'செங்கடம்பை 'இருள்படப் பொதுளிய பராரை மராஅத்து' என்றும், கடலைக் குறிக்கும் போது 'இருள்நிற முந்நீர்' என்றும் குறிப்பிடுகிறார். பல இடங்களில் ஒளியை நினைவுபடுத்துகிறார். 'அவிர் ஒளி' 'வாணுதல்' , 'திங்கள் போலத் திசை விளங்கும்' , சுடர் இலை நெடுவேல்' , நகை தாழ்பு' , வாண்மதி' , 'இமைப்ப' வாணிறமுகன்', ' பல்கதிர்' 'சுடர்விடுபு' எனவரும் தொடர்களே சான்று.

இவ்வாறு சொல்லும் பொருளும், அகலமும் ஆழமும் கொண்ட இத்திருமுருகாற்றுப்படையின் உயர்வை உணர்ந்த, திருக்குறளை ஆங்கிலத்தில் மொழிபெயர்த்த எல்லிசு என்ற அறிஞர் திருமுருகாற்றுப்படையையும் ஆங்கிலத்தில் மொழிபெயர்த்திருப்பதாகக் கூறப்படுகிறது; எனக்குத் திருவாவினன்குடிப் பகுதிக்கான அவ்வறிஞர் பெருமானின் அழகிய ஆங்கில மொழிபெயர்ப்பு மட்டுமே கிட்டியது. அதை இங்கே தருகிறேன்:-

"They who are clothed in garments formed of bark,
Whose heads are covered by hair white as the shell of the conch,
Whose forms shine with spotless lusture,
Whose emaciated breasts are covered by deer-skins,
Whose ribs are seen protruding from their bodies,
Who often refrain from food through out the day,
Whose minds are void of hatred and obstinacy,
Who know all of which even the learning are ignorant,
Who are the extreme beads of the wise,
Who are sages divested both of desire and savage anger,
Who by their nature know no sorrow,
May these the contemplative sages faultless,
Wisdom gather together and precede them."

**(F.N. Ellis - 1813 A.D.)**

**'காளிதாசனின் காவியங்களில் சகோரப்பறவை, சாதகப் பறவை என இரு பறவைகள் குறிப்பிடப்படுகின்றன. அவை, முறையே விண்ணிலிருந்து தண்ணளி தரும் வெண்மதிக்திர்களையும், மழை நீரையுமே பருகி வாழும். இவைபோன்று மக்கள் பருகி மகிழ, நக்கீரர் இத்திருமுருகாற்றுப்படை முழுதும் அன்பு நெறியையும், இயற்கை நெறியையும் எடுத்து இயம்புகிறார்.**

**'இங்கு, இரண்டு முக்கியமான கருத்துக்களை நாம் நோக்கவேண்டும்.இத் திருமுருகாற்றுப்படையில், 'இயற்கை நெறியே' இறைநெறியாகக் கொண்டவர் தமிழர்கள். அதனால் 'உலகம் உவப்ப' எனத் தொடங்கி இறைவனின் இளமை, மணம், அழகு முதலாய இயற்கைப் பண்புகளுக்கு உருக்கொடுத்து அதை அழகிய முருகியல் உணர்வாக முருகனை உயர்த்திப் பாடுகிறார் நக்கீரர்.**

**இரண்டாவதாக,**

இத்திருமுருகாற்றுப்படை நம்மனோர்க்கு அன்புநெறியை வலியுறுத்துகிறது. மணிவாசகப்பெருமான், 'மெய்யன்பை உடையாய் பெறநான் வேண்டுமே' என்றும்,

'தூண்டா விளக்கின் சுடர் அனையாய்
தொண்ட னேற்கும் உண்டாங்கொல்
வேண்டாது ஒன்றும் வேண்டாது
மிக்க அன்பே மேவுதலே'

என்றும், பெறவேண்டியவற்றுள் எல்லாம் தலையாயது அன்பே என உணர்த்துகிறார். 'கண்ணப்பன் ஒப்பதோர் அன்பு' என்பது மாணிக்கவாசகரது திருகோத்தும்பி ஆகும். திருமூலர் 'அன்பே சிவம்' என்பார் . இறைநெறியை, அறிவுநெறி வாயிலாகவும் பெறலாம்; அது கற்றோர் பற்றுவது; அவர்களுக்கு எளிதில் கிட்டுவது. இது குரங்கின்குட்டி தாயைச் சேர்த்தணைத்து, இறுகப்பற்றிக்கொண்டு அது தாவிச் செல்லும்போதும் உடன் செல்லும் நிலை ஒத்தது. அதனால், அறிவுநெறி கொள்வார் விழிப்புடையவராய் இருத்தல் வேண்டும். மாறாக அன்பு நெறி கற்றார்க்கும் கல்லார்க்கும் ஒருங்கே பயன்படுவதாகும். பூனைக்குட்டி ஒன்று, கிடந்த இடத்தில் கிடந்தபடியே தாயையழைக்கிறது. தாயே விரைந்து வந்து குட்டிக்குப் பாலூட்டித் தன் வாயால் கவ்வி, தூக்கிச் சென்று பாதுகாப்பான இடத்தில் விட்டு வைக்கிறது. இங்கு, குட்டி கூவி அழைப்பதோடு சரி; துன்பத்தை அதன் தாய் ஏற்கிறது. இதே போன்று, அன்பு நெறி நிற்பார், பூனைக்குட்டியைப் போன்றவர்; இறைவன் பூனையாவார். அன்பர் அழைப்புக்கு, இடந்தேடி ஓடி அருளுபவன் இறைவன். இந்த அன்பர்களுக்குத் துன்பமில்லை; எந்நாளும் இன்பமே. இவர்கள் பிறப்புப் பிணி அற்றவர். இந்நிலையைத் தான் இத்திருமுருகாற்றுப்படை,

'சேஎய்,
சேவடி படரும் செம்மல் உள்ளமொடு
நலம்புரி கொள்கைப் புலம்பிரிந்து உறையும்
செலவு நீ நயந்தனை ஆயின் பலவுடன்
நன்னர் நெஞ்சத்து இன்னசை வாய்ப்ப
இன்னே பெறுதிநீ முன்னிய வினையே'

என்ற அடிகளில் போதிக்கிறது.

வெண்பாக்கள் :-

பயன்

துதி நூல் இயற்றுவோர், இறுதியில் அதற்குப் பயன் கூறுவது மரபு. வடநூலார் இதைப் 'பலசுருதி' என்பர். தமிழில் சில துதிநூல்களுக்குப் பயன் கூறப்பட்டிருக்கும். திருஞானசம்பந்தர் திருவாய் மலர்ந்தருளிய தேவாரப் பதிகம் ஒவ்வொன்றுக்கும் பயன் கூறப்படுகிறது. பதிகத்தின் இறுதிப் பாட்டாகிய திருக்கடைக் காப்பில் 'இதனை, ஓதுவார் இன்ன பயன்பெறுவார் என்று காணப்படுகிறது. சான்றாக,

திருநெடுங்களம் திருக்கடைக்காப்புப் பாசுரத்தில்

'நீடவல்ல வார்சடையான்
மேய நெடுங்களத்தைச்
சேடர்வாழும் மா மருங்கின்
சிரபுரக் கோன், நலத்தால்
நாடவல்ல பனுவல் மாலை
ஞானசம்பந்தன் சொன்ன
பாடல் பத்தும் பாடவல்லார்
பாவம் பறையுமே'

என்று கூறப்படுகிறது. திருமுருகாற்றுப்படையைப் பாராயணம் செய்த அன்பர்கள், அதன் பயன்கூறும் இந்த வெண்பாக்களையெல்லாம் இயற்றியிருக்கவேண்டும் எனத் தோன்றுகிறது. திருமுருகாற்றுப்படையைப் பாராயணம் செய்வோர், இந்த வெண்பாக்களையும் சேர்த்து ஓதுவது வழக்கம். இந்த வெண்பாக்களின் நடை, உள்ளுறை ஆகியவற்றால், இவை பிற்காலத்தில் எழுந்தன எனக் கருதப்படுகின்றன.

இது தொடர்பாகக் கூறப்படும் புராணக் கதை முன்பே கூறப்பட்டது. திருமுருகாற்றுப்படையைப் பாடிப் 'பழமுதிர் சோலை மலைகிழவோனே' என்று முடித்ததும், முருகன் தோன்றி, பூதத்தை வேலால் சங்காரம் செய்து நக்கீரர் முதலியோரை விடுதலை செய்தான். ஆயினும் அப்பெருமான் 'நம்மைக் கிழவன் என்று கூறினையே' என்று கூறி மறைந்தானாம். உடனே நக்கீரர், குன்றம் எறிந்தாய், என்று பாடத் தொடங்கி 'என்றும் இளையாய் அழகியாய்' என்று பாடினார் என்றும், உடன் முருகப்பெருமான் அருள் செய்து, 'இந்நூலைப் பாராயணம் செய்பவர்களுக்கு வேண்டிய வரங்களை

வழங்குவோம்' என்று அருளினான் என்றும் கூறப்படுகிறது. இதற்கு ஆதாரமாகப் பழைய திருவிளையாடற்புராணத்தில் வரும் சில பாடல்கள் சுட்டிக் காட்டப்படுகின்றன. நக்கீரர் காலத்தில் 'கிழவன்' என்ற சொல் 'உரிமை உடையவன்' என்ற பொருளில் வருகிறது. சங்ககால நூல்கள் பலவற்றிலும் இதே பொருளில் வருகிறது. பழைய திருவிளையாடல் புராணம் பாடியவர் காலத்தில் 'முதியவன்' என்ற பொருள் அச்சொற்கு வந்துவிட்டது. அதனால்தான் இப்புராணம் கூறப்படுகிறது. பின்னால், அருணகிரிநாதர் 'இளங்குழந்தையாகிய முருகனைக் கிழவனென்று கூறுகிறதே இவ்வுலகு' எனக் கந்தர் அலங்காரத்தில் நயமான ஒரு பாடலைப் பாடியிருக்கிறார்.

அப்பாடல் :-

'திருந்தப் புவனங்கள் ஈன்றபொற் பாவை திருமுலைப்பால்
அருந்திச் சரவணப் பூந்தொட்டி லேறி அறுவர்கொங்கை
விரும்பிக் கடலழக் குன்றழ ஆறழ விம்மியழுங்
குருந்தைக் குறிஞ்சிக் கிழவனென் றோதுங் குவலயமே'

இவை எப்படியாயினும் திருமுருகாற்றுப்படையைத் தினமும் ஓதும் அன்பர்கள், இந்த வெண்பாக்களையும் ஓதி, தீதுஎலாம் நீங்கப்பெறுகின்றனர். இனி, முருகனை முன்னிலைப்படுத்தியும், படர்க்கையாகவும் வைத்துப் பாடும் இப்பாடல்களின் பொருளைச் சுருக்கமாகக் கூறுவாம்:-

முதற்பாடல் :-

1. 'குன்றம் எறிந்தாய் குரைகடலிற் சூர்தடிந்தாய்
புன்றலைய பூதப் பொருபடையாய் - என்றும்
இளையாய் அழகியாய் ஏறூர்ந்தான் ஏறே
உளையாயென் உள்ளத் துறை.'

பொருள் : கிரவுஞ்ச மலையை அழித்தவனே!
ஒலிக்கடற் புகுந்த சூரனைக் கொன்றவனே!

**செந்தலைப் பூதச் செருபடைச் செம்மலே!**
**மாறாத இளமை, அழகுகொள் மைந்தனே!**
**இடபமேறும் சிவனார்க்கு ஆண்சிங்கமாய் அமைந்தவனே!**
**நீக்கமற என் மனத்தில் என்றும்**
**நிலைத்திருக்கும் துணையாவாய்!**

**இப்பாடலில் முருகனின் ஆற்றல், இளமை நலம், சிவனார்மகன் ஆகியவை கூறப்படுகின்றன.**

**இரண்டாவது பாடல்**

**இப்பாடலிலிருந்து மூன்று பாடல்கள் முருகன் கைவேல் பெருமையை விளக்குகின்றன:-**

'குன்றம் எறிந்ததுவும் குன்றப்போர் செய்ததுவும்
அன்றங் கமரரிடர் தீர்த்ததுவும் - இன்றென்னைக்
கைவிடா நின்றதுவும் கற்பொதும்பிற் காத்ததுவும்
மெய்விடா வீரன்கை வேல்.'

**பொருள் :**

**கிரவுஞ்ச மலையை அழித்ததும்**
**அசுரர்கள் வலி யடங்க, அழியப் போரிட்டதும்**
**அன்று அமரர்களின் இன்னலைப் போக்கியதும்**
**இன்று என்னைக் கைவிடாமல் காப்பதுவும்**
**கற்குகையில் நக்கீரரைக் காத்ததுவும்**
**சத்தியத் தலைவன் முருகன் தடக்கையில் உள்ளவேல்.**

**அருணகிரிநாதர்,**

'பழத்தமுது தமிழ்ப் பலகை இருக்குமொரு கவிப்புலவன்
இசைக்குருகி வரைக்குகையை இடித்து வழி காணும்'

**என வேலின் ஏற்றத்தை, வேல்வகுப்பில் கூறுகிறார்.**

பாடல்: 3

'வீரவேல் தாரைவேல் விண்ணோர் சிறைமீட்ட
தீரவேல் செவ்வேள் திருக்கைவேல் - வாரிக்
குளித்தவேல் கொற்றவேல் சூர்மார்பும் குன்றும்
துளைத்தவேல் உண்டே துணை.'

பொருள் :

**வீரவேல்! நீண்ட வேல்!**
**வானோரைச் சிறை மீட்ட தீரவேல்!**
**செவ்வேள் முருகன் திருக்கரத்தில் உள்ள வேல்!**
**கடலில் குதித்துச் சூரனைக் கடிந்த வேல்**
**வெற்றி யளிக்கும் வேல்:**
**சூரன்மார்பும் கிரவுஞ்சமும் துளைத்த வேல்**
**எமக்கும் என்றும் துணை!**

'மறங்குலவு வேல் எடுத்த குமரவேள்'

**என்று கூறுகிறது திருவிளையாடல் புராணம்.**

பாடல்: 4

'இன்னமொரு கால்என இடும்பைக் குன்றுக்கும்
கொன்னவில்வேற் சூர்தடிந்த கொற்றவா - முன்னம்
பனிவேய் நெடுங்குன்றம் பட்டுருவத் தொட்ட
தனிவேலை வாங்கத் தகும்.'

பொருள் :

**கொலை ஆயுத மேந்திய சூரபன்மனைச்**
**சங்காரம் செய்த சண்முகப் பெருமானே!**
**பனிபடர் கிரவுஞ்சம் பட்டழிய ஏவிய வேலினை**
**என் இடர் எனும் குன்றம் கெட ஏவுவது தக்க செயல்.**

பாடல்:5

**இப்பாடல் முருகப் பெருமானின் பன்னிரண்டு திருக்கரங்களுடைய எழில் கோலத்தை எடுத்து இயம்புகிறது.**

'உன்னை ஒழிய ஒருவரையும் நம்புகிலேன்
பின்னை ஒருவரையான் பின்செல்லேன் - பன்னிருகைக்
கோலப்பா வானோர் கொடியவினை தீர்த்தருளும்
வேலப்பா செந்திவாழ் வே.'

பொருள் :

**உன்னைத் தவிர ஒருவரையும் நம்பமாட்டேன்;**
**பின்னின்று வேறு ஒருவரைத் துதி செய்யேன்;**
**பன்னிரு கரத்தவனே! அழகனே! அமரர்**
**பாவம் அகற்றி அருள் பாலித்த வேலவனே!**

**வள்ளுவப் பேராசான்,**

'தனக்குவமை இல்லாதான் தாள் சேர்ந்தார்க் கல்லால்
மனக்கவலை மாற்றல் அரிது'

**என்கிறார். இங்கு வேலன் தாளன்றி வேறு தாள் பற்றமாட்டேன் என்று, வேலன்மீது உள்ள உறுதியைக் கூறுகிறார் புலவர்.**

பாடல் :6

'அஞ்சு முகந்தோன்றின் ஆறு முகந்தோன்றும்
வெஞ்சமரில் அஞ்சலென வேல்தோன்றும் - நெஞ்சில்
ஒருகால் நினைக்கின் இருகாலுந் தோன்றும்
முருகாஎன் றோதுவார் முன்.'

பொருள்:

**அஞ்சுதலை உடையவர், முருகா என்று**
**நெஞ்சுருகும் போது**

**ஆறுமுகம் காட்டி நின்று அருளுவான்!**

**உள்ளப்போராட்டங்களில் உறும் துன்பத்தில்**

**அஞ்சல் என அபயம் தந்து வேல் தோன்றும்!**

**ஒருமுறை நினைத்தால் அவன் இருதாள் தாமரை காட்டுவான்;**

**முருகா என்று ஓதுவார் அஞ்சுவதில்லை,**

**முருகன் திருவடி துணை நிற்கும்.**

**திருப்புகழில் அருணகிரிநாதர்,**

முருகா என ஓர் தரம்ஓ தடியார்

முடிதாள் இணைதாள் அருள்வோனே! **எனப் பாடுகிறார்.**

**தாயுமானவர்,**

'அஞ்சுமுகம் காட்டாமல் ஆறுமுகம் காட்ட வந்த

செஞ்சரணச் சேவடியைச் சிந்தை வைப்ப தெந்நாளோ?

**என்று பாடுகிறார்.**

**பாடல்:7**

'முருகனே செந்தில் முதல்வனே மாயோன்

மருகனே ஈசன் மகனே - ஒருகைமுகன்

தம்பியே நின்னுடைய தண்டைக்கால் எப்பொழுதும்

நம்பியே கைதொழுவேன் நான்.'

**பொருள் :**

**முருகனே! செந்தில் முதல்வனே!**

**திருமால் மருகனே ! சிவனார் திருமகனே!**

**தும்பிக்கையான் தம்பியே! உன்**

**தண்டையணி தாள் நினைந்தெப்போதும்**

**நம்பித் தொழுது வாழ்வேன் நான்.**

**இப்பாடலில் முருகன் செந்திலில் உறைபவன்; திருமால் மருகன்; சிவனுக்கு மகன்; ஆனை முகன் தம்பி என்று பல உறவுகளைக் கூறிக் குடும்ப பந்தபாசங்களை நினைவூட்டி உன்னையே நம்பி இருப்பவன் நான் என அவன்மேல் வைத்த மாறாத பத்திநிலையைக் கூறுகிறார்.**

**பாடல் :8**

காக்கக் கடவியநீ காவா திருந்தக்கால்
ஆர்க்குப் பரமாம் அறுமுகவா - பூக்கும்
கடம்பா முருகா கதிர்வேலா நல்ல
இடங்காண் இரங்காய் இனி.

**பொருள் :**

**என்னைக் காக்கும் கடமை உனக்குண்டு.**
**இப்போது என்னைத் தள்ளிவைப்பது தகுமோ?**
**அறுமுகா ! அறிவாய் என் துன்பம்.**
**போகக் கடம்பமாலை அணிந்தவனே!**
**ஞானசக்திவேல் ஏந்திய முருகா!**
**நானே உன் அருள் பெற நல்ல இடம்.**

**திருநாவுக்கரசர்,**

'நன் கடம்பனைப் பெற்றவள் பங்கினன்
தென் கடம்பைத் திருக்கரக் கோயிலான்
தன்கடன் அடி யேனையும் தாங்குதல்
என்கடன் பணி செய்து கிடப்பதே'

**என்ற பாடலில், இறைவன் தன்னைத் தாங்குதல் வேண்டுமெனக் கூறுவதை நினைவு கூரலாம்.**

**இதேபோன்று இப்பாடலில், தன்னைக் காப்பது முருகன் கடன் என்பது வலியுறுத்தப்படுகிறது.**

பாடல்:9

**கடைசி இரு வெண்பாக்களும் திருமுருகாற்றுப்படையைப் பாராயணம் செய்யும் முறையையும் அதனால் உண்டாகும் பயனையும் கூறுகின்றன.**

'பரங்குன்றிற் பன்னிருகைக் கோமான்றன் பாதம்
கரங்கூப்பிக் கண்குளிரக் கண்டு - சுருங்காமல்
ஆசையால் நெஞ்சே அணிமுருகாற் றுப்படையைப்
பூசையாக் கொண்டே புகல்!

*'நெஞ்சமே! பரங்குன்றில் எழுந்தருளியிருக்கும் பன்னிரு கரத்தானை,*
*தலைவனைக் கரங்கூப்பிக் கண்கள் குளிரத் தரிசித்து*
*ஆர்வத்தில் சுருங்காமல் அழகிய திருமுருகாற்றுப்படையைப்*
*பூசை செய்து போற்றிப் பாடுவாய்! '*

**பெரியபுராணத்தில், சிவபெருமான் சுந்தரமூர்த்தி நாயனாரைப் பார்த்து 'அருச்சனை பாட்டேயாகும், ஆதலால் மண்மேல் நம்மைச் சொற்றமிழ் பாடுக' என்று கூறுகிறார். அதே போன்று இங்கும் திருமுருகாற்றுப்படையைப் பாராயணம் செய்வதுவே பூசைக்குச் சமானமானது என்று கூறப்படுகிறது.**

பாடல்:10

**இப்பாடலில் திருமுருகாற்றுப்படையை ஓதுவதால் ஏற்படும் பலன் கூறப்படுகிறது.**

'நக்கீரர் தாமுரைத்த நன்முருகாற் றுப்படையைத்
தற்கோல நாடோறுஞ் சாற்றினால் - முற்கோல
மாமுருகன் வந்து மனக்கவலை தீர்த்தருளித்
தானினைந்த எல்லாந் தரும்.'

**பொருள் :**

**நக்கீரர் உரைத்த நன் முருகாற்றுப்படையைத்**
**தினந்தினம் ஓதினால், ஓதுமவர்முன்**
**அழகன் முருகன் பெருமைக்குரிய பெரியோன்**




இன்றைய அறுபடை வீடுகள்

எழுந்தருளி மனக்கவலையை மாற்றி
நினைத்தவற்றை நினைத்தவாறு தந்தருளுவான்.

திருமுருகாற்றுப்படை சைவத்திருமுறைகளில் சேர்க்கப்பட்டிருப்பதால் மறைவு மங்கலின்றி என்றும் பாராயண நூலாகப் படிக்கப்பட்டும், பரவப்பட்டும் வருகிறது.

நிறைவாக இத்திருமுருகாற்றுப்படை, அறுமுகத்தண்ணலின் பன்னிரு செவிகளும் ஆரப்பருகும் அமுதமாகி, யாவர் ஓதினும் சிந்தித்த பொருள்களைச் சிந்தித்தவாறே உடன் அளிப்பதாகியும், செய்யுள்களினுள்ளே இணையின்றி முன்நிற்பதாகியும் விளங்குவது. இதைத் தினமும் ஓதினார் தீது நீங்கி இன்பம் எய்துவர்.

எல்லாம் வல்ல எம்பெருமான் ஞானநாயகனாம் முருகப்பெருமான் திருவருளால் உலகில் வசியும் வளனும் சிறக்கவும், பசியும் பிணியும் நீங்கவும், அமைதியும் மகிழ்வும் நிலைக்கவும், எங்குமாகி இருந்திடும் நாயகன் பங்கயப் பொற்பாதம் தொழுது, அவன் அருளை யாசித்து, இத் திருவுரையை நிறைவுசெய்கிறேன்.

*திரு முருகன் துணை.*



# திருமுருகாற்றுப்படை

## அருஞ்சொல் - பொருள்

### அ

| | | | |
|---|---|---|---|
| 1. | அகலம் | ... | மார்பு |
| 2. | அகவ | ... | (மயில்) ஒலிக்க |
| 3. | அசைஇயது | ... | மேலே கிடந்தது |
| 4. | அடுக்கம் | ... | மலை |
| 5. | அணங்கு | ... | வருத்தமுறச் செய்யும் தெய்வம் |
| 6. | அதாஅன்று | ... | அதுவன்றி |
| 7. | அந்தரம் | ... | ஆகாயம் |
| 8. | அம்பகட்டு | ... | அழகும் பெருமையுமுடைய |
| 9. | (குரவை)அயர | ... | (குரவையை) மேற்கொள்ள |
| 10. | அயர்தல் | ... | மேற்கோடல் |
| 11. | அரிக்கணம் | ... | வண்டுகளின் கூட்டம் |
| 12. | அரும்பெறல் | ... | பிறர்க்குப் பெற இயலாத |
| 13. | அலங்கு | ... | அசைகின்ற |
| 14. | அலந்தோர் | ... | வறுமையுற்றோர் |
| 15. | அலந்தோர் | ... | பிறரால் இடுக்கட்பட்டு வந்தவர் |
| 16. | அவிர் | ... | விளங்குகின்ற |
| 17. | அவிர்இழை | ... | விளங்குகின்ற ஆபரணம் |
| 18. | அவிர்ஒளி | ... | விளங்குகின்ற ஒளி |
| 19. | அவிர்தொறும் | ... | விளங்குந்தோறும் |
| 20. | அவிர்வன | ... | விளங்குவன |
| 21. | அவுணர் | ... | அசுரர் |
| 22. | அளவை | ... | எல்லை (ஈண்டு, நேரம்) |
| 23. | அளியன் | ... | இரக்கப்படத் தக்கவன் |
| 24. | அளைஇ | ... | அளாவி, கலந்து |
| 25. | அறுவேறு | ... | ஆறு ஆகிய வேறு |

## ஆ

| | | | |
|---|---|---|---|
| 26. | ஆகம் | ... | மார்பு |
| 27. | ஆர்த்தன்ன | ... | ஆரவாரித்ததொத்த |
| 28. | ஆர்த்தும் | ... | நுகர்விக்கும் |
| 29. | ஆர்வலர் | ... | அன்புடையவர்கள் |
| 30. | ஆறினில் | ... | நெறியில், வழியில் |
| 31. | ஆறு | ... | வழி |
| 32. | ஆனாது | ... | அமையாது |

## இ

| | | | |
|---|---|---|---|
| 33. | இகந்து | ... | கடந்து |
| 34. | இடும்பை | ... | வருத்தம் |
| 35. | இணர் | ... | பூங்கொத்து |
| 36. | இமிழ்இசை | ... | முழங்குகின்ற ஓசை |
| 37. | இமைக்கும் | ... | ஒளியொடு விளங்கும் |
| | இமைத்தல் | ... | இரண்டு இமைகளையும் கூட்டிவிடுத்தல் |
| | இமையா | ... | இமைத்தல் செய்யாத |
| 38. | இமைப்ப | ... | ஒளிவிட |
| 39. | இமைப்பு | ... | விளக்கம் |
| 40. | இயல | ... | அசைய |
| 41. | இயவுள் | ... | கடவுள்; தலைவன் |
| 42. | இயன்ற | ... | நிருமித்த, அமைத்த |
| 43. | இரட்டும் | ... | (மாறிமாறி)ஒலிக்கும் |
| 44. | இரிய | ... | கெட்டோட |
| 45. | இரீஇ | ... | இருத்திவைத்து |
| 46. | இரும்பிடி | ... | பெரிய பெண்யானை |
| 47. | இறால் | ... | தேன்கூடு |
| 48. | இன் நகை | ... | இனிய ஒளி |
| | இன்னிசை மேவலர் | ... | கந்தருவர் |
| 49. | இன்னியம் | ... | இனியவாச்சியம் |

உ

| | | | |
|---|---|---|---|
| 50. | உக்கம் | ... | மருங்கு; இடுப்பு |
| 51. | உட்க | ... | அஞ்சும்படி |
| 52. | உரிவை | ... | தோல் |
| 53. | உரு | ... | வடிவு, அழகு |
| 54. | உருகெழு | ... | (கண்டார் விரும்பும்) அழகிய |
| 55. | உருகெழு | ... | அச்சம் பொருந்தின |
| 56. | உரும் | ... | இடியேறு |
| 57. | உருவ | ... | நிறத்தையுடைய (ஈண்டு, சிவந்த) |
| 58. | உருள் | ... | தேர்உருளை (சக்கரம்) |
| 59. | உளர | ... | அசைக்க (ஈண்டு யாழ்நரம்பை மீட்ட) |
| 60. | உளர்ப்பு | ... | அலைப்பு |
| 61. | உளியம் | ... | கரடி |
| 62. | உளைப்பூ | ... | புறவிதழையுடைய பூ |
| 63. | உள்ளி | ... | (விரும்பி) நினைத்து |
| 64. | உறழ் | ... | ஒத்த, மாறுபட்ட |
| 65. | உறுத்து | ... | உறும்படிசெய்து |
| 66. | உறுநர் | ... | தன்னைச் சார்ந்தவர்கள், வேண்டியவர்கள் |
| 67. | உறை | ... | துளி |

எ

| | | | |
|---|---|---|---|
| 68. | எஃகு | ... | வேல் |
| 69. | எய்யா | ... | (அளந்து) அறிய இயலாத |
| 70. | எருத்தம் | ... | கழுத்து |
| 71. | எல்பட | ... | ஞாயிறு தோன்ற |

ஏ

| | | | |
|---|---|---|---|
| 72. | ஏமுறு(ஏமம் உறு) | ... | பாதுகாவல் பொருந்திய; மயக்கமுற்ற |
| 73. | ஏர்பு வலன் திரிதரு | ... | எழுந்து (மகாமேருவை) வலமாகத் திரிதலைச் செய்கின்ற |
| 74. | ஏறு | ... | இடபம் |

ஐ

| | | | |
|---|---|---|---|
| 75. | ஐதுரை | ... | வெளியே தோன்றாது மெல்ல உச்சரித்து வழிபடு மந்திரம் |
| 76. | ஐயர் | ... | தெய்வ இருடியர் |
| 77. | ஐயிருவட்டம் | ... | வியப்பும் கருமையுமுடைய கேடயம் |
| 78. | ஐயவி | ... | வெண்சிறுகடுகு |

ஒ

| | | | |
|---|---|---|---|
| 79. | ஒடுங்குதல் | ... | மறைந்து கிடத்தல் |
| 80. | ஒழுகல் | ... | நடத்தல் |

ஓ

| | | | |
|---|---|---|---|
| 81. | ஓஅற | ... | (இருவகை இந்திரியங்களும் தாம் செல்லுதற்கு உரிய பொருள்கள் மேல் சென்று) தங்குதல் - இல்லையாக |
| 82. | ஓடாப் பூட்கை | ... | கெடாத வலிமை |
| 83. | ஓடை | ... | நெற்றிப்பட்டம் |
| 84. | ஓதி | ... | மகளிர் கூந்தல் |
| 85. | ஓம்பு(மதி) | ... | (அஞ்சுதலை) நீக்கு |
| 86. | ஓர்க்கும் | ... | கூர்ந்துநினைக்கும் |

க

| | | | |
|---|---|---|---|
| 87. | கடாவ | ... | செலுத்த |
| 88. | கடு | ... | நஞ்சு |
| 89. | கடுக்கும் | ... | ஒக்கும் |
| 90. | கடுநடை | ... | விரைந்த நடை |
| 91. | கடுந்திறல் | ... | கடியவலிமை |
| 92. | கடுப்ப | ... | ஒப்ப |
| 93. | கணவீரம் | ... | செவ்வலரி |
| 94. | கந்துடை நிலை | ... | ஆதீண்டு குற்றியுடைய இடம் |

95. கமம் ... நிறைவு
96. கலாவ ... கலக்க
97. கலிங்கம் ... ஆடை
98. கவைஇ ... சூழ்ந்து
99. கவைஇய ... சூழ்ந்த ; கட்டிய
100. கழிப்பிய ... கழித்த, போக்கிய
101. கழிமுடை ... மிக்க முடைநாற்றம்
102. கறங்க ... ஒலிக்க
103. கறிக்கொடி ... மிளகுக்கொடி

கா

104. காண்தக ... காட்சிக்குப் பொருந்த
105. காண்வர ... அழகுதோன்ற, காணும்படியாக
106. காமரு ... விருப்பமுடைய
107. காழகம் ... கரிய உடை (ஈண்டு உடையையே குறித்தது)

கி

108. கிழவோன் ... உரிமையுடையவன்
109. கிளர ... விளங்கும்படி
110. கிள்ளூபு ... கிள்ளி

கீ

111. கீண்டு ... பிளந்து

கு

112. குடந்தம் ... வழிபாடு, வணங்குதல்
113. குடாவடி ... வளைந்த அடி
114. குண்டு சுனை ... ஆழ்ந்த சுனை
115. குரிசில் ... தலைவன்
116. குரூஉ ... நிறம் (ஈண்டுக் கருமை)

117. குளவி ... காட்டுமல்லிகை
118. குறங்கு ... தொடை
119. குறடு உரிஞ்சி ... சந்தனக்கட்டையை உரைத்து
120. குறுமுறி ... சிறிய தளிர்
121. குறும்பல் ... குறுகிய பலவாகிய
122. குறும்பல்லியம் ... சிறிய பல வாச்சியம்
123. குறும்பொறி ... உதரபந்தனம் (Belt)

கூ

124. கூளியர் ... பூதங்களாகிய சேவித்துநிற்பவர்

கெ

125. கெழு ... பொருந்திய, நிறம்

கே

126. கேழல் ... பன்றி
127. கேழ்கிளர் ... நிறம் விளங்கும்

கொ

128. கொடுமணி ... வளைந்த மணி
129. கொட்ப ... சுழல
130. கொட்பு ... சுழற்சி
131. கொண்மார் ... கொள்ளுதற்கு
132. கொழுமலர் ... வளமான மலர்
133. கொழுவிடை ... கொழுத்த கிடா
134. கொற்றவை ... வனதுர்க்கை

கோ

135. கோடு ... கொம்பு

ச

136. சதுக்கம் ... நாற்சந்தி
137. சந்தி ... முச்சந்தி, ஐஞ்சந்தி

சா

138. சாறு ... விழா

சி

139. சிமையம் ... மலையுச்சி; சிகரம்
140. சிலம்ப ... ஆரவாரிக்க
141. சிலம்பகம் ... மலையிடம்
142. சிலைப்ப ... முழங்க
143. சில்காழ் ... சிலவாகிய வடங்கள்
144. சிறை ... சிறகு

சீ

145. சீரை ... மரவுரி

சு

146. சுட்டிய ... கருதிய

சூ

147. சூர் ... அச்சம் (விளைத்தல்)
148. சூர்த்த ... அச்சம் செய்கின்ற

### செ

149. செச்சை ... வெட்சிமலர்
150. செம்பொறி ... சிறந்த வரி (வரி - கோடு)
151. செயலை ... அசோகு
152. செய்யன் ... திருமேனி சிவந்தவன்
153. செயிர் ... குற்றம்
154. செய்வுறு ... (இறுக்கியும் நெகிழ்த்தும்) அமைத்தலையுடைய
155. செரீஇ ... செருகி
156. செல் ... இடி ; மேகம்
157. செவ்வரை ... சிவந்த அரை

### சே

158. சேர்பு ... சேர்ந்து

### ஞ

159. ஞரல ... முழங்க

### ஞா

160. ஞாண் ... பூணூல்

### த

161. தகடு ... புறவிதழ்
162. தகரன் ... ஆட்டுக்கிடாய் (தன்னுடன் வருதலை) உடையவன்
163. தகை ... கட்டப்பட்ட மாலை
164. தத்துற்று ... குதித்து
165. தலைஇய ... பொருந்திய
166. தலைத்தந்து ... முதற்கை கொடுத்து (ஆடுதற்குத் தன்கையைக் கொடுத்து)
167. தலைப்பெயல் ... கார்காலத்து முதல்மழை

### தா

| | | | |
|---|---|---|---|
| 168. | தா | ... | வருத்தம், வலிமை |
| 169. | தாழ்பு | ... | தங்கி |

### தி

| | | | |
|---|---|---|---|
| 170. | திணி தோள் | ... | தசை திணிந்ததோள் - வலிய தோள் |
| 171. | திண்காழ் | ... | திண்ணிய வயிரம் |
| 172. | திதலையர் | ... | தூத்தியினையுடையவர் (துத்தி - தேமல்புள்ளி) |
| 173. | திருந்துகாழ் | ... | திருந்தும் வடங்கள் |
| 174. | திவவு | ... | வார்க்கட்டு |
| 175. | திளைப்ப | ... | அசையும்படி |
| 176. | திறலினர் | ... | வலிமையுடையவர் |

### து

| | | | |
|---|---|---|---|
| 177. | துகில் | ... | துணி(க்கொடி) |
| 178. | துணர் | ... | பூங்கொத்து |
| 179. | துணையற | ... | ஒப்பில்லாத படியாக |
| 180. | துமிய | ... | துணிய - வெட்டுப்பட |
| 181. | துயல்வர | ... | அசைவு பொருந்த |
| 182. | துருத்தி | ... | ஆற்றிடைக்குறை |
| 183. | துவர | ... | முழுவதும் |
| 184. | துனி | ... | வெறுப்பு |

### தூ

| | | | |
|---|---|---|---|
| 185. | தூஉய் | ... | தூவி |
| 186. | தூம்பு | ... | துளை |

### தெ

| | | | |
|---|---|---|---|
| 187. | தெய்வ உத்தி | ... | சீதேவி என்னும் தலையணி |
| 188. | தெறியா | ... | தெறித்து |

